வெளியீடு எண்: 518

# திருமூலர் திருமந்திரம்

# TIRUMANTRAM



## ஏழாம் தந்திரம்

பஞ்சாக்ஷர தீபம் என்னும் உரையுடன்



திருவாவடுதுறை ஆதீனம்

விலை ரூ.100

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனத்துக்

குருமுதல்வர்

# அருள்திரு
# நமசிவாயமூர்த்திகள்

# மகரத் தலைநாள்
# குருபூசை விழா மலர்

தாரண – தை – அசுவதி

17.1.2005

வெளியீடு எண்: 518

உரிமை பதிவு

| | |
|---|---|
| முதற்பதிப்பு | 1966 |
| இரண்டாம் பதிப்பு | 1967 |
| மூன்றாம் பதிப்பு | 1991 |
| நான்காம் பதிப்பு | 1999 |
| ஐந்தாம் பதிப்பு | 2005 |

விலை ரூ.100.00

*ஸ்ரீநமசிவாயமூர்த்தி அச்சகம்,*
*திருவாவடுதுறை.*

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

(ஏழாம் தந்திரம்)

(பாடல்கள் 1704–2121)

பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்

இது

திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாயமூர்த்திகள்**

அருட்பெருந்துணையுடன்

வெளியிடப்பெறுவது

திருவாவடுதுறை ஆதீனம்

உ

சிவமயம்

கயிலாயத்து ஒருசித்தர் பொதியில் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண்டு அவன்உடலிற்
பாய்ந்து போத
அயலாகப் பண்டைஉடல் அருளால் மேவி
ஆவடுதண் துறைஆண்டுக்கு ஒருபா வாகக்
குயிலாரும் அரசடியில் இருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகி னாரே.

—திருத்தொண்டர் புராணசாரம்.



திருமந்திரம் அருளிய

**திருமூலதேவ நாயனார்**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான

போதநெறி காட்டும் வெண்ணெய்

பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்

மெய்ஞ்ஞான பானு வாகிக்

குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்

குருநமச்சி வாய தேவன்

சயிலாதி மரபுடையோன் திருமரபு

நீடூழி தழைக மாதோ.

–ஶ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

குருமுதல்வர்

அருள்திரு நமசிவாயமூர்த்திகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

**நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்**
**கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்**
**சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்**
**மற்றொன் றிலாத மணிவிளக்கு ஆமே.**

திருமந்திரம் சமய நூல்களுக்கெல்லாம் முதல் நூல். அடிப்படையான நூல். ஞானபூமியாகிய திருவாவடுதுறையில் திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் யோகிருந்து மக்கள் உறுதியுணர்ந்து உய்தற் பொருட்டு அருளிச் செய்த உயர்தனித் தமிழ்நூல். பன்னிரு திருமுறைகளுள் பத்தாந் திருமுறையாக வைத்துப் போற்றப் பெறுவது. உலகியல் நெறியின் ஒழுக்கத்தையும் ஆன்மீக நெறியின் ஞானத்தையும் விளக்கி உரைப்பது.

இத் திருமந்திர நூலை மக்கள் யாவரும் பொருளுணர்ந்து போற்றிக் கற்றுப் பெரும்பயன் எய்த வேண்டும் எனத் திருவுளங்கொண்டு திருவாவடு துறை ஆதீனத்தின் குரு மகாசந்நிதானங்கள் திருமந்திர மாநாடுகள் நடைபெறச் செய்து ஆய்வுரைகள் நிகழ்த்தச் செய்து பஞ்சாட்சர தீபம் என்னும் உரைநூல்களும் கட்டுரை நூல்களும் எழுதுவித்தும் சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக உபகரித்து வருகின்றமையைச் செந்தமிழுலகு நன்கறியும்.

தமிழ் மொழியையும் சிவநெறியினையும் ஆதீன மரபு நெறி வழாது போற்றியும் கால இயல்பிற்கு ஏற்பச் சமுதாய நல அறப்பணிகள் பல நூதனமாகத் தோற்றுவித்துப் புரந்தருளியும் திருவருட் செங் கோல் செலுத்தி வரும் சீர்வளர்சீர் குருமகா சந்நிதானம் அவர்களின் திருவருளாணையின்படி ஆதீனம் குரு முதல்வர் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் மகரத்தலைநாள் குருபூசை விழா மலர்களாக 1987 – ல் திருமந்திரப் பாயிரப் பகுதியும் 1989–ல் திருமந்திரம் முதல் மூன்று தந்திரங்களும், 1990–ல் திருமந்திரம் 4,5,6 தந்திரங்களும், பஞ்சாட்சரதீபம் என்னும் உரைகளுடன் மறுபதிப்புகளாக வெளிவந்தன. அவ்வண்ணமே, ஆதீன மகா வித்துவான் டாக்டர். திரு.ச. தண்டபாணி தேசிகர் அவர்களால் இயற்றப் பெற்று 1966, 1967, 1991– லும் வெளிவந்த திருமந்திரம் ஏழாம் தந்திர பஞ்சாட்சர தீப உரைப்பகுதி மறு பதிப்பு பெற்று இவ்வாண்டு நடை பெறும் ஆதீனம் குரு முதல்வர் மகரத் தலைநாள் குருபூசை விழா மலராக மலர்கின்றது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரக் கருத்து
# ஏழாந் தந்திரம்

மனிதன் உயர்வற உயர்ந்து வாழப்பிறந்தவன். வாழ்வாங்கு வாழ்ந்தால் மனிதன் தேவனாகிறான். 'வாழ்வாங்கு' என்பதன் பொருள்தான் எளிதில் அறியக் கூடியதாக இல்லையே! ஒவ்வொருவனும் தான் வாழும் முறையே அனைவரும் வாழவேண்டிய முறை எனச் சாதிக்கிறான்; தன்னையே பலரும் பின்பற்ற வேண்டும் என வாய்ப்பறை சாற்றுகிறான்; மறைவில் தானே தலைவன் எனத் தானே சொல்லிக் கொள்ளுகிறான்; துணிவு பிறந்ததும் நாலுபேரைத் சொல்ல வைக்கிறான்; பிறகு வெளிப்படையாகத் தானே தன்னைச் சொல்லிக் கொள்கிறான். இப்படியே உலகியலில் உயர்வதாகத் தாழ்ந்து கொண்டே போகிறான்.

சைவம் சொல்கிறது 'நீ தாழ; உயரலாம்' என்று; எப்படித் தாழவேண்டும் என்று வழியும் சொல்லுகிறது. அகங்காரம் அடங்கித் தாழ்தலே தியான யோகம் என்பது யோக சூடாமணியின் கருத்து. 'தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது' என்பது சிவஞான சித்தி வாக்கு. ஆகவே மனமடங்க – உயிரைச் சார்ந்துள்ள முனைப்பு அடங்க யோகச்சார்பு இன்றியமை யாதது. யோகம் ஆதாரயோகம் என்றும் நிராதார யோகம் என்றும் இருவகைப் படும். ஆதாரயோகம் மூலாதாரம் முதல் பிரமரந்திரம் வரை உள்ளுக்குள்ளே பற்றி எழும்பும் யோகம். நிராதாரயோகம் உச்சிக்கு மேலே பன்னிரண்

டங்குலம் வரை பற்றாமற் பற்றி நிற்கும் ஞானயோகம். ஆதாரத்தைப் பற்றியே நிராதாரத்துச் செல்ல முடியும். ஆதலால் ஆறாதாரம்முதல் இதோபதேசம் ஈறான அதிகாரங் களால்யோகம், யோகியர்,. சற்குரு, அசற்குரு, உபதேசம் முதலியவற்றை விளக்குகிறது ஏழாந்தந்திரம்.

முதல் அதிகாரம் ஆறாதாரம். ஆதாரயோகங்களில் பயின்றார் சிவனடி தரிசிப்பர்; ஆதாரயோகத்தின் வாயிலாக மேதாகலை முதலிய மேல்நிலைகளை அடைக; ஆதாரயோகம் கைவரப்பெறின் அபேதஞானம் சித்திக்கும்; எங்குமாய் விளங்கும் ஆற்றல் விளையும்; பிரணவநாத தரிசனம் உண்டாம்; சிவானந்தம் விளையும் என எட்டு மந்திரங்களால் விளக்குகிறது இவ்வதிகாரம்.

அடுத்தது அண்டலிங்கம். இது சுத்தம், அசுத்தம், பிரகிருதி ஆகிய மாயைகளில் உள்ள எல்லா அண்டங்களையும் சிவலிங்க வடிவாகத் தியானிக்கும் முறையைக் கூறுகிறது. இதனால் சாதகன் பார்க்கும் பொருள் அனைத்தும் சிவமாகவே காணும் பேற்றினை எய்துகிறான் என்பது பதினான்கு மந்திரங்களினால் உணர்த்தப் பெறுகின்றது.

பிண்டலிங்கத்தில், மனித உடம்பையே இலிங்க மாகப் பாவிக்கும் உபாயம் உபதேசிக்கப்படுகிறது. அங்ஙனம் பாவிக்கும் உயிர்க்கு உரியனவாகிய கருவி கரணங்கள் பதிகரணங்களாக மாறுகின்றன என்று நான்கு மந்திரங்களால் உணர்த்தப்பெற்றுள்ளது.

சதாசிவ லிங்கத்தில், அருவுருவச் சிவத்தினி யல்பும், அதன் அருள் வடிவும், மந்திர வடிவும், பிரணவ

வடிவும், அதனைப் பஞ்சப்பிரம ஷடங்க மந்திரங்களால் நியசிக்கும் முறையும், சிவத்திற்குச் சிறப்பான திருமேனி சிவலிங்கமேனி என்பதும் இருபத்து மூன்று மந்திரங் களான் உணர்த்தப்பெற்றுள்ளன.

ஆத்மலிங்கத்தில், உயிரும் அதன் தன்மையதாகிய உணர்வும் சிவமும் சத்தியுமாய், உயிரே சிவலிங்கமாக உணரத்தக்கது; தாபரம் சங்கமம் எல்லாம் ஆத்மலிங்கமே என்பது பத்து மந்திரங்களினாலே உணர்த்தப் பெற் றுள்ளது.

ஞானலிங்கத்தில், இறைவன் ஆன்மாக்கள்மீது கொண்ட பெருங்கருணையினாலே நவந்தருபேதமாக நடிப்பதையும், அவை அரு உரு அருவுரு என்ற மூன்றுள் அடங்குமுறையும், சத்தியும் சிவமும் ஒன்றில் ஒன்றாய் அடங்கி வேறற விளங்குமுறைகளும் பத்து மந்திரங்களான் உணர்த்தப்பெறுகின்றன.

சிவலிங்கத்தில், பருப்பூதங்களும் அவற்றின் தன்மையாகிய தன்மாத்திரைகளும் எல்லாம் சிவமயம்; அதனையறிந்து உபாசனை செய்யின், பரகதி, சித்திக்கு மென்று ஐந்து மந்திரங்களான் அறிவிக்கப் பெறு கின்றது.

சம்பிரதாயத்தில் குருவிடம் சீடன் தனக்கென்று உரிமையாக்கிக்கொள்ளும் அனைத்தையும் சமர்ப்பித்து விடவேண்டும்; குரு ஆன்மாவைத் தூயனாக்கித் தன் மலரடி சாரவைத்து, ஞானங்கொடுத்த பின்பு சிவன் திருவடிக்கே சேர்ப்பன் எனச் சம்பிரதாயங்களான ஒழுகலாறுகள் உணர்த்தப்பெறுகின்றன.

திருவருள் வைப்பில், எல்லாவற்றையும் தன் மயமாகக் கண்ட சாதகற்குப் பரிபாகம் முதிரத் திருவருட் பதிவு தானே ஏற்படும் என்பது இருபத்திரண்டு மந்திரங் களான் தெரிவிக்கப்பெற்றுள்ளது.

அருளொளியில், திருவருளாகிய வியாபகத்துள் அடங்கிய ஆன்மா திருவருளில் ஒளிபெற்று, தன் இருள் நீங்கத் தானும் ஒளியுடைய பொருளாய் விளங்கும் இயல்பு ஒன்பது மந்திரங்களான் உணர்த்தப் பெற்றுள்ளது.

சிவபூசையில், அருளொளியில் ஆன்மா என்றும் நிலைக்கச் சிவபூசை ஒன்றே சிறந்த உபாயம் ஆதலின் அதன் இன்றியமையாமையும், அதற்குரிய அகச்சாதனம் புறச் சாதனங்களும், பூசிக்கு முறையும் இருபத்து நான்கு மந்திரங்களாலுணர்த்தப் பெறுகின்றன.

குருபூசையில், குருவே சிவம்; குருவை வழிபடு தலே சிவபூசை; ஆதலால் குருவைப் பூசித்தல் அவசியம் என்று உணர்த்தப்பெறுகிறது.

மாகேஸ்வரபூசையில், சிவனடியார்களைச் சிவன் எனவே பாவித்து, குலாவுபாதம் விளக்கி, மண்டு காதலின் ஆதனத்திடைவைத்து, அருச்சனை செய்தபின், உண்டி நாலுவிதத்தில் ஆறுசுவைத்திறத்தினின் ஒப்பிலா அமுத ளித்தலும் அ:தனால் எய்தும் பயனும் அறிவிக்கப் பெற்றுள்ளன.

அடியார் பெருமையில், சிவத்தைக் கருவி கரணங் களால் அறிய இயலாது; ஆகையால் அறிந்து உணரத் தக்கவர் அரனடியார்கள்; அவர்கள் மயங்கா மரபின்

நிற்பார்கள்; வானுலகும் அவர்கள் ஆட்சிக்கு உரியது; அவர்கள் பெருமையும் இயல்பும் அரிபிரமர்களாலும் அறியவொண்ணாதன எனப் பதினாறு மந்திரங்களால் உணர்த்தப்பெறுகின்றது.

போசன விதியில், சிவனடியார்க்கென்று அமைத்த உணவே இறைவற்கு உவப்பானது; சிவனடியார்கள் ஒருவேளை உச்சிப் பொழுதில் பிச்சையேற்று உண்டு ஏகாந்தத்து யோகிருப்பார் என இரண்டு மந்திரங்களால் உணர்த்தப்பெறுகின்றது.

பிட்சாவிதியில், சிவபெருமான் பிட்சேயேற்றதும், அதனால் விளைந்த நன்மையும், அடியார் பசிக்கும் ருசிக்குமாக பிச்சையேற்கார், இருந்த இடத்திலேயே வந்து கொடுத்தலால் உண்பவர்களே உயர்ந்த ஞானிகள் என்பதும் ஆறு மந்திரங்களால் அறிவிக்கப் பெறுகின்றன.

முத்திரைபேதத்தில், ஞானம் எய்தியமைக்குரிய முத்திரை அல்லது அடையாளங்கள் கேசரியும் சாம்பவியுமே என்பதும், முத்திரைகளின் இலக்கணமும், துவாதச பிராசாத அநுபவமும், அநுபவம் பெற்றான் நின்மலனாம் என்பதும் உணர்த்தப் பெறுகின்றன.

பூரண குகைநெறிச் சமாதி, மனம் ஒடுங்கி உயிரொடு ஒன்ற உயிர் இறைவனோடு ஒன்றிப் பலகாலம் பிரியாதிருக்கும் நிலைமையினை அறிவிப்பது. இந்நிலையில் நீரில் கரைந்த உப்புப்போல மனம்தனியே காரியப்படாது உயிரோடு ஒன்றி நிற்குமென்று உணர்த்தப் பெறுகிறது.

அடுத்துச் சமாதிக்கிரியை சைவ சந்நியாசம் பெற்றுச் சிவாத்துவித முத்தி நிலையை அடைந்தபின் சிவஞானியின் உடலைச் சமாதி செய்யவேண்டிய முறைமைகளைப் பற்றி அறிவிக்கிறது.

விந்துற்பனம், மாயையின் காரியமான சகத்தின் தோற்றத்திற்கு அடியான ஆற்றல் தோற்றுவதை அறிவிக்கின்றது. இதில் மாயையினின்று உலகம் விரிந்து அண்டமாகும் நிலையும், புணர்ச்சியுள் விந்து பாய்ந்து கருக்கொள்ளும் பிண்ட நிலையும் உணர்த்தப்படுகின்றன. பிண்டத்தில் விந்து தோன்றுவதன் அருமையை நன்கு அறிவித்து, விந்துஜயமாகிய வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் சொல்லப்படுகிறது.

விந்து ஜயத்தில் பிண்டோற்பத்திக்குரியதாகிய விந்து – குருதியின் சாரம், உடலுக்கு உறுதி, உள்ளத்தின் ஆற்றல், மனவளர்ச்சிக்கு மருந்து, இங்ஙனம் விளங்கிச் சிவயோகத்திற்கு முதற்படியாக இருப்பது ஆதலால் இதனைக் கண்டகண்டபடி அழிப்பதாகாது என்றும், அழியாது பாதுகாத்தலே இன்றியமையாதது என்றும் வற்புறுத்தப்பெற்றது.

போகசர ஓட்டத்துள் சரம்பார்த்துப் போகம் செய்யின் விந்து வெளிப்படாது என விந்துவையடக்கும் உபாயம் உரைக்கப்படுகின்றது.

அண்டாதித்தன்: சூரியன் அண்டத்தும் பிண்டத்தும் உள்ளத்தும் உணர்வின் கண்ணும் விளங்கிச் சிவத்தோடு கலந்துநிற்கும் ஞானக்காட்சியைக் காட்டும் நான்கதிராங்களுள், இது, அண்டாதித்தனாய் அரன் விளங்கும்

நிலையை அறிவிக்கிறது. அண்டங்கள் தோறும் சூரியன் எங்ஙனம் விளங்குகின்றான்? அவனால் விளையும் பயன் என்ன? என்பன இதில் அறிவிக்கப்படுகின்றன.

பிண்டாதித்தன்: இது உடலாகிய பிண்டத்துள் ஞானவொளியாகிய இறைவன் விளங்குகின்ற நிலையை அறிவிக்கிறது.

மனவாதித்தன்: இது சிவாதித்தனோடு ஒன்றிச் சிந்தையும் ஒளிமயமாய் நிற்கின்ற நிலையை உணர்த்துகிறது.

ஞானாதித்தன்: சிவஞானிகளின் அநுபவத்தில் அறிவே உருவாக – இறைவன் புருவமத்தியில் சுடர்ச் சோதியாக விளங்குவதை எடுத்துக் காட்டுவது.

சிவாதித்தன்: சிவபெருமானாகிய சூரியன் அந் தந்த ஆன்மாக்களுடைய பரிபாக நிலைக்கு ஏற்ப அங்கங்கே நிலைத்துநின்று காட்டும் உபகாரம் புரிவதை விளக்குவது.

பிராணன்: ஆன்மா மலத்தோடு சார்ந்து மல மாயும் சிவத்தோடு சார்ந்து சிவமாயும் உயிர்ப்பாய்ப் புறம்போந்து நிற்கும் நிலையினை விளக்குவது.

புருடன்: பும்ஸத்துவமலம் எய்திய ஆன்மாவிற்கு அத்தடையும் நீங்கிச் சிவப்பேறு எய்துதற்கு உரிய உபாயங்களை உணர்த்துவது.

சீவன்: தன்னைத்தான் உணர்ந்து, மலமாயா கன்மங்களைக் கழன்று, சிவத்தைச் சார நிற்கும் நிலை. அதற்கு வடிவும் அளவும் குணமும் உணர்த்தப் படுகின்றன.

பசு: உயிர்களை விலங்குப் பசுவோடு ஒப்பிட்டு மாயாகாரியம் ஒழிந்தபின்னர் உயிர்களாகிய ஞானப் பசுக்கள் குடங்குடமாகச் சிவானந்தப் பாலைப் பொழியும் ஆனந்தானுபவம் உணர்த்தும் பகுதியாம்.

போதன்: இது பசு சுட்டறுத்து வீடு திரும்பும் ஞான சொரூபியாயிருத்தலை உணர்த்துவது.

ஐந்திந்திரியம் அடக்கும் அருமை: ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை என்ற இரண்டும், அங்ஙனம் ஞான சொரூபியாகிய ஆன்மாக்களும் ஒரொருகால் இந்திரிய வயப்பட்டு மயங்கும் ஆதலின் அவற்றை அவர்களும் அடக்க முடியாது என்று அதன் அருமை தோன்றக் கூறுவன. அதன் பயன் அரிய ஒன்றையும் ஆக்குதலே ஆண்மைக்கு அழகாகும் ஆதலானும், செயற்கு அரிய செய்வார் பெரியர் எனப்படுதலானும், அருமையுடைத்தென்று அசாவாது அடக்குதலே பெருமைக்கு உரிய வழி ஆதலானும் இந்திரியங்களை அடக்கி ஒடுக்கிச் செயலறச்செய்யாது சிவனிடத்துச் செலுத்துதலே சிறந்தது என்ற கருத்து விளக்கப்படுகிறது.

அசற்குரு நெறி என்பது, குருவாகாதார் கூறும் உபதேசங்களால் விளையும் தீமைகளைத் தெரிவிப்பது.

சற்குருநெறி என்பது, குருவாகும் இயல்புடையார் உபதேசிக்கும் முறைகளையும் அதனால் விளையும் நன்மைகளையும் விளக்குவது.

கூடாவொழுக்கம் என்பது, குரு உபதேச வழி நிற்பவன் அயர்ந்தும் மறந்துங்கூடப் பார்ப்பாரில்லை

என்று பழிபாவங்களைச் செய்தல் கூடாது என்று வற்புறுத்துவது.

கேடுகண்டிரங்கல் என்பது, கண்ணிருந்தும் குழியில் விழுவாரைப்போல, கடவுளருளும் குரு உபதேசமும் தமக்குக் கிடைக்கப் பெற்றிருந்தும் கூடா வொழுக்கத்தில் தலைப்பட்டுக் கேடுறுவார் நிலைக்கு இரங்கிக் கூறியது.

இதோபதேசம் என்பது, உயிர்களுக்கு உறுதி பயக்கும் சொற்களாக, இறுதிக் காலத்தும் இறைவனைத் தொழ வேண்டும், உண்மையே பேசவேண்டும் ஒன்றே குலம் ஒருவனே தேவன், நல்லதே நினைக்க வேண்டும் என்பன முதலாய பற்பல கருத்துக்களை மொழிவது. இறுதிப் பகுதியாகவுள்ள இது மக்கள் இம்மை மறுமை இரண்டிலும் இன்பமுற்று வாழும் உபாயங்களை உணர்த்தும் சிறந்த பகுதியாம்.

இங்ஙனம் இத்தந்திரம் உடன்பாட்டு முகத்தானும் எதிர்மறை முகத்தானும் உயிர்கள் உய்வதற்கு உரிய உபாயங்களை உணர்த்துவது எனலாம்.

# TIRUMULAR

The term **"Mantram"** denotes **an idea that sustains and safeguards a person who is immersed, as it were, in seeking Truth through its instrumentality.**

It is ideas that elevate men to great heights. Naturally, one who feels a compulsive urge to enter into a higher spiritual level, should safeguard oneself with ideas that bring about an upward orientation in one's being.

Mantram is the spark that lights the torch of knowledge. The late Dr.V.V.Ramana Sastri defines mantram as "an idea that is formed out of (spiritual) churning" And he adds: "Mantrams, therefore, are images that emerge in the mind as a result of ceaseless concentration". Such mantrams are, means of attaining true knowledge.

Tirumantram by Tirumular is one of the most important of the Tamil works on mantrams handed down to us from our saints and seers.

Scholars hold conflicting views on the date of composition of Tirumantram, and, whether or not it is a translation from Sanskrit. It is the privilege of scholars to disagree. We shall not here enter into academic controversies. However, it is well that we seek to have some idea of the social environment of the age in which Tirumular lived and produced his magnum opus.

Tirumular's origin, the circumstances that led to his leaving Kailas and to his settling down in the land of the Tamils, the social forces that inspired him to produce the immortal Tirumantram, all these are lost in the mists of antiquity. We do not even know the real name of this great sage. Tirumular is the name he acquired later when he became a shepherd. No historical background is possible. We have, therefore, to turn to another great treatise, Periyapuranam, for what is has to say on the story of his life.

The sage, says Periyapuranam, came to Tamil Nadu from Kailas to meet his friend Agastya. After offering worship at several famous shrines he reached Sattanur, a village on the banks of the Kaveri, where he witnessed the tragic spectacle of a herd of cows weeping over the corpse of a shepherd. Evidently, the shepherd had met with sudden death, and the cows feeling that some great tragedy had been fallen over their master, stood hovering about the body unwilling to move away. They smelled it, and tears rolled down their long white cheeks like silvery rivulets.

This moving sight struck a responsive chord in the sage, and he decided to end the agony of the cows. As one who had mastered the eight siddhis, he knew the technique of moving from one body to another. He cast aside his body in a safe place and penetrated into the shepherd's body. The shepherd immediately came to life and got up. The cows danced with joy on seeing their master alive again.

The sage who now lived in the body of the shepherd (his name was Mulan) followed the cows back to the village in the evening. But he stood in the street without entering Mulan's house. Mulan's wife who was awaiting for her husband's return came out, and was puzzled to find him standing in the street. She called him in, and moved up to take his hand. But he stepped aside and asked her not to tough him. He denied he had any relationship whatsoever with her. Then he entered into a neighbouring mutt, and was soon immersed in deep contemplation.

Mulan's wife would not be consoled easily. How could the poor woman know that her husband was no more and that another saintly soul was now dwellling in his body? She complained to her relatives against her husband's behaviour and cried that he had lost his senses. Some of the elders of the village who saw him at the mutt were wise enough to perceive that the shepherd was in a state of samadhi. They, therefore asked her not to distrub him. but to leave him alone.

When the sage emerged from comtemplation the next morning, he straight away went to the spot where he had left his former body. But it was not to be found there! He then realised that he was destined to spend the rest of his life as Mulan - the shepherd, that it was God's will that he should fulfil his purpose as a shepherd.

Known thenceforth as Tirumular (derived after the shepherd's name Mulan), he left Sattanur and reached

Tiruvavaduthurai, where he sat under a Bodhi tree and passed into a state of deep contemplation. Once a year he woke up and each time he composed a stanza containg the cream of his spiritual experiences during the year. It took 3000 years for him to compose the 3000 stanzas comprising Tirumantram.

This account of his life in Periya Puranam gives perhaps a clue to the state of society which obtained at the time of Tirumular. Why did Tirumlar choose to come down all the way to the land of the Tamils? How did it come to pass that this great exponent of the Vedas and the Agamas was given the form of a shepherd in a lower rung of the social ladder to expound the great Saiva Siddhanta school of philosophy? And why was Saiva Siddhanta, in particular, chosen in preference to other systems of thought? It is well that we seek here some answer to these questions, if only for obtaining a correct appreciation of some of the stanzas in Tirumantram, such as, for instance, those expressing his strong comdemnation of the pretensions of impostors masquerading as saints and seers.

Presumably, early Indian thought, which gave birth to some of the greatest metaphysical systems the world was ever seen received a setback, and era of sterility and stagnation had commenced. True flearning and character was eclipsed by principles and practices justifying social malpractices. Thr true import of the Vedas and the Agamas was allowed to be lost in the jungle of rituals and dogmas. Tamil Nadu the cradle of Saiva Siddhanta, had become the

breeding ground of false prophets who used religion and philosophy for securing personal advantages. Such, obviously, was the state, of Tamil society which Tirumular felt compelled to reconstruct on lines set forth in the Vedas and the Agamas and as he under-stood them in the light of his spiritual experiences.

Tirumular wanted huminity to share the divine bliss which he himself had enjoyed. This sharing of his happiness, this freedom of the soul from ignorance and bondage, cannot however be secured unless, first, some of the fundamental tenets of Saiva Siddhanta were instilled into the minds of the people.

Tirumular taught that the liberation of the Pasu (soul) was not dependent on the caste, high or low, of the person in whom it dwells; that the soul can attain freedom only if one followed the right path without allowing oneself to be diverted towards blind alleys; that Saiva Siddhanta, which is the cream of the Vedas and the Agamas opens, the window that reveals true knowledge.

This account, therefore, of Tirumular's teaching Tirumantram as a shepherd, should serve to emphasise his advice that, in as much as the soul and not the body that must needs be freed from bondage any person be he of high or low birth, can seek to attain Sivananda (divine bliss) That he should have come from Kailas to Tamil Nadu in the extreme South may be taken as reflecting his anxiety that the correct principles of Saiva Siddhanta should again

be taught and reinforced in the land of its birth, where social conditions had so altered as to obliterate the prime principles of the Vedas and the Agamas. If the Vedas may be described as the tree of knowledge, the Agamas are its branches and leaves and fruits. While the Vedas content themselves with stating that the soul is the Brahman, the Agamas instruct and guide in leading the soul towards its union with the Absolute Being.

---

# SEVENTH TANTRAM

## ARADHARA:

There are six Centres (Chakras) within the body, specified as suitable for performing Dhyana Yoga. They are: Muladhara, Svadhishthana, Manipura, Anahata, Vishuddha and Agna: Only those who have located and esperienced these spots can be called Sanmargins. The fifty letters of the alphabet lie distributed amongst these six spots. The fifty first-is the Pranavam Om. Sivanandam flows when the Praṇavam is realised.

## ANDA - LINGAM:

Anda - Lingam symbolizes the world. Even Devas miss this inner meaning and worship merely the external form. All divine manifestation, the world as we know it, creation. preservation and dissolution. all these are the acts of Siva.

While the Lingam in the temple points to the qualities of Siva, the cupola above signifies His external manifestations. Siva is worshiped in the form of a Lingam. which may be made of pearls, sapphires, emeralds. wood, stone, Holy-Ash, rice grains, flowers, sand, buttermilk, cow - dung, coper, fire etc. The Agamas contain instructions as to the type of Lingam suitable for worship by men belonging to various stages in the pilgrimage of life: If the entire world is visualized as a Lingam, the Lingam's base should denote the earth; its Banam - the sky; water for its bath - the sea; water receptacles - the clouds; flowers in the garland - the stars; clothings - the directions.

## PINDA - LINGAM:

In Pinda - Lingam. the human body is visuallzed as a Lingam.

## SADASIVA - LINGAM:

In this visulization, Siva manifests himself as Sadasivam which creates the world through the instrumentality of Sakthi as substance and quality. The heart of this Lingam is Gnanasakthi ; its head - Adisakthi; hair - Ichcha sakthi; armour-Kiriyasakthi. The form of this Lingam is the Pranava Om and should be considred as asimilating in itself all the features of the nine froms in which Siva is worshipped.

## ANMA - LINGAM:

The Anma - Lingam is a representation of the components of the Pranavam, Om. Its basis Bindu. and Nada is signified by Anma - Lingam.

## GNANA - LINGAM:

God lives in the soul as Gnana, like perfume in the flower. As Gnana itself is Siva, we call this Gnana - Lingam, whatever the form of worship, Siva or Sakthi. The object of all those who pursue the path of Gnana is Siva. Gnana - Lingam is worshipped whilst in the state of Sivogam.

## SIVA - LINGAM:

This is the form that confers godlines on those who are able to perceive that. He manifests himself as the quality behind the seen world.

Thirumular says, 'My Guru instructed me to fix the Brahmarandhra at a Centre near the larynx' to keep my mouth shut, and to think, always of God. But I was wandering here and there tormented by doubts. God blew away the clouds which were responsible for my doubts and took me under his fold. I was, therefore able to know Him who protects all the soul. Our relationship grew more and more intimate. and we reached a stage when there was no difference between "I" and "He". We lived together. Day and night, body and soul. These are opposites: they will

remain so if the duality between "I" and "He" is not removed. This duality must vanish, for then alone you can attain His Grace."

## SIVA - PUJA:

In Siva Puja, the mind is the sanctum sanctorum; the body - temple; the mouth - entrance gate; the soul - Sivalingam; the five sense organs - lamps; devotional songs - food offerings. Worship Siva with humulity and love by identifying your soul with Him.

## GURU - PUJA:

If you offer worship at the shrine merely as a matter of routine, if you do not put your mind and heart into the worship, you cannot reach Him. Reaching Him means reaching the state of unconsciousness when the organs of sense and perception are quiescent: when the soul is in the state of pure experience that is the state of Sámadhi, during which the breath itself remains suspended.

## MAHESWARA - PUJA:

To feed a Gnani is equivalent to feeding the three worlds. Even if you feed a billion Brahmins or build houses for them, even if you build thousands of temples, they can never produce the same amount of good as that which accrues out of feeding a single Gnani.

## GREATNESS OF DEVOTEES:

The devotees of Siva experince neither pain nor pleasure. They never die - It is such devotees who can approach Siva. These devotees generally eat only once a day and even then only sparingly, only such quantity as is needed to keep them alive.. They have no likes and dislikes; hunger does not hurt them. The entire universe gets reduced to a point in the body of the tapasvi who never eats. When the soul of the Sivagnani leaves the body, it attains Mukthi and does not return.

When a Gnani dies (when his soul departs) his body must not be burnt, but should be entombed; burning will produce grave consequences to the people and to the state. Also the body should be entombed strictly according to the specifications laid down.

## ADITTAN (SUN):

The sun acquires four characteristics, according, as he dwells in this world in the universe, in the mind, and in Gnana, Andadittan, Pindadittan, Manadittan, and Gnanadittan. Andadittan gives light and sustenance to the seven worlds. Pindadittan is the soul which having removed its Malas, resides in God's mind. Manadittan is the light in the soul which leads to Knowledge. Gnanadittan is the manifestation of Paranada which opens out in the soul like a lotus, Sivadittan is the Sivaprakasam that gives light to the above four Adittans. The soul that abides in

Sivadittan goes through several stages and acquires names apropriate to each stage, such as Purusha, Jeva, Pasu, Bodha etc.

## CONTROL OVER SENSE ORGANS:

We have within ourselves five mad elephants that cannot be tied to their posts. They can be brought under control only when the mahout as well as the elephants become weak and emaciated.

There are five lions in the forest, and they roam about as they like. The forest can be made safe only if the lions are deprived of their claws and teeth.

He owns five birds. They are picking grains separately in five enclosures. But there are nine holes through which they can escape.

A king has five sons and ninety - six ministers. Each son wants to rule as the king, To whom are the people to pay taxes? How can they live if they make payment to all of them? The way out for them is to overthrow all the five sons.

Gnanis are those who have gained absolute mastery over their sense organs, Pray Siva, and along with the cessation of mental activity. the sense organs will become progressively mute. Such an achievement cannot however be had without the guidance of a Satguru, that is, a Guru

who is competent and true to his principles. The seeker after Truth is led astray if he is instructed by a spurious pro duct who styles himself Guru as a means of earning his livelihood. One must therefore exercise great care in choosing one's Guru, in addition to leading a blameless life. The following principles, if kept in mind and strictly adhered to, will help one to prepare oneself for the great task They are.

Resist worldly attractions.

Do not forget God.

Pray as long as you Can.

Always speak the truth



There is a God, irrespective of what others might say to the contrary

The world is one, and there is but one God

Noble thoughts will remove fear of death

Use the body as an instrument for worshipping God.

Finish your task in this life itself and do not postpone it to another life.

On, the death - bed do not let your mind wander but keep it fixed on God.

The world is transient Seek therefore, His grace, and He will show you the way.

---

# பொருளடக்கம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமூலர் திருமந்திரம்

## ஸ்ரீபஞ்சாட்சர தீபம் என்னும் உரையுடன்

# ஏழாம் தந்திரம்

## 1. ஆறாதாரம்

திருமூலதேவ நாயனார் ஆறாந்தந்திரத்துச் சிவகுரு தரிசனம் பெற்றார்க்கே திருவடிஞானமாகிற சிவஞானம் சித்திக்கப்பெறும் என்று உணர்த்தி, அவர்களே அறிவானும் அறிபொருளும் அறிவும் ஆகிய திரிபுடி ஞானத்தால் அறிந்து அஃதற்று நேயமாகவே நின்று அனுபவிக்கும் ஆற்றலுடைய ராவர் என்பது உணர்த்தி, அதற்கு உரிய வாயில் பற்றறுதலாகிய உண்மைத்துறவே என்று உறுதி கூறி, உண்மைத்துறவு உடைய வர்களுக்கே தவம் சித்திக்குமென்பதனைச் சிந்திக்கவைத்து, போலித் தவத்தினரால் தவத்தவருலகே நிந்திக்கப்படுதலை எடுத்துக்காட்டுதல் வாயிலாகத் தவதூடணத்தை உணர்த்தி, சிவனருள் இருந்தாலன்றி உண்மை ஞானம் உளதாகாது என்பதையும் வலியுறுத்தி, அதனால் அவ வேடம் தவவேடம் இவற்றினியல்பு உணர்ந்து உய்யும் உபாயங்களை உபதேசித்து, தவ வேடம் உடையவர்க்குப் புறச்சாதனங்களாகிற திருநீறும் கண்டிகையும் இன்றியமையாதன என்பதை வலியுறுத்தி, ஞான வேடமே சிவவேடமாதலைத் தெரிவித்து, பக்குவர் அபக்குவர் நிலைகளை ஓதியருளினார்கள்.

இந்த ஏழாம் தந்திரத்துத் தவயோகம் சித்திப்பதற்கு உபாயமாகிற ஆறாதாரங்களையும், அண்டம் முதல் அனைத்தும் சிவத்தியல்பையும் இருப்பையும் அறிதற்கும் அனுபவித்தற்கும் உபாயமாம் என்பதனையும், அதற்குறிய சம்பிரதாயமாகிற ஒழுகலாறுகளையும், அதனால் திருவருட் பேறு உண்டாதலையும், அதனால் அருட்சோதி வெளிப்படு தலையும், அந்த நிலையிலும் சிவபூசை, மகேசுர பூசை, குரு பூசை முதலிய வழிபாட்டு முறைகள் இன்றியமையாதன என்ப தையும், இங்ஙனம் சிவநெறி நின்றாரே சிவனடியார்கள்; அவர் களுடைய உண்ணல் பிச்சை முதலிய அனைத்துத் தொழிலி னும் சிவயோக நெறி விளங்குதலையும், அதனால் அவர்களுக் குச் சமாதி கைகூடுதலையும், அதற்குரிய செயல் முறைகளை யும், அதனால் விந்து உற்பத்தியாதலையும், போகசரவோட் டம் அதனால் விளைகின்ற ஆதித்தநிலைகள் ஆகிய இவற்றை யும், இறுதியாக இதோபதேசத்தையும் உபதேசிக்கத் தொடங்கி முதற்கண் ஆறு ஆதாரங்களைப் பற்றி அறிவிக் கின்றார்.

ஆறாதாரம் என்பது மூலாதாரமுதலான ஆறு ஆதாரங்களின் இயல்புகள், அவற்றில் விளங்கும் அக்கரங்கள், அதிதேவதைகள், ஆறாதார யோகத்தினால் விளையும் அனுபவ பேதங்கள் இத்துணையும் உணர்த்துகிறது.

**நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்**
**கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்**
**மூலங்கண் டாங்கே முடிந்து முதல் இரண்டும்**
**காலங்கண் டானடி காணலு மாமே. 1704**

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், சதாசிவ மூர்த்தியை யோக பாவனையான் உணரும் ஆதாரங்கள் ஆறனியல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள்: நாலிதழ்த்தாமரை வடிவாகிய மூலாதாரம், ஆறிதழ்த்தாமரை வடிவாகிய சுவாதிட்டானம், பத்திதழ்த்தாமரை வடிவாகிய மணிபூரகம், பன்னீரிதழ்த் தாமரை வடிவாகிய அநாகதம், பதினாறிதழ்த்தாமரை வடிவாகிய விசுத்தி ஆகிய இவற்றின் மூலத்தைத் தரிசித்து அங்கங்கே முடிந்த நிலையெய்தி, இவற்றின் முதலாயுள்ள ஈரிதழ்த் தாமரை வடிவாகிய ஆஞ்ஞையில் காலாதீதப் பழம் பொருளாய பரசிவத்தின் திருவடியைத் தரிசிக்கலாம் என்றவாறு.

மூலாதார முதல் விசுத்தி வரையுள்ள ஐந்து நிலைகளை யும் கண்டறிந்து அவற்றின் எல்லையைக் கடந்தால் ஆஞ்ஞை யில் சதாசிவத்தைத் தரிசித்துக் களிக்கலாம் என்பது கருத்து.

நாலு என்றது மூலாதார சக்கரத்தை, அது, செந்நிற மானது, நான்கிதழ்த் தாமரைவடிவானது **வ ശ ஷ ஸ** என்னும் பொன்னிறமான நான்கெழுத்துக்கள் நான்கிதழ்களிலும் அமையப்பெற்றது. இத்தாமரையின் பொகுட்டில் நாற்கோண வடிவமுடையதும் எட்டுச் சூலங்களினாற் சூழப்பெற்றதும் மஞ்சள் நிறமுள்ளதுமான பூமண்டலம் இருக்கிறது. அதன் நடுவில் 'ணம்' என்னும் பூமி பீஜம் இருக்கிறது. அதில் குழந்தை வடிவான பிரமா இருக்கிறார். அத்தாமரையில் ஜாடராக்னி யுள்ளது. கர்ணிகையின் நடுவில் மின்னல் வடிவான முக்கோண சக்கரம் ஒன்றுண்டு. அதன் நடுவில் காமவாயு காம பீஜமும் உள்ளன. அவற்றின்மேல் கருநிறமான சுயம்புலிங்கம் உள்ளது. அதற்குமேல் மூன்றரை வளையவடிவான குண்ட லினி சக்தி இருக்கிறது. அவ்விலிங்கத்தின் மீது தண்டவடிவான சித்கலை சக்தி விளங்குகிறது. இவை மூலாதார இலக்கணமும் அவ்வாதாரத்தில் எழுந்தருளியுள்ள அதிதேவதைகளின் இயல்புமாம் என்க.

இருமூன்றும் என்றது ஆறு இதழ்த்தாமரை வடிவான சக்கரத்தை. அது 𑌬 𑌭 𑌮 𑌯 𑌰 𑌲 என்னும் ஆறு எழுத்துக்கள் அமையப்பெற்ற சிந்தூர நிறமுள்ள மின்னொளிபோன்ற விந்துவோடு கூடிய ஆறு இதழ்களையுடையது. அதன் பொகுட்டில் பிறைமதி வடிவாய் எட்டிதழ்களையுடைய நீர்மண்டலம் உள்ளது. அதன்மேல் 'வம்' என்னும் அப்புபீஜம். அதன் நடுவிலே விஷ்ணுவும் ராகினி என்னும் சத்தியும் உள்ளனர்.

ஈரைந்தும் என்பது பத்திதழ்த்தாமரை வடிவான மணி பூரகம். இது நாபிமூலம். 𑌡 𑌢 𑌣 𑌤 𑌥 𑌦 𑌧 𑌨 𑌪 𑌫 என்னும் இப்பத்தெழுத்துக்கள் அமையப்பெற்ற பத்திதழ்த் தாமரை. அதனுடைய பொகுட்டில் முக்கோணம். அதன் வெளியில் மூன்று சுவஸ்திகைகளோடு கூடிய அக்கினி மண்டலம் உள்ளது. அதன் நடுவில் 'ரம்' என்னும் அக்கினி பீஜம் உள்ளது. அதன் நடுவில் இடபாரூடரும், செந்நிற மானவரும் ஆன உருத்திரன் இருக்கிறார். லாகினி என்னும் சத்தியும் விளங்குகிறாள்.

ஈராறு என்பது பன்னிரண்டிதழ்த்தாமரை வடிவான அநாகத சக்கரம். அது விந்துவோடு கூடிய 𑌕 𑌖 𑌗 𑌘 𑌙 𑌚 𑌛 𑌜 𑌝 𑌞 𑌟 𑌠 என்னும் பன்னிரண்டெழுத்துக்களோடு கூடிய பன்னிரண்டிதழ்த்தாமரை. அதன் கர்ணிகையில் புகை நிறமுள்ள அறுகோண வடிவான வாயுமண்டலம் உள்ளது. அதில் கோடி மின்னொளி போன்ற திரிகோணம் உள்ளது. அதில் 'யம்' என்னும் வாயுபீஜம். அதன் நடுவில் அன்ன நிறமான ஈசன் உள்ளார். அவருடன் காகினி சத்தி எழுந்தருளியுள்ளாள். அவர்கள் நடுவில் பொன்மயமான பாண லிங்கமும், தீபமொட்டுப் போன்ற ஹம்ஸ ரூபியான ஜீவனும் உள்ளன. பதுமத்தின் கர்ணிகையின் கீழ்ச் செந்நிறமான மேல்நோக்கி

மலர்ந்த எட்டு இதழ்த் தாமரையுளது. அதன் நடுவில் கற்பக விருட்சம் முதலியவற்றால் அணிசெய்யப்பட்ட மானச பூசைக் குரிய ஸ்தாணு விளங்குகின்றார். இது இதயத்தானத்தில் உள்ளது.

குறிகள் பதினாறு என்பது கழுத்தினடிக் கண்ணதாகிய விசுத்திச் சக்கரம். இது பதினாறிதழ்ச் சக்கரமாதலின் பதினாறு என எண்ணால் குறித்தார். செந்நிறமான கேசரங்களை யுடையது. அ காரம் முதலாக அ: என்பது ஈறான பதினாறு எழுத்துக்களையுடையது. இதனுடைய கர்ணிகையில் வட்ட வடிவானதும் வெண்மையானதுமாகிய ஆகாய மண்டலம் இருக்கிறது. அதன் நடுவில் திரிகோணமும், அதில் சந்திர மண்டலமும் உள்ளது. அதன்மேல் 'ஹம்' என்னும் ஆகாய பீஜம் உள்ளது. அதன் நடுவில் இடபாரூடரான சதாசிவம் பெண்ணொரு பாதியனாக வீற்றிருக்கின்றார். அவர் சிவபாகம் பொன்னிறம். அம்மைபாகம் வெண்ணிறம். சந்திர மண்ட லத்தின் நடுவில் ஸாகினி என்னும் சத்தி எழுந்தருளி யிருக் கிறாள்.

முதல் இரண்டு என்பது அதன்மேலுள்ளதாகிய ஆஞ்ஞாசக்கரம். இது புருவ நடுவிலுள்ளது. ஹ க்ஷ என்னும் இரண்டு எழுத்துக்கள் அமைந்த ஈரிதழ்த் தாமரை. கர்ணிகை யின் நடுவில் ஹாகினிசக்தி, அதற்கு மேல் திரிகோணத்தில் மின்னல் வடிவமான இதர என்னும் இலிங்கமும், அதற்குமேல் திரிகோணத்தில் பிரணவ வடிவான தீபத்தைப் போன்ற அந்த ராத்மாவும் உள்ளன. அதன்மேல் நுண்ணுருவான மனமும், அதன்மேல் ஹம்ஸ வடிவான சிவமும் உள்ளன. இதற்குரிய இடம் புருவநடு. இங்ஙனம் ஆதாரங்களைத் தியானித்து, மூலாதாரம் முதல் முதலிரண்டாகிய ஆஞ்ஞை வரையில் ஒளி யுருவாகக் கண்டு, ஆங்கு ஆஞ்ஞையில் முடிந்து நிற்பின் காலங்கடந்த மூர்த்தியின் திருவடிகளைத் தரிசிக்கலாம் என்றவாறாம்.

காலம் கடந்தான் – காலங்களை வென்று விளங்குபவன். காலங்கள் தந்தான் எனப்பிரித்து, காலதத்துவத்தையும் படைத்தவன் எனலுமாம். காலங்கடந்தவனே காலத்தைப் படைக்க இயலுமாதலின் இதுவும் இயையும். இதனால் ஆறு ஆதாரங்களையும் முறையே தியானித்து ஆஞ்ஞையில் நிலைபெற்று மூலாதார முதல் ஆஞ்ஞை வரையில் சோதி வடிவாகக் காணின், திருவடி ஞானம் பிறக்கும் என்பது உணர்த்தப் பெற்றது. (1)

**ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்**
**மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி**
**போதா லயத்த விகாரந் தனிற்போத**
**மேதாதி யாதார மீதான உண்மையே. 1705**

இம் – எனின், இயற்கையறிவின்மேல் சிவம் விளங்கும் என ஆதாரங்களின்மேல் ஆதேயம் விளங்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நாத தத்துவத்தில் பன்னிரு கலைகளோடு கூடிய சூரியமண்டலம்; நாதாந்தத்தில் பதினாறு கலைகளோடு கூடிய சந்திரமண்டலம்; நிலமுதல் நாதாந்தம் ஈறான இந்நிலைகட்குமேல் பராசத்தியாகிய திருவருட்சத்தி; இப்படி அறிவேயான கோயிலுள் வேற்றுமையற்ற அறிவாற் செல்ல நிலம்முதல் நாதாந்தம் ஈறான ஆதாரங்களில் மிக மேலான பரசிவம் விளங்கும் எ–று.

சூரியமண்டலம், சந்திரமண்டலம், சக்தி மண்டலம் ஆகிய இவைகளில் ஆதேயமாய இறையை அபேத ஞானத்தால் அப்பியசிக்கப் பரசிவம் விளங்கித் தோன்றும் என்பது கருத்து. (2)

மேலென்று கீழென் றிரண்டறக் காணுங்கால்
தானென்னும் நானென்றுந் தன்மைகள் ஓராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரங்
காரொன்று கற்பக மாகிநின் றானே. 1706

இம் – எனின், வேற்றுமை யுணர்வின்றித் தியானிக்கின் தியானிக்கும் சாதகனும் பரம்பொருளாய் எங்கும் நிறைந் திருத்தலை அறியலாம் எனல் நுதலிற்று.

இ–ள்: மேல் கீழ் என்னும் பாகுபாடின்றிச் சமபுத்தி பண்ணுங்கால், சிவோகம் எனத் தியானிக்கும் ஆன்மா, இறைவற்குரிய ஆறு குணங்களையும் பெற்று, உலகமெங்கும் நிறைந்த பொருளாய், பராபரமாகிய காரணி கற்பகமாகி நிற்பன் என்றவாறு.

திரிபுடி ஞானத்தால் அன்றி, அபேத ஞானத்தால் அறியின் சிவமேயாய் விளங்குவன் என்பது கருத்து.

மேல்கீழ் என்பன பொருள்கள்மீது உள்ள குணரூப தன்மங்களால் விளையும் விகற்ப உணர்வு. அஃது உளதாம் வரை உண்மைஞானம் உளதாகாது. ஆகலின், சமபுத்தியுடன் அறிய வேண்டும் என்பார் 'மேல் என்று கீழ் என்று இரண்டறக் காணுங்கால்' என்று அருளினார். மேலென்றும் கீழென்று எனப் பாடங்கொள்வாரும் உளர், என்று என்பதே உம்மைப் பொருளை உணர்த்துதலின் மேலும் உம்மை வேண்டா என்க.

தான் என்னும் நான் – சிவமாகிய தானே நான் என எண்ணும் உயிர். சிவோகம்பாவனை செய்யும் உயிர் என்றவாறு. தான் என்றும் நான் என்றும் எனப் பாடங்கொண்டு மேற்கூறியதனோடு மாறுகொள உரைப்பாரும் உளர்.

தன்மைகள் ஓராறு: இறைவற்குரிய குணங்களாகிய பகவன் என்னும் நாமத்தின் காரணமாய ஆறு குணங்கள். அவை திரு, ஞானம், ஐசுவரியம் முதலாகக் கூறப்பட்டவை. ''ஆதி பகவன் முதற்றே'' என்ற குறளில் உணர்த்தப்பெற்றவை என்க.

தான் என்னும் நான், பாரெங்கும் என்றும் தன்மைகள் ஓராறுமாகிப் பரந்த பராபரமாகிய கற்பகமாகி நின்றான் என இயைத்துப் பொருள் காண்க. ''தான் என்னும் நான் என்றும்'' பாடம் கிடைக்காமையினால் குறிப்புரைப்பார் மயங்க நேர்ந்தமையும் அதனால் வரம்பு அழிந்தமையும் காண்க.

பார் எங்குமாகிப் பரந்த பராபரம் – எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளாகிய சிவம்.

கார் ஒன்று கற்பகம் – வரையாது வழங்குகின்ற மேகத்தை ஒத்த கற்பக விருட்சம். அதுபோல அதுவேயான ஞானி அனைவர்க்கும் பயன்படுவன் என்றது.

இதனால் உண்மைஞானி உலகர் அனைவருக்கும் உறுதுணையாவன் என்பது உணர்த்தப்பெற்றது. (3)

***ஆதார சோதனை யானாடி சுத்திகள்**
**மோததி யீரெண் கலர்ந்தத்து விண்ணொளி**
**போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி**
**சாதா ரணங்கெட்டான் றான்சக மார்க்கமே.** 1707

---

✱ இம்மந்திரம் ஐந்தாந்தந்திரத்துச் சகமார்க்கத்து ஐந்தாம் பாடலாகவும் (1492) எண்ணப்பட்டது; ஆதலால், இதன் விளக்கத்தை ஆண்டுணர்க.

மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி
ஆதார சோதனை அத்துவ சோதனை
தாதார மாகவே தானெழச் சாதித்தால்
ஆதாரஞ் செய்போக மாவது காயமே. 1708

இ-ம் - எனின், ஆதார சோதனையும் அத்துவ சோதனையும் சாதித்தால் சிவபோகம் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேதாகலை முதல் பதினாறு கலைகளால் இடைவிடாமல் ஓம் ஓம் எனத் தியானித்தலால் தூண்டிக் குண்டலி யானது முறையே மூலமுதல் ஆஞ்ஞை வரையுள்ள ஆதாரங்களிலும், வர்ணம் பதம் முதலான அத்துவாக்களிலும் நின்று பழகி, அவற்றைச் சோதித்துக் கடந்தால் ஆறாதார யோகத்தால் விளையும் போகத்தின்கண் இவ்வுடல் இன்பெய்தும் என்றவாறு.

பிராசாத மந்திரத்தால் ஓம் ஓம் எனத் தூண்டி ஆதார யோகப் பயிற்சி செய்யின் சிவபோகம் விளையும் என்பதாம்.

மேதாதியால் – மேதாகலை முதலிய பதினாறு கலைகளால் என்க. அவையாவன, மேதை, அர்க்கீசம், விஷம், விந்து, அர்த்தசந்திரன், நிரோதி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபி, அகந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பன. இவை உடலில் சத்தி பரிணமித்திருக்கும் யோகஸ்தானங்கள் பதினாறு. இவை யோகநூல் கூறியவை. பிராசாத மந்திரங்களால் என்பது ஆகமம். அவையாவன அகாரகலை, உகாரகலை, மகாரகலை, விந்து, அர்த்தசந்திர கலை, நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபினி, அநந்தை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பன.

இங்ஙனம் உடலுள் அவ்வவற்றிற்கு உரிய தானங்களில் அவ்வக்கலைகளை அவ்வவற்றிற்குரிய மந்திரங்களுடன் தியானிக்கும்போது தியானம் நிலைக்காமல் மறக்கவும் கூடும் ஆதலால் 'விடாது' என்றார்.

நினைப்பே மேதாகலை முதல் துவாதசாந்தம் வரை உயர்த்திச் செல்ல உபாயமாவது 'ஓம்' என்னும் மந்திரம் என்பார் 'ஓமெனத் தூண்டி' என்றார்.

சோதனை என்பது குற்றமுடையானைத் தண்டத் தலைவன் சோதித்தலைப் போன்றது அன்று; கூட்டி எழுப்புதல் என்னும் பொருளதாகும். அஃதாவது, ஆன்மாவை அவ்வந் நிலைகளில் கூட்டி நிறுத்தி, பின் ஓம் ஓம் என்று தியானித்து, அந்த நிலையினின்றும் மேலே எழுப்பிக் கொண்டே போதலாம்.

ஆதார சோதனை: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை என்ற ஆறு நிலைகளிலும் பொருந்தி நின்று மேலெழுதலாம்.

அத்துவ சோதனை: மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை என்ற ஆறு வழிகள். இவை சிவபோகத்திற்கு வழிஆகலின் இவைகளில் கூடி நின்று எழுதல் இன்றியமையாததாம் என்க. கிரியைகளில் சிவ தீட்சைகளிலும் இச் சோதனைகள் ஹூம்பட் அஸ்திர மந்திரங்களால் சிஷ்ய தேகத்தில் இயற்றப்படுதலும், பின் சிவாக்கினியில் சேர்க்கப்படுதலும் உணர்க.

தாது ஆதாரமாக: ஆன்மாவை ஆதாரமாகக் கொண்டு, உயிர் உணர்வின் வடிவிற்றாதலின் அதனை ஆதாரமாகக் கொண்டு என்க. ஹடயோக முறையில் கெட்டிப்பட்ட ரசமணி போன்ற விந்தினை ஆதாரமாகக் கொண்டு என்று கூறும் யோகசந்திரிகை.

சாதித்தால் என்பது, அதன் அருமை தோன்ற நின்றது. இவ்வண்ணம் பயின்றுவரின் சிவயோகியின் உடல் ஆதார சோதனையால் விளையும் சிவபோக வடிவு ஆம் என்றதாம். (5)

**ஆறந்த முங்கூடி யாகும் உடம்பினிற்**
**கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மின்**
**ஆறிய வக்கர மைப்பதின் மேலாக**
**ஊறிய வாதாரத் தோரெழுத் தாமே. 1709**

இம் – எனின், ஆதாரங்கள் அக்கரங்கள் இவற்றைப் புறத்தே காணன்மின்; உடம்பினுள் காண்மின்; அப்பொழுது பிரணவநாதமும் அமுதபான சுகமும் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மூலமுதலான ஆறு அந்தங்களும் கூடி ஆன இந்த உடம்பினுள் அவ்வாதாரங்களை நன்கு தியானியுங்கள்; எல்லாவற்றிற்கும் மேலாகத் தோன்றிய ஆஞ்ஞையில் ஐம்பது அக்கரங்களும் ஓம் என்னும் ஓரெழுத்தான நாதமாத்திரை யாய்த் தோன்றும் எ–று.

உடம்பு மூலாதாரமுதலான ஆறு நிலைகளை யுடையது. அவற்றைத் தியானிங்கள். அவற்றுள் மேலாக உள்ளது ஆஞ்ஞை. அதில் ஓம் என்னும் பிரணவநாத அனுபவம் விளையும். அது அமுதம் உண்பதுபோல இனிமையும் களிப்பும் உடையதாயிருக்கும் என நுகர் வின்பம் உணர்த்தியவாறு. குறிக்கொண்மின் என்றது ஆதார யோகத்தின் அருமை உணர நின்றது. மேலாக ஊறிய ஆதாரத்து ஆறிய அக்கரம் ஓரெழுத்தாம் எனக் கூட்டிப் பொருள் காண்க. (6)

ஆகும் உடம்பும் அழிகின்ற அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய வக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே. 1710

இம்– எனின், தூல சூக்கும உடல்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அழியுந்தன்மைத்தாய அவ்வுடல் மீளவும் தோன்றும் உடம்பாம்; அதுவும் உயிரோடு ஒன்றி அது செல்லும் பிறவிதோறும் செல்லும் உடம்பு நுண்ணுடம்பாம்; அதுவும் பொருந்தியமுறை ஏது எனின், வர்ணாத்வா முதல் தத்துவாத்துவா வரை உளதாம். அத்துவாக்கள் ஐந்தன் காரியமான உடம்புக்கும் கலாத்துவாவே அந்தமாம் என்றவாறு.

அதனையும் சோதிக்க என உபாயம் உணர்த்தியவாறு. ஆகும் உடம்பு – வினைக்கீடாக மாயா காரியமாய் விளையும் உடல். ஆன ஒன்று அழியும் இயல்பினதாகலின் அழிகின்ற அவ்வுடலாகிய ஆகும் உடம்பும் எனப்பட்டது.

போகுமுடம்பு – நுண்ணுடல், தூலமும் சூக்குமமுமாகிய இவ்விரு உடலும் தம்முள் இயைந்த முறை அத்துவாக்களால் என்பதாம். (7)

**ஆயு மலரின் அணிமலர் மேலது**
**வாய இதழும் பதினாறும் அங்குள**
**தூய அறிவு சிவானந்த மாகிப்போய்**
**மேய அறிவாய் விளைந்தது தானே. 1711**

இம் – எனின், சிவானந்தமும், சிவமேயாதலும் ஆகிய இன்ப நிலைகளை எய்துமுறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எவற்றையும் ஆராயும் மலர்வடிவாகிய இதயத் தாமரையின்மேல் உள்ளதாகிய பதினாறிதழ்களோடு கூடிய விசுத்தி சக்கரமாகிய தாமரைமலர் கண்டத்தானமாகிய ஆங்கு உள்ளன; அதில் பரிசுத்த ஞான சொரூபமான ஆன்மா சிவானந் தமே தன் வடிவாய்ச் சென்று, எல்லாவற்றையும் தன்னகத் தடக்கிய சிவஞானமே தானாய் விளைந்தது என்றவாறு.

இதயத்தாமரை மலர்மேலுள்ளது பதினாறு இதழ்த் தாமரையாகிய விசுத்தி சக்கரம். அங்கே ஆன்மா சிவானந்த வடிவாகிப் பின் சிவமேதானாய் விளங்குமென்பது கருத்து. அய்தல் – நல்லன தீயன ஆராய்தல். ஆயுமலர் – ஆராய்ந்து அறியுந்தன்மையினதாகிய மனம். மனம் பன்னிரண்டு இதழ்த் தாமரை வடிவானது. அதற்கு மேலது ஆயது – இதயத்தாம ரைக்கு மேலுள்ளதான தாமரைமலர்; என்றது விசுத்திசக்க ரத்தை. அங்குள்ள தூய அறிவானது ஞான வடிவான இடபா ரூடரான சதாசிவம். அது மாதொருபாதியாக வீற்றிருத்தலின் சிவானந்தம் என்றார். சிவம் – சதாசிவம்; ஆனந்தம் அதன் சக்தி. ஆன்மா விசுத்தி சக்கரத்தில் சிவானந்தத்தில் திளைத்து நின்று சிவமே தானாய் விளங்கும் என்பார் 'மேய அறிவாய் விளைந்தது' என்றார். மேய – மேவிய என்பதன் திரிபு. மேவிய அறிவாவது எல்லாவற்றையும் தன்னகத்தடக்கிய சிவஞானம். இதனால் விசுத்தி சக்கரத்து ஆன்மா சச்சிதானந்த சொரூபமாய் விளங்கும் அனுபவம் உணர்த்திற்று.

இஃது அறியாதார் ஆயும் மலர் என்பதற்கு மூலாதா ரங்களை வைத்து ஆயும் மலர் என்றும் பிறவாறும் உரைத்து இடர்படுவர். இதன் உண்மையைச் சட்சக்கர நிரூபணம் முதலியவற்றுள் கண்டு தெளிக. (8)

# 2. அண்டலிங்கம்

முற்கூறியவண்ணம் ஆறு ஆதாரங்களிலும் சிவம் விளங்குதலைத் தியானத்தான் நன்கறிந்து தெளிந்த சிவயோகி அண்டம் முழுவதும் சிவலிங்கமாகக் காணுதலைப் பன்னிரண்டு மந்திரங்களால் உணர்த்துவான் எடுத்துக் கொண்டார். அதிகார முறைமையும் இதனால் விளங்கும்.

அண்டம் என்பது சுத்தம் அசுத்தம் பிரகிருதியாகிய மூன்று மாயைகளின் காரியமாய் ஆன்மாக்களின் வினைப் போக பரிபாகங்களுக்கு ஏற்றவாறு விளங்கும் போகத்தானம். அது சிவலிங்க வடிவாதலைத் தெரிவிப்பது இப்பகுதி.

**இலிங்கம தாவ தியாரும் அறியார்**
**இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்**
**இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்**
**இலிங்கம தாக எடுத்த துலகே.** 1712

இம் – எனின், ஒலியுலகமும், பொருளுலகமும் சிவ லிங்கமே எனத் தெரிவித்தல் நுதலிற்று.

இ–ள்: கரணங்களால் காணப்படும் மாயா காரிய மான உலகமனைத்தும் சிவலிங்கமேயாதலை யாருமறியார். எட்டுத் திசைகளும் இலிங்கமேயாம். அறுபத்து நான்கு கலைகளும் இலிங்கமாம். உலகனைத்துமே சிவலிங்கா காரமாக உரு வெடுத்ததாம் என்றவாறு.

திசை முதல் பொருட்பிரபஞ்சம் அனைத்தும் கலை வடிவாகிய ஒலியுலகு அனைத்தும் எல்லாம் சிவலிங்க வடிவாம் என்பது கருத்து.

இலிங்கம் – அடையாளம். அஃதாவது, சிவலிங்கம் அம்மையப்பரது அடையாளம். எண்டிசை என்பது திசைக்கு உட்பட்ட அனைத்துலகையும் உணர்த்துகின்றது. இது பொருட்பிரபஞ்சம்.

எண்ணெண்கலை – அறுபத்துநான்காக அந்தணர் முதலிய வர்ணத்தார்க்கும், மகளிர்க்கும், ஏனையோர்க்குமாகத் தனித்தனியாக ஓதப்பெற்ற கலைகள், கலைகள் யாவும் சத்தப் பிரபஞ்சம். ஆகவே, சொற்பிரபஞ்சங்களும் பொருட் பிரபஞ்சங்களும் சிவலிங்கவடிவேயாம் என்றவாறு. (9)

**உலகில் எடுத்தது சத்தி முதலா**
**உலகில் எடுத்தது சத்தி வடிவாய்**
**உலகில் எடுத்தது சத்தி குணமாய்**
**உலகம் எடுத்த சதாசிவன் தானே.** 1713

இம் – எனின், சதாசிவமாகிய போகசிவமே சத்தியின் துணையால் மாயையைக் கொண்டு உலகத்தைப் படைத்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உலகத்தைப் படைத்த போகமூர்த்தியாகிய சதாசிவம் தன்னை என்றும் விட்டு நீங்காத சத்தியை முதற்கண் துணைக்கொண்டு இவ்வுலகமாகிற இல்லினைப் படைத்தனன்; மாயையின் வடிவாய்ப் படைத்தனன்; போகத்தை நுகர்தற் காகச் சத்தியின் வடிவாயே படைத்தனன் என்றவாறு.

சதாசிவமூர்த்தி சத்தியைத் தோற்றுவித்து, அதன் துணைக்கொண்டு மாயையாகிற முதற்காரணத்தைக் கொண்டு போகவடிவாகிற உலகத்தை உயிர்களாகிய நமக்கு உதவினர் என்பது.

எடுத்தல் – தோற்றுவித்தல். சதாசிவம் – அம்மையப்பர் ஒருங்குகூடிய சிவலிங்கத் திருமேனி.

உலகுஇல் – உலகமாகிற வீடு. ஏனைய வெளி. (10)

**போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்**
**ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்**
**ஏகமும் நல்கி யிருக்குஞ் சதாசிவம்**
**ஆகம வத்துவா வாறுஞ் சிவமே. 1714**

இம் – எனின், எல்லாம் அவனருளால் அவன்தர வந்தன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: போகமும், அதன் பயனாகிய புத்தியும், பற்றறுதலாகிய முத்தியும், அதன் பயனாகிய சித்தியும் இவைகளை நுகர்தற்குரிய உடல்களும், முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்துள்ள சிவமும் ஆகி ஆன்மாக்களுக்கு உதவி விளங்கும் சதாசிவம், ஆகமங்களும் அவற்றால் உணர்த்தப்பெறும் அத்துவாக்கள் ஆறும் அனைத்தும் தன் ›டிவாகவே திகழும் என்றவாறு.

போகம் – நுகர்ச்சி. உயிர்கள் தாம் செய்த வினைக்கு ஈடாக அமுதம் மலர்மாலையாதிகளை நுகரும் நுகர்ச்சி. புத்தி– நுகரும் பொழுது உளதாம் துன்ப இன்பத் தோற்றம். முத்தி – பற்றறுதலாகிய வீடு. சித்தி – அம்முத்தியைப் பெறுதலால் விளையும் பேரின்ப அனுபவம்.

ஆகம் – உடல், முத்தியை நுகர ஞானசரீரததையும், போகத்தை நுகர நுண்மையும் பருமையுமாகித் தாங்கப் பெறும் சரீரங்களையும் உணர்த்தினவாதல் காண்க. ஆறாறு தத்துவம்–

மண் முதல் கலை ஈறாகிய தத்துவங்கள். அவற்றைக் கடந்து நின்ற ஒன்று – சிவம். ஏகமும் (சிவமும் ) நல்கி என்றது உயிர்கட்குப் போக மோட்சங்களை உதவிச் சிவத்தையும் தெரிசிப்பித்து என்றவாறாம்.

உயிர்கள் தன்னை அடைந்து உய்தற்கு உபாயமாக உதவிய ஆகமங்களும், அவற்றால் உணர்த்தப்பெறும் நெறிகளும் ஆகிய அனைத்தும் சிவமே என்பது.

ஏகம் – ஆன்மா எனவும், ஆகம் – ஆகமம் எனவும் உரைப்பாருமுளர். ஆன்மாக்கள் ஒன்றல்லாமையும் போக மோட்சங்களை உயிர்க்கு உதவும் சிவம் நுகர்தற்குரிய உடலையும் உதவ வேண்டுவது இன்றியமையாதலாகலானும் அவ்வுரை இயைபின்று என்க. (11)

**ஏத்தினர் எண்ணிலி தேவரெம் ஈசனை**
**வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்**
**றார்த்தனர் அண்டங் கடந்தப் புறநின்று**
**காத்தனன் என்னுங் கருத்தறி யாரே. 1715**

இம் – எனின், இறைவன் ஏத்தவும் ஆர்க்கவும் எளிய னாயினும் கடந்து நின்று அரியனுமாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எண்ணற்ற தேவர்கள் இறைவனை எதிரிற் கண்டு இவனே எம் இறையென வணங்கி வாழ்த்தினர்; மணத்தைச் சுமந்துவரும் தென்றல்போல இனியனென்றும் வள்ளல் என்றும் வாழ்த்தினர்; அவனை அன்பென்னும் கயிற்றால் இறுகக் கட்டினர். ஆனால் அவர்கள், இறைவன் மாயேயமான அண்டங்கள் அனைத்தையும் கடந்து அப்பாலைக்கப்பாலான் என்பதை உணராராயினர் என்றவாறு.

தேவர்கள் இறைவன் உருத்திருமேனி கொண்ட காலத்துப் போற்றிப் புகழ்ந்தனரேயன்றி, ஞானிகள் போல அறிவுருவ அருவத் திருமேனியைக் கண்டு போற்றும் ஆற்றலிலர் என்றவாறு.

வாழ்த்தினர் என்றது தேவர்கள் தம்மைக் காக்கப்படு பொருளாகவும், தலைவனைக் காப்பவனாகவும் கருதி, காக்கப் படுதலாகிய தன்னலம் காரணமாக வாழ்த்தினர் என்பது. 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' ஆதலின் என்க.

தாம் கண்டனைத்து இவ்வுலகு ஆதலின், ஈசனை மாயாதீதப் பழம்பொருள் பேரின்ப வடிவு நிர்க்குணப் பிரமம் என்று கைமாறும் அளவும் கருதாதே வாழ்த்தவேண்டிய அவர்கள், தமக்குச் செய்யும் உபகாரம் பற்றி வள்ளல் என்றும், இன்பம் பற்றி வாசப் பசுந்தென்றல் என்றும் சகுணப்பிரமமாக வாழ்த்துவாராயினர்; அவர்களது அறியாமை இருந்தபடி என்னே என்றதாம்.

இறைவன் இயல்புகடந்த தன்மையும் உடையது என்பதை அவர்கள் அறியார் என்றவாறு. (12)

**ஒண்சுட ரோன் அயன் மால்பிர சாபதி**
**ஒண்சுட ரான இரவியோ டிந்திரன்**
**கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்கள்**
**தண்சுட ராயெங்கும் தற்பர மாமே. 1716**

இம் – எனின், கண்ணும் ஒளியும்போல உயிர்க்கு உயிராய்க் கலந்து நின்று அருளும் இறையின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒளிதரும் சுடர்வடிவினனாகிய தீயும், பிரமனும் திருமாலும் தக்கன் முதலான பிரசாபதியோர் ஒன்பதின்மரும், ஒளிவடிவினனாகிய சூரியனும், இந்திரனும் ஆகிய இவர்களனைவர்க்கும் கண்ணுக்குச் சுடர்போலக் கலந்துநின்றும், ஏனைய தேவர்களனைவர்க்கும் குளிர்ச்சியைச் செய்யும் சுடராய் நின்றும் தற்பரமாகிய சிவம் விளங்கும் என்றவாறு.

அக்கினி முதல் இந்திரன் ஈறாகிய தேவர்கட்குக் கண்ணுள் இரவி போலக் கலந்து நின்று காட்டும் உபகாரத்தையும், ஏனைய தேவர்கட்குத் தண்மதி போல இன்புறுத்தியும் அருள்வழங்கும் தற்பரசிவம் என்பது கருத்து. ஒண்சுடரோன் – அக்கினி, பிரசாபதி – உபபிரமர்களாகப் படைப்புத் தொழிலைச் செய்யும் தக்கன் முதலிய ஒன்பதின்மர்.

அயன் – ஒவ்வோர் அண்டத்திலுமிருந்து படைத்தற்றொழிலைச் செய்யும் முதல்வனாகிய பிரமன்.

கண் சுடராகி என்றது கண்ணுக்குச் சுடராகி என விரியும். கண் காணுமாயினும் ஒளியின் உபகாரமின்றிக் காணாததுபோல, ஆன்மா அறியுமாயினும் அதற்கு அறிவிக்கும் உதவியை இறைவன் உயிர்க்குயிராய்க் கலந்து நின்று உதவுகிறான் என்பது விளங்க நின்றது. (13)

இன்ப நுகர்ச்சியையே விரும்பும் தேவர்கட்கு அவர் விரும்பியவாறு அமுத கிரணனாகிய தண் சுடராயும், ஏனையோர்க்குப் பரிபாக நிலைக்கு ஏற்ப ஒண்சுடராயும் விளங்கும் இறையியல்பு உணர்த்தப் பெற்றது.

தாபரத் துண்ணின் றருளவல் லான் சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரிலை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கு
பூவகத் துள்நின்ற பொற்கொடி யாகுமே.1717

இம் – எனின், சரியை கிரியையாதிகளின், நிற்பார்க்கும் சிவயோகியர்க்கும் சிவம் அருளுமுறை அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: சிவபெருமான் தாபரமாகிய லிங்கத்துள் நின்றும் அருள் செய்யவல்லவன். ஆனால் அவன் பராத்பரமானவன்; எல்லாவற்றையும் கடந்த மேலிடத்து விளங்குபவன். அதனை அறிந்துய்யும் உண்மைஞான முடையார் ஒருவரும் இல்லையாம்; அங்ஙனம் அறிந்து வழிபடுவார்களுக்கு இதய கமலத்துள் பொற்கொடி போலப் புலப்படுவன் என்றவாறு.

இறைவன் எளியனாகச் சிவலிங்கத் திருமேனிகள் தோறும் நின்று அருள்புரியினும் எல்லாவற்றையும் கடந்த மேலிடத்துள்ளவன், அதனை அறிந்து வழிபடும் பக்குவமுடையவர்கள் ஒருவரும் இல்லையாம். அங்ஙனம் அவனுண்மை அறிந்து வழிபடின், அவன் இதயத்தாமரையுள் பொற்கொடி போலப் புலப்படுவன் என்பது கருத்து.

தாபரம் – சிவலிங்கம். ''தாபரம் மணலால் கூப்பி'' என வருதல் காண்க. மண் முதலான நிலையியற் பொருள்களிடத்து என்பாரும் உளர். அது பொருந்தாமை ஆட்சியால் தெளிக. சிவலிங்கம் முதலான குறிகளில் ஆகம விதிப்படி இயற்றப்படும் பிரதிட்டைகளால் என்றும் தயிருள் நெய்போல விளங்கி நிற்கும் ஆதலின் இங்ஙனம் கூறினார்.

மாபரம் – மேலானவற்றிற் கெல்லாம் மிக மேலான இடம்; என்றது தத்துவாதீதமான ஞானாகாயம்.

பூ அகம் – இதய கமலம்; சகஸ்ராரம் என்பாரும் உளர். பொற்கொடியாதல் – பொன்னானியன்றதோர் காமருவல்லி போல எண்ணிய எல்லாவற்றையும் உதவி விளங்குதல், சிவசத்தியின் பேரருள் தோற்றம் என்று கூறுவரும் உளர்.

சிவலிங்கத்தின் வாயிலாகப் பரம்பரனை உணர்ந்து இதயத் தாமரையில் பொற்கொடிபோல விளங்குகின்ற இயல்பை அறிந்துய்க என்கின்றது. (14)

**தூய விமானமுந் தூலம தாகுமால்**
**ஆய சதாசிவ மாகுநற் சூக்குமம்**
**பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்**
**ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே.1718**

இம் – எனின், திருக்கோயிலின் அனைத்து உறுப்புக் களுமே சிவலிங்கமாம் எனல் நுதலிற்று.

இ–ள்: மிக உயர்ந்ததாகிய சிவாலயத்தைப் பற்றி ஆராய்ந்து அறிந்துகொள்பவர்கட்கு, மிகத் தூய்மையான விமானம் தூலலிங்கமாம். திருக்கோயிலிலுள்ள சதாசிவ ரூபமான சிவலிங்கம் நல்ல சூட்சும லிங்கமாம்; பரந்துள்ள பலிபீடம் பத்திரலிங்கமாம் என்றவாறு.

விமானம் தூலலிங்கம்; சிவலிங்கம் சூட்சும லிங்கம்; பலிபீடம் பத்திரலிங்கம் என அறிக என்பதாம்.

விமானம் – கருவறையின் மேலதாய விமானம்; அது தூய்மை யானவற்றுள் எல்லாம் தூய்மையானது ஆதலின் 'தூய விமானம்' என்றது. பத்திரலிங்கமாம் என்றதற்கு ஏற்பத் தூலலிங்கமாம் சூக்குமலிங்கமாம் எனவும் கூட்டிக்கொள்க.

ஆய சதாசிவம், ஆய அரன் என்பன உலகிலுள்ள சராசரங்கள் அனைத்திலும் கலந்தும் கடந்தும் நின்று இயக்கு வதாய என்க. சதாசிவம் – அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கம். அதுவே சிவசத்திகளின் இருப்பை உணர்த்தும் குறியாதலின் 'நல்சூக்குமம்' எனப்பட்டது.

அரனிலை – சிவம் மணியின்கண் ஒளிபோல இடையறாது எழுந்தருளி விளங்கும் ஆலயங்கள். பத்திரம் – இதழ். பலிபீடம் தாமரை இதழ்போல்வது ஆகலின் அது பத்திரலிங்கம் எனப் பெற்றது. இடபம் என்பாருமுளர். இடபத்தை இலிங்கமாகக் கருதுதல் சிவாகம வழக்கமாயின் கொள்க. (15)

**முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமும்**
**கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமதம்**
**அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்**
**உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே. 1719**

இம் – எனின், சிவபூசைக்கு உகந்த சிவலிங்கம் அமைக்கும் பொருள்கள் இவை எனல் நுதலிற்று.

இ–ள்: முத்து, மாணிக்கம், பவளம், செதுக்கிய மரக் கொம்பு, கல், திருநீறு, கத்தூரி, சிவாகமம், சோறு, அரிசி, பூ, மணல் இவை சிவலிங்கமமைக்கும் சாதனங்களாம் என்றவாறு. (16)

**துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்**
**கன்றிய செம்பு கனலிர தஞ்சலம்**
**வன்திறல் செங்கல் வடிவுடை வில்லம்பொன்**
**றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே.**
**1720**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: கட்டித் தயிர், நெய், பால், தூய்மையான சாணம், குற்றமில்லாத செம்பு, கனல், பாதரசம், சங்கு கெட்டியான செங்கல், அழகான வில்வம், பொன் இவற்றுள் ஒன்றைச் சிவலிங்கமாகத் தெளிக எ–று.

இந்தப் பதினொரு பொருள்களும் சிவலிங்கமாக அமைத்து வழிபடத் தக்கனவாம் என்பது. துன்றும் தயிர் – மத்தால் உடைபடாத கெட்டித்தயிர். துன்றுந் தயிர் என்றதால், நெய் – வெண்ணெய் எனக் கொள்க. பால் நீர்மையதாயினும் கலசத்துள் பெய்து வழிபடத் தக்கதாம் என்க.

துய்ய மெழுகு – புழுவும், வண்டுகளின் எச்சமும் கலவாத தூய தேன்மெழுகு; கன்றிய செம்பு – அனலிட்டு உருக்கிய செம்பு; என்றது செம்பான் இயன்ற சிவலிங்கத்தை. கனல் – நெருப்புக்கட்டி. இரதம் – பாதரசம். சித்தமுறையால் கட்டப்பட்ட ரசலிங்கம். சலம் – நீர். நீரில் வாழும் சலஞ்சலம் முதலான சங்குகள். வன் திறல் செங்கல் – சுட்டகல். வடிவுடை வில்லம் – சிவலிங்க வடிவாகச் செய்யப்பட்ட வில்வக்கட்டை.

தென் தியங்கு ஒன்றை – அழகு விளங்கும் இறைகளுள் ஒன்றை என்க. சிவலிங்கமாகத் தெளி என்று இயைக்க.

சிவலிங்கங்கள் க்ஷணிகம், மிருதிகம், லோஹஜம், ரத்தினஜம், தாருஜம், சைலஜம் என ஆறு வகைப்படும். அவைகளுள், க்ஷணிகலிங்கம் பன்னிரண்டு வகைப்படும். மிருதிகம் இருவகைப்படும். தாருஜம் எட்டு வகைப்படும். லோஹஜம் எட்டு வகைப்படும். ரத்தினஜம் ஏழுவகைப்படும். சைலஜம் நான்கு வகைப்படும். க்ஷணிக லிங்கங்கள் பூசையின் இறுதியில் விடத்தக்கவை. ஏனைய மரணபரியந்தம் வைத்துப் பூசித்து இறுதியில் விடத்தக்கவை.

ரத்தினஜம், லோஹஜம், பாணலிங்கம் இவை சலலிங்கங்கள் (அசைவன): சைலஜம், சலாசலம்; மண், மரம் இவற்றான் இயன்றவையும் அங்ஙனமே. க்ஷணிக லிங்கங்களுள் மணலால் இயன்றது முத்தியை விரும்புகின்றவர்களாலும், அரிசியானியன்றது செல்வத்தை விரும்புகின்றவர்களாலும், அன்னலிங்கம் அன்னத்தை விரும்புகின்றவர்களாலும், ஆற்று மணலால் இயன்றது பூமி லாபத்தை விரும்புகின்றவர்களாலும், கோமயலிங்கம் நோய்நீக்கத்தை விரும்புவர்களாலும், வெண்ணெய் லிங்கம் மனமகிழ்ச்சியை விரும்புகின்றவர்களாலும், ருத்திராக்ஷலிங்கம் ஞானத்தை வேண்டுபவர்களாலும், சந்தன லிங்கம் சௌபாக்கியத்தை விரும்புகின்றவர்களாலும், தருப்பைக் கூர்ச்சம் முத்தியை விரும்புவர்களாலும், புஷ்ப லிங்கம் ஆயுளை விரும்புபவர்களாலும் வெல்லலிங்கம் எல்லா விருப்பத்தையும் வேண்டுபவர்களாலும், மாவானியன்ற லிங்கம் நிறைவை வேண்டுபவர்களாலும் பூசிக்கத் தக்கன. இவ்வாறே ஏனைய சல அசல லிங்கங்களுக்கும் பயன் கருதிய பூசனைகள் உள. இவற்றின் விரிவைச் சுப்ரபேதத்தில் காண்க. (17)

**மறையவர் அர்ச்சனை வண்படி கந்தான்
இறையவர் அர்ச்சனை யேயபொன் னாகுங்
குறைவிலா வசியர்க்குக் கோமள மாகுந்
துறையுடைச் சூத்திரர் தொல்வாண லிங்கமே.**

1721

இ.ம் – எனின், நால்வகை வருணத்தார்க்கும் உரிய சிவலிங்கங்கள் இவை என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வளவிய படிகலிங்கம் அந்தணர்கள் பூசிக்கத் தக்கது; பொன்னாலாகிய லிங்கம் மன்னர்கள் அர்ச்சிக்கத் தக்கது; வருவாயிற் குறைவில்லாத வைசியர்க்கு வழிபடத் தக்கது மரகத லிங்கமாகும்; மூன்று வருணத்தார்க்கும் உணவூட்டிப் பாதுகாக்கும் துறையிலுள்ள வேளாளர்க்குப் பாணலிங்கமாம் என்றவாறு.

இம்மந்திரம், வேண்டுதல் வேண்டாமை இல்லாது பொதுமையினிற்கும் சிவத்தை வருண அடிப்படையில் வேறு படுத்தச் சிவலிங்க பேதத்தை உணர்த்துதலால். சிற்சில பதிப்புக் களிலும் பெரும்பாலான ஏடுகளிலும் காணப்படவில்லை.

(18)

**அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி
எதுவுண ராவகை நின்றனன் ஈசன்
புதுவுணர் வான புவனங்கள் எட்டும்
இதுவுணர்ந் தென்னுடல் கோயில் கொண்டானே.**

1722

இம் – எனின், சிவத்தின் இயல்பினை உணர்ந்து தியானிக்கச் சிவம் உடலிடங்கொண்டருளும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இங்ஙனம் சிவலிங்கமமைக்கும் பொருள்களை யும் அவற்றால் சிவலிங்கமமைக்கும் முறையினையும் பயனை யும் உணர்ந்த ஞானி, அவற்றுள் ஒன்றை தம் பரிபாகத்திற்குத் தக்கது இதுவெனத் தேர்ந்து, எவற்றானும் உணராதவண்ணம் ஈசன் எல்லாவற்றினும் கலந்து நின்றனன் அத்தகைய கடந்து நின்ற பரம்பொருள். புதியஞானமான புவனங்களெட்டினும் கலந்திருத்தலை அறிந்து, அங்ஙனம் கலந்து நிற்கும் கடவுள் தன்னுடலிலும் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான் என்ற உண்மையை அறிவன் எ–று.

சிவலிங்கபூசை செய்யும் சிவஞானி, சிவம் கடந்து விளங்கினும், புவனங்களில் கலந்திருப்பதையும் கண்டு தன் உடம்பாகிய கோயிலினுள் வீற்றிருப்பதையும் காண்பான் என்பது கருத்து.

அது என்னும் சுட்டு முன்முன் விருத்தங்களில் கூறி வந்த சிவலிங்கம் அமைக்கும் பொருள்களை உணர்த்திற்று. அது உணர்ந்தோன் – அங்ஙனம் சிவலிங்கம் செய்யும் முறைமையினையும், பயனையும் இத்தகைய பரிபாகிக்கு இத்தகைய சிவலிங்கம் வழிபடற்கு உரியது என்பதையும் உணர்ந்தவன்.

ஒரு தன்மையை அவற்றுள் தமக்குப் பொருந்திய ஒன்றை என்க. ஈசன் எது உணராவகை நின்றனன் – ஈசன் எதனாலும் உணராதவண்ணம் கடந்து நின்றான்.

புவனங்கள் எட்டு – அட்டமூர்த்தி வடிவான உலகங் கள். எனவே, உலக முதலாகிய மண் முதலாய பஞ்ச பூதங் களும், சூரியன், சந்திரன் இயமானன் ஆகிய பொருள்களும் இறைவடிவாகும். அவற்றால் இயன்ற புவனங்களும் அவன்

திருமேனியேயாம் என்றவாறு. எவற்றானும் உணரப்படாத இறைவனை இங்ஙனம் உலகம் எல்லாம் அவன் எனத் தம் அனுபவத்தான் உணர்தல் புதிய அறிவாம் என்க. தொன்று தொட்டு இயற்கையின் அமைந்த ஒன்று தம் அனுபவத்திற்கு வரும்போது புது உணர்வாதல் தெளிவு ஆதலால். இது உணர்ந்து – இங்ஙனம் உலகம் யாவையும் இறை உருவாகவே உணர்ந்து, என் உடல் கோயில்கொண்டான் – என் உடலிலும் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருந்தனன் என அதனை உணர்வான் என ஒரு சொல் வருவித்து முடிக்க.

இதனால் சிவலிங்கபூசை செய்பவனுக்கு எல்லாம் சிவமயமாய்த் தோன்றும்; அவ்வனுபவ முதிர்ச்சியால் உடலுள் உத்தமன் கோயில் கொள்வன்; அதனையும் அவன் அறிந்து அனுபவிப்பன் என்பது உணர்த்தப்பெற்றது. (19)

**அகலிட மாயறி யாமல் அடங்கும்**
**உகலிட மாய்நின்ற வூனத னுள்ளே**
**பகலிட மாமுனம் பாவ விநாசன்**
**புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே.** 1723

இம் – எனின், சிவம் கடந்தும், கலந்தும் நிற்கும் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எல்லாவற்றிற்கும் முன்னோனாகிய நம் பாவ விநாசப் பெருமான்; அனைத்தும் சென்று ஒடுங்குதற்கிடமாய புண்ணியமூர்த்தி, அகன்ற இப்பிரபஞ்சமாய் – பிரபஞ்சத்துள்ள சித்துமாய் அவற்றால் அறியப்படாது அவ்வவற்றுள் அடங்கிக் கலந்தும் கடந்தும் நிற்கும். ஆனால் அழிதற்கு இடனாய உடம்பினுள் (வாழும்) பகுத்தறியும் இடமாகிய உயிருள் கலந்து நிற்பன் என்றவாறு.

இறைவன் உலகாயும் உலகினுள் உயிராயும் கலந்து, அவற்றைக் கடந்திருத்தலேயன்றி, உடலுள் உயிர்போல உயிருட்கலந்தும் விளங்குவன் என்பது கருத்து.

அகல் இடம் – அகன்ற இடம்; பிரபஞ்சம் என்பதன் மொழிபெயர்ப்பு. தானமாய்த் தாங்கி இருந்தும், தானியைத் தானமாகக் கொண்டு தான் தானியாய் விளங்கியும், உலகினுள் வாழும் உயிர்களாகிய தானிகட்குப் பரிபாகம் இன்மையால் அறியப்படாதவன் என்பார் 'அடங்கும்' என அவற்றுள் எள்ளினுள் எண்ணெயும், விறகில் தீயும் போல மறைந்து நிற்கும் நிலைமை உணர்த்தினார்.

அறியாமல் என்றது கருவிகரணங்களாய மாயேயங்களைக் கொண்டு முனைத்தறியும் ஆன்மாக்களால் அறியப் படாமல் என்றதாம். புண்ணியன் அறியாமல் அடங்கும் எனச் செய்வினையால் கூறினும் செயப் பாட்டு வினையாகப் பொருள் கொள்க; முற்றறிவுடைய முதல்வனுக்கு அறியாமை பொருந்தாது ஆகலின்,

உகலிடமாய் நின்ற ஊன் – அழிதற்கிடனாய உடல். ஊன் – ஆகுபெயர், பகல் – பகுத்து உணரும் உயிர். உடலின் வேறாய உயிர் என்பாரும் உளர். பகல் ஒளி எனக் கொண்டு உடம்பினுள் ஒளியாம் எனலுமாம். இதன் கருத்து உடம்பினுள் உயிராய் உயிருள் ஞான ஒளியாம் என்பது.

முன் நம் பாவ விநாசன் புண்ணியன் அடங்கும்; பகலிடமாம் ஆம் என முடிக்க. புகலிடம் – அடைக்கலத் தானம். புண்ணியன் – புண்ணியமே வடிவானவன். முனம் பாவ விநாசன் என்பதில் முனம் என்பதைப் பாவத்திற்கு விசேடணமாக்கி, முன்செய்த பாவங்களை அழிப்பவன் என்பாருமுளர்.

பாவ விநாசன் என்பது வடமொழி விதிப்படிப் புணர்ந்த தொகைச் சொல்லாதலின் முனம் என்ற காலப் பொருளை உணர்த்தும் சொல் அத்தொகைச் சொல்லின் நிறுத்த சொல் லொடு மட்டும் புணராமை கருதி முற்கூறியவாறு உரைக்கப் பட்டது. அகலிட மாய் அறியாமல் அடங்கும் என அண்டமே லிங்கமானவாறு உணர்த்துதலின் அண்டலிங்கத்து ஆயிற்று இம்மந்திரம். (20)

**போது புனைகழல் பூமிய தாவது**
**மாது புனைமுடி வானக மாவது**
**நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்**
**ஆதி யுறநின்ற தப்பரி சாமே. 1724**

இம் – எனின், இவ்வண்டமே இலிங்கவடிவாதலை விளக்குதல் நுதலிற்று.

இ–ள்: பூக்கள் புனையப்பெற்ற திருவடி பூமி; கங்கா தேவியைத் தரிசித்த முடியே வானம்; முறைமையுள் விளங்கும் ஈசன் திருமேனி பூமிக்கும் விண்ணிற்குமிடைப்பட்ட விசும்பாய் அனைத்தையும் தன்னகத்தடக்கி நிற்கும்; இதுவே ஆதி பரம்பொருளாகிய சிவம் அண்டத்தையே திருமேனி யாகப் பொருந்திநின்ற தன்மையாம் ...ன்றவாறு.

இவ்வண்ணம் அண்டமே லிங்கமாக அறிக என்ற வாறாம். மாது – கங்கை; ஆதி – முதல்வன். (21)

**தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந்**
**திரைபொரு நீரது மஞ்சனச் சாலை**
**வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை**
**கரையற்ற நந்திக் கலையுந்திக் காமே. 1725**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: நிலமாகப் பொருந்திய சத்தி பீடத்தின் மேல் விளங்கும் இலிங்கம் அதாவது பாணம் ஆகாயமாகும்; அலைமோதுகின்ற கடலே திருமஞ்சனச்சாலை; மலைகளின் மீது தவழும் மேகம் திருமஞ்சன தீர்த்தம்; வானின்கண் விளங்கும் நட்சத்திரங்களே அண்டலிங்கம் அணிந்துள்ள வயிரமணிமாலை; அளவிடற்கு அரிய சிவத்திற்குரிய ஆடை எட்டுத் திக்குகளுமாம் என்றவாறு.

சத்திபீடம் பூமி, பாணம் ஆகாயம், கடல் திருமஞ்சனச் சாலை, மேகம் திருமஞ்சன தீர்த்தம், உடுக்கள் மாலை, ஆடை எட்டுத்திக்குகள் என உணர்க.

தரையுற்ற சத்தி – தரையாகப் பொருந்திய பூமியே சத்திபீடம் என்க. அன்றியும், தரை – பூமி. பூமியைத் தாயாகக் கொண்டு சிருட்டித் தொழிலைச் செய்யும் பிரமனாகிய பிரம பீடமும் சத்திபீடமுமாகிய இவற்றின்மேல் உள்ள இலிங்கம் எனலுமாம். சிவலிங்கத்தின் அடிப்பீடம் பிரமபீடம். மேல் கோமுகையுள்ளது சக்தி பீடம். அதற்கு மேலுள்ளது பாண லிங்கமாதலான் இங்ஙனம் கூறலே இயைபுடைத்தாதல் காண்க.

பூமி பிரமபீடமாம்பொழுது கடல் முதலியன திருமஞ் சனச்சாலை முதலியவாதல் பொருந்தும் என்க. மஞ்சனச் சாலை – இறைவன் நீராட்டுக்கொள்ளும் இடம். வான் உடு – வானத்தினுள்ள நட்சத்திரமாலை. மாலை – இறைவன் அணியும் மலர், மணி முதலிய மாலை.

இறைவன் இப்படியன், இந்நிறத்தன் என்று கூறிக் காட்டொணாத்தன்மையன், ஆதலின், 'கரையற்ற நந்தி'

என்றார். தத்துவாதீதன் எனலுமாம். நந்தி கலை – நந்தி திரு வரையில் சாத்தும் ஆடை. இறைவன் திகம்பரனாதல் காட்டப் பெற்றது. (22)

# 3. பிண்டலிங்கம்

பிண்டம் மாயையின் காரியமாய் எலும்பும் நரம்பும் தோலும் இறைச்சியுமாய் ஏழுவகைத் தாதுக்களின் கூட்டமாய உடல். அதுவே சிவலிங்க வடிவாதலை உணர்த்துதலின் இவ் வதிகாரம் பிண்டலிங்கம் என்னும் பெயர்த்தாயிற்று. உலக மனைத்துமே இறைவனது திருமேனியாகக்கண்ட ஞானி அவ் வுலகத்தை அனுபவிக்கும் சாதனமாக இறைவனால் அருளப் பெற்ற தம் உடம்பும் லிங்கமாதலைக் கண்டு தெளிவனாதலின் அண்டலிங்கத்தின் பின் பிண்டலிங்கம் வைக்கப்பெற்றது.

**மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுட ராக்கை வடிவு சிதம்பரம்**
**மானுட ராக்கை வடிவு சதாசிவம்**
**மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. 1726**

இம் – எனின், உடலே சிவலிங்கமும் சிதாகாயமும், பிறவுமாதலைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ–ள்: மானுடர் உடலின் உருவமே சிவலிங்கம்; அதுவே அறிவாகாயம்; அதுவே சதாசிவம்; அதுவே திருக் கூத்து என்றவாறு.

தலை – பாணம்; உடல் – சத்திபீடம்; கால் முதல் அரை வரை – பிரமபீடம் எனக் கொள்ளின், உடல் சிவலிங்க மாதல் தெளியலாம்.

சிதம்பரம் – ஞானாகாயம்; அது திருச்சிற்றம்பலம். அது இறைவன் இடைவிடாது நின்று ஐந்தொழில் நடனம் இயற்றுமிடமாதலின் சிதம்பரமெனப்பட்டது.

சதாசிவம் – அருவுருவத் திருமேனி தாங்கிய சிவமும் சத்தியும் இணைந்த உரு. சிவம் – உரு. அது இலிங்கம். சத்தி – அறிவு. அது அருவுருவத் திருமேனியாகிய அருளாற்றல். இரண்டும் இணைந்த ஒன்று சதாசிவம். உடலும் சிவமும் அருளும் இணைந்தது ஒன்றாதலின் சதாசிவம் எனப்பட்டது.

திருக்கூத்து – நடராசப் பெருமான் இயற்றும் திரு நடனம். வடிவு திருக்கூத்து என்றது உடலின் ஒவ்வோர் அசைவும் அவன் இயற்றும் அருட்கூத்தாம் என்றவாறு. (23)

**உலந்திலர் பின்னும் உளரென நிற்பீர்**
**நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப்**
**புலந்தரு பூதங்கள் ஐந்தும்ஒன் றாக**
**வலந்தரு தேவரை வந்திசெய் யீரே.** 1727

இம் – எனின், எட்டு உருவாய் எல்லாவற்றையும் வென்ற முதல்வனை வந்திக்க, என்றும் உளராம் பேறு எய்தும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அழிந்துபடாமல் பின்னும் உளர் என்று கூறும்படி வாழ விரும்புபவர்களே! நிலமும் அதனைப் பெற்ற நீர் முதலான பருப்பூதங்களும், அவற்றானாய உடலும், செம்மையான சுவை முதலான பஞ்ச தன் மாத்திரைகளாகிற நுண் பூதங்களும் ஆகிய இவைகளை ஒருசேர வெல்லும் வன்மையை நமக்குதவுகின்ற தேவனாகிய சிவபெருமானை வணங்குங்கள் என்றவாறு.

அழியா வாழ்வு விரும்புகின்றவர்களே! உங்கள் உடலும், அதன் காரணமாய பூதங்களும், அவற்றின் தன்மை யாகிய நுண்பூதங்களுமான எல்லாம் அவனே! அவற்றை வெல்லவேண்டுமாயின் அவனையே வணங்குங்கள் என்பது கருத்து.

பின்னும் உளரென நிற்பர் எனப் பாடங்கொண்டு இறந்தவர் இறந்தே போகார்; மீட்டும் வினைக்கு ஈடாகப் பிறப்பர்; அங்ஙனம் பிறப்பிப்பவன் பூதங்களை வென்ற தேவன்; அவனை வணங்குங்கள் என்பாரும் உளர். இப்பொருளில் வந்தி செய்யீர் என்பதற்கேற்ப, பரிபாகிகளே என விளிச்சொல் வருவித்துரைக்க.

நிலந்தரு நீர் எனவே நீர் தரு தீ, தீத்தரு வளி, வளிதரு விண் எல்லாமும் கொள்க. இங்ஙனம் பருப் பூதங்களின் சேர்க்கையாலானது ஊனுடம்பு என உணர்க. புலன்தரு பூதங்கள் – சுவை முதலான நுண் பூதங்கள். ஒன்றாக வலந்தரு தேவரை – இவையனைத்தையும் ஒருசேர வென்ற வலிமை மிக்க தேவராகிய சிவபெருமானை அல்லது இவை அனைத்தையும் ஒருசேர வெல்லும் வன்மையை உயிர்கட்கு உதவும் பெருமானை எனலுமாம்.

பரசிவனை வணங்கப் பருமையும் நுண்மையுமாய பூதங்களை வெல்லலாம், என்றும் உளராகலாம் என்பது கருத்து. (24)

**கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்**
**வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்**
**தாயில்கொண் டாற்போல் தலைவனென் னுட்புக**
5 **வாயில்கொண் டீசனு மாளவந் தானே.** 1728

இம் – எனின், இறைவன் உடலிடங்கொண்டு பசுகரணங்களைப் பதிகரணமாக்கி உதவும் முறையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உடலெடுத்தபோதே அதில் குடிபுகுந்த சுவை முதலான ஐந்து புலன்களும், பொறிகளை வாயிலாகக் கொண்டு அப்போதே வழியில் நின்று போகத்திலழுந்துவர். தாய்ப்பசு கன்றை நினைந்து வீட்டிற் புகுந்தாற்போல தலைவன் என் உள்ளத்துப் புகுதலும் ஈசனும் அவ்வாயில்களைத் தமதாக்கி அப்புலன்களை அடக்கி ஆள எழுந்தருளினான் என்றவாறு.

இறைவன் சிந்தையுள் புகுந்து சீவகரணங்களைச் சிவகரணமாக்கி ஆண்டான் என்பது கருத்து.

கோயில் என்றது ஊனுடம்பு ஆலயம் என்பதைக் குறித்து நின்றது. கோயில்கொண்ட அன்றே. இந்த உடம்பை இவ்வுயிர் வினைப்போகங்களைத் துய்த்துத் தொலைக்கச் சாதனமாகட்டும் என்று உதவிய அந்தக் கணமே என்க.

குடிகொண்ட ஐவர் – வினைப்போகங்களை நுகரும் கருவியாகக் குடிபுக்க ஐவர்; என்றது ஐம்புல சுகங்களை, வாயில் கொண்டு அருளுவர் – இந்திரியங்களை வாயிலாகக் கொண்டு புலன்களைப் பற்றி வழித்தடையாய் நின்று போகத்து அழுந்துவர் என்பதாம்.

இங்ஙனமன்றிக் குடிகொண்ட ஐவர்; பிரமா, விஷ்ணு, ருத்திரன், மாகேசுரர், சதாசிவர் எனவும், அவர்கள் இவ்வுடலைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளி மூலாதாரம் முதலான வாயில்களில் நின்று, ஆன்மா திருவருட்சத்தியோடு

கூடி உயர அருளுவர் எனவும், கன்றை உள்ளிய ஆ மனை புகுதல் போலத் தலைவன் என்னுள் புக ஈசனும் அன்பர்களை ஆட்கொள்ள வந்தான் எனவும் பொருள் காண்பர். பின் இரண்டடிப்பொருள் தெளிவின்மை அறிக.

சிவபூசையில் சிவோகம்பாவனையில் உடம்பினுள்ளும், ஆவாகன காலத்தில் சிவலிங்கத்தினும் முறையே சூரிய மண்டலத்தையும் அதன் அதி தெய்வமாகிய பிரமாவையும், சந்திர மண்டலத்தையும் அதன் அதிதெய்வமாகிய விஷ்ணுவையும், அக்கினி மண்டலத்தையும் அதனதி தெய்வமாகிய உருத்திரனையும், சக்தி மண்டலத்தையும் அதனதி தெய்வமாகிய மகேசுரனையும், சிவமண்டலத்தையும் அதனதி தெய்வமாகிய சதா சிவத்தையும் தியானித்தலால் உடல் எடுத்தபோதே உடலில் அவ்வம் மண்டலத்திலிருந்து இயங்கும் இந்த ஐவரும் ஆதாரங் களாகிய வழியில் நின்று உயிர் உயர்கதியடைய உதவுவர்; பரசிவம் என் உள்ளத்தில் புக மகேசன் வாயிலாக நின்று ஆட்கொண்டருளுவன் என உரைகோடலே சிறந்தது என்க. (25)

**கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை**
**வாயில்கொண் டானடி நாடிகள் பத்துள**
**பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு**
**வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே.**
**1729**

இம் – எனின், இறைவன் பிண்டலிங்கத்தினின்று அருளும் முறைமையினை அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: எங்கள் பெரிய பெருமான், இவ்வுடலை (திருவடி விளங்கும்) கோயிலாகக் கொண்டான்; தன் திருவடி

அடைதற்கு உரிய உபாயங்களை உணர்த்தும் வாயிலாக வேதங்களாகிற சோலையைக் கொண்டான்; இவ்வுடலில் நாடிகள் பத்து உள்ளன; அவற்றைத் தூய்மை செய்தலாகிய பூசையைத் தான் ஏற்றுக்கொண்டான்; புலனைந்தும் பிறபட் டொழிய வென்று வாயில்கொண்டான் என்றவாறு.

இங்ஙனம் பத்து நாடிகளையும் வழியாகக் கொண்டு சிவபூசையில் சிவம் அருளும் முறையைக் குறிப்பித்தார் என்க.

எங்கள் மாநந்தி, அடிகோயில் கொண்டான்; அடி கொல்லைப் பெருமறை வாயில் கொண்டான்; பத்துள நாடிகள் வாயில் கொண்டான்; பூசை கொண்டான்; புலன் ஐந்தும் பிறகிட்டு வாயில் கொண்டான் என்றேனும், பூசை கொண்டான் புலனைந்தும் பிறகிட்டுப் பத்துள நாடிகள் வாயில்கொண்டான் என்றேனும் கூட்டிப் பொருள்கொண்டு இரண்டன் நயமும் ஓர்க.

வேதங்கள் காட்டினைப்போலக் கங்குகரை அறியப் படாதன ஆதலின், 'கொல்லைப் பெருமறை' எனப் பட்டது. அங்ஙனமாயினும், அவையே அடிகாணற்கு வாயிலாவன என்பதும் வலியுறுத்தப்பெற்றது.

புலன் ஐந்தும் பிறகிட்டு – புலன்கள் தம் ஆற்றல் அடங்கிப் பிற்பட்டு ஒழிய, நாடிகளைத் தூய்மை செய்து பூசை செய்பவனுடைய நாடிகளை வழியாகக் கொண்டவன் என்க.

இவ்வண்ணம் உடலையே சிவலிங்கமாகக் கண்டு அதனுள் சிவத்தைத் தரிசித்தலாகிய அகப்பூசையைச் செய்து ஆன்மா சிவமாகுக என உணர்த்தப்பெற்றமை காண்க. (26)

# 4. சதாசிவலிங்கம்

இறைவன் அருவுருவத் திருமேனியான சதாசிவமாய் நின்று அருளுமுறைமையினை உணர்த்துகின்றது இப்பகுதி. முன்னதிகாரத்து உறுப்புக்களின் பிண்டமாய உடலே சிவலிங்கமாம் என உணர்த்திய திருமூல நாயனார், இவ்வதி காரத்து இருபத்துமூன்று திருமந்திரங்களான் சதாசிவமே லிங்கமாம் என்று உணர்த்தியருளுகின்றார்.

**கூடிய பாதம் இரண்டும் படிமிசை**
**பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழும்**
**தேடு முகம்ஐந்து செங்கணிண் மூவைந்து**
**நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே. 1730**

இம் – எனின், உலகம் சதாசிவ லிங்கமாயிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவருளோடு கூடிய பாதங்கள் இரண்டும் பூமியின் மேலன; அன்பர்கள் புகழ்ந்து பாடிய கைகள் பத்தும், எட்டும் இரண்டுமாகிய திசைகளில் பரந்து தோன்றும்; அன்பர் கள் தேடுகின்ற ஈசானாதி முகங்கள் ஐந்து; சிவந்த கண்கள் பதி னைந்து; இவ்வண்ணம் தியானிக்கப்படுகின்ற சதாசிவ மூர்த்தியின் நிறம் நல்ல ஒளியுள்ள முத்தாம் என்றவாறு.

சதாசிவமூர்த்தி விராட்சொரூபராயும், ஒளிமுத்துப் போல அனுபவிக்கத்தக்கவராயும் விளங்கும் லிங்கமாம் என்பது கருத்து.

அடியாருள்ளத்துத் தியானப் பொருளாய் என்றும் பிரியாதே கூடியிருக்கும் பாதம் ஆதலால், இங்ஙனம் அருளப் பெற்றது. படிமிசை – பூமியின் மேலன எனப்பொருள் கண்டு முடிக்க.

பாடிய கை – சிவனடியார்கள் புகழ்ந்து பாடிய திருக்கரங்கள். இறைவற்குத் திசைகளும், விண்ணும் மண்ணும் கைகள் ஆதலின் அவற்றைப் பத்துக் கரங்கள் என்றார். இரண்டும் எட்டும்; உம்மைத்தொகை.

தேடுமுகம் ஐந்து – அடியார்கள் தேடித்தெரிந்து கொள்ளும் ஈசானாதி ஐந்து முகங்கள். செங்கணின் என்பதில் இன் தவிர்வழிவந்த சாரியை. ஒவ்வொரு சிரத்திற்கும் மும்மூன் றாதலின் 'செங்கணின் மூவைந்து' என்றார். அல்லலைப் போக்கி ஆட்கொள்ள அடியார்களைத் தேடுவதும், அருள் பெற்றுய்ய ஆன்மாக்களால் தேடப்பெறுவதும் முகமாதலின் தேடும் முகம் ஐந்து என்றார்.

நாடும் சதாசிவம் – அனைவரும் விரும்புகின்ற சதாசிவமூர்த்தி. நல்லொளி – குணதோஷங்கள் இல்லாத விடத்து விளங்கும் வரம்பிகந்த ஒளி. அடியார்கள் மனம் பரிபாகம் எய்திச் சிவனுடைய திருமேனியை மனத்தாற் பற்றியிருத்தலின் 'நாடும் சதாசிவம் நல்லொளி முத்தே,' என விதந்தார்.

செங்கண் உத்தம புருட லட்சணமாம் என்க. நல்லொளி முத்து – கெட்டி முத்து. இம்மந்திரம் எல்லாம் சிவமயமாகக் காணும் கடந்த நிலையைச் சுட்டி, உயிர்கடோறும் ஒளியாய்க் கலந்த நிலையைக் காட்டியவாறு காண்க. (27)

வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே. 1731

இம் – எனின், அயன் முதல் பரசிவம் அனைத்தும் சதாசிவமே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பிரமன், திருமால், உருத்திரன், இவர்கட்கு மேம்பட்ட மகேசன், இவர்கட்கு மேலான ஐந்து திருமுகங்களை யுடைய சதாசிவன், விந்து, நாதம் ஆதாரசத்தி, இறுதிக்கண்ண தாகிய பரசிவன் யாவும் சாதாரணமாகச் சதாசிவம் எனப்படும் என்றவாறு.

பிரமன் முதல் சிவம்வரை அனைத்தும் பொதுவாகச் சதாசிவம் என வழங்கப்படுதலும் உண்டு என்பது கருத்து. அயன் முதல் அனைவருக்கும் நாமரூப தியானங்கள் வேறாயினும் பொதுவகையில் சதாசிவம் எனப்படும் என வழக்கு அறிவித்தது.

உருத்திரன் – சீகண்ட ருத்திரன். மேல் ஈசன் – மகேஸ்வரன், ஐம்முகன் – சதாசிவன், அந்தம் –இறுதி, அந்தச் சிவன்– இறுதிக் கண்ணதாகிய பரசிவன். (28)

ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை
ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ
ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்
ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே. 1732

இம் – எனின், சத்தி இயங்கும் முறைமை உணர்த்துல் நுதலிற்று.

இ–ள்: அனைத்தையும் உண்டாக்குகின்ற திருவருட் சக்தியினுள்ளே நிவிருத்தியாதி பஞ்சகலைகளின் நிலை பேறாம்; முறையே சத்தியினிடமாக சிவசூரியனின் கிரணங்கள் பொருந்த விளையும் ஆற்றலுக்குள் சிவம் எழுந்தருளியபின் பத்துத் திசைகளுடன் நிறைந்து விளங்கும் உலகம் இயங்கும் என்றவாறு.

சிவசக்தியில் பஞ்சகலைகளும், அதில் சிவசூரிய கிரணம் பொருந்த உலகம்வரை உற்பத்தி ஆம். ஆகவே, அனைத்தும் சிவசிருட்டியாம் என்பது கருத்து. இதனால் பரசிவம் பராசத்தியோடு பொருந்த அனைத்துலகும் ஆதலின் எல்லாம் சதாசிவலிங்கமே ஆம் என்றவாறு. (29)

**அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்**
**அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால்வேதம்**
**அத்திசைக் குள்ளே அமர்ந்த சரியையோ(டு)**
**அத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே.** 1733

இம் – எனின், உலகம் இடையறாதியங்க உபாயங்கள் உண்டானமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அப்பத்துத் திசைகளோடு கூடிய உலகில் ஆறு அங்கங்களும், நால்வேதங்களும் சரியையாதி நால்வகை உபாயங்களும், சமய உண்மைகளும் உண்டாயின என்றவாறு.

வேதங்களும் அங்கங்களும் சரியையாதி உபாயங்களும் சமயமும் சதாசிவ லிங்கத்தின் படைப்பாம் என்பது கருத்து.

ஆறங்கமான சிட்சை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதி, நிருக்தம், சோதிடம் என்பனவாகும். நால்வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவாகும். நான்கு உபாயங்களாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. சமயம் – இவற்றையுணர்ந்து தெளியப்பெறும் சித்தாந்த சைவம். (30)

**சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள**
**சமயத் தெழுந்த இராசியீ ராறுள**
**சமயத் தெழுந்த சரீரமா றெட்டுள**
**சமயத் தெழுந்த சதாசிவந் தானே.** 1734

இம் – எனின், முற்கூறிய சமயத்தினின்று சதாசிவ மூர்த்தியின் அருளால் அனுபவப்படுவன இவை எனல் நுதலிற்று.

இ–ள்: முற்கூறிய சமயத்திலிருந்து தோன்றியன வாகிய அவத்தைகள் பத்துள்ளன; இராசிகள் பன்னிரண் டுள்ளன; உடல் அறுவகையும் எட்டுவகையும் உள்ளன என்றவாறு.

*

அவத்தை – நிலை. ஆன்மா அவ்வவ்விடங்களில் காரியப்படும் கருவி கரணங்களோடு சாக்கிரம் முதல் துரியாதீதம் வரை செல்லும் மேலாலவத்தை ஐந்தும், துரியம் முதல் சாக்கிரம் வரை செல்லும் கீழாலவத்தை ஐந்தும் ஆக 'ஈரைந்துள' என்றார். இவ்விருவகையிலும் மேலோங்கிச் செல்லினும் கீழிறங்கினும் ஆண்டாண்டுக் காரியப்படு வனவாய கருவி கரணங்கள் ஒன்றே ஆதலும் அனுபவத்தில் வேறில்லாமையும் தெளிக.

இராசி – மேடம் முதலான பன்னிரண்டு ராசிகள். உடலாறு – அயன் அரி அரன் மகேச்சுரன் சதாசிவன் சத்தி என்னும் ஆறாம். உடல் எட்டு – பிருதிவி முதலிய ஐம்பூதங்கள். சூரியன் சந்திரன் இயமானன் என்னும் எட்டு. ''இருநிலனாய்த் தீயாகி விசும்புமாகி'' என்னும் தாண்டகம் முதலியவும் அட்டமூர்த்தி வடிவினனாதலை அறிவிப்பன. இவை அனைத்தும் சதாசிவ லிங்கமே என்பதாம். (31)

நடுவு கிழக்குத் தெற்குத் தரமேற்கு
நடுவு படிகநற் குங்கும வன்னம்
அடைவுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை அஞ்சே. 1735

இம் – எனின், சதாசிவமூர்த்திக்கு உரிய ஐந்து திருமுகங்களும், அவற்றின் நிறமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நடு, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு நோக்கியவை அடியேற்குச் சிவம் உணர்த்திய திருமுகங்கள். அவை ஐந்தாம். அவற்றுள் நடுவுள்ளது ஈசானம்; அது வெண்பளிங்கு போன்ற நிறமுடையது. கிழக்கு நோக்கியது தற்புருஷம்; அது நல்ல குங்குமம் போன்ற செந்நிறமுடையது. தெற்கு நோக்கிய முகம் அகோரம்; அது செறிந்த மை போன்ற கருமைநிறம் உடையது. வடக்கு நோக்கியது வாமதேவ முகம்; அது செவ்வரத்தம்பூப்போலும் செந்நிறம் உடையது. மேற்கு நோக்கியது. சத்தியோஜாதமுகம்; அது பால் போலும் வெண்ணிறமுடையது என்றவாறு.

ஈஶாநம் ஸ்படிகம் ஶ்வேதம் தத்புருஷாந
நம் । குங்குமாபமகோரம் து நீலாஞ்ஜநாபமுக
வக்த்ரகம் । வாமதேவம் ரக்தாபம் ஸத்யோ
ஜாதம் ச க்ஷீரவக்த்ரகம் ॥

என்பது ஆகமம். இதில் பீதம் என்பது மஞ்சள் மிகுந்த செந்நிறம் என்க. அடியேன் உய்வதற்காக அருவசிவம் உருவந்தாங்கிய காலத்துத் தாங்கிய திருமுகங்களாம். அவற்றைத் தியானிக்க என்பது. (32)

அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பியென்
நெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. 1736

இம் – எனின், சதாசிவ மூர்த்தியின் ஏனைய அவயவத் தியானம் அறிவித்தல் நுதலிற்று.

இ—ள்: ஐந்து முகங்கள் உள்ளன; பதினைந்து கண்கள் உள்ளன; பத்துக் கைகளும், அவற்றில் பத்து வகைப் படைகளும் உள்ளன. இவ்வண்ணம் சதாசிவ மூர்த்தி என்னுள்ளம் நிறைந்து விளங்கினன் எ—று.

இவற்றை

𑌪𑌞𑍍𑌚𑌾𑌸𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌣𑍇𑌤𑍍𑌰𑍈𑌰𑍁𑌪𑍇𑌤𑌮𑍍 ।
𑌶𑍂𑌲𑌂 𑌵𑌜𑍍𑌰𑌂 𑌚 𑌖𑌡𑍍𑌗𑌂 𑌪𑌰𑌶𑍁𑌮𑌭𑌯𑌦𑌂 𑌸𑌵𑍍𑌯𑌭𑌾𑌗𑍇
𑌵𑌹𑌨𑍍𑌤𑌂 । 𑌨𑌾𑌗𑌂 𑌪𑌾𑌶𑌂 𑌚 𑌘𑌣𑍍𑌟𑌾𑌂 𑌪𑍍𑌰𑌲𑌯𑌹𑍁𑌤𑌵𑌹𑌂
𑌸𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌂 𑌵𑌾𑌮𑌭𑌾𑌗𑍇 ।

என்பதால் தெளிக. (33)

**சத்தி தராதல மண்டஞ் சதாசிவ**
**சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்**
**சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்**
**சத்தி சிவதத் துவமுப்பத் தாறே.** 1737

இம் – எனின், தத்துவ தாத்துவிகங்கள் அனைத்தும் சதாசிவத்தின் இலிங்கமே எனல் நுதலிற்று.

இ–ள்: சிவசத்தி பூமியாம்; சதாசிவம் பூமியையும் உள்ளடக்கி நிற்கும் அண்டகோளகையாம்; சத்தி மிக்க நிலையியற் பொருளாம்; சிவம் மிக்க இயங்கியற் பொருளாம்; சத்தி உருவாம்; சதாசிவம் அருவாம்; சத்தியும் சிவமும் தத்துவம் முப்பத்தாறுமாம் எ–று.

இது, சத்தியும் சிவமும் அனைத்துமாய்க் கலந்து விளங்குதலை உணர்த்தி, அதுவே சதாசிவமாமென்று சாதித்தவாறாம்.

தாபரம் – சிவலிங்கம். சங்கமம் – அடியார்கள். இயங் கியற் பொருள். நிலையியற் பொருள் எனின் உலகர் என்னும் மரம் மனிதன் முதலியவற்றை அன்று; அவற்றுள்ளும் சிவம் கலந்து உறையுமாயின், அக்கலப்பு உணர்வார் அருள் உணர்த்த உணரும் சிவஞானிகள் ஆதலானும் கலப்பு உண்மையை அவை தாம் அறியாமையானும் என்க. (34)

**தத்துவ மாவ தருவஞ் சராசரந்**
**தத்துவ மாவ துருவஞ் சுகோதயந்**
**தத்துவம் எல்லாஞ் சகலமு மாய்நிற்குந்**
**தத்துவ மாகுஞ் சதாசிவன் தானே.** 1738

இம் – எனின், சதாசிவமே எல்லாத் தத்துவமாயும் விளங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தத்துவமாவது அருவமானது; அந்தத் தத்துவம் சராசரங்களாய் விரிந்து நிற்கும்போது உருவமாம்; உருவமாக விரிந்தபோதே சுகத்தின் விளக்கம் ஆம்; இத்தத்துவங்களனைத்தும் எல்லாமாய் விளங்கும்; தத்துவம் என்பது சதாசிவமே என்றவாறு.

தத்துவம் என்பது உண்மை, இயல்பு, பிருதிவி முதல் குடிலை ஈறாய தத்துவங்கள் என்ற மூன்று பொருளிலும் முறையே ஆளப்பெற்றிருத்தல் காண்க.

தத்துவம் பொருட்டன்மையாயபோது அருவாம். பொருளாகும்போது சராசரமான உருவாம். அது சுகத்தின் தோற்றமாய் விளங்கும். அதுவே சகலமாயும் நிற்கும். சகலம் – மல மாயா கன்மரூபமான வடிவு. அனைத்தும் எனலுமாம். தத்துவமாகும் சதாசிவன் தானே என்பது சதாசிவம் உண்மைகள் அனைத்திலும் கலந்து விளங்கும் பேருண்மையாம் எனலுமாம். (35)

**கூறுமி னூறு சதாசிவன் எம்மிறை**
**வேறோர் உரைசெய்து மிகைப்பொரு**
**ளாய்நிற்கும்**
**ஏறுரை செய்தொழில் வானவர் தம்மொடு**
**மாறுசெய் வானென் மனம்புகுந் தானே. 1739**

இம் – எனின், நூறு முறை சீபஞ்சாக்கரத்தைச் செபிக்கச் சிவம் எளிதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சதாசிவன் எம்இறை என நூறுமுறை கூறுமின்; வேறொரு வார்த்தையைக் கூறின் அவன் அதனைக் கடந்து நிற்பன்; தம்மைத் தாமே மிகைப்படுத்திக்கொண்டு உரைக்கும் தேவர்களோடு மாறுபட்டு நிற்பன்; அவன் என் மனம் புகுந்து விளங்குகின்றான் என்றவாறு.

தம்மையே புகழ்ந்து இச்சைகள் பேசும் தேவர்க்கு அரியவன் சிவன்; என் மனத்துத் தாமே எளிவந்த கருணை யால் மேவியவன்; ஆகையால், நாவினால் நூறு நூறாயிரம் நவிலுமின் என்பதாம்.

நூறு என்னும் எண்ணுப்பெயர் நூறு முறை குறையா மல் எண்ணப்பெறும் சீபஞ்சாக்கர செபத்தை உணர்த்திற்று. சிவயநம: என்பதில், சிவனே வணங்கத் தக்கவன்; சிவன் ஒருவனே தியானிக்கத்தக்கவன் என்னும் உபநிடதக் கருத்தடங் கியிருத்தலின் அதனைச் 'சதாசிவன் எம் இறை' என்பதால் குறிப்பித்தார், 'எம் இறை' என்றது நம: என்பதன் விளக்கமாம். சீபஞ்சாக்கரத்தைவிட்டு வேறொரு வார்த்தையைக் கூறின், அது இறைவன் புகழேயாயினும் அதனுள் இறைவன் அடங் காது அவற்றைக் கடந்த பொருளாய் நிற்பன்; சீபஞ்சாக்கரம் ஒன்றே அவனையும் அவனே வணங்கத்தக்கவன் என்பதையும் உணர்த்தும் தன்மையது என்றவாறாம். இவர் தேவர் அவர் தேவர் எனலும், பிற மந்திரங்களைக் கூறுதலும் குற்றமுடைய செயல் என்னும் இவ்வுரை இயைபின்றி நிற்றல் காண்க.

ஏறு உரை – தம்மேல் ஏற்றிச் சொல்லும் புகழுரை. தம்முடையன அல்லாத புகழைத் தம்மேல் ஏறட்டுச் சொல்லும் பொய்ம்மை. இதற்கு எதிரான உண்மைப் புகழை வள்ளுவர் 'பொருள்சேர் புகழ்' என்பர். அதன் சிறப்பைப் பரிமேலழகர் உரையால் தெளிக. தம்மைத் தாமே புகழ்ந்து கொள்ளுதலைத்

தொழிலாகக் கொண்டவர்கள் தேவர்கள். அவர்களோடு இறைவன் மாறுகொள்ளலாவது தான் அருள் வழங்கற்கண் பிற்பட்டு நிற்றலும் வெளிப்படாமையுமாம்.

எமக்குப் பரமபதி பெருமானே எனத் தெளிந்த என் மனத்தில், தாமே வலியவந்து புகுந்து, இடங்கொண்ட எளிமைப்பாடுடையவன் என்றவாறு.

இதனால் தானே தருக்கித் திரியாது நூறுமுறை உரைப்பின் சிவன் தானே வந்து மனதிடம் கொண்டு மன்னிய மன்னாவன் என்பது விளக்கப் பெற்றது.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றி 'வேறோர் உரை' என்பதற்குச் செந்தமிழ்த் திருமுறை தமிழ்மறைகளுக்கு மாறாக நூல்களைச் செய்து என்றும், வேறு பலவாறும் தோன்றிய வண்ணம் உரைப்பர். பொருந்துமாற்றை நடுநின்று தெளிக

(36)

**இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவுஞ்**
**சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்**
**அருளார்ந்த சிந்தையெம் ஆதிப் பிரானைத்**
**தெருளார்ந்தென் உள்ளே தெளிந்திருந்**
**தேனே.**

இம் – எனின், சிவபெருமானுடைய திருவுருவச் சிறப்பினை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இருள் போன்ற விடம் நிறைந்த திருக்கழுத்தும், வலக்கரத்தில் ஏந்திய மழுவும், சுருள் நிறைந்த செஞ்சடைக்கண் ஒளிவிடுகின்ற பிறைமதியும், திருவருள் நிறைந்து வழியும்

திருவுள்ளமும் படைத்த எம் பரசிவத்தைத் தெளிந்த என் மனத்துள் கண்டு தெளிந்திருந்தேன் என்றவாறு.

பெருமானைத் தரிசித்துத் தெளிதற்குரியது தெளிந்த மனமே என்பதை வற்புறுத்தியவாறு. இருள் ஈண்டு உவம ஆகு பெயராய் இருள் நிறம் போன்ற நிறமுடைய விடத்தை உணர்த் திற்று. இருளார்ந்த கண்டம் – நீலகண்டம். இது பிற தெய்வங் கட்கு இல்லாத சிறப்பு அடையாளமாதலானும், செம்மேனியில் அணிசெய்து எளிதில் அறியப்படுவதொன்றாகலானும் அதனை முதற்கண் கூறினார்.

மழு–கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு. தீயகல் எனப் படுவது. தாருகாவனத்து முனிவர்கள் ஏவியது. அதனைச் சிவ பெருமான் கரத்தில் ஏந்தினர் ஆதலின் ஏந்து மழுவும் என்றார். ஏந்து மழு என்றது ஏந்த முடியாத ஒன்றை ஏந்திய பெருமை தோன்ற நின்றது. இதுவும் இறைவற்குரிய சிறப்பு அணிகளுள் ஒன்று. மழு – படை எனலுமாம்.

சோதிப்பிறை – ஒளிவிடுகின்ற பிறை. சந்திரன் தேவர் பலரிடமும் சென்று, தன் சாபத்தைப் போக்க வேண்டியபோது அவர்கள் மாட்டாமையான் ஒழிந்தனராகச் சிவபெருமானிடம் வந்து முறையிட்டுத் திருமுடியை இடமாகப் பெற்றான். ஆதலால், பிறையும் சிவனே மேலானவன் என்பது உணர்த்தும் சிறப்பு அடையாளம் என்க.

அருளது சத்தியாகும் ஆதலால் திருவருட்சத்தி நிறைந்த என்பார் 'அருளார்ந்த சிந்தை எம் ஆதிப்பிரான்' என்றார்

மலத்தான் மறைப்புண்டு கல்போல ஒன்றும் அறியாமலும், ஒன்றை ஒன்றாக மதித்து அறிதலும் இன்றி உள்ளதை உள்ளவாறுணர்தலாகிய சிவஞானத்தால் சிவனே தலைவனாவன் எனத் தெளிவு நிறைந்த என் மனத்துள் பெருமான் திருவுருவைக் கண்டு தெளிந்து இருந்தேன் என்பார். 'என் தெருளார்ந்த உள்ளே தெளிந்து இருந்தேன்' என்றார். (37)

**சத்திதான் நிற்கின்ற ஐம்முகஞ் சாற்றிடில்**
**உத்தரம் வாமம் உரைத்திடும் சத்தி**
**பச்சிமம் பூருவம் தற்புரு டன்னுரை**
**தெற்கி லகோரம் வடகிழக் கீசனே. 1741**

இம் – எனின், சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களையும், அவற்றிற்குரிய திசைகளையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆன்மாக்களுக்குக் கருணை பொழிவதற்காகத் திருவருட்சத்தி விளங்கிநிற்கும். ஐம்முகங்களையும் முறையே சொல்லின், வாமதேவ முகம், வடக்கு நோக்கியது; சொல்லப்படுகின்ற சத்தியோசாத முகம் மேற்கு நோக்கியது; தற்புருஷம் கிழக்கு நோக்கியது; புகழோடு கூடிய அகோரமுகம் தெற்கு நோக்கியது; வடகிழக்கில் விளங்குவது ஈசானமாம் என்றவாறு.

இதனால் முறையே வாமதேவம் முதலான ஐம்முகங்களின் திசை கூறப்பட்டமை காண்க.

சத்திதான் நிற்கின்ற ஐம்முகமுஞ் சாற்றிடில்
உத்தமம் வாமம் உரையத் திருந்திடும்
தத்துவம் பூருவம் தற்புருடன் சிரம்
6 அத்தகு கோர மகுடத் தீசனே.

என்ற பாடமும் உண்டு. இதில் முகங்களும், அவை நோக்கும் திசையும் விளங்காமை காண்க. மேற்கண்ட பாடத்திலும் ஈற்றடி ஊகமாய்க் கொள்ளப்பட்டதே. உண்மையான பாடங் கிடைப்பின் திருந்தல் நலமாம். (38)

**நாணுநல் லீசான நடுவுச்சி தானாகுந்**
**தாணுவின் றன்முகந் தற்புருட மாகுங்**
**காணும் அகோரம் இருதயங் குய்யமாம்**
**மாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே. 1742**

இம் – எனின், ஐம்முகங்களின் வாயிலாகப் பஞ்சப் பிரம மந்திரங்கள் தோன்றும் முறையும், அவைகளை நியாசம் செய்யும் விதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நாண் போல்வதாய ஈசானம் ஈசான மூர்த்தாய என்று நடுவுச்சியில் நியசிக்கத்தக்கதாம்; தாணுபோல நிமிர்ந்து இருந்து நியசிப்பவன் முகத்தில் தற்புருஷம், தத்புருஷ வக்த்ராய என்று நியசிக்கத்தக்கது; காணப்படுகின்ற அகோரம், அகோர ஹ்ருதயாய என்று இதயத்தில் நியசிக்கத் தக்கதாம்; மாட்சிமைப்பட்ட வாமம், வாமதேக குஹ்யாய என்று குஹ்ய மாகிய குறியில் நியசிக்கத்தக்கது. சத்தியோ ஜாதம் சத்தியோஜாத மூர்த்தயே என்று பாதத்தில் நியசிக்கத்தக்கது என்றவாறு.

ஈசானாதி பஞ்சப் பிரம மந்திரங்களையும் உச்சந்தலை முதல் கால்வரை நியசிக்க என்பதாம்.

நாணு நல்லீசானம் – துவாதசாந்தப் பெருவெளியில் பரசிவத்தைக் காண்போர்க்கு நாண்போலப் பற்றி உயர்த்து வதாகிய உச்சிமுகமாகிய ஈசானம் என்க. உகரம் தவிர்வழி வந்த சாரியை, நாணுகின்ற ஈசானம் என்பாரும் உளர்.

தாணு – தம்பம். தம்பம்( ால நடுநான்று விழாமல் இருப்பவரின் முகம் தத்புருஷவக்,ரமாக நியசிக்கத்தக்கது என்பதாம். குய்யம் – குறி. (39)

**நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவசங் கண்ணம்பு**
**வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ்**
**செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகுஞ்**
**செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே.** 1743

இம் – எனின், ஆறு அங்க மந்திரங்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நெஞ்சு, தலை, முடி, கவசம், கண், அம்பு என்பவை ஆறு அங்க மந்திரங்களாம். இவை வஞ்சனை செய்யாது ஆன்மாவிற்கு அறிவு விளக்கத்தைத் தரும் சுத்த மாயையாம். இவற்றின் பெருகிய நிறம் பச்சையாம்; செப்ப மான சிவந்தசுடரைச் சிரத்திலுடையாளான பராசத்தி மின் போல் காட்சியளிப்பள். அவள் கையில் விளங்கும் பத்து வகை ஆயுதங்களும் செஞ்சூரியன் போல்வன என்றவாறு.

ஷடங்க மந்திரங்கள் இதயம் முதல் அஸ்திரம் வரை உள்ளன. அவை சுத்தமாயா காரியங்கள். அவற்றைத் தியானிக் கும்பொழுது பச்சைநிறமாகத் தோன்றும்; பராசத்தி மின்னற் கொடி போலக் காட்சி அளிப்பள். அவள் கையில் சூரியன் ஒளிபோல் பத்து ஆயுதங்களும் ஒளிவிடும் என்பது கருத்து.

நெஞ்சு – ஹ்ருதயாய நம; சிரம் – சிரசே நம; சிகை – சிகாய நம; கவசம் – கவசாய நம; கண் – நேத்ரேப்யோ நம; அம்பு – ஹஸ்திராய நம; என்பவை அங்கமந்திரங்கள் ஆறாம்.

இவை அங்கங்களாகத் தியானிக்கப்படுகின்றமையின் நம்முடைய இதயமும் சிரமும் முதலியன போல அசுத்தமாயா காரியமான அங்கங்கள் அன்று; விந்துவாய சுத்தமாயையும் என்பார் 'வஞ்சமில் விந்து' என்றார். விந்துசத்தி தியான காலத்தில் விரிந்து தோற்றம் அளிக்கும்போது பச்சை நிறமாகக் காணப்பெறுதலின் 'வளர்நிறம் பச்சையாம்' எனப்பட்டது.

செஞ்சுறு – செய்துறு என்பதன் மரூஉ – செய்தேன் என்பது இக்காலத்தும் செய்ஞ்சேன் என மருவி வழங்குதல் காண்க. செஞ்சுறு சேகரம் – செப்பஞ் செய்யப்பட்ட முடி. சேகரம் – முடி. சேகரி – முடியினையுடையாள். செப்பஞ் செய் யப்பட்ட – செஞ்சூரியன் போல ஒளிவிடுகின்ற திருமுடியை யுடைய பராசத்தி என்க. மின்னாகும் – மின்னற் கொடி போலக் காட்சி அளிப்பள். அவள் கை ஆயுதங்கள் பத்து. அவையும் செஞ்சூரியன் போல்வன என்றவாறாம். இம் மந்திரம் அங்க மந்திரங்கள் ஆறு; அவை சுத்தமாயா காரியங்கள்; அவற்றைத் தியானிக்கப் பச்சை நிறமான சத்தியும், மேலும் தியானிக்க மின்னொளி போலப் பராசத்தியும் காட்சி தருவர் எனப் பயன் அறிவிக்கின்றது. (40)

**எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்**
**விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி**
**வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்**
**பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே.** 1744

இம் – எனின், சதாசிவமூர்த்திக்கு அங்க மந்திரங்கள் இன்னின்ன அவயவங்களாம் என்று அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: ஆராயுமிடத்து இதயமந்திரம் இறைவனுக்கு ஞான சத்தியாம்; சிரமந்திரம் விண்ணில் விளங்கும் பரா

சத்தியாம்; சிகாமந்திரம் ஆதிசத்தியாம்; நிறமுடைய கவச மந்திரம் அழகிய இச்சாசத்தியாம்; மேலான நேத்திர மந்திரம் பண்ணும் கிரியா சத்தியாம் என்றவாறு.

இங்ஙனம் இதய முதலான மந்திரங்கள் சதாசிவத்திற்கு இன்னின்ன சத்திவடிவாய திருவுருவங்கள் என்பது உணர்த்தியவாறு.

பராசத்தியைத் துவாதசாந்தப் பெருவெளியில் வைத்துத் தியானிப்பது மரபாதலின் 'விண்ணிற்பரை' என்றார்.

**சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடுஞ்**
**சத்தி அறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்**
**சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்**
**சத்தி யுருவாஞ் சதாசிவன் தானே.** 1745

இம் – எனின், சதாசிவ மூர்த்தி திருவருட்சத்தியே வடிவாய் இயங்கும் முறைமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சத்தி குண்டலியோடு நாற்கோண வடிவான மூலாதாரத்தில் நீர்போலத் ததும்பிக் கொண்டிருக்கும்; அதற்கு மேல், அறுகோண வடிவான துவாதிஷ்டானத்தில் திருமால் போலச் சயனம் பொருந்தும்; அதற்கு மேல் வட்டவடிவான ஆஞ்ஞா சக்கரத்தில் நீர்போல மூலமுதல் ஆஞ்ஞை வரையில் ஒளியாயிருக்கும்; இங்ஙனம் சதாசிவம் சத்தியுருவாம் என்றவாறு.

இங்ஙனம் மூலாதார முதல் ஆஞ்ஞை வரை ஒளிப் பிழம்பாய் அந்தந்த இடத்தில் சிவசத்திவடிவாய்ச் சதாசிவம் அனுபவஞானிகட்குப் புலனாமாற்றை அறிவித்தது இம் மந்திரம்.

மூலாதாரத்துச் சலம் உற்று 'நின்றிடும்' என்றும், ஆஞ்ஞையில் சலமுற்று 'இருந்திடும்' என்றும் கூறியதன் நுணுக்கம் ஓர்க. நின்றிடுதல் உன்முகமாய் மேல் நோக்கி நிற்றல். இருந்திடுதல் அனுபவத்திற்கு விஷயமாய் ஒளி வடிவாய் இருத்தல். ஆஞ்ஞையில் எரிகின்ற விளக்கினைப் போல மூலமுதல் ஆஞ்ஞைவரை சோதிப்பிழம்பாய்க் காணப் படுதலின் இங்ஙனம் உணர்த்தியவாறாம். (42)

**மானந்தி எத்தனை காலம் அழைக்கினுந்**
**தானந்தி யஞ்சின் தனிச்சுட ராய்நிற்குங்**
**கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்**
**மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே. 1746**

இம் – எனின், சிரத்திற்கு மேல் ஒன்பது இதழ்க் கமலத்தில் சிவம் விளங்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மகத்தத்துவத்தின் வலிகுன்றி அன்பர்கள் எத்தனைகாலம் அழைத்தாலும், சிவமாகிய தான் ஐந்து முகங் களோடு கூடிய ஒப்பற்ற சுடராக விளங்கும். பிராண வாயுவைக் கட்டுப்படுத்தி மேலெழும் வண்ணம் செலுத்தி, ஒவ்வொரு ஆதாரமாகக் கடந்து சென்று பதினாறு இதழ்க் கமலமாகிய சிரத்தானத்திற்கு மேல் விளங்கும் ஒன்பது இதழ்க் கமலத்தின் மேல் சிவம் எழுந்தருளி விளங்குவர் என்றவாறு.

சதாசிவமூர்த்தி அன்பர்கள் ஆணவமலம் குன்றி எத் தனைக் காலம் அழைத்தாலும் அவர்களின் வேறாகக் காட்சி வழங்குவர். பிராணாயாமத்தை முன்னிட்டு ஆதாரயோகங் களைச் செய்யின், சிரத்தின்மேல் ஒன்பது அங்குல அளவி லுள்ள ஒன்பதிதழ்க் கமலத்தின்மேல் உடனாய்க் காட்சி வழங்குவர் என்பது கருத்து.

மான் – மஹத் என்பதன் திரிபு. மான் நந்தி – ஆணவ மலத்தின் காரியமாகிய நாம் பெரியம் என்னும் தன்மை கெட்டு என்க. நந்தி – சிவம். நந்திதான் – சிவமாகிய பரம்பொருள். அஞ்சின் தனிச்சுடராய் – ஈசானாதி பஞ்சமுகங்களோடு வேறான ஒளிவடிவாய்; என்றது அன்பால் அடிமைத்திறத்து நின்று அரற்றுவார்க்குச் சிவன் அவரின் வேறாய் முன்னிற்கும் பொருளாய் அருள் வழங்குவன்; அனுபவப் பொருளாகான் என்றவாறு.

கால் நந்தி – காற்றைப் பூரக ரேசக கும்பகங்களால் பெருக்கி. உந்தி – மூலத்தினின்று மேலோங்கி எழுமாறு செலுத்தி. கடந்து – ஆதாரக்கிரந்திகளைக் கடந்து.

கமலத்தின் மேல் – பதினாறு இதழுள்ள பிரமரந்திரத் தாமரையின்மேல். ஒன்பதின் மேவி – ஒன்பது இதழ்த் தாமரை யுள் எழுந்தருளி. சிரத்திற்குமேல் ஒன்பதுஅங்குல அளவி லிருப்பது இது. சகலாகமசாரமாகிய சித்தாந்த சாராவளியில் ஆதாரங்கள் பத்து என்றும், அவை – மூலாதாரம், சுவாதிட் டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, தாலு, ஆஞ்ஞை, பிரமரந்திரம், சிரத்திற்கு மேலிடம், துவாதசாந்தம் என்றும் கூறும். இவற்றுள் சிரத்திற்கு மேலிடம் ஒன்பது அங்குல அனுபவப் பொருளாய் அறிவுக்குப் புலனாய் நிற்கும்; அதனை விளக்கியவாறு.

ஆகம உணர்ச்சியும் வழிநூற் சிந்தனையும் இல்லாதார் ஒன்பதின் மேவி என்பதற்கு நவந்தரு பேதமாகிய நிலை என்று உரைப்பர்; அது பொருந்தாமை சாராவளி கொண்டு தெளிக. அனுபவமுடைய மரபிலே வந்த ஆசாரியன்பால் அணுகி ஐயந்தெளிக. (43)

ஒன்றிய வாறும் உடலி னுடன்கிடந்
தென்றுமெம் மீச னடக்கும் இயல்பது
தென்றலைக் கேறத் திருந்து சிவனடி
நின்று தொழுதேனென் னெஞ்சத்தி னுள்ளே.
1747

இம் – எனின், இப்படி உலகத்தையும் உயிரையும் கலந்து நின்று இயக்குகின்ற சிவம் அனுபவத்திற்கு எளிதாம் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எம் ஈசன், உயிரோடு ஒன்றி நவாந்தம் துவாத சாந்தம் வரை விளங்கு முறையும், இவ்வுடலுக்குள் உயிருடன் கிடந்து என்றும் விளங்கும் இயல்பும் அதுவாம்; அத்தகைய சிவபெருமானுடைய திருந்திய பாதங்கள் அழகிய தலைமேல் விளங்க, என் மனத்துள் தியானித்து நின்று தொழுதேன் என்றவாறு.

சிவயோக மார்க்கத்து நவாந்தம் துவாதசாந்தம்வரை வியாபித்து நின்று உயிருடன் ஒன்றி விளங்கும் பரம்பொருளை என்னுள் கண்டு மகிழ, அவர் திருவடியை என் தலைமீது சூட்டினேன் என்பதாம். இதன் கருத்து தாடலைபோல ஒன்றி நின்றேன்; அதனால் சிவயோகம் சித்தித்தது என்றவாறாம்.

ஒன்றியவாறும் என்றது முன்னைய மந்திரங்களில் கூறியவாறு சதாசிவம் உயிருடன் ஒன்றி, தேகங் கடந்து நின்றவாறும் என்பதாம்.

உடலின் உடன் கிடந்து எனப் பிரித்து, உடலில் உயிருடன் கிடந்து என ஒரு சொல் வருவிக்க. ஸ்வதசித்தாகிய சிவம் உயிரைப்பற்றி அல்லது நில்லா்து ஆகலான் என்க.

ஈசன் என்றும் நடக்கும் இயல்பு அது ஆம் எனவும், சிவனடி தலைக்கு ஏற நெஞ்சத்தினுள்ளே நின்று தொழுதேன் எனவும் முடிக்க.

திருந்து சிவனடி – இயல்பாகவே திருந்திய சிவன் திருவடி நெஞ்சத்தினுள்ளே நின்று தொழுதேன் – ஞானமார்க் கத்தான் வழிபட்டேன் என்றவாறாம். (44)

**உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்**
**கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் நெஞ்சம்**
**புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே**
**பணிந்தேன் பகலவன் பாட்டு மொலியே.** 1748

இம் – எனின், சிவபெருமானை ஆவாகித்துப் பூசிக்கு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உலகனைத்தும் விளங்கும் ஒளிப்பொருளா யுள்ள பரசிவத்தை உள்ளவாறு உணர்ந்துய்ந்தேன்; அவனை ஆன்மாக்களாகிய யாம் உய்யும் வண்ணம் பூமிக்குக் கொணர்ந்தேன்; என் மனமாகிய கோயிலில் புனிதனாகிய இறைவனைப் புணர்ந்தேன்; யான் கூறும் இவை பொய் அல்ல, மெய்; நாள் முழுதும் இடைவிடாது பணிந்தேன்; அவன் பாட்டும் ஒலியும்போல அநுபவமாயினான் என்றவாறு.

உலகில் விளங்கும் சித்தும் சடமுமாய பொருள்கள் அனைத்தினும் கலந்து ஒளிதரும் பொருள் ஒன்றாக அவன் விளங்குதலை அறிந்தேன்; அத்தகைய உலகம் கடந்தும் கலந்தும் தெளிதரும் பொருளை உலக உபகாரமாக இப்பூமியில் கொணர்ந்தேன்; மனக்கோயிலில் மன்னவைத்தேன்; திருவடி சிரமீது சூடினேன் என்பது கருத்து.

சிவபூசையில் ஆவாகனவிதியாக அசிந்திய விசுவ சாதாக்கியம்

ஸர்வம் வ்யாப்தம் ஸர்வத꞉ ஸூக்ஷ்ம தத்பிந்து ஸர்வகாரணம்
ஸாரம் வ்யாப்தம் ஸத்ய ஜ்ஞாநாநந்த ஸம்வாத்மகம் ।
வ்யாபகம் ஸர்வதத்வாநாம் ஸர்வதேவ ஸநாதநம் ॥
ஸாத்ய ஸாதக ரஹிதம் வாங்மநோऽதீத கோசரம் ।।
வ்யக்தம் கார்யாத்மக விசேஷேண நிஷ்களம் ஸகளாத்மநி।

என்று அறிவித்தல் காண்க. இதனால் எங்கும் வியாபித்துள்ள சிவத்தை உடலிடமாக உயிருள் விளங்கச் செய்யும் அந்தர்யாக முறை அறிவிக்கப்பெற்றது. இதற்கு வேறுரை கண்டு இடர்ப்படுவாருமுளர். (45)

**ஆங்கிவை மூன்றினும் ஆரழல் வீசிடத்**
**தாங்கிடும் ஈரேழு தானடு வானதில்**
**ஓங்கிய ஆதியும் அந்தமு மாமென**
**ஈங்கிவை தம்முடல் இந்துவு மாமே.** 1749

இம் – எனின், சதாசிவலிங்கம், மண்டலங்கள் பதினான்கு லோகங்கள் இப்பூமி இவற்றிற்கு உபகாரமாம் தன்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினி மண்டலம் என்று சொல்லப்பட்ட மூன்றினும் எவரும் நெருங்கு தற்கரிய அழல் வீசும்படி பதினான்கு உலகத்தையும் பரிபாலிப்பர்; நடுவான பூமியில் உயர்ந்த ஆதியும் அந்தமும் ஆவர்; இவற்றுக்கு உடலாய சந்திரனும் ஆவர் என்று தெளிக என்றவாறு.

சதாசிவமூர்த்தி மும்மண்டலங்களிலும் ஒளிப்பிழம் பாய்க் கலந்து நின்று பதினான்னு உலகத்தையும் பாதுகாப்பர்; பதினான்கில் நடுவனதாகிய பூமண்டலத்தில் அதன் சிருட்டி கர்த்தாவும் சங்காரகர்த்தாவும் ஆவர்; உலகத்திற்கு உடலாகிய சந்திரனும் அவர் என்பது கருத்து.

அவை மூன்று என்பதில் சுட்டு நெஞ்சறிசுட்டு, ஈரேழு தாங்கிடும் என இயைக்க ஈரேழு என்னும் எண்ணுப்பெயர் ஆகுபெயராய்ப் பதினான்காய உலகங்களை உணர்த்திற்கு. உலகங்கள் ஒன்றோடு ஒன்று மோதாமலும் தம்நிலை பெயர்ந்து நெருங்காமலும் பாதுகாப்பது ஒளிவடிவாகிய இறை என்பார் 'ஆரழல் வீசிட ஈரேழும் தாங்கிடும்' என்றார்.

தான் என்றது சிவத்தை – நடுவானது பூமண்டலம். பூமண்டலத்தில் தோன்றும் உயிர்களுக்குத்தோன்ற உபகாரப்படுதலின் 'ஆதியும்' என்றும், அழித்து ஒய்வளித் தலின் 'அந்தமும் ஆம்' என்றும் அறிவித்தார். எவன் அந்தமோ அவனே ஆதியானவன். ''அந்தம் ஆதி என்மனார் புலவர்'' என்பது உபதேச உரை. உடலுக்கு அமுத கிரணங்களைப் பரப்பி உணர்ச்சி ஊட்டி உதவுதலின் 'உடல் இந்துவுமாம்' என்றார். இதனால் உலகங்களுக்கு இடையூறு புகாமல் தாங்கும் பரம்பொருளை உலகத்திற்கு ஆதியும் அந்தமும் ஆம் உடலுக்கு இந்துவுமாம் என்றார்.

ஆதியாய் என்றது சூரியமண்டலமாயும் சூரிய மண்டலத்தின் அதிபதியாய பெருமானாயும் இருக்கும் உயர் வினையும், அந்தமும் ஆய் என்றது அக்கினி மண்டலமாய் அம்மண்டலத்திற்கு சங்காரத்தைச் செய்யும் அக்கினியையும், இந்துவுமாம் என்றது சந்திரமண்டல அதிபதியான காத்தற் கடவுளாகிய விட்டுணுவையும் குறிப்பித்தவாறு. இவை சிவ

பூசையுள் மண்டல மண்டலாதிபதிகளை ஆவாகனம் செய்யுமிடத்து அறிக. (46)

தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே. 1750

இம் – எனின், சதாசிவம் இலிங்கமாயும் ஆனந்த மாயும் தற்பரமாயுமிருக்கும் நிலைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சதாசிவலிங்கத்தின் திருமேனி அந்தச் சிவ லிங்க வடிவாக நிற்கும். அவ்வடிவு காணப்படும் சக்தியும் சிவமுமாகிய சதாசிவமுமாய் நிற்கும்; அநுபவத்தான் அறியப் படும் அந்தச் சிவானந்தமும் ஆம்; எல்லாவற்றுக்கும் மேலான பரம்பொருளும் ஆம் என்றவாறு.

சதாசிவமே சிவலிங்கம், சிவானந்தம், தற்பரம் முதலான அனைத்துமாம் என்பது கருத்து.

தன் என்றது சிவத்தை. தன்மேனி – சிவத்தின் திருவுரு, தற்சிவலிங்கம், தற்சிவன் என்பன சுட்டற்று நின்ற பரம் பொருளைச் சிவஞான மிகுதியால் சுட்டி உணர்த்தியவாறு. **(47)**

**ஆரும் அறியார் அகார மவனென்று**
**பாரு முகாரம் பரந்திட்ட நாயகி**
**தாரம் இரண்டுந் தரணி முழுதுமாய்**
**மாறி யெழுந்திடும் ஓசைய தாமே. 1751**

இம் – எனின், சதாசிவலிங்கம் அகாரமும் உகாரமும் கலந்த திருமேனி; அதுவே உலகத்திற்கு ஆதாரம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அகாரம் சிவபெருமான் என்று யாரும் அறியமாட்டார்கள்; உகாரம் எல்லாப் பொருள்களினிடத்தும் உலகிடத்தும் பரந்துநின்ற சக்தியாவது; எல்லாவற்றையும் தாங்கும் ஆற்றல் உள்ளதாகிய திருவருள் பூமிமுழுதும் பரந்து மாறுபட்டு எழுப்பும் ஓசையாம் என்றவாறு.

அகாரம் சிவம்; உகாரம் சத்தி; இவையிரண்டுமே இணைந்து சிவலிங்கமாயிற்று. (48)

**இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரம்**
**இலிங்கநற் கண்ட நிறையும் மகாரம்**
**இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்**
**இலிங்க மகார நிறைவிந்து நாதமே.** 1752

இம் – எனின், சதாசிவலிங்கத்தின் பீடம் முதலான உறுப்புக்களும் மந்திரவடிவமாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவலிங்கத்தின் பீடம், பொருந்திய ஓங்காரமாம்; சதாசிவலிங்கத்தின் கண்டம் நிறைந்த மகாரமாம்; லிங்கத்தின் உள்வட்டம் நிறைந்த உகாரமாம். சிவலிங்கம் முழுதும் அகாரமும் நிறைந்த விந்துவும் நாதமுமாம் என்றவாறு.

பீடம் ஓங்காரம், கண்டம் மகாரம், வட்டம் உகாரம், லிங்கம் நாதம். ஆகவே லிங்கமுழுதும் அகாரம் விந்து ஆம் என்பது கருத்து. இவற்றை ஓங்காரத்தின் மேல் லிங்கம் கீறி, பிரணவமே சிவலிங்க வடிவாதல் தெளிக.

இங்ஙனம் ஓங்காரபீடத்தின்மேல் கண்டம் மகாரம்; உள்வட்டம் உகாரம்; இலிங்கம் அகாரம்; இவற்றில் நிறைந்த பொருள் விந்து நாதம்; விந்து புள்ளி வடிவினது. நாதம் – தண்டவடிவினது என்க. விந்து சத்தி, நாதம் சிவம், சத்தி சிவங்களின் இணைந்த நிலையே சிவலிங்கம் என்க. (49)

# 5. ஆத்மலிங்கம்

இது அனுபூதிமானான சிவயோகியின் உயிரே சிவலிங்க மாதலை உணர்த்தும் பகுதியாம். முன்னர் அகர உகர அக்கரங்களே லிங்கமாகவும், விந்துவும் நாதமும் ஆதார ஆதேயமாகவும், சத்தி சிவச்சேர்க்கையாகவும் விளங்கும் இயல்புகளை விளக்கிப் பின்னர் ஆன்மாவே சிவலிங்கமாதலை விளக்குகின்றமையின் இப்பெயர்த்தாயிற்று. இது பத்து மந்திரங்களையுடையது. சதாசிவமே லிங்கமாதலைத் தன்னின் வேறாக வைத்து உலகமனைத்தும் சிவலிங்கமாகக் கண்ட அனுபூதிமானான் உயிர் தன்னையே இலிங்கமாகக் காணுதலைக் கூறுதலின் அதிகார இயைபும் காண்க.

**அகார முதலா யனைத்துமாய் நிற்கும்**
**உகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கும்**
**அகார வுகாரம் இரண்டு மறியில்**
**அகார வுகாரம் இலிங்கம தாமே.** 1753

இம் – எனின், முன் 'இலிங்க நற்பீடம்' (1752) என்ற மந்திரத்தால் தோற்றுவாய் செய்ததுபோல அகார உகார மகாரங்களே சிவலிங்கமாதலைத் தெரிவித்தல் நுதலிற்று.

இ–ள்: அகாரம் முதற்கண் தோன்றிய முதலொலியாய் எல்லா வகையான ஒலிகளோடும் கலந்து விளங்கும்; உகாரம்

முதன் முதலாக அகாரத்தோடியைந்து உயிர்ப்பாகிய பிராண வாயுவினியக்கத்தைப் பொருந்தி விளங்கும்; அகார உகார மகாரங்களின் இணைப்பை அறியின் அதுவே இலிங்கமாம் என்றவாறு.

அகார உகார இணைப்பே இலிங்கமாம் என்பது கருத்து.

'ஆரும் அறிவர் அகரம்அவனென்று' எனவும், 'அகரமுதலானை அணியாப்பனூரானை' எனவும், 'அகர வுயிர்போல் அறிவாகி எங்கும் நிகரில் இறைநிற்கு நிறைந்து' எனவும், 'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' எனவும் வரும் பிரமாணங்களைக் கொண்டு அகரம் சிவம் என்று உணரப்பெறும்.

உகரம் சத்தி; அகர உகர இணைப்பு பிரணவம்; பிரணவமே சிவலிங்கமாமம் என்பதாம். (50)

**ஆதார மாதேய மாகின்ற விந்துவும்**
**மேதாதி நாதமு மீதே விரிந்தன**
**ஆதார விந்து அதிபீட நாதமே**
**போதாவி லிங்கப் புணர்ச்சிய தாமே. 1754**

இம் – எனின், விந்து நாதங்களின் புணர்ச்சியே ஞான மயமாகிய இலிங்கமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆதாரமாயும் ஆதேயமாயும் விளங்குகின்ற விந்து சத்தியும், மேதாகலை முதலான நாதமும் ஒன்றன் மேல் ஒன்றாகத் தோன்றின; அவற்றுள் ஆதாரம் விந்து; விந்து வாகிய பீடத்தின் மேல் விளங்குவது நாதம்; ஞானமயமான சிவலிங்க சேர்க்கை இதுவாம் என்றவாறு.

முற்கூறியவாறு விந்து என்பது பிராசாத யோக நிலையில் O இவ்வடிவான குறியீடுடையது. இது சத்தி. நாதம் என்பது இத்தண்டவடிவான நேர்கோடு. இது சிவம். இவ்விரண்டும் இணையின் சிவலிங்கமாம் என்றவாறு.

மோதாதி நாதம் – மேதா, உகாரகலை, அகாரகலை, பிந்துகலை, அர்த்தசந்திரகலை, நிரோதினி, நாதம் என்ற கலைகள். நாபிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்திற்குமேல் நான்கங்குல அளவாகவுள்ள இதயத்தில் தீக்கொழுந்துபோல மூன்று மாத்திரை அளவாக விளங்குவது மேதாகலை; இதன்மேல் முறையே விரிந்தன நாதம்வரை கூறப்பட்ட கலைகள் என்க.

சிவலிங்கத்திற்கு ஆதாரபீடம் பிந்து. பீடாத் + அதி அதிபீடம். பீடத்தின்மேல் என்பது பொருள். பீடத்தின் மேலது நாதம். போதா இலிங்கம் – அறிவுவடிவான இலிங்கம். (51)

**சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்**
**சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்**
**சத்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்**
**சத்தி சிவமாகுந் தாபரந் தானே.** 1755

இம் – எனின், சத்தி சிவம் பிணைப்பான சிவலிங்கமே தாபர சங்கமங்களாம் எனல் நுதலிற்று.

இ–ள்: வெளிப்படை.

தாபரம் – நிலையான பொருள்; போக்கற்றது என்பதாம். சங்கமம் – இயங்குவது; தோன்றி மறைவது. அடியார்கள். ஆகவே தாபரமும் சிவலிங்கம்; சங்கமமான அடியார்

களும் சிவலிங்கம். லிங்கமோ சதாசிவமாகிய உருபாருபத் திருமேனியாம். ஆகவே தாபரம் சத்தியும் சிவமும் கூடிய ஒன்றேயாம் என்பதாம். (52)

**தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்**
**வானே ரெழுகின்ற ஐம்ப தமர்ந்திடம்**
**பூதே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன்**
**தானே ரெழுகின்ற வதாரம தாமே. 1756**

இம் – எ,னின், ஒளியினிடமாக ஒலியைக் காண்போம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவலிங்கம் சகஸ்ராரமாகிற உச்சிப் போதின் மீது எழுகின்ற மனோன்மணியுடன் ஒன்றி யெழுகின்ற அகாரமாம்; அதில் ஞானவானில் எழும் சோதியைக் காணலாம்; அதுவே வானில் எழும் ஒலி வடிவான ஐம்பத்தோரக்கரங்களும் அமர்ந்திருக்கும் இடமாம் என்றவாறு.

மனோன்மணியுடன் கூடிய சதாசிவமாகிய பொருளும் அகார உகார மகாரமாம்; இவை கூடிய பிரணவ லிங்கத்தில் சோதியைத் தரிசிக்கலாம்; அக்கரங்கள் அனைத்தும் விளங்குமிடம் இதுவே என்பதாம். (53)

**விந்துவும் நாதமும் மேவு மிலிங்கமாம்**
**விந்துவ தேபீட நாத மிலிங்கமாம்**
**அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்**
**வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே.**
**1757**

இம் – எனின், விந்து நாதங்களின் கூட்டமே லிங்கம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவும் நாதமும் எல்லோரும் விரும்பித் தொழப்படுகின்ற லிங்கமாம்; அவற்றுள் விந்து பீடமும் நாதம் லிங்கமும் ஆகும்; அந்த இரண்டையும் ஆதாரத் தெய்வமாகக் கொண்டு வந்த நுண்பூதங்கள் ஐந்தும் இருபத்தைந்து தத்துவங்களையும் தோற்றுவிக்கும் என்றவாறு.

விந்து நாதங்களின் கூட்டமாய சிவலிங்கம் எல்லா உலகும் தோன்றுதற்குக் காரணமாம் என அறிவித்தவாறு காண்க.

விந்துவதே என்பதில், அது பகுதிப்பொருள் விகுதியும் ஏகாரம் தேற்றமுமாம். வந்த கரு ஐந்து – விந்து நாதங்களின் இடமாகத் தோற்றிய சுத்தமாயா காரியமான தன்மாத்திரைகள் ஐந்துமாம். அக்கரு ஐந்திலிருந்தே பிருதிவி முதல் பிரகிருதி ஈறான இருபத்தைந்து தத்துவங்களும் தோன்றுதலின் 'வந்தகரு ஐந்தும் அவையைந்தே செய்யும்' என்றார்.

இங்ஙனமன்றிக் கரு ஐந்து என்பதற்கே அயன், அரி, அரன், மகேசுவரன், சதாசிவன் என்ற ஐவர் என்றும், அவை ஐந்தே செய்யும் எனக் கொண்டு பஞ்ச கிருத்தியங்களைச் செய்யும் என்றும் உரைப்பாரும் உளர். விந்து நாதங்கள் அமர விந்தும், அபர நாதமுமாயின் சுத்தமாயா காரியமாய்த் தன் மாத்திரைகளுக்கும் ஐந்தொழிலுக்கும் பயன்படாவாம். பர விந்தும் பரநாதமுமாயின் அவைகளும் அசுத்தப்பிரகிருதி மாயா காரியங்களாகிய தொழிற்பாட்டுக்குத் துணை செய்யாதாம். ஆகவே, விந்து நாதங்களைச் சுத்தமாயா காரியங்களாகக் கொண்டு அவற்றினின்று தன்மாத்திரைகளும் பூதாதியான இருபத்தைந்து தத்துவங்களும் தோன்றின என்பதே இயைபுடைத்தாம். (54)

சத்திநற் பீடந் தகுநல்ல ஆன்மா
சத்திநற் கண்டந் தகுவித்தை தானாகுஞ்
சத்திநல் லிங்கந் தகும்சிவ தத்துவம்
சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே. 1758

இம் – எனின், இலிங்க உறுப்புக்களாகிய பீடம் கண்டம் லிங்கம் அனைத்தும் வித்தியாதத்துவமும் ஆன்ம தத்துவமும் சிவதத்துவமும் ஆம் எனல் நுதலிற்று.

இ–ள்: சிவசத்தியே வடிவாகிய சிவலிங்கத்தின் நல்ல பீடம் நல்ல ஆன்ம தத்தவமாம்; சிவலிங்கத்தின் கண்டம் தக்க வித்தியா தத்துவமாகும்; மேலுள்ள நல்ல பாணம் சிவதத்துவ மாகும்; சத்தியோடு கூடிய பரமான்மா சதாசிவமாம் என்றவாறு.

இதனால் சிவலிங்கமே தத்தவம் முப்பத்தாறாதலை விளக்கியவாறு.

சத்திநற்பீடம் என்பது முதலியன சத்திபீடத்தோடு கூடிய சிவலிங்கம் என்க. தகும் சிவதத்துவம் என்றமையான் ஆன்மா வித்தை என்பனவும், ஆன்ம தத்துவம் வித்தியா தத்துவம் என விளங்க நின்றமை காண்க. இஃது உணராதார் பீடம் ஆன்மாவாம். கண்டம் சிவஞானமாம், லிங்கம் சிவமெய் யாம், பரமான்மா சதாசிவமாம் என்பர். அஃது ஏலாமை முன் உணர்த்தியவாற்றான் தெளிக.

சிவலிங்கத்தின் பீடம் சக்தி பீடமெனவும், கண்டம் வித்தியாதத்துவம் எனவும், லிங்கம் சிவ தத்தவம் எனவும், லிங்கத்தை இடமாகக் கொண்டு எழும் பரம்பொருள் சதாசிவம் எனவும் உணரவைத்தவாறு. (55)

மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது
நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்
இலம்புகுந் தாதியு மேற்கொண்ட வாறே. 1759

இம் – எனின், பரசிவம் உடலிடங்கொண்டு உயிரே லிங்கமாக விளக்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆதி பரம்பொருளாகிய சிவம் என் மனத்தின் வழியாகப் புகுந்து என் உயிரினிடமாக நிலைபெற்ற வாழ்க்கையில் என் அனுபவத்தோடு பொருந்தி இன்பத்தை அருளிய காலத்து நன்மை பெருக. நான் ஆன்மாவாகிய என்னையும் என் தலைவனையும் நாடும் ஞானபூமியாகிய இல்லத்திலே புக அடியேனை மேற்கொண்டவகை இதுவாம் என்றவாறு.

பரசிவம் என் மனத்தின் வழியாக உயிரை இடமாகக் கொண்டு ஞானம் அருளிய காலத்து என்னையும் என் தலைவனையும் தேடியறியும் திருவருள் ஞானம் பெற்றேன்; அவன் என்னை ஆட்கொண்டமுறை இதுவாம் என்பது கருத்து.

பாசநீக்கமும் திருவருட்பதிவும் பெற்ற ஆன்மாவினிடமாகச் சதாசிவநாயனார் தாமே எழுந்தருளி நிலைபேறான சிவானுபவவாழ்வை அருளுவராதலின் 'மனம்புகுந்து' என்றார்.

உணர்த்த உணரும் சித்தாகிய உயிரினிடமாகக் கோயில் கொண்டிருந்தனர் என்பார் 'உயிர் மன்னிய வாழ்க்கை' என்றார்.

மனம் புகுந்து என்பது அனுபவத்திற்கு விஷயமாகி என்றதாம். பொழிகின்றபோது என்ற சொல்லாற்றல் இன்ப மிகுதியை உணர்த்தி நின்றது.

நலம் – தன்னையும் தலைவனையும் அறிதற்கு உரிய பரிபாகம் இலம் – இடம். ஆதி. புகுந்து வாழ்க்கை (யருளி) புகுந்து பொழிகின்றபோது. நலம்புக (நான்) நாடும் இலம்புக மேற்கொண்டவாறு (இதுவாம்) என எச்சங்களைத் திரித்தும், சில சொற்பெய்தும் பொருள் இயைபு கொள்க. (56)

**பராபரன் எந்தை பனிமதி சூடி**
**தராபரன் றன்னடி யார்மனக் கோயிற்**
**சிராபரன் தேவர்கள் சென்னியின் மன்னும்**
**அராமரன் மன்னி மனத்துறைந் தானே. 1760**

இம் – எனின், பரசிவம் எங்கும் கலந்துள்ள நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மேலானவற்றிற்கெல்லாம் மேலானவனும் எம் தந்தைபோல்வானும், குளிர்ந்த பிறைமதி அணிந்தவனும், உலகமனைத்தையும் தன்னருளாற்றலால் தாங்குபவனும், தன்னடியார்களின் மனமாகிய கோயிலின் உச்சியில் விளங்கு பவனும், தேவர்கள் சிரமீது விளங்குகின்ற 'ஹ்ராம்' என்னும் பீஜத்துடன் விளங்கும் அரனும் ஆகிய பரசிவம் அடியேன் மனத்துள் நீங்காது எழுந்தருளினான் என்றவாறு.

எங்கும் கலந்தும் கடந்தும் எழுந்தருளும் பரசிவம் என் மனத்து என்றும் நீங்காது எழுந்தருளியது என்பது கருத்து. இதனால் என் ஆன்மாவே சிவம் விளங்கும் லிங்கமாயிற்று என்றவாறாம்.

பரம் – மேலானவை; பராபரன் மேலானவற்றிற்கும் மேலானன். சித்துப் பொருளாகிய அனைத்தும் ஒன்றினொன்று மேலாக விளங்கித் தான் எல்லாவற்றினும் மேலாகித் தன்னின்

ஒன்றுமே மேலென்பதில்லாமல் விளங்குபவன் என்பதாம். இது கடந்தநிலை கூறிற்று.

உடலையும் உணர்வையுந் தந்து வளர்த்து உதவுதலின் எம்தந்தை போல்வான் என்றார். இது உடனாய நிலை உரைத்ததாம்.

மதிசூடி என்றது குற்றம்போக்கி ஆட்கொள்ளும் முதன்மை கூறியது. தரா–பூமி. பரன்–தாங்குபவன். இது அனைத்தையும் அழிவுபடாதே தாங்கும் ஆற்றல் உணர்த்தியது.

நினைப்பவர் மனமே கோயிலாகக் கொண்டவனாகலின் 'மனக்கோயில் சிராபரன்' என்றார். சிராபரன் – தலைமைத் தானமாகக் கொண்டு எழுந்தருள்பவன். அராம் அரன். அராம் என்பது ஹ்ராம் என்பதன் தமிழ்வழக்கு. சிவபூசையில் சிவசூரியனைச் சிரத்தில் உச்சியின்மீது ஆவாகனம் செய்கின்றபொழுது ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூரியாய நம: எனஆவாகித்தல் விதி ஆதலால் தேவர்கள் சென்னியில் சிவசூரியனாக விளங்குகின்றார் என்பதுதோன்ற 'அராம் அரன்' என்றார். மரா மரன் எனப் பிரித்து, அதனையும் மரு ஆம் அரன் எனச் சிதைத்து மலர்மணம்போலும் அரன் என்பாரும் உளர். இது இடர்ப்பட்ட புலமைச்சிதைவே அன்றி, மரபு வழி வந்ததல்லாமை தெளிக.

பரசிவம் ஞானசூரியனாய்ச் சிந்தையுள் நின்றான் என ஆன்மாவே இலிங்கமாக விளங்குதல் உணர்த்தியவாறு காண்க. (57)

பிரானல்ல னாமெனிற் பேதை யுலகங்
குராலென்னு மென்மனங் கோயில்கொள் ஈசன்
அராநின்ற செஞ்சடை அங்கியும் நீரும்
பொராநின் றவர்செய்யப் புண்ணியன் தானே.
1761

இம் – எனின், சிவனே முதல்வன்; அகம் பிரமம் என்பார் பேதைகள் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பசுவாகிய என் மனத்தைக் கோயிலாகக் கொண்டெழுந்தருளிய ஈசனும், பாம்பு நிலைபெற்ற சிவந்த சடையும் நீரும் நெருப்பும் ஆகிய இவற்றைத் தாங்கியவரும், செய்யப்படுகின்ற புண்ணியங்களனைத்தும் தானேயானவரும் ஆன தலைவன் அல்லன் நாமே தலைவன் எனின், அங்ஙனம் கூறும் உலகம்பேதையுலகமாம் என்றவாறு.

பசுவாகிய அடியேன் மனத்து அவன் கோயில் கொண்டு எழுந்தருளியமையால் ஆன்மா இலிங்கம் ஆயிற்றே அன்றி, பிரமம் என்பது ஒரு பொருளின்று; நானே பிரமம் என்பார்பேதைகள் என்றவாறாம்.

குரால் – பசு. பசுக்களாகிய நான் என்றது மல மாயா கன்மங்களோடு கூடிப் பெத்தனாகிய நான் என்றவாறாம். பொறா நின்றவர் – தாங்கியவர். இது எதுகை நோக்கிப் பொரா நின்றவர் என ஆயிற்று.

புண்ணியமனைத்தும் அவன் திருமேனி ஆகலின் 'செய் அப்புண்ணியன்' என்றார். ஆன்மாக்கள் அவன் அருளால் இயற்றுகின்ற பதிபுண்ணியமும் பசுபுண்ணியமும் ஆகியஅனைத்தும் வடிவானவன் என்பது கருத்தாம். (58)

அன்றுநின் றான்கிடந் தானவன் என்று
சென்றுநின் றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்றுநின் றேத்துவன் எம்பெரு மான்தன்னை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந் தானே.
1762

இம் – எனின், தேவர்கள் புறத்தே தொழுவர்; அடியேன் என்னுளே காண்பன் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தேவர்கள், சிவன் அன்றைக்கு அங்கே நின்றான் கிடந்தான் என்று எட்டுத் திசைகளிலும் ஓடியோடிச் சென்று வணங்குவர்; அவன் என் உயிருக்கு உயிராய் என் உள்ளத்துள் ஒன்றி நின்றான்; அத்தகைய எம்பெருமானை என்றைக்கும் வணங்கிக் கொண்டிருப்பேன் என்றவாறு.

பசுபுண்ணிய விசேடத்தாற் பதவிபெற்ற தேவர்கள் ஆரூரான், போரூரான், ஆவூரான், தேவூரான், எனச் சென்று சென்று வழிபடுவர்; அவன் என் மனத்துள் இருக்கின்றான்; அவனை என்னுள்ளேயே கண்டு என்றும் வழிபடுகின்றேன் என்பது கருத்து. நின்றான் கிடந்தான் என்பன தலங்களில் இறைவன் எழுந்தருளியுள்ள மூர்த்தி பேதங்களை உணர்த்தியவாறு.

தேவர்கள், பாலிற்படு நெய்போல் மறைய நிற்பதை அறியமாட்டாராயினர்; நான் மனமணி விளக்காகத் திகழ்வதைக் கண்டு போற்றுவேன் என ஆன்மாவே லிங்கமாதலை உணர்த்தியதாம். (59)

# 6. ஞானலிங்கம்

ஞானம் – சிவமேயான அறிவு. ஞானலிங்கம் – சிவ ஞானமே திருவுருக்கொண்ட சிவகுருநாதன். எனவே ஞான லிங்கம் ஆசாரியன், தன்னைச் சிவமாகக் கண்ட ஞானி, தன்னைச் சிவநெறிப்படுத்தச் சிவஞானோபதேசஞ் செய்த பரமாசாரியனையும் சிவலிங்கமேயாகக் கருதுமாதலின், ஆன்ம லிங்கத்தை அடுத்து ஞானலிங்கம் அமைக்கப்பட்டது. பத்து மந்திரங்களான் இதனை உணர்த்துகிறார்.

**உருவும் அருவும் உருவோ டருவும்**
**மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங்**
**குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந்**
**தருவென நல்குஞ் சதாசிவன் தானே. 1763**

இம் – எனின், கைம்மாறு வேண்டாத கருணையால் பரசிவமே குருவாக எழுந்தருளும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உருவம் அருவம் ரூபாரூபம் என்ற மூன்று வகையான திருமேனிகொள்ளும் பரசிவன், கற்பக தருவைப் போல எண்ணியதையெல்லாம் அளித்தருளும்; இவ்வுலகில் நிலைபெற்ற பல்வேறு உயிர்களுக்கும் குருவாகவும் நிற்கும் கொள்கையை உடையனாம் என்றவாறு.

பரசிவமாகிய சதாசிவம் பல உயிர்கட்கும் அருள் வழங்கக் குருவாயும் எழுந்தருளுவன் என்பது கருத்து. உருவு– திருக்கயிலையில் எழுந்தருளியிருக்கும் சீகண்ட ருத்ராதிகளும் இருபத்தைந்தும் அறுபத்து நான்கும் ஆகிய மாகேஸ்வர மூர்த் தங்களும் சங்கமங்களுமாம்.

அருவு – ஞானமேவடிவாய் சிவஞானிகளினுடைய சிந்தையில் எழுந்தருளியிருக்கும் நிலை.

உருவோடு அருவு – ரூபாரூபம்; இது இரண்டுங் கூடிய சிவலிங்கத் திருமேனியாம்.

சிவபெருமான் உருவாய்நின்று சகலான்மாக்களுக் கும், அருவாய் நின்று சிவஞானிகளாகிய சாமு சித்தாதிகட்கும், ரூபாரூபமாய் நின்று பக்குவா பக்குவ மலமுடைய சிவதீட்சி தர்களுக்கும் அருள் செய்வாராதலின் அவரவர் பரிபாகத்திற்கு ஏற்ப அருளும் நிலையை 'மன் பல் உயிர்க்கும் தரு என நிற்கும் சதாசிவன்' என்றார். கற்பகதரு அவரவர் நிலைக்கேற்ற அவரவரும் தத்தம் எண்ணத்தை நினைக்க நினைத்தவற்றை அளிப்பதுபோல சகல விஞ்ஞானகல பிரளயாகலராகிய ஆன்மாக்கள் அவரவர்கள் பரிபாக நிலைக்கு ஏற்பத் தியானிக்க அவர்கள் வேண்டுவனவற்றை முழுதும் தருகின்றார் என்பார் இங்ஙனம் கூறினார். தருவென என்பதற்குத் தா எனக் கேட்க எனப் பொருள் கொள்வாரும் உளர்.

இறைவன் முத்திருமேனிகொண்டு அருள் செய்வது போலக் குருவாகவும் நின்று அருள்வர் என்க. குருவும் என்ற உம்மை, சிவமாக இருத்தலே அன்றி என்று இறந்ததுதழீஇ நின்றது.

இதனால் குருவே ஞானலிங்கமாதல் உணர்த்தப் பெற்றது. (60)

**நாலான கீழ துருவ நடுநிற்க**
**மேலான நான்கு மருவு மிகநாப்பண்**
**நாலான ஒன்று மருவுரு நண்ணலால்**
**பாலா மிவையாம் பரசிவன் தானே.** 1764

இம் – எனின், முன் திருமந்திரத்திற்கூறிய உருவம் முதலானவற்றின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சதாசிவமூர்த்திக்கு, கீழுள்ளதான நாலும் உருவமாம்; மேலுள்ள நான்கும் அருவமாம்; நடுவில் உள்ள ஒன்றும் அருவுருவமாம்; இவ்வாறு பகுதிப்பாற்படும் ஒன்பதும் பரசிவனேயாம் என்றவாறு.

உருவம் நான்கு, அருவம் நான்கு, அருவரு ஒன்று; இவ்வொன்பதும் பரசிவ உருவே என்பது கருத்து.

கீழான உருவம் நான்காவன அயன் அரி அரன் ஈசம் என்பன. மேலான அருவம் நான்காவன விந்து நாதம் சத்தி சிவம் என்பன. அருவுரு ஒன்றாவது சதாசிவம். இதன் விளக்கத்தை,

''சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னொன்றி னொன்றாய்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்றா
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்ப னென்பர்''

என்ற சித்தித் திருவிருத்தத்தான் அறியலாம். (61)

**தேவர் பிரானைத் திசைமுக நாதனை**
**நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை**
**ஏவர் பிரானென் றிறைஞ்சுவ ரவ்வழி**
**ஆவர் பிரானடி அண்ணலு மாமே.** 1765

இம் – எனின், இறைவன் தம் உண்மை இயல்பு உணர்ந்து இறைஞ்சுபவர்களுக்கு அருளும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தேவர்கள் அனைவர்க்கும் தலைவனும் எண் திசைகளிலும் தலைவர்களாக விளங்கும் தேவர்களனைவர்களுக்கும் தலைவனும், அயன் அரி உருத்திரன் மகேசன் என்னும் நால்வர்க்கும் தலைவனும், நவந்தரு பேதங்களுள் நடுவில் விளங்குபவனும் ஆகிய சதாசிவ மூர்த்தியை யார் முழுமுதற்கடவுள் என்று வணங்குகின்றார்களோ அவ்விடத்திலே பிரானாகிய சதாசிவ மூர்த்தி தோன்றுவர்; அவரடிகளை அணுகுதலும் மிக எளிதாம் என்றவாறு.

இறைவனே எல்லாருக்கும் நாதனுமாம் தன்மையினான் என்று எவர் உணர்ந்து இறைஞ்சுகின்றார்களோ அவர்கள் முன்னர் வெளிப்பட்டருளுவர்; அவர்களால் அவனடி சாருதல் எளிதாம் என்பது கருத்து.

தீனிபோடும் எசமானிடம் அன்புகாட்டும் பசுப்போல் தேவர்கள் என்றும் அமுதம் முதலியன அளிப்பாரிடம் பெருமதிப்புடைய சகலான்மாக்கள் ஆதலின், அவர்கட்கு வள்ளன்மை உடையனாகி விளங்குவான் என்பார் 'தேவர் பிரானை' என்றார். பிரான் — வள்ளன்மை உடையவன்.

திசாமுகம் என்பது திசைமுகம் என ஆயிற்று. திக்குகளாகிற இடங்கள் என்பது பொருள். ஈண்டு இடவாகு பெயராக எட்டுத் திக்குகளிலுமுள்ள திக்குப் பாலகர்கள், உலக மக்கள் அனைவரையும் உணர்த்திற்று. அவர்கள் எல்லாருக்கும் தலைவன் என்பார் 'திசைமுக நாதன்' என்றார்.

நால்வர் — முற்கூறிய அயன் முதலிய நால்வர். அவர்களைத் தத்தம் பணியில் இருத்திப் பணிகொள்ளுதலின் 'நால்வர்பிரான்' என்றார்.

நடுவுற்ற நந்தி – முற்கூறிய நவந்தருபேதங்களுள் நடுவில் உள்ள சதாசிவமூர்த்தி.

பிரான் என்று இறைஞ்சுவார் ஏவர் அவ்வழி பிரான் ஆவர் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

அண்ணல் – அணுகுதல். பிரானால் காட்சி வழங்கப் பெற்ற மெய்யன்பர்கள்தாம் சதாசிவமூர்த்தியின் திருவடியை அணுக இயலும் என்பதாம். உறுதியின்றி இவர் தேவர்; அவர் தேவர்; யாம் தேவர் என இரண்டாட்டுமவர்களுக்கு அடி சார்தல் முடியாது என்பது உணர்த்தியவாறு. (62)

**வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற**
**ஆண்டொரு திங்களும் நாளும் அளக்கின்ற**
**காண்டகை யானொடுங் கன்னி யுணரினும்**
**மூண்டகை மாறினும் ஒன்றது வாமே.** 1766

இம் – எனின், சிவம் சத்தி இவைகளில் எதனை வழி படினும் அனைத்தும் சதாசிவ வழிபாடேயாம் என்பதுணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: ஆண்டு, மாதம், நாளாதிய காலங்களையும், அளக்கின்ற அழகிய சிவத்தோடு மனோன்மணியைத் தியானிக் கினும், அவர்கள்பால் மேவிய மனம் மாறி இருவரையும் ஒருவராகவே தியானிக்கினும் எல்லாம் ஒன்றேயாம்; ஆத லால், அடியேன் செய்த வினைகள் அகல அவரை வேண்டி நின்று வணங்கினேன் என்றவாறு.

சிவம், சத்தி இரண்டும் கூடிய சிவலிங்கம் எதனைத் தொழுதாலும் அது சதாசிவ ஞானலிங்க வழிபாடாகும். ஆத லால், யான் என் வினை அகலப் பிரார்த்தித்துத் தொழுதேன் என்பதாம்.

இறைவன் காலமுதலான தத்துவங்களைப் படைத்து அவற்றை ஆண்டு என்றும் மதி என்றும் நாள் என்றும், நாழிகை என்றும் விநாடி என்றும் பகுத்துச் சார்ச்சிவகையால் அளவாக நின்று மக்கள் வினைப் போகங்களைத் துய்க்கச் செய்து காலத்தைக் கடந்து நிற்றலின் இறைவனை, 'ஆண்டு திங்கள் நாள் அளக்கின்ற காண்டகையான்' என்றார். காண்டகையான் – அழகுடையவன்.

கன்னி – சத்தி; ஈண்டு மனோன்மணி, உணர்தல் – தியானித்தல். மூண்டகை மாறினும் – இருவரையும் தனியே தியானித்த நிலைமாறி ஒருருவாகிய சிவஞான லிங்கமாத் தியானிக்கினும் என்க.

ஒன்றதுவாம் – பயனால் ஒன்றாம் என்க. எங்கும் அபேதஞானம் விளங்கக் காண்டலின் ஞானமே லிங்கமாதல் உணர்த்தப் பெற்றமை காண்க. (63)

**ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வம்**
**சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்**
**நீதியுள் மாதெய்வம் நின்மலன் எம்மிறை**
**பாதியுள் மன்னும் பராசத்தி யாமே. 1767**

இம் – எனின், சிவத்தின் இயல்பும் சதாசிவத்தின் அமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அனைத்திற்கும் முதலான மேலான தெய்வம்; அண்டங்களனைத்திற்கும் நல்ல தெய்வம்; ஞானிகளாகிய மெய்யடியார் இடைவிடாது தொடர்தற்குரிய பெருந் தெய்வம்; நீதியுள் விளங்கும் பெரிய தெய்வம்; அதுவே அநாதியே மலரகிதனாகிய எமது இறையாம்; அவனுடைய சரிபாதி திருமேனியுள் பராசத்தி எழுந்தருள்வள் என்றவாறு.

சிவமே தனி முழுமுதற்கடவுள்; அவர் திருமேனியில் ஒருபாதி சத்தி; அவரே வணங்கத் தக்கவர்; பெரியவர்; அவரே நின்மலர் எனச் சிவத்தின் சொரூபவிலக்கணம் உணர்த்தியவாறு..

ஆதிபரம் – எல்லாருக்கும் மூத்த முதன்மைவாய்ந்தமையால் மேலானது; என்றது சிவத்தை. ஒவ்வோருலகத்துமுள்ள எத்தனையோ அண்டங்களனைத்தும் அவன் திருவுள்ளக் குறிப்பின்வழித் தோன்றியனவே ஆதலின் 'அண்டத்து நற்றெய்வம்' என்றார்.

சோதி – ஞானம்; சோதியடியார் – மெய்ஞ்ஞானிகளான சிவனடியார்கள். அவர்களே தைலதாரை போல இறைவனை இடையறாது தியானிப்பவர்கள்; அவர்கட்குப் பெருந்தெய்வமாக விளங்குகின்றாரென்க.

நீதி – ஒப்ப நிற்கும் நடுநிலைமை. பாதியுள் பராசத்தி மன்னும் ஆம் என முடிக்க. சிவசத்தி ரூபமான ஞானலிங்க இயல்பு உணர்த்தியவாறு. (64)

**சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே**
**சுத்த சிவபதந் தோயாத தூவொளி**
**அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்**
**ஒத்தவு மாமீசன் தானான வுண்மையே. 1768**

இம் – எனின், இறைவன் கடந்து நிற்கும் இயல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சத்தி தத்தவத்திற்கு மேல் பராசத்தியாம்; அதனுள்ளே நின்மல சிவத்துக்கிடமாம்; அதன்மேலே ஒன்றை

யும் பற்றாத தூய சிவஞானச் சோதியாம்; அவ்வொளி இறைவன் திருவடியாகிய திருவருளுக்கு அப்பாலைக்கு அப்பாலாய் விளங்கும்; அதனைச் சார்ந்தும் விளங்கும். இதுவே சிவனது தானான தன்மையாம் என்றவாறு.

சத்தி தத்தவத்தின்மேல் பரை; பரையுள் நின்மல சிவம்; அதன்மேல் ஞானவெளி; அது திருவடிக்கு அப்பாலைக்கு அப் பாலது; உடனாயும் இருப்பது; இது ஈசனது தனிநிலை என்பது கருத்து.

சத்தி – சத்தி தத்துவம், சிவதத்துவமென விருத்திப் பட்டுக் காரியப்படுதற்கு யோக்கியமாய் நின்ற சுத்த மாயை காரியப்படுதற்காகச் சூக்கும லயாவத்தையில் நின்ற முதல்வனது கிரியாசத்தி வெளிப்பட்டுப் பொதுமையிற் சங்கற்பித்த வழிச் சுத்தமாயை காரியப்படுவதாய இரண்டாவது விருத்தி, சத்தியென்றோதப்படும் சிவனாலதிட்டிக்கப்படுதலின் சத்தி தத்துவம் எனப்படுவது. இது தூலலயதத்துவம், தூல நிஷ்களதத்துவம், விந்து தத்துவம் எனவும் பெயர் பெறும். இதனை அதிட்டித்து நின்று காரியப்படுத்தும் முதல்வனுக்கும் இப் பெயர்கள் உளவாம்.

இந்தத் தத்துவத்தினைக் காரியப்படுத்துவதாய்ப் பரசிவத்தின் ஆற்றலாய் நிற்பது பரை, ஆதலால், 'சத்திக்கு மேல் பராசத்தி' எனப்பட்டது. பரையை இடமாகக் கொண்டு விளங்குவது பரசிவம் ஆதலின் 'பராசத்தி தன்னுள்ளே சுத்த சிவபதம்' என்றார். சுத்த சிவமென்பது எல்லாவற்றையும் தன்னகத்து ஒடுக்கித் தானேயாய் நிற்கும் சிவம். அதனிடத்து வேறற்றுச் சிவஞானிகளின் ஞானத்திற்கு இலக்காய் விளங்கு வது தோயாத தூவொளி. இது ஒன்றையும் பற்றி நில்லா; ஒன்றானும் பற்றப்படாதது ஆதலின் 'தோயாத தூ ஒளி' எனப்பட்டது.

திருவடி எனப்படுவது திருவருள் ஆற்றலையாதலின், அதனையும் கடந்து நிற்பது அவ்வொளி என உபதேசிப்பார் 'திருவடிக்கு அப்பாலைக்கு அப்பாலாம்' என்றார். எல்லாவற் றையும் கடந்து எவர்க்கும் அனுபவம் ஆகாமல் இருக்கும் பொருளால் யாதும் பயன் இல்லை. ஆதலின், அங்ஙனமின்று இறைவன் திருவடிகளைப் பொருந்திநின்ற மெய்ஞ்ஞா னியர்க்கு அனுபவமாம் என்பார் 'ஒத்தவுமாம்' என்றார். இதுவே சித்தினது தனிநிலை என்பது உணர்த்தியவாறு. **(65)**

**கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்**
**எழுந்திடங் காணிற் இருக்கலு மாகும்**
**பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே**
**திரண்டெழக் கண்டவன் சிந்தையுளானே. 1769**

இம் – எனின், ஞானலிங்கத்தை நாடும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவக்கொழுந்தாகிய ஞானலிங்கத்தையுணரின் உலகமனைத்தும் ஒருசேரத் தோன்றும்; அச்சிவம் காரியப்படு தற்கு இடமாகிய பரையைக் காணில் அவர்களையே தியா னித்து இருக்கலுமாம்; அப்பரம் பொருளை உறுதியாகக் காணின் அம்மை வெளிப்பட்டருளுவள்; அதனைக் கண்டவன் எல்லார் சிந்தையிலும் விளங்கும் மெய்ஞ்ஞானியாவான் என்றவாறு.

ஞானலிங்கத் தியானத்தின் வாயிலாகச் சடம் சித்து இவற்றின் உண்மைநிலை தெற்றெனத் தோன்றும். இது உலகம், அதன் காரணம் இது என்றுணர்ந்து உறுதியாகப் பரம் பொருளைத் தரிசித்தபின் பரம்பொருளின் தனி ஆற்றலாகிய திருவருட் சத்தி அனுபவமாக இவன் எல்லார் சிந்தையிலும் விளங்குவான் என்பது கருத்து.

கொழுந்து என்றது 'தூங்கானைமாடச் சுடர்க் கொழுந்தே' என்றது போல ஞானமயமான திருமேனியை. குவலயம் தோன்றலாவது பரசிவத்தினிடம் சர்வசங்கார காலத்து ஒடுங்கிக் கிடந்த மாயை காரியப்பட்டு, உலகமாய் விரிந்து உயிர்கட்கு உபகாரப்படும் தன்மையை அறிதல். அங்ஙனம் அறிந்து இவ்வுலகம் நம் வினைக்கு ஈடாக நமக்குக் கிடைத்த போகத்தானம்; நாம் நுகர்வன போகங்கள்; நமக்கு அவற்றை ஊட்டுபவன் பரையோடு கூடிய பரன் என்றிருத்தல். இதனை 'எழுந்து இடம் காணில் இருக்கலுமாகும்' என்றருளி யதாம். இடம் கண்டால் இருக்கலாம் என்ற பழமொழியும் இதனையே வலியுறுத்துவது.

இங்ஙனம் ஊட்டிக் கழிக்கும் உபகாரி பரமே என்பதைக் காணின், அதன் அபின்ன ஆற்றலாகிய திருவருட்சத்தி வெளிப்பட்டருளும். இது பரம் திடம் காணின் பார்ப்பதிமேலே திரண்டு எழ என்பதால் குறிக்கப்பெறுகிறது. கண்டவன் – அங்ஙனங் கண்ட சிவஞானி. சிந்தையுளான் – உலக மக்கள் அனைவர் சிந்தையிலும் ஒருசேர எழுந்தருளும் பரந்த நிலையைப் பெறுவன் என்றவாறு. **(66)**

**எந்தை பரமனும் என்னம்மை கூட்டமும்**
**முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாம்**
**சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை**
**உந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே. 1770**

இம் – எனின், ஞானலிங்கம் இதுவாம் எனல் நுதலிற்று.

இ–ள்: எம் தந்தையாகிய பரசிவனும், எம் தாயாகிய பராசத்தியும், அவர்கள் கூடியிருக்கிற கூட்டமும் ஆகிய

இவற்றை முற்பட உபதேசித்து, அவர்கள் இங்ஙனம் கலந் திருந்த முறைமையினைச் சொல்லின் அதுவே ஞான லிங்க மாம். அங்ஙனம் சிவத்தோடு கூடியிருந்த தடங்கண்ணியாகிய பரையை உந்திக்கு மேலதாகிய மணிபூரகத்தில் வைத்துத் தியானிதது அதனால் அளவற்ற களிப்பெய்தியிருந்தேன் என்றவாறு.

சிவசத்திகளின் சேர்க்கை சிவலிங்கம் என மனத் தினால் தியானித்தலே ஞானலிங்கமாம்; அதனை மணிபூரகத் துள் வைத்துத் தியானித்து மகிழ்ந்தேன் எனத் தன் அனுபவம் கூறி உபதேசித்ததாம்.

பரசிவத்தை மணிபூரகத்துள் வைத்துத் தியானித் தலால் சீகண்டருத்திரனும் உமையுமாகப் பாவித்து, பிரகிருதி மாயாபுவன வாசியாகிய என் அனுபவத்தில் வைத்து மகிழ்ந்தேன் என்பதாம். (67)

**சத்தி சிவன்விளை யாட்டாம் உயிராகி**
**ஒத்த இருமாயா கூட்டத் திடையூட்டிச்**
**சுத்தம தாகுந் துரியம் பிறிவித்துச்**
**சித்தம் புகுந்து சிவமக மாக்குமே. 1771**

இம் – எனின், ஆன்மாக்களை முத்தொழிற்படுத்திப் பரிபாகமுறுத்தி அருளுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சத்தியும் சிவமும் ஆகிய இரண்டன் விளை யாட்டாகிய படைப்பால் உயிரானது உடலொடு கூடி மாயா மலமும் கன்மமலமும் ஆகிய இரண்டும் ஒத்த கூட்டத்திலே வினைப்போகங்களை நுகர்வித்து மல மாயைகள் கழன்ற சுத்தமாகிய துரிய நிலையில் உயிரைப் பிரியச் செய்து சிவம்

என்னுடைய சித்தத்தில் புகுந்து தாமாம் தன்மையை விளைவிக்கும் என்றவாறு.

சிவசத்திகளின் விளையாட்டாகிய பஞ்சகிருத்தியத்தால் சிவம் உயிர்களை மாயை கன்மங்களுடன் கூட்டி வினைகளை ஊட்டித் தூய்மைப்படுத்திச் சிவமாம் பெருவாழ்வு அளிக்கும் என்பது கருத்து.

ஐங்கலப்பாரம் சுமத்தல் சாத்தற்கு விளையாட்டு என்பதுபோலச் சத்தியோடு சிவம் பஞ்சகிருத்தியம் பண்ணுதல் விளையாட்டாகும் என்பார் 'சத்தி சிவன் விளையாட்டாம்' என்றார்.

உயிர் ஆகி என்பதில் உயிர் உடலோடு ஒன்றிச் சிருட்டிக்கப்பட்டு என வேண்டியன் வருவித்துப் பொருள் கொள்க. உயிர் சிருட்டியாதி முத்தொழிற் படுதலும் அவற்றிற்கு ஊட்டிக் கழித்தலும் இறைவர்க்கு இலோசான செயலாம் என்பார், உயிர் ஆக்கி என்னாது 'உயிர் ஆகி' என உயிரின் வினையாக உரைத்தார்.

மாயாமலம் வினைப்போகங்களை அழுந்தி அனுபவித்தற்கு உயிர்களுக்கு மறைப்புத் தன்மையை உதவுதலின் அதனையும், கன்மமலம் உண்டுகழிக்கப்படுதலின் அதனையும் இறைவன் ஆன்மாக்களுடைய பரிபாகத்திற்கு ஏற்ப அளந்து கொடுத்தான் என்பார். 'ஒத்த இரு மாயா கூட்டத்திடை ஊட்டி' என்றார்.

தாய் ஊட்டினால் அல்லது தானே உண்ணாத சேய் போல இறைவன் நுகருமா நுகர்ந்து நுகரச் செய்தால் அல்லது உயிர்கள் தாமே நுகரும் சுதந்திரம் என்றும் இல்லாதன ஆதலின் 'ஊட்டி' என்றார்.

துரியம் நான்காவது நிலை. முதல் மூன்றாகிய சாக்கிர சொப்பன சுழுத்திகளில் உயிர், படையொடும் பவனிபோகும் மன்னவன் மீண்டும் அரண்மனையிற் புகும்போது படைகள் அவ்வவ்விடத்து நிற்க, தானும்அரசியும் அந்தப்புரத்து நுழைவதைப் போல, உயிர் தத்துவங்களின் கழன்று தானும் பிராணனுமாய் நிற்கும். கடந்த துரியநிலையிலேயோ உயிர்ப்பும் அடங்கி, தனியாச் சுத்தமாய் அசைவற்றிருக்கும். அந்நிலையில் சித்தத்தில் புகுந்து, சிவம் தானாக்கி ஆண்ட தென்பார் 'சிவம் அகம் ஆக்குமே' என்றார். சிவம் அகமாக்குவது சீவனிடத்துச் சிவம் பிரகாசிக்கச் செய்தல்.

இம்மந்திரக் கருத்தை உணராது அகம்பிரமவாதம் கூறியதாக எண்ணி, இம்மந்திரத்தையே ஒழித்தார் சிலர்; அது மரபன்மை உணர்க.

இங்ஙனம் சீவன் சிவமாம் பேறெய்தும் அறிவியல் அனுபவம் உணர்த்துதலின் ஞானலிங்கத்த தாயிற்று இம்மந்திரம். (68)

**சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி**
**சத்தி சிவமுமாஞ் சிவன்சத் தியுமாகுஞ்**
**சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை**
**சத்திதான் என்றுஞ் சமைந்துரு வாகுமே.1772**

இம் – எனின், சிவ சத்திகளின் விளையாட்டே இப்பிரபஞ்சம் அனைத்தும் எனல் நுதலிற்று.

இ–ள்: இப்பூமி சிவசத்திகளின் விளையாட்டாம். அவ்விருவரும் தம்முள் வேறுபாடிலர். சத்திசிவமாம், சிவம் சத்தியுமாம்; சத்தியும் சிவமுமின்றிச் சிவலிங்கம் இல்லையாம்;

அவ்விரண்டினுள் சத்தியே, என்றும் ஆன்மாக்களுக்குப் பரிபாகம் வருவித்தற்பொருட்டு உருவம் உடையதாகும் என்றவாறு.

சத்தியே ஆன்மாக்களுக்குப் போகமோட்சங்களைத் தருதற்குத் திருவுளம் பற்றி உருவுகொள்ளும்; ஆகவே, இத் தனு கரண புவன போகங்கள் சிவம் சத்திகளின் விளையாட்டே யாம் என்பது கருத்து.

தாரணி – பூமி. அதாவது, ஆன்மாக்கள் வினைப் போகத்தைத் துய்த்தற்கு இடமான உலகம் என்பதாம். சிவம் சிருட்டி யுன் முகராகச் சத்தியோடு கலந்தகாலத்து உண்டாம் விளையாட்டு என்பதாம். சிவஞான சித்தியாரிலும் ''சொன்ன இத்தொழில்கள் என்ன காரணம் தோற்றஎன்னில், முன்னவன் விளையாட்டு என்று மொழிதலுமாம்'' என்று அருளிச் செய்யப் பெற்றுள்ளது. மாணிக்கவாசக சுவாமிகளும் ''காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி'' எனவும், ''ஐயா நீ ஆட் கொண்டருளும் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்'' எனவும் அருளினமை கொண்டு இறைவன் விளையாட்டுச் சிறுமகார் விளையாட் டினைப் போல வெறுவினை அன்று; ஆன்மாக்களை உய்வித் தற் பயனுடையது என்க. பயனுடைத்தாயின் விளையாட்டு எனல்பொருந்தாது எனின், பெரும்பாரம் சுமத்தல் சாத்தற்கு விளையாட்டு எனல்போல எளிதில்செய்யப்படுதலை நோக்கியே ஆம் என்க.

சிவம் பண்பியும் சத்தி பண்பும் ஆதலானும் சிவசத்தியில் அபேதம் கூறுவார் 'சத்தி சிவமுமாம் சிவம் சத்தியுமாகும்' என்றார்.

தாபரம் – சிவலிங்கம். சிவலிங்கம் சத்தி சிவச் சேர்க்கையன்றி வேறில்லையாம். அங்கியும் சூடும் அநந்நியமாய் இருத்தல் போலச் சிவமும் சத்தியும் வேறு பிரிக்கமுடியாத தாய் விளங்கும்; அத்தகைய சிவசத்திகளின் இணைப்பே இலிங்கம் என்பது.

அருவமாய சிவம் சத்தியோடு கூடிய காலத்துச் சத்தியே கலந்து உருவமாம் என்பதாம்.

இதனால் உலகத் தோற்றம் முதலான பஞ்ச கிருத்தியங்கள் சிவசத்திகளின் செயலே. சத்தியே சமைந்து உருவாகிறது என்பது உணர்த்தியவாறு. (69)

# 7. சிவலிங்கம்

அறிவுருவில் சிவம் நின்று அருள்செய்தலை உணர்த்திய சித்தநாதர், எங்கும் பரந்து எல்லாமாய் விளங்கும் பரசிவத்தை ஒரு குறியினிடமாக எழுந்தருளச் செய்து வணங்கும் முறைமையை இவ்வதிகாரத்தான் உணர்த்துகிறார். சிவலிங்கம் – சிவம் மணியின்கண் ஒளிபோல வெளிப்பட்டு நின்று அருள்செய்யும் குறி.

**குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்**
**பரக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயும்**
**நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை**
**வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. 1773**

இம் – எனின், ஐம்பெரும் பூதங்களாய் வியாபித்து நிற்கும் பரசிவத்தை அடையாளத்தடக்கி வழிபடுவது எங்ஙனம் என்று ஆராய்தல் நுதலிற்று.

இ—ள்: ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த இவ்வுலகமும், நீரும், எங்கும் பரவுகின்ற காற்றும், அக்காற்றினின்று தோன்றுவதான தீயும், இந்நான்கும் தத்தம் நிலையும் முறையும் மாறாமல் ஒழுங்குபெற நிலைத்திருப்பதற்கு இடமான விண்ணும் ஆகப் பரந்து விரிந்து விளங்குபவனை, ஒரு குறியினிடமாக எல்லைப் படுத்தி வலஞ்செய்து வணங்குமாற்றை அடியேன் அறிந்தே னில்லை என்றவாறு.

ஐம்பெரும் பூதங்களுமாய் அகன்று நிற்கும் பர சிவத்தை ஒரு லிங்கத்தினிடமாக எழுந்தருளச் செய்து வணங்கும்முறை அறிந்திலேன் என ஆய்வுள்ளத்தை அறிவித் தவாறு.

கடல் என்றும் ஒலிக்கின்ற இயல்பினது ஆகலின் 'குரைக்கின்ற வாரி' எனப்பட்டது. வாரிக் குவலயம் – கடல் சூழ்ந்த பூமண்டலம். இது மண்ணில் பரசிவம் பரந்திருத்தலை உணர்த்துவது.

நீர் – பூமியினுள்ளும், புறம்பே வானும், யாறும் குளனும் கேணியுமாகத் தோன்றும் நீர். இது அப்புத் தத்துவத்தில் சிவவியாபகம் அறிவிப்பது.

காற்று எங்கும் அலைந்து அலைந்து உயிர்கட்கு உயிர்ப்பாய் உதவுவது ஆதலின் 'பரக்கின்ற காற்று' என்றார். இது வாயுதத்துவத்துச் சிவவியாபகம் தெரிவிப்பது.

அடுதல் சுடுதல் அக்கினிஹோத்திரம் செய்தல் முதலிய காரியங்களுக்குப் பயிலப்படுவதாய், காற்றினின்றும் தோன்றுவதாகலின் 'பயில்கின்ற தீ' என்றார். இது சிவம் சுடராய் வியாபித்திருத்தலை விளக்குவது.

நிரைக்கின்றவாறு – முற்கூறிய நான்கு பூதங்களும் நிரல்பட விளங்கும் இடம். விண் ஏனைய பூதங்கள் விரிந்து வாழ இடங்கொடுப்பதாகலின் அதனை 'நிரைக்கின்றவாறு' என்றார். ஆறு – முறை; ஈண்டு இலக்கணையாய் முறைப் படுதற்கான சூழலை உணர்த்தியது.

இவை நீண்டு அகன்றானை – இவை அனைத்தினும் எங்கும் பரந்துள்ள பரசிவத்தை, பருப்பூதங்களையும் தன்னகத்து அடக்கித் தான் அவற்றினும் வியாபகமாய் விளங்கும் சிவம் என்பதாம்.

வரை – அளவு. எல்லை. வரைத்து – எல்லையிற் படுத்து. சத்தியோடு கூடியவரும், பரமகாரணரும் மேலான வரும், நித்தியரும், சச்சிதானந்த சுகஸ்வரூபமானவரும், எல்லாத் தத்துவங்களிலும் வியாபித்திருப்பவரும், அளவிடற் கரியரும், ஒப்பிலியும், உரை மனம் கடந்து நிற்பவரும் சொல்லில் அடங்காதவரும், அருவானவரும் ஆகிய பர சிவத்தைச் சிவலிங்கமாகிய உருவில் சிவமந்திரத்தால் ஆவாகனம் செய்தலே வரை செய்தலாம். இதனை,

𑌸𑌶𑌿𑌵𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌮𑌕𑌾𑌰𑌣𑌮𑍍 ।
𑌪𑌰𑌮𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌸𑌤𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌦 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 ॥
𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯 𑌮𑌨𑍌𑌪𑌮𑌮𑍍 ।
𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸 𑌰𑌹𑌿𑌤𑌂 𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑍋𑌽𑌤𑍀𑌤 𑌗𑍋𑌚𑌰𑌮𑍍 ॥
𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌂 𑌸𑌕𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 ।
𑌆𑌵𑌾𑌹𑌨𑌮𑍇𑌤𑌦𑍁𑌕𑍍𑌤𑌂 𑌶𑌿𑌵𑌮𑌨𑍍𑌤𑍍𑌰 𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌣𑌾𑌤𑍍 ॥

எனும் அசிந்தியவிசுவசாதாக்கிய வசனத்தால் அறிக. அறியேன் என்றது அறியமாட்டாமையை உணர்த்தியதன்று; அறியும் ஆர்வமிகுதியை விளக்கியவாறு. (70)

**வரைத்து வலஞ்செய்யு மாறிங்கொன் றுண்டு**
**நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி**
**உரைத்தவன் நாமம் உணரவல் லார்க்குப்**
**புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே.** 1774

இம் – எனின், சிவலிங்கத்தில் ஆவாகித்து வழிபடும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எங்கும் பரந்த சிவத்தை லிங்கத்தினிடமாக ஆவாகித்து வழிபடும் முறைமை ஒன்றுண்டு; அஃது யாதோ வெனின், இடையறாது வரும் கங்கை நீரையும் மலரையும் கையிலேந்தி, சிவமூல மந்திரத்தைத் தியானிக்க வல்லவர்கட்கு, புரியாகிய சடையையுடைய பரசிவம் பொள்ளறப்பட்டு எங்கும் போகான் என்றவாறு.

வழிபடுவர் வரைசெய்க இலிங்கத்தினிடமாகவே விளங்குவான் சிவம் என்பதாம்.

ஆற்று நீரோட்டம் பிரவாகானாதியாதலின் 'நிரைத்து வருகங்கை' என்றார். பூவும் நீருங்கொண்டு வழிபடல் மரபு ஆதலின் 'நீர் மலர் ஏந்தி' என்றார்.

அவன் நாமம் உரைத்து என மாறுக. சிவமந்திரம் செபித்து என்பதாம். உணர்தலாவது துவாதசாந்தம் வரையில் ஒளிவடிவாய்ப் பரசிவம் விளங்குவதைத் தியானத்தால் அறிதல்.

புரை – ஓட்டை, பொள்ளல். புரைத்து – பொள்ளற் பட்டு. குடத்துள் நிறைந்த நீர் பொள்றற்பட்டு ஒழுகுவதுபோல, மனத்துள் நிறைந்த சிவம் பொறிபுலன்களாகிய பொள்ளற் பட்டுப் புறம் போகாது 'மனத்திடை மன்னிய மன்னாக விளங்கும்' என்பதாம். (71)

**ஒன்றெனக் கண்டேனெம் ஈசன் ஒருவனை**
**நன்றென் றடியிணை நானவ னைத்தொழ**
**வென்றைம் புலனும் மிகக்கிடந் தின்புற**
**அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே. 1775**

இம் – எனின், சிவலிங்கத்து எழுந்தருளச் செய்து வழிபடுவதால் விளையும் இன்பம் இஃதென உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எம் ஈசனாகிய ஒப்பற்ற பரம்பொருளை ஏகன் எனக் கண்டேன்; நான் அவனுடைய திருவடியிணைகளை நன்று என்று தொழ. தத்தம் புலன்களிற் செல்லாது வெல்லப் பட்ட ஐம்பொறிகளும் அவனடியிணைக்கண்ணே கிடந்துமிக்க இன்பத்தைப் பொருந்த முதல்வன் அன்றும் என்றும் அருள் புரிவன் எ–று.

புலன்களை வென்று, அவன் அடியிணைகளிலேயே நான் பொருந்திக் கிடக்க, அவன் என்றும் அருளைப் புரிவன் என்பதாம்.

ஈசன் – எல்லாச் செல்வங்களுக்கும் தலைமையாய் உரிமை பூண்டவன். இத்தகைய நிலை வேறு எவர்க்கும் இல்லை ஆதலின், ஈசன் ஒருவனைக் கண்டேன் என்றவாறாம். மீளவும் ஒன்று எனக் கண்டேன் என்றது நித்தயமாய்ச் சித்தாய்

ஆனந்தமாய் உள்ளபொருள் வேறொன்றின்மையின் கூறியதாம்.

நான் அவன் அடியிணையை நன்று என்று தொழ என உருவு பிரித்துக் கூட்டுக. திருவடிகளே நன்மை பயப்பது என்று வணங்க என்பதாம்.

பொறிவழி போகாது ஞானவழி மடங்கி நின்ற மன மாதலின் 'வென்ற ஐம்புலனும்' என்றார். வெல்லப்பட்ட ஐம் புலன்களும் எனப் பொருள் காண்க. புலன்களை வெல்லுதலா வது புலன்வழியே தாம் போகாது தம்வழிப் புலன்கள் பயனுதர நிற்றல்.

அன்று என்று என்புழி அன்றும் என்றும் என முற்றும்மை விரிக்க. பிரான் அருள் செய்யும் என்க.

ஒன்றெனக் கண்டே எனப் பாடங்கொண்டு கண்டு தொழ, புலன் இன்புற, ஆதிப்பிரான் அருள்செய்யும் என முடிப்பாரும் உளர். (72)

**மலர்ந்த அயன்மால் உருத்திரன் மகேசன்**
**பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்**
**நலந்தரு சத்தி சிவன்வடி வாகிப்**
**பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே.** 1776

இம் – எனின், சிவலிங்கமே நவந்தரு பேதமாகி அவரவர் பரிபாகத்திற்கேற்பப் பயனுதவுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: தாமரை மலரில் தோன்றிய பிரமன், திருமால், உருத்திரன், மகேசன், வன்மையை உதவுகின்ற ஐந்து திருமுகங்

களையுடைய சதாசிவன், பரவிந்து பரநாதம் நன்மையை வழங்குகின்ற சத்தி சிவம் எனத் திருமேனி தாங்கி, பரையோடு கூடிய பரசிவம் மக்களுக்குப் பயன் உதவும் சிவலிங்கமாம் என்றவாறு.

''சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னொன்றி னொன்றாய்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்றா
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்ப னென்பர்''

என்பது சித்தியார்.

அயன் உந்தியந் தாமரைமலரில் தோன்றியவனா தலின் 'மலர்ந்த அயன்' என்றார். போகசிவமாகிய சதாசிவ மூர்த்தியே அனைவர்க்கும் அவரவர் தொழிற்கண் ஆற்றல் வழங்குவது ஆகலின் 'பலம்தரும் ஐம்முகன்' என்றார்.

பரவிந்து என விந்துவை விசேடிக்கவே, நாதத்தையும் பரநாதமெனக் கூட்டிப் பொருள்கொள்க. அவ்வாறு தொழில் செய்யவேண்டும் என்று எண்ணுகிற அவதரம் சத்தியாதலின் 'நலந்தரும் சத்தி' என்றதாம்.

இம்மந்திரம் அயன் தொடங்கிச் சிவனீறாக முடித்தல் சங்காரக்கிரமத்துக் கூறியதாம். எடுத்துக் காட்டிய சித்தியார்ச் செய்யுள் சிருட்டிக் கிரமம் கூறியதாம்.

இவற்றுள் சிவமாவது, சிற்சத்தியோடு பிரிப்பு இன்றி நிற்கும் சிவம், ஆன்மாக்களின் மலநோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்தமாயையில் தொழில் செய்யத் திருவுள்ளங் கொண்ட அவதரமாகும். இதுவே உயிர்களின் துன்பத்தைப்

போக்க உன்னிய நிலையாதலின் பரநாதம் எனவும் பெறும். அவ்வுன்னுதலின்பின் எவ்வாறு தொழில் செய்ய வேண்டும் என்று எண்ணிய அவதரமே சத்தியாம். சத்தியாவது அடங்கி நிற்கும் ஆற்றல். இதனிடம் ஒரு குறிப்பு நிகழும். அப்போது அச்சத்தி பரவிந்து எனப்பெறும். அதன்பின் எண்ணியவாறே செய்தற்கு முதற்காரணமாய்த் தன்னுள் அடங்கியிருந்த சுத்த மாயையோடு கூடிய அவதரம் விந்து. சுத்தமாயையில் கூடாத போது பரநாதம் பரவிந்து. கூடியபோது அபரநாதம் அபர விந்து. அதன்பின், இன்னின்ன வண்ணம் செய்யவேண்டும் என்று எண்ணிய நிலை சதாசிவம். சத்தியோடு கூடிய சிவம் சதாசிவம். எண்ணியவாறு இயற்றுங்கால் அவரவர் கன்ம பலத்தை நுகர்த்தும் முறையில் நுகர வேண்டாத கன்ம பலன் களையும், நுகர வேண்டிய கன்ம பலங்களில் உள்ள குற்றங் களையும் மறைக்கும் அவதரம் மாகேசுரம். பெரிய ஐசுவரி யத்தை உடையது மாகேசுரமாம். அவ்வாறு ஆன்மாக்க - நுகருங்காலத்து இளைப்பு ஒழித்தற் பொருட்டும், வேறு உலகத்தில் இன்பத் துன்பங்களை நுகர்தற்பொருட்டும், இவ்வுலகத்திலே வேறு சரீரத்தின் வாயிலாக இன்பத் துன்பங் களை நுகர்தற்பொருட்டும் சங்கரித்தலாகிய அவதரம் உருத் திரன். போகங்களை நுகர்வித்தற்காக நிலைக்கச் செய்யும் அவதரம் திருமால். நுகர்தற்குரிய தனு கரண புவனங்களைத் தோற்றுவிக்கும் அவதரம் பிரமன். இவ்வண்ணம் ஏகநாதனே நவந்தரு பேதமாக நடிப்பன் எனத் தெளிக. பராநந்தி என்ப தற்குப் பராவப்பெறுகின்ற நந்தி எனலுமாம். (73)

**மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்**
**றாவி எழுமள வன்றே உடலுற**
**மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்**
**பாவித் தடக்கிற் பரகதி தானே. 1777**

இம் – எனின், துவாதசாந்தம் வரை உயிரை ஒளிப் பொருளாகிய சிவத்தோடு கொண்டு செல்லு முறையும் அதனால் விளையும் பயனும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயிரானது, மேல்நோக்கி எழுகின்ற சிவந்த ஒளிப்பிழம்பின் இடையே சென்று எழுகின்ற அளவும் உடலொடு பொருந்த, அதற்கு மேலே பன்னிரண்டங்குலம் வரை அடையப்படுவதும், அங்ஙனம் அடையும் போது விட்ட கல்வதால் நிகழ்வதுமாகிய அனுபவங்களைப் பாவனை செய்து, அப்பாவனை தம் அனுபவமாதலே அன்றிப் பிறர்க்குக் கூறவொண்ணாமையால் அடக்கி ஒழுகின் அவ்வுயிர்க்கு மேலான வீட்டின்பம் விளையும் என்றவாறு.

ஆன்மா பிரமரந்திரம் வரை குண்டலினியோடு சென்று, அதற்குமேல் பேரொளிப் பிழம்பாகிய சிவத்தோடு கூடுவதால் விளையும் அனுபவங்களைப் பாவித்தால் பேரின்பம் விளையும் என்பது கருத்து.

இம்மந்திரம் சிவலிங்கத்தினிடமாகச் செய்யப்படும் வந்தனை வழிபாடுகளை அம்மட்டோடு அமையாது உண்முக மாகவும் உடல் வரையிலும் அதற்கு மேலும் கண்டு அனுபவிக்க வீட்டின்பம் விளையும் என்ற உண்மையை உணர்த்துகின்றது.

ஆவி, செஞ்சுடரூடு சென்று எழும் அளவு உடலுற, (மேல) மேவப்படுவதும் விட்டு நிகழ்வதும் பாவித்து அடக்கில் பரகதி தானே எய்தும் என முடிக்க.

மூலாதாரத்தினின்று நடுநாடியின் வழியே பிரம ரந்திரம் வரைமேவி எழும்புவதாகிய குண்டலினியோடு அதன் நடுவில் ஆன்மாவும் செல்லும் வரை உடல் உடனிருக்கும்;

அதற்கு மேற்பட்ட துவாதசாந்தம் வரை பரஞ்சோதியுடன் ஆன்மா கலக்கும்; அவ்வனுபவம் கைகூடின் ஆனந்தம் விளையும் என்பதாம்.

அன்று, ஏ: அசை நிலைகள்.

மேவப்படுவது – துவாதசாந்தப் பெருவெளியில் எய்தப் படுவதாகிய சிவச்சோதி. விட்டு நிகழ்வது – மல மாயா கன்மங்களை விட்டதால் நிகழ்வதாகிய சுத்தானுபவம். விட்டது – பற்று, தொட்டது – சிவம். இதனால் விளைவது சிவானுபவம். சிவானுபவ தியானத்தைச் செய்து, தாடலைபோல அடங்கியிருக்கப் புகின் சிவகதி ஆம் என்பது. (74)

# 8. சம்பிரதாயம்

சிவலிங்கத்தினிடமாக விளங்கும் பரசிவன், பூவும் நீரும் கொண்டு வழிபட்டு பஞ்சாக்கரத்தைத் தியானிப்பவர்களுக்குப் பரகதி அருளுவன் என்று பகர்ந்த ஆசிரியர், சிவலிங்கத்தை விதிப்படி வழிபடுதற்குரிய செயல் முறைகளை இவ்வதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, சிவமே ஆசாரியனாக எழுந்தருளி அஸ்தமஸ்தக சம்யோகம் திருவடி தீட்சை முதலியன செய்து, திருமந்திரத்தை உபதேசித்து, மலமாயா கன்மங்களைக் கழற்றிச் சுத்தான்மாவாகச் செய்து ஆட்கொள்ளும் முறைகளை உணர்த்துகின்றார். சம்பிரதாயம் என்பது மரபுவழி வந்த ஆகமவிதிகளோடு முரணாத ஒழுகலாறுகளாம்.

**உடல்பொருள் ஆவி உதகத்தால் கொண்டு**
**படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து**
**நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்**
**கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே. 1778**

இம் – எனின், சாம்பவதீட்சை முறையை அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: சிவமேயான குருநாதன் உடல் பொருள் ஆவிகளைத் தத்தம் செய்த நீரோடு கைக்கொண்டு, சீடனுடைய படர்ந்த வினைப்பற்றானது அறும்படியாகத் திருவருள் நோக்கம் செய்து, சீடனுடைய தலையில் சிவ அஸ்தமாகிய தனது கையை வைத்து, உபதேசித்து, திருவடியை முடிமேற் சூட்டி, அதிநுட்பமான சிவஞானத்தை விளைவித்து, விரைவில் ஆற்றுப் பெருக்குப்போல் தொடர்ந்துவரும் பிறவியை அறுத்தருளினன் என்றவாறு.

சிவனே ஆசாரியனாக எழுந்தருளி, பரிபாகமுற்ற சீடனுடைய உடல் பொருள் ஆவிகளை ஏற்று, நோக்கியும் தொட்டும் அடிவைத்தும் தூயனாக்கிச் சிவஞானம் அருளிப் பிறப்பறுத்து ஆட்கொள்வன் என்பதாம்.

சீடன் தேக திரவிய ஆத்தும அபிலாஷைகளை நம்பி யிருக்கின்ற வரையில் அவன் ஞானத்தை அடையான். ஆகையால், அவற்றை அகற்றுவது ஆசாரியனுடைய முதற் கிரியை ஆகிறது. ஆகையால் 'உடல் பொருள் ஆவி உதகத் தாற்கொண்டு' என்று முதற்கண் கூறினார். மாணிக்கவாசக சுவாமிகளும் ''அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ'' என்றமை காண்க.

''உலகத்தாற்கொண்டு'' என்று பாடங்கொண்டு உலகத்தான் எனப் பிரித்து, தென்னாடுடைய சிவன் எனப்

 பொருள் கொண்டு இடர்ப்படுவர் சிலர்.

ஆசாரியன் உடல் பொருள் ஆவிகளைக் கைக் கொண்டால் அல்லது மாணாக்கன் நுகரும் வினைப் போகங்களால் ஆகாமிய வினை குன்றுபோல் குவிந்து கொண்டே செல்லுமாகலின், உடல்பொருள் ஆவிகளை ஆசாரியன் கைக் கொண்ட அளவில் வினை மிகாமையும் வினைக்கண் உற்ற பற்று நீங்குதலும் உளதாம் ஆதலின் 'படர்வினை பற்றற' என்றார்.

வினைப்பற்று அறுதல் ஆசாரியனுடைய திருவருள் நோக்கத்தான் என்பார் 'பற்றறப் பார்த்து' என்றார். பார்த்தல் என்பது சட்சுதீட்சை. ஏற்றுக் கொள்ளப்பட்ட சீடன் மலமாயா கன்மங்களிலிருந்து நீங்கித் தூய்மை உறுவானாகுக என்று சிவதிருட்டியினால் பார்த்தருளல். இதனை சமயதீட்சை விதிப் பிரகரணத்தில்,

ஜேஹகாஜி வாஜாதேம் உக்ஷேணைவே, விநச்யேத்ஸதிவ

ஸ்ரீஷ்டிராவலோகநாத்

எனவரும் பகுதியான் அறியலாகும். சிவஞான சித்தியாரிலும் ''பலவிதம் ஆசான் பாச மோசனந்தான் பண்ணும்படி நயனத்து'' எனக் கூறுதலும் காண்க.

அதாவது, ஆசாரியன் உண்மைப் பொருளில் சித்தத்தை வைத்து, அச்சித்த விருத்தியோடு மாணாக்கனுடைய பந்தம் நீங்கும்படிப் பார்த்தலாம். ஞானாவரணத்தும் ஞான சித்தி ஆகம மேற்கோளுடன் இந்தக் கருத்து வலியுறுத்தப் படுதல் காண்க. கைவைத்து என்பது சீடனுடைய சிரத்தில் ஆசாரியன் தன் கையைச் சிவ அஸ்தமாகப் பாவித்து இவன் பந்தங்களிலிருந்து விடுபட்டுத் தூயனாகுக என்று தொடுதலாம். இது ஸ்பரிச தீட்சை எனப்படும். சிவஞான சித்தியாரும் முற்கூறிய பாடலில் இதனை அறிவித்தல் காண்க.

𑌶𑌿𑌷𑍍𑌯𑌦𑍇𑌹𑍇 𑌶𑌿𑌵𑌹𑌸𑍍𑌤𑌂 𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌨𑍍𑌧𑍍𑌰
𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯 𑌶𑌿𑌵 𑌤𑍇𑌜𑌸𑌾 𑌹𑍃𑌤 𑌕𑌲𑍍𑌮𑌷𑌂 𑌶𑌿𑌷𑍍𑌯𑌂 𑌸𑌕
𑌲𑍀𑌕𑍃𑌤𑍍𑌯

எனத் தீட்சாவிதியில் கூறப்படுதலும் எண்ணுக.

நொடியின் – உபதேசத்தால் என்க. நொடித்தல் – உரைத்தல், இது வாசக தீட்சை எனப்படும். அதாவது மாணாக்கனது நிலைக்கு ஏற்பச் சீபஞ்சாக்கர மந்திரத்தை உபதேசிக்கலாம்.

அடிவைத்து – சீடன் மிகமுறுகிய தீவிரதர பக்குவி ஆயினான், அவனுடைய ஆணவமல காரியமான அகங்காராதிகளும் ஒழிக எனத் திருவுளங்கொண்டு, தன் திருவடியைச் சிவனடியாகப் பாவித்து, இரசகுளிகையின் பரிசத்தால் செம்பு களிம்பு நீங்கிப் பொன்னாவது போல இவனுடைய மூலமலம் வலிகுன்ற இவன் சிவஞானியாகுக என்று திருவடி சூட்டுதலாம். நாவுக்கரசு சுவாமிகளும் ''நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே'' எனல் காண்க. சுந்தரமூர்த்தி சுவாமிகளும் ''அடி என்றலைமேல் வைத்திடும் என்னும் ஆசையால் வாழ்கின்ற நாயேன்'' எனல் ஓர்க. மாணிக்கவாசக சுவாமிகளுக்கும் குருந்தடியில் குருநாதன் திருவடி சூட்டி ஆட்கொண்டமை நினைவுறத் தக்கது.

நுண்ணுணர்வாக்கி – பாவனையில் கைவரச் செய்து; அதாவது, ஆசாரியன் சீடனுடைய இதயத்திற் புகுந்து அவனது அறிவில் சிவமாம் தன்மை விளங்கச் செய்தல். இதனை ஆத்ம சம்யோஜனம் என்னும் கிரியையான் உணர்க. இது மானத தீட்சை எனப்படும்.

இங்ஙனம் பார்த்தல் முதலிய தீட்சை வகைகளால் சீடனுடைய மலமாயா கன்மங்களைப் போக்குவதே சம்பிரதாய மென்பதை உணர்த்தியவாறு காண்க. (75)

**உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான**
**வியவார் பரமும்பின் மேவும் பிராணன்**
**செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கே**
**உயலார் குருபரன் உய்யக்கொண் டானே.1779**

இம் – எனின், குருபரன் தனுகரணபுவன போகங்களை யான் வியவாது என்னை உய்யக்கொண்டருளும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயிரும், உடலும், ஒளிபொருந்திய பொருளான விம்மிதம் நிறைந்த பரம் பொருளும், இவற்றின் பின்னால் பொருந்திய பிராண வாயுவும் இவற்றைச் செயற்படுத்துகின்ற சிவமும், சித்சத்தியும் முதலியவைகளை அறிந்து உய்யும் வண்ணம் குருபரன் ஆட்கொண்டான் என்றவாறு.

குருபரன் சிவம் சத்தி உடல் உயிர் பரம் இவற்றை அறிவித்து ஆட்கொண்டான் என்பது கருத்து.

உயிர், நித்தமாய் அநேகமாய் வினைகளுக்கு ஈடாக இறைவன் ஆணையின்படி உடலோடு உறுவதாயுள்ளது. உடல் மாயையின் காரியமாய், வினைகளை நுகர்தற் கேற்றதாய், புண்ணிய பாவங்கட்கு ஏற்ப இறைவனால்அருளப்பெற்ற கருவி.

ஒண்பொருளான வியவார் பரம் – உயிர்க்குயிராய் மணியின்கண் ஒளிபோல உயிருள் நின்று ஞானத்தை நல்குவ

தாய ஒளிப்பொருளான சிவம். இது இத்தகையது என்று ஆன்மாக்களால் அறியப்படாவிடினும் ஆனந்தானுபவ மாத்திரையான் உயிர்களுக்கு உதவுதலின் வியப்பினைத் தருவதாயிற்று. அதனால் அதனை 'வியவார் பரம்' என்றார். இந்த மூன்றாலும் முறையே உயிரும், தடையும், இறையும் ஆகிய முப்பொருள்கள் மொழியப்பெற்றன.

உயிருண்மையை உயிர்ப்பியக்கத்தால் உணர்கிறோமாதலின் அவ்வுயிர்ப்பினை 'பின் மேவும் பிராணன்' என்றும், அவ்வுயிர்ப்பின் இயக்கம் செயற்படுவது சிவமும் சிற்சத்தியுமாகிய இவற்றாலாதலின் 'செயலார் சிவமும் சிற்சத்தியாதிக்கே' என்றும் கூறினார்.

ஆதிக்கு என்பது ஆதியை என வேற்றுமை மயக்கமாகக் கொள்க.

உயலார் குருபரன் – உய்யும் நெறியைப் பொருந்துவிக்கும் குருபரன் என்க. சகலான்மாக்களுக்குக் காட்டாதனவெல்லாம் காட்டி, தாட்டாமரைகாட்டி, தன் கருணைத்தேன் காட்டி, உய்யும் நெறிக்கண் செலுத்துபவன் குருபரனே என்பது குறித்தவாறு. (76)

**பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்**
**நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்**
**உச்சிக்குங் கீழது வுண்ணாக்கு மேலது**
**வைச்ச பதமிது வாய்திற வாதே. 1780**

இம் – என்ன், ஆசாரியன் ஆட்கொண்டு உபதேசித்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மேற்குத்திக்கிலே என்னை இருத்திய ஆசாரியன், என்னை நாடோறும் நினைத்துக்கொண்டேயிரு என்று உபதேசித்த அப்பொருள், என்னுடைய உச்சிக்குக் கீழேயும் உள்நாக்குக்கு மேலேயும் விளங்குவதாகிய இடமாம்; இவ்விடத்தில் அப்பொருளை என்வாய் திறவாது; மோன நிலை சித்திக்கும் என்றவாறு.

ஆசாரியன் வடக்கு நோக்கி இருந்து சீடனைக் கிழக்கு நோக்கி இருக்கச் செய்வன். அப்பொழுது சீடன் இருக்கும் திசை மேற்காம். ஆசாரியன் 'எப்பொழுதும் சிவமாகிய என்னையே தியானித்துக்கொண்டு இரு' என்று சிவமந்திரத்தை உபதேசிப்பன். அம்மந்திரத்தைத் தியானிக்கும் இடம் உச்சிக்குக் கீழும் உள்நாக்குக்கு மேலுமாகிய புருவ மத்தியில் உள்ள ஆஞ்ஞா ஸ்தானமாம்.

இங்கே சிவோகம் எனத் தியானிக்கும்பொழுது வாய் திறக்கப்படுபதில்லை ஆதலின் 'வாய் திறவாதே' என்றார். இதனையும் நிர்வாண தீட்சா விதியில் பரக்கக் காணலாம். (77)

**பெட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை**
**யொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கித்**
**தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்**
**வட்டம் தொத்தது வாணிபம் வாய்த்ததே. 1781**

இம் – எனின், சிவகுருநாதன் சீடனையும் தானாம் தன்மை எய்துவித்தவாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விரும்பியவாறு வாயால் பிதற்றி எங்கும் திரிகின்ற அடியேனை மனத்தினுள்ளாகப் பொருந்திய குற்றங்கள் அனைத்தையும் ஒட்ட அடித்துப் போக்கி, சிவகுரு

நாதனான தன்னையும் சீடனாகிய என்னையும் துலாத்தட்டு ஒத்த நிறையில் பண்டமாற்றுச் செய்து கொண்டான்; எங்கள் இருவருக்குள்ளும் நடந்த வாணிபம் வாய்த்தது; வட்டம் ஒத்தது என்றவாறு.

வாய்க்கு வந்ததைப் பேசித் திரிந்த என்னை மாசு அகற்றித் தன்னைப்போல என்னையும் ஆக்கிப் பரிவர்த்தனை செய்துகொண்டான்; ஆதலால், எங்களுக்குள் நடந்த வாணி பம் வாய்த்துக்கொண்டது என்பது கருத்து.

பெட்ட அடித்தல் – விரும்பியதைப் பேசுதல். இது பேசத் தகுந்தது, இதுபேசத்தகாதது என்ற வேறுபாடு இன்றி விரும்பியவண்ணமெல்லாம் பேசுதலே பெட்ட அடித்தல் என்பது. பிதற்றி – பொருள் அற்றனவும் பயனற்றனவும் ஆகிய பேச்சுகளை இயைபின்றிப் பேசி. எங்கும் திரிவேனை – இது நல்லிடம், இது அல்லிடம் என்ற வேற்றுமை பாராது எங்கும் திரிகின்ற என்னை.

உள்ளமர் மாசெலாம் ஒட்ட அடித்து வாங்கி என மாறுக. உள்ளமர் – மாசு உயிரோடு அனாதியே பற்றி நிற்கின்ற ஆணவமலமும் அதனைப் போக்குதற்காக இறைவனுதவிய ஆகந்துகமலமாகிய மாயாமலமும், நாம் ஈட்டிய கன்ம மலமும், இவை பற்றி எழும் காமாதி குற்றங்களும் ஆகிய எல்லா வற்றையும்.

ஒட்ட அடித்து வாங்கி – சிறிதும் சேடமில்லாது அற அடித்து நீக்கி. மலச்சேடமும் வினைச் சேடமும் இருப்பின் அவை பஞ்சுப்பொதியின் தீச்சேடம் போலக் கேடு விளைக்கு மாதலின் ஒட்ட அடித்து வாங்கி என்றார். 'தன்னையும்' என்பது சிவாநுபவத்திறம் சிறந்த ஆசாரியனாகிய தன்னையும்

என உயர்வுதோன்ற நின்றது; 'என்னையும்' என்பது மலபரி பாகத்தை விரும்புகின்ற என்னையும் என்ற பொருள் தோன்ற நின்றது.

சமன்செய்து சீர்தூக்குங்கோலின் இருதட்டிலும் தன்னையும் என்னையும் இட்டு, இருதட்டும் சமனாக நிற்றலும், என்னை என்னகத்திருத்தி என்னைத் தன்னகத்திருத்தி மாற்றிக் கொண்டான் என்பதாம். இது ஆத்ம சம்யோஜனம் செய்த சீடனுடைய ஆன்மா ஆசாரியனைப்போலத் தானும் சிவத்து விளக்கம் பெற்று ஒத்து இருக்குமாதலின் இங்ஙனம் கூறப் பெற்றதாம்.

வட்டம் – பண்டமாற்றில் கொள்வானும் கொடுப் பானும் பெறும் ஊதியக்காசு. வாணிபத்துள் கொள்வார்க்கும் கொடுப்பார்க்கும் வட்டம் ஒத்தால் வாணிபம் வாய்க்கும். அதனைத் தன்னையும் என்னையும் மாற்றிக் கொண்டமைக்கு ஒப்புத் தோன்ற உரைத்தார்.

'பொட்டடித்து எங்கும்' எனவும், 'பொட்டடித்து உள்ளமர் மாசு' எனவும் பாடம் கொள்வாரும் உளர். பொருந் தாமையை உரைக்கிடையிற்காண்க. (78)

**தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்**
**இருக்கின்ற தன்மையை யேதும் உணரார்**
**பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாங்**
**கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே.** 1782

இம் – எனின், மாயையை அகற்றி, மயக்கத்தைப் போக்கி, ஈசனைக் கண்டமை கூறுதல் நுதலிற்று.

இ–ள்: உலகத்தில் தரிக்கின்ற பலநூறாயிரக் கணக்கான உயிர்கள் அத்தனைக்கும் தலைவனாகிய சிவபெருமான் உயிர்க்குயிராயும் புறத்தேயுள்ள உறுப்புக்களைச் சார்ந்தும் இருக்கின்ற தன்மையை ஒரு சிறிதும் உணரமாட்டார்கள். எம்மை அம்மை அப்பர் என்று பிரிக்கின்ற சுத்தமாயையால் விளையும் மாறுபாடுகள் யாவையும்போக்கி, எல்லாவற்றையும் தம்மிடத்துக் கருக்கொண்டு விளங்கும் ஈசனைக் கண்டு தரிசித்தேன் என்றவாறு.

மாயையினின்றும் அகன்ற அடியேன், அனைத்தையும் தம்மிடத்தே கருக்கொண்டு விளங்கும் ஈசனைக் கண்டேன் என்பது கருத்து.

தரிக்கின்ற பல்லுயிர்க்கெல்லாம் என்பதற்கியைய உலகம் தரிக்கின்ற பலவாகிய உயிர்கள் எல்லாவற்றிற்கும் என்க. பிராரத்தமாகக் கொடுத்த வினைகளைத் தரிக்கின்ற உயிர் என்றும், சிவன் ஒருவனே தலைவன் என மனத்துட் கொண்ட உயிர்கட்கெல்லாம் என்றும் உரைத்தலுமாம்.

இருக்கின்ற தன்மை – உயிர்க்குயிராய ஒன்றாயும், தலைவனாய் வேறாயும், உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைகட்குச் சான்றாய் உடனாயுமிருக்கின்ற தன்மை.

ஏதும் – ஒரு சிறிதும் உணரார் என்பதற்கியைய உலகவராகிய பாசஞானிகள் என எழுவாய் வருகிக்க.

விந்து – மாயை, பிணக்கு – அதனால் விளையும் மாறுபாடுகள், மாயையிலுண்டாம் மயக்க உணர்வின் நீங்கி என்க.

சர்வசங்காரகாலத்து எல்லா உயிர்களும் இறைவனிடம் ஒடுங்கி, மீளவும் சிருட்டிக் காலத்துப் புனருற்பவப்

படுமாதலின் 'எல்லாம் கருக்கொண்ட ஈசனை' என்றார்.

உலகவர்களாகிய பாசஞானிகள் இறைவனிருப்பை உணரார்; அடியேன் மாயையினின்று நீங்கியமையால் எல்லா உயிர்களையும் தன்னகத்தடக்கிப் புனருற்பவத்திற்காகக் கருக் கொண்ட ஈசனைக் கண்டுகொண்டேன் என்பதாம். (79)

**கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு**
**நாடி யடிவைத் தருண்ஞான சத்தியால்**
**பாடல் உடலினிற் பற்றற நீக்கியே**
**கூடிய தானவ னாங்குளிக் கொண்டே.** 1783

இம் – எனின், திருவருளால் அடியை முடிக்கண் சூட்டித் தான் அவனாக்கியவாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இருவினைக்கீடாக வந்து கூடிய உடலும் பொருளும் ஆவியுமாகிய மூன்றையும் உய்வித்தருள வேண்டும் குறிப்பால் கைக்கொண்டு, ஆய்ந்து திருமுடியை முடிமேற்சூட்டி, திருவருளாகிய ஞானசத்தியால் துன்பப்படு கின்ற உடலின்மேல் உளதாம் பற்றைத் துவரத் துடைத்து, ஆன்மாவோடு கலந்து நின்றும் மறையும் தான் அவ்வான்மா வேயாவன் என்றவாறு.

உடல் பொருள் ஆவிகளாகிய மூன்றையும் ஏற்று, உடற் பற்றை நீக்கி உயிரோடு ஒன்றித் தானவனாவன் என்பது கருத்து.

கூடும் என்பதை உடல் பொருள் இரண்டொடு மட்டும் கூட்டுக. குறிக்கொண்டு – பாதுகாப்பதன் பொருட்டுத் தான் ஏற்று என்க. மீண்டும் மலவாதனை தாக்கப் புசித்தவற்றையே

புசித்துப் பாழ்போகாத வண்ணம் கண்ணும் கருத்துமாய்க் காத்தருளி என உரைத்தலுமாம்.

நாடி – தேடி வந்து; என்றது மார்ச்சாரக நியாயத்தால் என்னை வலியத் தேடிவந்து; அடிவைத்து – திருவடி தீட்சை செய்து.

அருள் ஞான சத்தியால் உடலினிற் பற்றற நீங்கி – திருவருள் சுரந்து பூவினிற்கந்தம் பொருந்தியவாறு போல் சீவனுக்குள்ளே சிவமணமாகிய ஞானம் வரப் பண்ணி அதனாற்றலால் தேகாபிமானத்தைப் போக்கி, உடல் துன்பக் கொள்கலம் ஆதலின் 'பாடல் உடல்' என்றார். பாடு – துன்பம். அல்: தவிர்வழிவந்த சாரியை.

குளிக்கொண்டு – முழுகி. அதாவது ஆன்மாவொடு கலந்து என்க. கூடிய தான் அவனாம் – சீவனையும் தானாக்கி ஆள்வன். தான் – சிவம். அவன் – ஆன்மா. சிவம் உயிராவனெனினும் உயிரைத் தானாக்கி ஆள்வன் என மாற்றுக.

✦ஞானாவரண விளக்கத்து, கமலை வெள்ளியம் பலவாண சுவாமிகள் 'குறிக்கொண்டே' எனப் பாடங் கொண்டு, இது சாம்பவிதீக்கை கூறிற்று என்பர். (80)

**கொண்டா னடியேன் அடிமை குறிக்கொள்ளக்**
**கொண்டான் உயிர்பொருள் காயக்**
**குழாத்தினைக்**
**கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற்**
**கொண்டா னெனலொன்றுங் கூறுகி லேனே.**
**1784**

---

✦ ஞானாவரண விளக்கம் பக்கம் – 118.

இம் – எனின், என்னை இறைவன் ஆட்கொண்டான்; கொடுத்தவன் கொண்டதால் யான் ஒன்றும் கூறுகிலேன் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அடியேன் அடிமையிற் சிறிதும் பிழையா திருக்க், அடியேனை அடிமையாக ஏற்றுக் கொண்டான்; பின்பு என்னுடைய உடல் பொருளாவியாகிய மூன்றன் கூட்டத் தையும் ஏற்றான்; அடியேனுக்கு எல்லா வல்லமைகளையும் தந்தவன் கொண்டதால் யான் கொண்டான் என ஒன்றுங் கூறமாட்டாதவனாயினேன் என்றவாறு.

அடியேற்குத் தனு கரண புவன போகங்களைத் தந்த முதல்வனே அவற்றை என்னைப் பரிபாகமுறுத்துதற்காகக் கொண்டானாதலின் யான் ஒன்றும் சொல்ல மாட்டாதவனா யினேன் என்பது கருத்து. இதன் பயன் ஆனந்தாதீதம் கூறியதாம்.

இங்ஙனம் அன்றி, அடியேனை அடிமை கொண்டான்; கொண்ட அடிமையைக் குறிக்கொண்டு பாதுகாக்க என்னுயி ரையும் பொருளையும் கொண்டான்; அம்மட்டோடன்றித் தூலம், சூக்குமம், காரணமாகிய மூவகைச் சரீரக்கூட்டங் களையும் கொண்டான்; பல முழுதுந்தந்தவன் மீளவும் கொள் வானாயின் யான் செய்யக்கிடந்தது என்ன? அதனால் யான் ஒன்றும் சொல்லமாட்டாதவன் ஆயினேன் எனலுமாம்.

பலம் – வன்மை. நுகருமா நுகர்ந்து நுகரச் செய்யும் வன்மை என்பதாம். (81)

**குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி**
**நெறிக்கும் பிராணன் நிலைபெற்ற சீவன்**
**பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை**
**பிறக்க அறியாதார் பேயுடன் ஒப்பரே. 1785**

இம் – எனின், உயிர் உடலொடு கூடியதன் பயனை நுகர அறியாதார் பேயோடு ஒப்பர் எனல் நுதலிற்று.

இ–ள்: பிராணவாயுவினால் நிலைபெற்ற உயிர், குறிக்கின்ற உடலும் உயிருமாகக் கூடி நெறிப்பட்டு விளங்கும்; அச்சீவன், யமனால் பறிக்கப்படுகின்ற இவ்வுடலைப் பற்றி நிற்கும் நேரிய காரணத்தை விளங்க அறியமாட்டாதார் பேயொடொப்பர் என்றவாறு.

உயிர் இவ்வுடல் எடுத்ததன் நோக்கத்தை அறிய மாட்டாதார் பேயை ஒப்பர் என்பது கருத்து.

சீவன் கூடி நெறிக்கும் என முடிக்க. உயிருண்மை உயிர்ப்பால் உணரக் கிடக்கின்றமையின் 'பிராணன் நிலை பெற்ற சீவன்' என்றார். உயிர் உண்மையை உயிர் உடலொடு கூடிய காலத்து உயிர்ப்பாலன்றி அறியப்படாமையான் 'குறிக் கின்ற தேகமும்' என்றார். தேகம் – உடல். தேகி – உடலை இடமாகக் கொண்டு விளங்கும் உயிர்.

பறிக்கின்ற என்பதற்கு ஏற்ப யமனால் பறிக்கப்படு கின்ற என எழுவாய் வருவித்துச் செயப்பாட்டு வினையாக்கிப் பொருள் கொள்ளப்பட்டது. உயிர் காயத்தைப் பற்றிய நேர் மையை என்க. உயிர் உடல் எடுத்தது கடவுளை வணங்கி முத்தி யின்பம் பெறுதற் பொருட்டேயாம் என அறிதலே நேர்மையை அறிதலாம். பிறங்க என்பது எதுகை நோக்கிப் பிறக்க எனலா யிற்று; விளங்க என்பது பொருள்.

பேயும் தான் உடலெடுத்ததன் பயனை உணராது உண்டு கொழுத்துத் திரியும். அதுபோல இவர்களும் பிறவிப் பயனை அறியமாட்டாமையின் பேயொடு ஒப்பவராயினர்.

இதனால் பிராணவாயுவினால் உயிர் நிலை பெற்றுள்ளது என்று அறிகிறோம். அத்தகைய தேகத்தை யமன் கொண்டு போவதற்கு முன் உடல் எடுத்ததன் பயனை உணர்வாரே உயர்ந்தவர்களென மரபு கூறலின் இது சம்பிரதாயம் ஆயிற்று. (82)

**உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்**
**உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை**
**உணர்வுடை யார்கள் உணர்ந்தவக் காலம்**
**உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே.**
**1786**

இம் – எனின், ஞானிகளுக்கு உலகம் தோன்றும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஞானிகட்கு உலகம் தம்மின் வேறாக மாயேயமாகத் தோன்றும். அவர்கள் உலகமாகிய பாசத்துளழுந்தாது தாமரையிலையில் தண்ணீர் போல் நிற்றலின், அவர்களுக்கு உறுவதாய துன்பம் ஒன்றும் இல்லையாம்; இங்ஙனம் ஞானிகள் தம்மையுணர்ந்த அக்காலத்து அவர்கள் தலைவனையும் அறிந்து தரிசித்தவர்கள் ஆவர் என்றவாறு.

ஞானிகட்கு உலகம் நுகர்பொருளாகவும், மாயையின் காரியமாகவும் தோன்றும். அதனால் அவர்கள் அதில் ஈடுபட்டார்கள். அதனால் அவர்கட்குப் பேறு இழவுகளால் விளையும் துன்பமும் இல்லையாம். இங்ஙனம் தன்னை நுகரும் சித்தாகவும் உலக முதலியவற்றை நுகரப்படு பொருளாகவும், தலைவனை நுகர்ச் செய்பவனாகவும் கண்டு, பின் தலைவனொருவனே நுகரப்படும் பொருள் எனத் துணிந்து உணர்ந்தவர்கள் சிவதரிசனம் பெற்றோராவர் என்பது கருத்து.

உணர்வுடையார் – ஞானிகள். இம்மந்திரம் பின்னர் 2938–ஆம் பாடலாக ஒன்பதாம் தந்திரத்து மோன சமாதி யினும் வந்துள்ளது.

உணர்வுடையார்கள் உணர்ந்தவர் காலம் எனவும் பாடம். இப்பாடத்திற்குக் காலதத்துவத்தைக் கண்டவர்கள் எனப் பொருள்கொள்க. (83)

**காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்**
**சால விரிந்து குவிந்து சகலத்தில்**
**ஆயவவ் வாறா றடைந்து திரிந்தோர்க்குத்**
**தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே.**
1787

இம் – எனின், இறைவன் நமக்குச் செய்யும் உபகா ரத்தை வியத்தல் நுதலிற்று.

இ–ள்: உடற்பரப்பினுள் அலைந்து திரிந்தும், துரியா வஸ்தையில் மிகவிரிந்து பின் குவியப்பெற்றும், சகலாவஸ் தையில் முப்பத்தாறு தத்துவங்களையும் அடைந்து அலைந்த ஆன்மாக்களுக்குத் தூய்மையான பேரருளை வழங்கிய சிவகுருநாதனுக்கு யாம் புகழ்ந்து கூறுவது என்ன இருக்கிறது என்றவாறு.

உடலளவில் வியாபித்து நின்ற ஆன்மா உச்சிக்கு மேல் ஆறங்குலத்தும் வியாபித்து வியாபகத்தைப் பெற்று மீண்டும் குவிந்து தத்துவங்களைச் சார்ந்து அவற்றையே நுகர்ந்து திரிந்த அதற்குச் சிவம் குருவாக வந்து அருள் வழங்கியது என்பது கருத்து.

காயப்பரப்பு – சகலநிலையில் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையுள்ள உணர்ச்சி நரம்புகள் அனைத்தும், உணர்ந்து உயரும் நிலையில் மூலாதாரம் முதல் பிரமரந்திரம் வரையுள்ள ஆறாதார நிலையில் என்க. அலைந்து என்றார் பய னெதுவும் இன்றிப் பொறிப்பசி தணிக்கத் தேடி அலைதலான் என்க.

துரியத்து – பிரமரந்திரத்திற்கு மேலதாகிய துரியத் தானத்து. துரியத்தானம் உச்சிக்குமேல் ஆறங்குல உயரத்தில் உள்ளது. துரியாதீதம் – அதற்குமேல் ஆறு அங்குலத்தில், அதா வது உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ளது. ஆகவே, துரியம் வரையில் சென்று விரிந்தபின் தன்னிலை தாத்துவிகமான புவன போகங்களில் கடந்து உழல்வது அன்று; சிவத்தோடு ஒன்றி ஆனந்தமயமாயிருப்பது என்பதை உணர்ந்தபோது தன்னை இதுவரை பந்தித்திருந்த தத்துவங்கள் தன்னின் வேறானவையாக உணரப்படுதலின் 'ஆறாறு அடைந்து திரிந்தோர்க்குத் தூய அருள்தந்த நந்தி' எனப் பாராட்டினார்.

அருள் தருதலாவது சிவஞானம் வரப்பண்ணி ஆன் மாவை முத்திப்பேற்றிற்கு உரியனாக்குதல். (84)

**நானென நீயென வேறில்லை நண்ணுதல்**
**ஊனென வூனுயிர் என்ன வுடனின்று**
**வானென வானவர் நின்று மனிதர்கள்**
**தேனென இன்பந் திளைக்கின்ற வாறே.1788**

இம் – எனின், மனிதர்கள் இன்பம் திளைக்கு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நான் என்றும் நீ என்றும் நீ என்னை வந்தடைதல் என்றும் வேறு பிரித்துணரக்கூடிய நிலை இல்லையாம்; உடலும் உயிரும் என்று கூறத் தக்க நிலையில் உடனாக ஒன்றி நின்று வானையும் வானவரையும் போலநின்று மனிதர்கள் சிவமாகிய என்னைத் தேனைச்சுவைப்பது போல் சுவைத்துத் திளைப் பார்கள் என்றவாறு.

சிவகுருநாதன் சிவமாகிய நான் உயிரும் உடலும் போல ஒன்றி நிற்பேனாதலின் மனிதர்கள், தேவர்கள் சுவர்க் கத்தைத் துய்ப்பது போலவும், தேனைச் சுவைப்பது போலவும் திளைத்து இன்புறுவர் என அனுபவம் உபதேசித்தவாறு.

சிவம் ஆன்மாவில் கலந்து நின்று கண்கொளியும் அருக்கனும் போல் காட்டுதலின், நான் என நீ என வேறு இல்லை' என்றார். அங்ஙனம் கலந்து நிற்றலான் நண்ணுதல் என்பதும் இல்லையாம்.

கலப்பிற்கு உவமை அருளுகின்றார், உடலும் உயிரும் போல உடன் நின்று என்று, உயிர் உடலுடன் நிற்கும்போது உடலே தானென அபேதமாய் நிற்பதுபோல நின்று என்க.

வானையும் வானவரையும் போல வேறாய் நின்று என்க. வானவர் வானை நுகரும்போது இது வான்; யாம் நுகர் வோர் என வேறு நின்று நுகர்தல் போல என்னைத் தேனாக எண்ணி, தாம் சுவைப்போராக நின்றும் மக்கள் சுவைக்கின் றனர். அபேதஞானத்தால் அறிகின்றிலரென்று இரங்கி யருளிய

10 வாறும் ஆம். (85)

**அவனும் அவனும் அவனை யறியார்**
**அவேனை யறியில் அறிவானும் இல்லை**
**அவனும் அவனும் அவனை யறியில்**
**அவனும் அவனும் அவனிவ னாமே.** 1789

இம் – எனின், வேறற்ற நிலையில் விளையும் அனுபவத்திறம் அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: காண்பானும் காணப்படுபவனும் ஆன நிலையில் காணப்படுமவனை ஆய்வறிவானன்றி ஆழ்ந்த அனுபவத் தான் அறியார்; அங்ஙனம் அழுந்தி அறியலுறின் அனுபவமய மாதலன்றி, அறிபவனாகிய வினை முதல் இல்லையாம்; அறிவானும் அறியப்படுவானுமாக இருந்து அறியப்படு வானை அழுந்தி அறியலுறின் வேறான நிலைகெட்டு அறியப் படுவானே அறிவானாவன் என்றவாறு.

வேறானநிலைஅகன்று, அபேதஞானத்தானழுந்தி அறியலுறின் சிவம் ஆன்மாவைத் தான் தானாக்கிப் பேரின் பத்து அழுத்தம் என்பது கருத்து.

மலர் மணத்தை நுகர்கின்ற ஒருவன் இது இன்ன மணம் என வேறு நின்று நுகர்வதுபோலச் சிவத்தை அறிகின்றவன் முற்றிய ஆழ்ந்து அனுபவிக்கின்ற பேறு பெற்றவன் ஆகான் என்பது சம்பிரதாயமாக விளக்கியவாறு,

அதனையே மீட்டும் எதிர்மறை முகத்தான், அங்ஙனம் அழுந்தி வேறற்ற நிலையில் 'நானிவளம் பகுதிப் பொற்பு ஆரறிவார்' என்று அறியலுறின் அறிபவனாகிய ஆன்மா அறிவுமயமாய் விடுதலின் அறிவானும் இல்லை என்றதாம். முற்றிய அனுபவத்தில் அவனே தானேயாக அந்நெறி சித்திக்கும் என்பதாம். (86)

நானிது தானென நின்றவ னாடொறும்
ஊனிது தானுயிர் போலுணர் வானுளன்
வானிரு மாமுகில் போற்பொழி வானுளன்
நானிது வம்பர நாதனு மாமே. 1790

இம் – எனின், உடலை உயிர் தானென்று இருப்பது போல அடியேனைத் தான் எனக் கருதும் இறைவன் செய்யும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உடலாகிய இதனைத்தான் எனவே கருதும் உயிரைப்போல என்னைத்தானாகவே திருவுளம் பற்றி, எனக்கு மீட்டும் வாதனை தாக்காத வண்ணம் உள்ளங் கொள்பவ னாகிய சிவன் உளன்; அவன் வானத்துப் பரவும் பெரிய மேகம் போலக் கருணையைப் பொழிவானாக உளன்; அதனால் நான் அழகிய பரசிவமாம் பேற்றையும் எய்துவேன் என்றவாறு.

என்னைத்தானாக எண்ணி அருள்மழை பொழிவன் சிவன்; அதனால் யான் பரசிவமாம் பெரும் பேற்றினை எய்துவேன் என்பது கருத்து.

உயிர் உடலொடு பொருந்தி வாழ்கின்ற காலத்து, இந்த உடலை வினைப்போகங்களை நுகர இறைவன் உதவிய கருவியாகக் கருதாது, உடலே தான் என மயங்கி இருக்கும் என்பார். ‘ஊன் இது தான் உயிர் போல்’ என்றார்.

சிவன் ஆன்மாக்கள் மீது கொண்ட பெருங் கருணை யால் என்னைத் தானாகவே எண்ணி என்னுள் நிற்பன் என்பார். ‘நான் (இது) தானென நின்றவன்’, என்றார். இது என்பது வாளா பெயராய் நின்றது.

நின்றவன் என்பதனை நின்றிவன் எனப் பாடம் ஓதுவாருமுளர். அதில் பொருளியைபின்மை காண்க.

வான் இரு மா முகில் போல் – வானில் வழங்கும் பெரிய கரிய மேகம் போல, முகில் உறவு பகை எனப் பாராது எங்கும் யார்க்கும் பயன் கருதாது பெய்வது போலச் சிவமும் போற்றுவார் தூற்றுவார் அனைவர்கட்கும் எங்கும் கருணையை மழைபோலப் பெய்தலின் 'முகில்போல் பொழிவான் உளன்' என்றார்.

அங்ஙனம் என்னைத் தானாக்கி எல்லையில் கருணை வழங்கியமையான் யான் அம்பர நாதனாகிய சிவமானேன் என்பார் சிவமாதற்கு உரிய சுதந்திரம் ஆன்மாவுக்கு என்றும் இன்மையின் அம்பரநாதனும் நான் ஆம் என இயைய வைத்துப் பரசிவமும் நான் ஆம் என்றார் என்க. இங்ஙனம் கூறாவிடின் நான் ஆம் எனச் செய்யுமென் முற்று தன்மையோடு பொருந்தாமையும் ஓர்க.

அம்பரம் – ஆகாசம்; ஈண்டுச் சிதாகாசம். அம்பர நாதன் – சிதாகாயநாதனாகிய சிதம்பரநாதன். (87)

**பெருந்தன்மை தானென யானென வேறாய்**
**இருந்தது மில்லைய தீசன் அறியும்**
**பொருந்தும் உடலுயிர் போலுமை மெய்யே**
**திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே.**

**1791**

இம் – எனின், உய்யக் கொண்டருள்கின்ற உயிர்க ளிடத்து இறைவன் வேறான நிலையில் இருப்பதில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அடியடைய விரும்புகின்ற உம்மை உண்மை யாகத் திருத்துகின்ற தேவதேவனாகிய சிவபெருமான், தம்மு டைய அளவிடற்கரிய பெருந்தன்மையால் தானெனவும் உயி ராகிய யான் எனவும் வேறுபட்டு இருந்ததும் இல்லை; அங்ஙனம் அவனும் நானும் ஒன்றாயிருந்த நிலையை ஈசன் அறிவான் என்றவாறு.

என்றும் இறைவனும் அடியேனும் வேறுபட்டிருந்தது இல்லை; உடலும் உயிரும் போலக் கலந்துதான் இருந்தோம் என்பது கருத்து.

இதனால் பயன், அநுபவஞானி வேறாக எண்ணுதல் சம்பிரதாயம் அன்று என உறுதி உரைத்தவாறாம் என்க.

பொருந்தும் உடல் உயிர் – உடல்பொருந்தும் உயிர் என மாறுக. உயிர் உடலொடு பொருந்தி உடலே தானாக இருப்பதுபோல என்பதாம்.

இவை சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய உயிர்; யாம் முற்றறிவும் முற்றுத் தொழிலும் உடைய பரம்பொருள்; யாம் இவருடன் கலப்பது யாங்ஙனம் எனத் திருவுளம் பற்றாது என்பார் பெருந்தன்மையால் தான் என யான் என இருந்ததும் இல்லை என்றார். அது ஈசன் அறியும் என்றதுஅநாதி சுதந்திர னாகிய அரனே அதனை அறிவன்; அரன் கருணையை அறிந்து கொள்ளும் ஆற்றல் என்றும் பரதந்திரனாகிய அடியேற்கு இல்லை என்பதாம்.

உம்மை மெய்யே திருந்தச் செய்கின்ற தேவர் பிரா னென்றது இறைவன் கருணை மிகுதியே காட்டுவது. பிரான் இருந்ததும் இல்லை; அதனை ஈசன் அறிவன் என இயைத்துப் பொருள் கொள்க. (88)

# 9. திருவருள்வைப்பு

சம்பிரதாயவழி நின்று தெளிந்த ஆன்மாவிற்குச் சிவம் திருவருள் பாலித்தலை உணர்த்துவது. பரிபாகமுற்ற ஆன்மா வினிடமாக அருள் விளங்கச் செய்தலே திருவருள் வைப்பாம். முன்னர்ச் சம்பிரதாயத்துத் தீக்கை முறைகளையும், ஆசாரியன் சீடனைச் சிவமாக்கி ஆட்கொள்ளும் மரபினையும், விதிமுறை நின்ற மாணவர்க்கு விளையும் அனுபவங்களையும் உணர்த்திய ஆசிரியர், இவ்வதிகாரத்துத் திருவருள் பாலித்தலை உணர்த்து கின்றாராதலின் சம்பிரதாயத்தின் பின் வைக்கப்பெற்றது.

**இருபத மாவ திரவும் பகலும்**
**உருவது வாவ துயிரும் உடலும் –**
**அருளது வாவ தறமுந் தவமும்**
**பொருளது வுள்நின்ற போகம தாமே.** 1792

இம் – எனின், அருளினிலக்கணம் உணர்த்துதல் நுத லிற்று.

இ–ள்: உயிர்கட்குரிய இருநிலைகளாவன இரவாகிய அஞ்ஞான நிலையும் ஒளியாகிய ஞான நிலையுமாம்; உருவா வது உயிரும் உடலும் கூடிய நிலையேயாம்; அருளாவது அறமும், தவமும் ஆம்; பொருளாவது உயிர் உணரும் ஆனந் தானுபவமேயாம் என்றவாறு.

இம்மந்திரம் திருவருளென்பது சிவாகமங்களில் விதித்தவண்ணம் ஒழுகும் அறமும், அதன் முதிர்வால் விளையும் தவமுமேயாம்; இவ்விரண்டாலும் விளையும் சிவானந்தமே உறுதிப்பொருள் ஆம் என அருளையும் அதன் பயனையும் உணர்த்தியவாறு.

பதம் – நிலை. உயிர்கள் மலமாயை கன்மங்களோடு கூடி, அவையே தானாய் இருள்மலத்துள் அழுந்தி நிற்கின்ற நிலை இருள் நிலையாகிய இரவு என்றதாம். பகல் – ஒளி, இறைவன் அருளால் அறியாமையின் நீங்கிச் சிவத்தைப் பொருந்தும் தீவிர பக்தி முதிர்ந்து, அதற்குரிய தியானம் யோகம் இவற்றில் ஈடுபடும் நிலை பகலாம் என்க.

ஆன்மாக்கள் உருவுகோடலாவது உடலொடு கூடி உயிர் நல்வினை தீவினைகளைப் புரிதற்குரிய வினைக்கு ஈடான ஓர் உருவைக் கொள்ளுதலாம். இந்த உடலையடுத்து உடல் எடுத்ததன் பயன் அறமும் தவமுமாய அருளை இறைவன் வைக்கத் தான் பரிபாகமுறுதலே என்று உணர்ந்து ஒழுகிய போது இறைவன் திருவருள் வைப்பன்; அதனால் சிவபோக மாகிய செம்பொருள் அனுபவம் சேரும் படிமுறையான் திருவருள் வைப்பினைத் தெரிவித்தருளுகின்றார்.

பொருள் போகமாம் என்றது காரணத்திற்கும் காரியத் திற்கும் உள்ள ஒற்றுமை நயம் பற்றி அருளியவாறாம் என்க.

(89)

**காண்டற் கரியன் கருத்திலன் நந்தியுந்**
**தீண்டற்குஞ் சார்தற்குஞ் சேயனாத் தோன்றிடும்**
**வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்சம்**
**ஈண்டுக் கிடந்தங் கிருளறு மாமே. 1793**

இம் – எனின், இறைவனது அருமையையும் எய்து தற்கு எளிமையையும், அதற்கு உரிய உபாயத்தையும் உணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: பரசிவம் பரிபாக முதிர்ச்சியில்லாதாரால் அறிதற்கரியதாகும்; அவர்கள் கருத்திலும் விளங்காது; அவர்

களால் தீண்டற்கும் அணுகுதற்கும் செய்மையதாகத் தோன்றும்; அதனையே எமக்கு வெளிப்பட்டருளுதல் வேண்டும் என வேண்டி, புறச் செயலற்றுக் கிடக்க நெஞ்சத்துள் விளக்கொளி போலச் சுடர்விட்டுத் தோன்றும்; அது அங்ஙனம் சோதியாய்த் தோன்றுதலான் அந்நெஞ்சத்துச் செறிந்திருந்த இருளாகிய அஞ்ஞானம் நீங்கும் என்றவாறு.

அரியதாகிய சிவம் எளிதாய் மனத்துள் ஒளிவிடச் சிவத்தையே வேண்டுக; வேண்டின், அது நினைப்பவர் நெஞ்சுள்ளே புக்கு நின்று அஞ்ஞானத்தைப் போக்கும் என்பது கருத்து.

காண்டல் – அறிதல், மாயேயமான அந்தக் கரணங்களாலும், பொறிகளாலும் சிவனைக் காணவியலாது ஆகலின் 'காண்டற்கு அரியவன்' என்றார். 'உணர்ந்தார்க்கு உணர்வரியோன்' என்றமை காண்க.

கருத்திலன் – கருவிகளால் காண்டற்கரியனாயின் கருத்தில் அறிவில்அறிவுருவாக அமைவனோ எனின் திருவருள் கலப்பிற்கு இலக்காக உயிர்கள் ஏகதேச ஞானம் உடையன ஆதலால், கண்ட காட்சியையே பெருக்கியும் சுருக்கியும் கற்பித்துக் காண்பன அன்றி, உண்மைக் காட்சியை உறாதன ஆகலின் அவர்கள் கருத்திலும் அறிவுருவாக அமையான் என்பார் 'கருத்திலன்' என்றார். கருத்திலும் இலன் என விரிக்க.

இங்ஙனம் காண்டற்கும் கருதுதற்கும் அரியனாகவே அவனைத் தீண்டுதலும் அடைதலும் எங்கே? இயலவே இயலாது என்பார் 'சேயனாத் தோன்றிடும்' என்றார்.

தோன்றிடும் என்ற இலேசான், முயன்று திருவருள் வைப்பினைப் பெற்றால் எளிதாவன் என்ற பொருளும்

தோன்றுதலால் மேலே அதற்குரிய உபாயமாக 'வேண்டிக் கிடக்க' என்கின்றார்.

நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே எனத் தன் முனைப்புஅடங்கித் திருவருளை நாடிச் செயலற்றுக் கிடக்கச் சிவம் நல்லக விளக்காய் நெஞ்சுள் தோன்றி, அறியாமை அறிவுஅகற்றி அருள்வன் என்பார் 'இருளறும் ஆமே' என்றார். (90)

**குறிப்பினின உள்ளே குவலயந் தோன்றும்**
**வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்குஞ்**
**செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடில்**
**அறிப்புறு காட்சி அமரு மாமே. 1794**

இம் – எனின், தத்துவரூப, தத்துவதரிசன, தத்துவ சுத்திகளையும், சிவரூப, சிவதரிசன, சிவயோக, சிவபோகங் களையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நின்னைக் குறித்து ஆராயின், நின்னுள்ளே எல்லா உலகங்களும் காணப்படும்; வெறுக்கத்தக்க ஆணவ இருளால் விளையும் அறியாமை நீங்கின், உயிருக்கு உயிராய்ப் பரசிவம் கலந்திருத்தல் காணப்பெறும்; பரசிவத்திடத்தில் செறிந்த சிந்தையை ஆராயின், ஞானமே உருவான காட்சி உண்டாம்; அதனால் என்றும் சாவா மூவாப் பெருவாழ்வாகிய வீடுபேறு உண்டாம் என்றவாறு.

'நானார் என் உள்ளமார் ஞானங்களார்' என்று முதற்கண் ஆராயத் தொடங்கின், தத்துவங்களும் தத்துவ சுத்தியும் சிவதரிசனமும் சிவயோக சிவபோகங்களும் உடன் உண்டாம் என்பது கருத்து.

குறிப்பினின் என்பதற்கு நின்னைப்பற்றி நீயே ஆராயின் எனச் செயப்படு பொருளும், வினைமுதலும் வருவிக்க. இது ஆத்மரூப ஆத்மதரிசனம் கூறியதாம்.

குவலயம் – உலகம். மாயா காரியமான தத்துவங்கள் என்றவாறு. காரியமாய உலகம் அதன் காரணமான தத்துவங் களைக் காட்டி நின்றது. இது தத்துவரூபம், உலகம் அதனைக் காண்டலாகிய தத்துவதரிசனம், அதனை உள்ள வண்ணம் அறிந்தவழி உளதாய தத்துவசுத்தி அனைத்தும் கூறியது.

இருள் அறியாமையும் அதன் காரணமான ஆணவமும், காரிய காரண ஒற்றுமைபற்றி ஆணவ இருள் எனலுமாம். 'ஆணவ வல்லிருளைச் சுட்டு' என்பதும் காண்க. இது ஆன்ம சிற்சத்தியை மறைத்து நிற்பதால் வெறுக்கப்படுவது ஆகலின் 'வெறுப்பு இருள்' என்றார். நீங்கில் என்பதால் தத்துவ சுத்தி அறிவிக்கப்பட்டதாம்.

விகிர்தன் – சாமர்த்தியம் உடையவன்; விளக்கம் உடையவன் எனலுமாம். விகிர்தன் நிற்கும் என்றார் சிவம் என்றும் ஆன்மாவை விட்டுப் பிரியாது உடனாய் ஒன்றாய் நிற்பது ஆகலின், நிற்கும் என்றது படலம். நீங்கிய வழி கண்ணொளி வெளிப்படுதல்போலத் தடை நீங்கிய வழி தலைவன் மணிக்கண் ஒளிபோல விளங்கித் தோன்றுவன் என்பது உணர்த்த. இது சிவரூபமும் சிவதரிசனமும் கூறியது.

செறிப்பு – இடைவிடாதுறையுந்தன்மை. செறிப்பு உறு சிந்தை – இடைவிடாது சிவன்பால் உறையும் சிந்தை.

சிக்கென நாடில் – இறுகப் பற்றி ஆராய்ந்தால்; அதாவது, ஆய்வுக் காலத்துப் பொறிகளின் வாதனையாலும் ஆணவ வாதனையாலும் சிவசிந்தனையைக் கைவிட நேரும் அன்றே; அங்ஙனம் நழுவி விடாதபடி இறுகப் பற்றி ஆராயின். இது சிவயோகம் கூறியது:

அறிப்பு – அறிதல். அறிப்புறு காட்சி – ஞானக்காட்சி; என்றது சிவபோகத்தை. அதன் விளைவு சாவாமையும் மூவாமையும் சேர்ந்த சத்தாயிருக்கும் தன்மை விளையும் என்பதாம். இது சிவபோகம் கூறியது.

இங்ஙனம் திருவருட் சார்பால் விளையும் தசகாரிய அனுபவம் தெரிவிக்கப்பட்டது. (91)

**தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்**
**பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞகன் எம்மிறை**
**ஆர்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்**
**சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே.1795**

இம் – எனின், கழிந்தற்கு இரங்கலும், சிவத்தை அறிதற்கு உபாயமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வாழ்நாட்கள் பல, இதுவே முழுமுதல் எனத் தெளிந்து சிவத்தை அறியமாட்டாமையான் பயனின்றிக் கழிந்தன; கழிந்ததற்கு இரங்கவேண்டா. மீளவும் பிஞ்ஞகனாகிய எம்மிறை அறியப்படுமவனே; ஆதலால், அவனருளிய ஞானமே துணையாம் என்று உறுதிகொண்டு அவனை நிறைய எண்ணி அறிவார்கள் ஞானிகள்; அவர்கள் காட்டிய நெறியிலே சார்ந்து அறிபவனே பெருந்தன்மை வல்லவனாவன் என்றவாறு.

காலங்கள் கொன்னே கழிந்தன; சிவன் மீட்டும் அறியப்படான் அல்லன்; ஞானிகள் ஞானத்தையே சாதனமாகக் கொண்டு அவனைத் தியானித்து அறிவர்; அங்ஙனம் சார்ந்து அறியவல்லவனே பெருந்தன்மை வல்லானாவன் என்பது கருத்து.

தேர்ந்து – தெளிந்து. சிவாகம வசனங்களானும்; ஆன்றோர் ஆசாரத்தானும், குரு உபதேசத்தானும் சிவமே பரம் எனத் தெளிந்து என்க. இம்மைப்பயன்களையும், காமியப் பயன்களையும் கருதி ஆணவத்தின் காரியமாய அறியாமை யான் இவர் தேவர் அவர்தேவர் எனவும், இது இன்பம் அது இன்பமெனவும் அலைந்து பல ஆண்டுகள் ஏன் பல பிறப்புக் கள் கொன்னே கழிந்தன என்பார் 'காலங்கள் சென்றன' என்றார்.

பிஞ்ஞும் – மயிற்பீலி. பிஞ்ஞுகன் – மயிற்பீலி அணிந் தவன். அர்ச்சுனனுக்குள்ள அறியாமை அகற்ற மயிற்பீலியை அணிந்த கிராதனாய் வந்து, அவனைத் தெளித்துப் பாசுபதம் ஈந்த பெருமான் எமக்கு இறைவனாயும் விளங்குகின்றான் என்பார் 'பிஞ்ஞுகன் எம் இறை' என்றார்.

அங்ஙனமாய இறையை ஆர்ந்து என்க. ஆர்ந்து – பொருந்தி. அறிவே துணையாம் என ஆர்ந்து அறிவார் என்க. ''ஞானத்தால்அறிவார்கள் ஞானிகள்'' என்ற குறுந்தொகை அனுபூதியும் காண்க. அங்ஙனம் சார்ந்து அறிபவனே பெரியான் என்றவாறு.

இதுவும் இறைவன் அருளிய ஞானமே துணையாக அவனை அறிக என்கின்றமையின் திருவருள் வைப்பு ஆயின வாறு காண்க. (92)

**தானே யறியும் வினைகள் அழிந்தபின்**
**நானே யறிகிலன் நந்தி யறியுங்கொல்**
**ஊனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்**
**தேனே யனையனந் தேவர் பிரானே.** 1796

இம் – எனின், வினையழிவின் பின்னர் விளைவதை யான் அறியேன்; ஞானத்தைப் பெற்றபின் சிவானுபவம் இருந்தபடி இதுவாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: என்னுடைய வினைகள் துவரக்கெட்ட, பிறகு நிகழும் அநுபவத்திறங்களைத் தானாக அறியும் நானே அறியும் ஆற்றலிலாதேன் ஆவேன்; என்னையாட் கொண்ட சிவகுரு நாதன் மட்டுமே அறிவர்; ஊன் உருகி உணர்வு வடிவான இறைவனை அறிந்தபின்பு தேவதேவனாகிய சிவபிரான் தேனை ஒத்த இனியனாக நுகர்ச்சிக்குரியவனாவன் என்றவாறு.

வினைகள் கழன்றபின், இறைவன் தேனை ஒத்து இனிப்பவனாக அனுபவத்திற்கு எளிதாவன் என்பது கருத்து.

வினைகள் இறைவன் கருணை நோக்கானும், உயிர்கள் நுகர்ந்து ஒழித்தமையானும் கெட்டபின் சிவபரம் பொருள், இவன் ஒரு வினைக்கேடன்; ஆட்கொள்ளத் தக்கவன்; தூயன் எனத் திருவுளங் கொள்ளும் என்பது வினைகள் அழிந்தபின் தானே அறியும் என்பதால் உணர்த்தப் பெற்றது. தான் என்றது சிவத்தை.

சிறையிலகப்பட்ட புள் பறக்க இயலாமைபோலப் பாச பந்தத்துள் சிக்கிய யான் வினையினின்று விடுபட்டமையும், வினை கெட்டமையையுங் கூட அறியும் ஆற்றலிலேன் என்பதாம். நந்தி – சிவம் தலைவனே அறிவன் என்பதாம். கொல்; அசைநிலை.

ஊன் – உடல்; ஆகுபெயர். ஊன் உருகி – ஊன் கெட்டு; என்றது உயிரை வினைக்கு ஈடாகப்போகங்களில் அழுந்திப் பந்தித்து நிற்பதாகிய உடல், ஞான சாதனமாய்ப் பதி

புண்ணியங்களைச் செய்தற்கு உறுதுணையாதல், ''ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து'' என்ற மணிவாசகமும் தெளிக. உணர்வு–உண்மை ஞானம். உணர்வை உணர்ந்தபின் – ஞான வடிவான இறையை உள்ளவாறு உணர்ந்தபின்.

நம் தேவர் பிரான் என்றது இறைவற்கும் ஆன்மாக் களுக்கும் உள்ள அநாதி நித்தியமான சம்பந்தம் தோன்றக் கூறியதாம்.

தேன் நெஞ்சிற்கு உரம் ஊட்டுவது; உண்ண இனியது. மிக உண்ணின் மலம் போக்கித் தூய்மை உறுத்துவது. அதுபோல, இறைவன் உயிர்களை மலவாதனை அகற்றிப் பேரின்பம் விளைத்தலான் 'தேனே அனையன்' என்றதாம். ''கரும்பைத் தேனைப் பாலைக் கட்டியை ஒத்திருப்பன்'' என்ற சித்தித் திருவிருத்தப் பகுதியையுங் காண்க. (93)

**யானறிந் தன்றே யிருக்கின்ற றீசனை**
**வானறிந் தாரறி யாது மயங்கினர்**
**ஊனறிந் துள்ளே யுயிர்க்கின்ற ஒண்சுடர்**
**தானறி யான்பின்னை யாரறி வாரே.** 1797

இம் – எனின், உடலில் ஈசன் உறைவதை உணர்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அடியேன் ஈசனை அறிந்திருக்கின்றேன்; தேவர்கள் அவனையறியாது மயங்கினர்; தன் உடம்பினுள் தெரிந்து உயிராய் விளங்குகின்ற ஒளியானவனைத் தான் அறியான்; பின்னை ஈசனை அறிவார் யார் எ–று.

உடம்பில் உறையும் ஈசனை அறியார் உலகவர்; பின்னை அவனை அறிவார் யார்? என்பது கருத்து.

ஈசன் – அனைத்தையும் தம் உடைமையாகக் கொண்டவன். யான் ஈசனை அறிந்தன்றே இருக்கின்றது எனக் கூட்டிப் பொருள்கொள்க. யான் இருக்கின்றது என முடியாதாயினும், யான் ஈசனை அறிந்தல்லவா இருப்பது என ஒருவகை வழக்காறான தொடர்மொழியாகக் கொள்க.

வான் – சுவர்க்கம். அறிந்தார் – அங்குள்ள போகங்களை நுகர்ந்தார். தேவர்கள் என்றபடி. தேவர்கள் பொன்னுலகமும் போகமுமே பெரிதெனத் தெரிந்து பொறி விருந்தே நுகர்பவர்கள் ஆதலின், அவர்கள் இறைவனுடைய உண்மை இயல்புகளை அறியாமல் மயங்குவாராயினர் என்க.

ஊன் – உடல்; ஆகுபெயர். தான் – ஆன்மாவாகிய தான். உடலைச்சாதனமாக எண்ணி உடலினுள் உயிர்ப்பாய் உறைகின்ற சுடர்வடிவான செம்பொருளை அறியான் என்றவாறு.

உயிருக்குயிராய் உணர்வாய் உள்ள பொருளே சிவம் என அறியார் மக்கள்; இவ்வுண்மை அறிவார் வேறு யார் தாம் உளர் என்பதாம். (94)

**அருளெங்கு மான அளவை யறியார்**
**அருளை நுகரமு தானதுந் தேரார்**
**அருளைங் கருமத் ததிசூக்க முன்னார்**
**அருளெங்குங் கண்ணான தாரறி வாரே.1798**

இம் – எனின், திருவருளின் இயல்பை வியந்து உரைத்தல் நுதலிற்று.

இ–ள்: அருள் எங்கும் பரந்துள்ள அதனளவை அறியார்; திருவருளை முழுதும் நுகர, அது அமுதம் போல இனிமை தருவதையும் சிந்தித்துத் தெளியார்; அருள் இயற்றும் அதிசூக்குமமான பஞ்சகிருத்தியங்களையும் அறியார்; அருள் எங்குங்கண்ணாக இருந்து அனைத்தையும் ஒரு சேரக் காண்டலையும் உணரார் என்றவாறு.

இங்ஙனம் திருவருளினியல்பு எவராலும் உணர முடியாத எல்லையும் பரப்பும் ஆற்றலும் நுட்பமும் உடையது என்பது கருத்து.

எங்குமான அளவை – சுத்த மாயா புவனம் முதல் பிரகிருதி மாயாபுவனம் முடிய எங்கும் வியாபகமாய் எல்லாம் தன்னுள் விளங்க இருக்கும் அளவு. அருள் இங்ஙனம் இருத்தலை யாரும் அறியார் என்பது.

திருவருள் நுகரும் பரிபாகச் சிவபுண்ணிய சீலர்க்கு அமுதுபோல இனிமையும் நீண்டநாள் இறவாமையும் உடையதாய், பேரின்பம் அளித்தலையும் உலகவர் உணரார்; என்றது அருளையும் அவனருளே கண்ணாகக் கண்டு காட்டினால் அல்லாது ஆன்மாக்கள் நுகரும் ஆற்றலில்லாதன என்றதாம். தேர்தல் – தெளிதல்.

இறைவன் பஞ்சகிருத்தியம் புரிவதும் அருளின் விளைவாகிய அதிசூக்கும் ஐந்தொழிலால் என்பதையும் அறியார் என்பதாம்.

அருள் எங்கும் கண்ணாய் யாவற்றையும் விளக்கும் உபகாரம் புரிதலையும் எவரும் உணரார் என அருளினருமையும் ஆற்றலும் உணர்த்தியவாறு. (95)

அறிவில் அணுக அறிவது நல்கிப்
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்
டறிவது வாக்கி அடியருள் நல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயி னாரே. 1799

இம் – எனின், ஞானம் பெற்று அடியாருள் வைகும் செறிவு பெறுதல் சிவமாதற்கு உபாயமாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஞானசொரூபமான சிவத்தினிடம் அணுகுதற்கு ஏற்ற சிவஞானத்தை உதவி இந்திரியங்களின் வழியே விருப்பை விளைவித்து, வினைகளைக் கழித்துத் தூயதாக்கித் தான் கலந்து, ஞானவடிவாக ஆக்கி, அடியார் கூட்டத்து ளிருந்து பிறர்க்கும் உபகாரப்படும் நீக்கமற நிறைந்த திரு வருளைப் பெற்றவர்கள் சிவமே ஆனார் என்றவாறு.

பாச ஞானத்தை விட்டுப் பதிஞானத்தைப் பெற்று, அடியார் கூட்டத்திலிருந்து உபகாரப்படும் திருவருளில் செறிந் தவர்கள் சிவமே ஆவர் என்பது கருத்து.

அறிவில் – ஞான உருவான சிவத்தினிடத்து, பதிஞானத்தை அணுகுதற்கு உரிய பரிபாகம் பெற்ற சிவஞானத்தை உதவி என்க. இதனால் ஆன்ம ஞானத்தைச் சிவஞானமாக்கிய வண்ணம் உரைக்கப்பெற்றது.

பிராரத்தகன்ம சேடம் உள்ள வரையில் மல வன்மை வாடாதாகலானும், மலவன்மை குன்றாத வழி ஆன்மா தூயதாய்ச் சிவத்தோடு கலவாதாகலானும், பிராரத்தத்தை ஒழிக்கவேண்டிப் பொறிகளைத் தத்தம் புலன்களிலழுந்தி அனுபவிக்கச் செய்யவேண்டியது இறையருளின் கடமையான மையின் 'அருள் பொறிவழி ஆசை புகுத்தி' எனப்பட்டது.

புணர்ந்திட்டு – ஆன்ம அறிவோடு அருள் கலந்து. அஃதாவது, இதுவரை தற்போத முனைப்பால் ஆன்மாவின் வினைகளாயினவற்றை அருட்கலப்பினாலே பதிகன்மங் களாகச் செய்து, ஆகாமிய சஞ்சிதங்கள் மிகா வண்ணம் புரிந்து என்பதாம்.

அறிவது ஆக்கி – சிவஞானமே ஆன்மாவின் சொருப மாம் வண்ணம் செய்து, அடியருள் நல்கும் – அடியாருள் ஒருவனாக இருத்திப் பிறர்க்கும் பயன்படும் என ஏற்பன வருவிக்க.

செறிவு: இடமும் காலமும் இடையீடின்றி நெருங்கி யிருத்தல் என்னும் பொருளைத்தரும் தொழிற்பெயர்; ஆகு பெயராய், அங்ஙனம் இடையீடின்றி ஆன்மாக்களைப் பொருந் தியிருக்கும் அருளை உணர்த்திற்று; ''செறிந்த பொருடானே சிவம்'' என்றமையுங் கொண்டு தெளிக. ஆகவே சிவத்திரு வருளோடு நின்றார் சிவம் ஆயினார் என்க.

நல்கி, புகுத்தி, புணர்ந்திட்டு, ஆக்கி, நல்கும் செறிவு என இயைக்க. திருவருளோடு செறிந்து நின்றார் சிவமாயி னார் என்றமையின் இது திருவருள் வைப்பு ஆயிற்று. (96)

**அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்**
**டருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்**
**டருளான ஆனந்தத் தாரமு தூட்டி**
**அருளால் என்நந்தி யகம்புகுந் தானே. 1800**

இம் – எனின், பரசிவம் பஞ்சகிருத்தியம் புரிவதும் அருளாலே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அருளினால் தோன்றி வளர்ந்து, அழிந்து இளைப்பாறி, மறைந்து, ஆனந்தத்தால் நிறைந்த அமுதூட்டி, என் குருநாதனாகிய சிவம் என் உள்ளத்து எழுந்தருளினான் என்றவாறு.

சிவம் திருவருளால் பஞ்சகிருத்தியங்களைப் பண்ணி, தூய்மையுறுத்தி என் உயிரிடங்கொண்டான் என்பது கருத்து.

முதிர்ந்து கனிந்த பிராரத்த வினைகளை உயிர்கள் நுகர்வதற்காக இறைவன் உயிர்களுக்குப் பிறவியை உதவுகின்றானாதலின் 'அருளில் பிறந்திட்டு' என்றார். வினைப் போகங்களைத் துய்த்தற்கேற்ப தேக, இந்திரிய கரணங்களை வளர்த்தமையின் 'அருளில் வளர்ந்திட்டு' என்றார்.

அழித்தல் என்பது ஓயாது பிறந்து இறந்து உழலுகின்ற உயிர்களை இளைப்பாற்றுதலே ஆதலின் 'அருளின் அழிந்திளைப்பாறி' என்றார்.

வினைகளை அழுந்தி அனுபவித்ததற்காகவும், வருவினைகளைக் கண்டு அயராமைப் பொருட்டும் திரோதான சத்தியால் இறைவன் மறைக்க, உயிர்கள் மறைகின்றன ஆதலின் 'மறைந்திட்டு' என்றார்.

அநுக்கிரகம் என்பது அமுதுண்டல் போல இனிமையும் களிப்பும் மிகுவித்தலின் 'அருளான ஆனந்தத்து ஆரமுதூட்டி' என்றார்.

அனுக்கிரகத்தை மட்டும் இறைவனது வினையாக 'ஆரமுதூட்டி' என்றலின் பிறந்திட்டு, வளர்ந்திட்டு, அழிந்திளைப்பாறி, மறைந்திட்டு என்பனவும் இறைவன் வினை

யாகவே திரித்துப் பொருள் கொள்ளவேண்டியிருத்தல் காண்க. ஆன்மாக்கள் என்றும் சுதந்திரமில்லாதனவாகலானும் ஆற்று வழி என்றும் மிதவை போல ஆணைவழி நடப்பன வாதலானும் திரித்துக் கோடலே முறை என்க.

''மனத்தினில் மன்னிய மன்னே'' ''என் உளம் புகுந்து ஆண்டுகொண்ட'' என்பன போலச் சிவம் மனத்திற் புகுந்து உயிருடன் ஒன்றிய திறம் ஓதப் பட்டது. இதனால் திருவும் திருவருள் வைப்பாயினமை காண்க. (97)

**அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி**
**அருளால் அடிபுனைந் தார்வமுந் தந்திட்**
**டருளான ஆனந்தத் தாரமு தூட்டி**
**அருளால் என்நந்தி யகம்புகுந் தானே. 1801**

இம் – எனின், அருளைத்தந்து ஆட்கொள்ளுந்திறம் அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: என்னுடைய குருநாதன் கைம்மாறு வேண்டாத கருணையால், அமுதமயமான பேரின்பக் கடலில் முழுகச் செய்து, திருவடி தலைமேற்கூட்டி, என்றும் மாறாத இன்ப அன்பையுந்தந்து, சிவானந்தத்தால் விளையும் சிவபோக மாகிய அமுதையும் உண்ணச் செய்து, என் மனத்து என்றும் நீங்காது எழுந்தருளினன் என்றவாறு.

பரசிவம் அடியேன்மீது வைத்த கருணையினால் பேரின்ப வாரிதியில் திளைக்கச் செய்து, திருவடி சூட்டி, ஆராத அன்பையும் உதவி, சிவானந்தத்திருந்து சிவபோகத்தைத் துய்க்கச் செய்தது; குருநாதனாகக் காட்சி வழங்கியது என்பது கருத்து. ஏனை வெளிப்படை. (98)

பாசத்தி லிட்ட தருளந்தப் பாசத்தின்
நேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்
கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலையரு ளாமே. 1802

இம் – எனின், எனக்கு அளித்த சகல கேவல சுத்த நிலைகள் அனைத்துமே அருளினாலாயது என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: என்னைப் பாசத்தில் இட்டு அதனை அழுந்தி அனுபவிக்கச் செய்ததும் திருவருள்; அடியேன் அதில் அழுந்தி, நான் வேறு பாசம் வேறு என்றிராமல் பாசமே யானாய போது அதன்கண் விளையும் பற்றை விடச் செய்ததும் திருவருள்; பாசத்தில் பற்றற்றவுடன் பற்றப்படுவதாய பற்றற்றான் பற்றினைப் பற்றிய பற்றினால் பெருமைதரும் முத்தி யளித்ததும் அருள். அந்த முத்திக்கண் வைத்த புணர்ப்பால் விளைந்த பற்றினால் காண்பானும் காட்சியும் காணப்படு பொருளும் ஆகிய வேறுபாடாற்ற நிலையும் அருளால் விளையும் என்றவாறு.

பிறவியில் சேர்ந்ததும், பாசத்தை அகற்றியதும், ஈசன்பால் நேசம் கொள்ளச் செய்ததும், வீடுபேறு அளித்ததும் எல்லாம் அருள் என்பது கருத்து.

திருக்கயிலையில் ஆலால சுந்தரராக விளங்கிய நம்பி யாரூரைப் பூவு:லகில் தோற்றுவித்து, பரவை சங்கிலியோடு பந்திக்கச் செய்ததும் அருள்; மணம் தவிர்த்தாண்டதும் அருள்; வெள்ளானை அனுப்பி அழைத்து முத்திக்கரையில் சேர்த்ததும் அருளாதல் காண்க. (99)

பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே. 1803

இம் – எனின், அருள் வழங்கிய ஆதி பராபரனே உளம் புகுந்து, உறவானமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எமக்கு மீட்டும் பிறவா நெறியாகிய பேரின்ப வீட்டை நல்கிய பெருங்கருணைத் தடங்கடலும், தன்னடியை என்றும் மறவாத பேரருளை வழங்கிய பெருந்தவமுடையானும், என் கடவுளுமாகிய சிவபெருமான், அறக்கடல் போலும் அந்தணனாய் – முதற் பொருளனைத்தினும் மிக மேலானவனாய் – அநாதியே எனக்கு உறவாகி என் உளம்புகுந்தான் என்றவாறு.

அடியேற்குப் பிறவா நெறியையும், மறவா அருளையும் தந்த பரமகுருநாதன் உறவானான்; என் உள்ளம் புகுந்தான் என்பது கருத்து.

பிறவாநெறி – பேரின்ப நெறி. வினைச் சேடங்கள் சிறிதும் இல்லையாய்ப் பிறப்பிற்கேதுவான மூலமலமும் செயலற்றுப் போக, உயிர் தூயதாய் என்றும் மீளாத மாயாத இன்பத்தில் உறையுமாதலின் 'பிறவாநெறி' எனப்பட்டது.

தந்த என்ற வழக்காற்றினால் பரசிவம் ஆன்மாவையும் மலரகிதனாக்கி, தன்னோடு ஒத்தநிலை எய்துவித்து, பிறவா நெறி தந்தமை உணரப்படும் தாவென்கிளவி ஒத்தோன் இரப்புரையாதல் காண்க.

மறவா அருள் – மறவாமைக்கு ஏதுவாகிய அருள். ஆட்கொள்ளப்பெற்ற ஆன்மா ஆட்கொண்ட திருவருளை மறக்காதவண்ணம் விளக்கம் செய்வதாகிய அருள் என்க. அம்மையாரும் 'மறவாமை வேண்டுதல்' காண்க. மாதவன் – பெரிய தவமே வடிவானவன்.

அறவாழி அந்தணன் – அறக்கடலாகிய அந்தணன். அந்தணன் – ஞானமார்க்கமான வேதாந்தத்தினால் அணவப் படுமவன் என்பதாம். மறையோர்களாயின் இந்தச் சொல் வேதாந்தத்தை அணவுவார் அந்தணர் எனல் பொருந்தும். இஃது அஃதன்று. இத்தொடர் திருவள்ளுவத்திலும் வந்தமை காண்க.

ஆதிப் பராபரன்; ஆதி – முதல். பராபரன் – மேலான பொருள்கள் அனைத்திற்கும் மேலானவன், ஆகவே, முதல்வனாகவும் மேலானவற்றிற் கெல்லாம் மேலான வனாகவும் விளங்குபவன் என்பதாம்.

உறவு: இறைவற்கும் ஆன்மாவிற்கும் உள்ள அநாதி நித்தியமான சம்பந்தம். தன் வீட்டில் தடையின்றிப் புகும் தலைவன்போல என் உள்ளத்துப் புகுந்தான் என்பார் 'உறவாகி வந்து என்உளம் புகுந்தான்' என்றார். (100)

**அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே**
**அகம்புகுந் துந்தெரி யானரு ளில்லோர்க்**
**ககம்புகுந் தானந்த மாக்கிச் சிவமாய்**
**அகம்புகுந் தானந்தி யானந்தி யாமே. 1804**

இம் – எனின், சிவமே குருவாய் வந்து அருளிய வாற்றை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: நந்தியாகிய சிவபெருமான், பரம கருணையால் அடியேன் மனத்துட்புகுந்தான்; அருளில்லாத உலக பாசண்டர்க்கு மனம் புக்கும் அறியப்படான்; உயிருள் உயிராய்ப் புக்கு என்னை நிரதிசயானந்தத்து அமிழ்த்திச் சிவமேயாய் என் மனத்துட்புக்கான்; அடியேன் அதனால் ஆனந்த வடிவினனாயினேன் என்றவாறு.

என்னுளம் புக்குச் சிவமாக்கி என்னை ஆண்டமையால் ஆனந்த வடிவினன் ஆயினேன் என்பது கருத்து.

அருளாலே அகம் புகுந்தான் என்றது சிவன் அடிமை, யாம் ஆண்டவன், சிவற்கும் எமக்குமுள்ள வேற்றுமை மலையும் மடுவும் போன்றது என்றுதிருவுளங்கொள்ளாமல் அருள் ஒன்றே குறியாக என் மனம் புக்கு ஆண்டு கொண்டான் என்பதாம்.

அருளில்லோர் நம்பன் அருளாமையைப் பெற்ற முற்பிறவியின் பரிபாகமிலாதோர். உயிருக்கு உயிராய ஒன்றாய் இருந்தும் அவர்கட்கு விறகில் தீயும், பாலில் படு நெய்யும்போல மறைய நிற்பான் என்பார் 'அருளிலோர்க்கு அகம்புகுந்தும் தெரியான்' என்றார்.

அத்தகைய பெரியோன் என் அகத்துட் புகுந்து ஆனந்தமாக்கிப் பின் சிவமேயாய் அகம் புகுந்தான் என்று கூட்டுக. குருநாதன் என்னை ஆட்கொள்ள என் மனத்தே புகுந்தான்; பூவினுள்கந்தம் பொருந்தியவாறு போலச் சீவனுக்குள்ளே சிவமணம் கமழச் செய்தான்; பரிபாக முதிர்ச்சி கண்டு தானே சிவமாய் மீளவும் உளம் புகுந்தான் என்பதாம்.

ஆனந்தி – ஆனந்தம் உடையவன். அங்ஙனம் அவன் சிவமாய் உளம் புகுந்தமையின் நான் ஆனந்த வடிவினன்

ஆயினேன் என்பதாம். சிலர் ஆன் நந்தி எனப் பிரித்துப் பசுபதி எனப் பொருள் கொண்டு சிவசாரூபம் என்று உரை கூறுவர்.

(101)

ஆயும் அறிவோ டறியாத மாமாயை
ஆய கரணம் படைக்கும்ஐம் பூதமும்
ஆய பலவிந் திரிய மவற்றுடன்
ஆய வருளைந்து மாமருட் செய்கையே. 1805

இம் – எனின், திருவருட் செய்கைகள் இவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தன்னையும் தலைவனையும் தடைகளையும் பற்றி ஆராயும் சித்துப் பொருளாகிய ஆன்மாவும், அசித்தாகிய பெரிய மாயையாகிற ஆணவம், மாயைகளும், அவற்றைத் தோய்ந்தும், பிரிந்தும் செயற்படுகின்ற அந்தக் கரணங்களும், சிருட்டிக்கப்படுகின்ற ஐம்பூதங்களும், ஆகிய அறிவதும் செய்வதுமாகிய இந்திரியக் கூட்டங்களும் அந்த இந்திரியங் களுடன் பொருந்திய ஐந்து ஐந்தான அறிவுகளும் செயல்களும் ஆகிய அனைத்தும் இறைவன் ஆன்மாக்களுக்குச் செய்யும் திருவருட் செய்கையால் விளைவனவாம் எ–று.

ஆன்மாவோடு கூட்டப்படுவனவாகிய முப்பத்தாறு தத்தவங்களும் திருவருளில் இறைவன் புரியும் செயல்களாம் என்பது கருத்து.

அறிவு – ஞானவடிவாகிய ஆன்மா. ஆயும் அறிவு – நானார் என் உள்ளமார் ஞானங்களார் என ஆராயும் ஆன்மா.

மாயை: இது நித்தமாயும், அருவாயும், ஒன்றாயும் உலக வித்தாயும், சடமாயும், எங்கும் வியாபியாயும், முதல்

வன் வியாபகத்துள் அடங்குதலால் அவனுக்கு ஓர் வைப்புச் சத்தியாயும், தனு கரணாதிகளாக விரிதலால் மலமாயும், உயிர்களை மயக்குவதாயும் உள்ளது. ஆதலின் அதனை 'அறியாத மாயை' என்றார்.

மாமாயை – மூலப்பிரகிருதி. மாமாயை என்பதை யோக விபாசஞ் செய்து மாமாயை, மாயை எனப்பிரித்துக் கூட்டிக் கொள்க.

ஆய கரணம் – மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கும்.

படைக்கும் ஐம்பூதம் – மாயையை முதற்காரணமாகக் கொண்டு பஞ்சதன்மாத்திரைகளின் வாயிலாகத் தோன்றும் மண் புனல் அனல் காற்று ஆகாயம் என்ற பூதங்கள், எல்லா வற்றையும் தம்சேர்க்கையினாலே படைக்கின்ற பூதங்கள் எனலுமாம்.

பல இந்திரியம் – ஞான இந்திரியங்களாகிய மெய் வாய் கண் மூக்குச் செவிகளும், கன்மேந்திரயங்களாகிய வாக்கு பாதம் பாணி பாயு உபத்தங்களுமாம்.

அவற்றுடனாய அருள் ஐந்தும் – இந்திரியங்களைக் கருவியாகக் கொண்டு அருளப்பெற்ற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற அறிபுலன்களும், வசனம் கமனம் தானம் விசர்ச் சனம் ஆனந்தமெனப்படும் செயல்களும் ஆம். இவை அனைத்தும் ஆன்மாக்களின் பாச விமோசனம் பண்ண இறைவன் உதவிய அருளே என்பார் 'அருட் செய்கையே' என்றார். (102)

அருளே சகலமு மாய பவுதிகம்
அருளே சராசர மாய வகிலமே
இருளே வெளியே யெனுமெங்கும் ஈசன்
அருளே சகளத்த னன்றியின் றாமே. 1806

இம் – எனின், அனைத்தும் அருளின் செயலே என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பூதகாரியமான அனைத்தும் அருளேயாம். இயங்குவ நிற்பவான அனைத்தும்அருளேயாம். அறிவும் அறியாமையும் தொழிற்படத் துணைசெய்வதும் அருளே; இறைவனும் திருவருளையே திருமேனியாகக் கொண்டு விளங்குவன்; திருவருளன்றிச் சிவமில்லை என்றவாறு.

உயிர்கள் உய்வதற்காகப் படைக்கப்பட்ட பூத பௌதிகங்களும், சர அசரங்களும்அறிவு அறியாமைகளும் எல்லாம் அருளே; இறைவன் திருமேனியும் அருளே; அருளின்றி அவன் இல்லை; அவனன்றி அருள் இல்லை என்பது கருத்து.

பவுதிகமாய சகலமும் அருளே என மாறுக.

அமலமே எனவும் பாடம். அப்பாடத்திற்கு அம் மலமே இருளே வெளியே எனக் கூட்டி மூலமலமும், அதன் காரியமாகிய அறியாமையும் மல நீக்கத்தால் விளையும் அறிவும் எனப் பொருள் கொள்க.

சகளத்தன் – திருமேனி தாங்கியவன். இதனால் அனைத்தும் திருவருள்மயம் என்பது உணர்த்தப்பெற்றது.

(103)

சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறா
நவமவை யாகி நடிப்பவன் தானே. 1807

இம் – எனின் நவந்தரு பேதமாகி நாதனே நடப்ப னென்ற உண்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் மகேச்சுரன் உருத்திரன் திருமால் பிரமன் என்ற ஒன்பது பேதமாகி இறைவன் ஒருவனே நடிப்பன் என்றவாறு.

இறைவன் ஒருவனே திருவருளால் நவந்தரு பேதமாகி நடிப்பன் என்பது கருத்து.

சிற்சத்தியோடு பிரிப்பின்றி நிற்கும் சிவன் ஆன்மாக்களின் மலநோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்த மாயையில் தொழில் செய்யத் திருவுளங் கொண்ட அவதரம் சிவம். இது உயிர்களின் துன்பத்தை நீக்க உன்னிய சந்தர்ப்ப மாதலின் பரநாதம் எனவும்படும். அங்ஙனம் திருவுளங் கொள்ளும் பொழுது எங்ஙனம் தொழில் செய்ய வேண்டு மென்று எண்ணுகிற அவதரம் சத்தி. சத்தியாவது அடங்கி நிற்கும் ஆற்றல். சிவத்தினிடம் இந்நிலையில் ஒரு குறிப்பு நிகழும். அதனைப் பரவிந்து என்பர்.

அதன்பின், திருவுள்ளம் பற்றியவாறு செய்தற்கு முதற் காரணமாய்த் தன்னுள் அடங்கியிருந்த சுத்தமாயையோடு கூடிய அவதரம் நாதம்.

சுத்தமாயையோடு கூடிச் செய்ய வேண்டியனவற்றைச் செய்ய எண்ணிய நிலை விந்து. இது நாதவிந்துக்கள் சுத்த மாயையிற் கூடிய நிலையாயினமையின் அபரநாதம் அபர விந்து எனவும் படும். இவற்றைச் சிவம் சத்தி எனக் கூறுதலும் உண்டு. இலயசிவம் இலயசத்தி எனப்படுவனவும் இவைகளே ஆம்.

பின்பு இன்னின்னவாறு செய்யவேண்டும் என்று திருவுளம் பற்றிய நிலை சதாசிவம்; சத்தியோடு கூடிய சிவம் சதாசிவம்; எண்ணும் முதன்மை சிவத்தையும் எண்ணுதற்குரிய ஆற்றல் சத்தியையும் குறித்தலின் சதாசிவம் எனப்படும்.

எண்ணியவாறு செய்யும்போது அவரவர் கன்ம பலத்தை அவரவர் அனுபவிக்கச் செய்யும் முறையில் பரிபாகப் படாத கன்ம பலங்களையும் பரிபாகப்பட்டு அனுபவத்திற்கு வரும் கன்ம பலங்களில் உள்ள குண தோடங்களையும் மறைக்கும் நிலை மகேசுரமாம். மகத் ஐசுவரியத்தையுடைய நிலை மகேசுவரம். உயிர்கள் அனுபவிக்க வேண்டிய கன்மங் களைக் கூட்டியும், அனுபவிக்க வேண்டாத ஐசுவரியங்களை மறைத் தலும் வைத்தலின் மகேசுவரம் எனப்பட்டது.

அங்ஙனம் உயிர்கள் கன்ம பலங்களை நுகருங்கால் இளைப்பு ஒழித்தற்பொருட்டும், வேறு உலகங்களில் தோன்றி இன்பத் துன்பங்களை எய்துதற் பொருட்டும், இவ்வுலகத் திலேயே வேறு உடலின் வாயிலாக அவைகளை நுகர்தற் பொருட்டும் சங்காரம் செய்யும் நிலை உருத்திரன்.

நுகர்ச்சிக்காக உடலொடு உயிரை நிலைக்கச் செய்கின்ற நிலை விஷ்ணு.

நுகர்ச்சிக்குரிய உடல், கருவி, உலகம், பொருள் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் நிலை பிரமன்.

இவ்வொன்பதில் சிவம் சத்தி, நாதம் விந்து நான்கும் இறைவனது அருவத் திருமேனியாம். சதாசிவம் அருவுருவத் திருமேனியாம். பின் நான்கும் உருவாம் என்க.

இதில் நடிப்பவன் தானே என்பதால், நடிப்பவன் இவ் வொன்பது பேதங்களடங்காது வேறானவனாகக் கருத நிற்றலின் அது பரமாகிய சிவபேதமாம். அதனொடு கூட்டிப் பத்துப் பேதமாம் என்க. இதனை 'மேவும் பரசிவம், மெய்ச் சத்தி நாதமும்' என்னும் (2417) திருமந்திரத்தானும், 'தொலையா இவை முற்றுமாய் அல்லது ஒன்றே' என்னும் (1810) திருமந்திரத்தானும் உணர்க. (104)

**அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா**
**அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே**
**இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுத் தோன்றாத்**
**தெருட்கண்ணி னோார்க்கெங்குஞ் சீரொளி**
**யாமே. 1808**

இம் – எனின், அருட்கண் படைத்தோர்களுக்கு அரனும் தோன்றும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவருளாகிற கண் படையாதவர்க்கு அரும் பொருள் ஒன்றும் தோன்றாவாம்; அஃதுடையோர்க்கு அரிய வற்றுள் அரிய பொருளாகிய சிவமும் தோன்றும்; படலத்தான் மறைப்புண்டிருண்ட கண் படைத்தவர்கட்குப் பேரொளிப் பிழம்பான சூரியனும் தோன்றாது; தெளிந்த கண்ணையுடை யார்க்கு எங்கும் எதுவும் ஒளிமயமாம் என்றவாறு.

ஒளிபடைத்த கண்ணினார்க்கு எங்கும் எதுவும் ஒளியாதல்போல அருட்கண் படைத்த பேர்க்கு அரனும் தோன்றும் அனைத்தும் தோன்றும் என்பது கருத்து.

'அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே' 'நின் அருளே கண்ணாகக் காணினல்லால்' என்ற சுருதிகளும் ஈண்டு எண்ணத்தக்கவை. (105)

தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே. 1809

இம் – எனின், அருளே பஞ்சகிருத்தியமும் பண்ணிக் கருத்தாவுமாம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அருளே படைக்கும்; அளிக்கும்; அழிக்கும்; மறைக்கும்; முத்தியையும் அளிக்கும்; எல்லாவற்றினும் கலந்து நின்று தலைவனும் ஆம் என்றவாறு.

திருவருளினாலேயே இறைவன் பஞ்சகிருத்தியங் களையும் பண்ணித் திருமேனி கொண்டு உயிர்களை உய்யக் கொள்ளுகின்றான் என்பது கருத்து. (106)

தலையான நான்குந் தனதரு வாகும்
மலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந்
துலையா இவைமுற்று மாயல்ல தொன்றே. 1810

இம் – எனின், நவந்தரு பேதங்களும் அருவம் முதல் மூன்றுமாம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிறந்தனவாகிய சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கும் சிவத்திற்குரிய அருவநிலை ஆம்; ஐயப்

படாத அருவுருவம் சதாசிவமாகும்; நிலை பெறுதற்கு உரிய வான மயேச்சுரம் அரன் அரி அயன் என்னும் நான்கும் நீடிய உருவ நிலைகளாம்; அழியாத இவ்வொன்பதுமாயும், இவற்றைக் கடந்து நின்று இவற்றை இயக்குவதாயுமுள்ள பரசிவம் ஒன்றேயாம் என்றவாறு.

பரசிவம் நவந்தரு பேதமாயும், அவற்றைக் கடந்தும் நிற்கும் என்பது கருத்து.

பத்துப் பேதமாய் நிற்றல் முன்னர் 1807-ம் திருமந்திரத்து 'நவமவை யாகி நடிப்பவன்தானே' என்பதன் உரையில் கூறப்பட்டமை காண்க. ஞானவரண விளக்கத்தினும் ஞான சித்தி ஆகமத்துள் உதகரித்தவாறே 'சிவமொடு சத்தி' எனும் திருமந்திரத்து வருமாற்றானும் உணர்க. ஈண்டு நடிப்பவன் என்னும் பரமாகிய சிவபேதத்தோடு கூட்டிப் பத்தாயும் கூறுவர் என உரைத்தல் காண்க. மற்றும்,

"மேவும் பரசிவம் மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து ஐம்முகன் வேறீசன்
மேவும் உருத்திரன் மால்வேதா மேதினி
ஆகும் படிபடைப் போன்அரன் ஆமே"

என்னும் (2417) மந்திரமும் ஒப்பு நோக்குக. இதற்கு வேறு கூறுவாரும் உளர். (107)

**ஒன்றது வாலே உலப்பிலி தானாகி**
**நின்றது தான்போல் உயிர்க்குயி ராய்நிலை**
**துன்னி யவையல்ல வாகுந் துணையென்ன**
**நின்றது தான்விளை யாட்டெடன்னுள் நேயமே**
**1811**

இம் – எனின், சிவம் உடனாயும் ஒன்றாயும் நிற்கும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒருமுதலாய் நிற்குந் தன்மையால்கேடு ஒன்றில்லாத சிவம் தானேயாய் நின்றதுபோல, உயிருக்கு உயிராய நிலையில் உயிர்களோடு ஒன்றாயும் அவற்றின் வேறாயும் நிற்கும்; என் உள்ளத்து அறியப்படு பொருளாய் விளங்கும் சிவம் துணையென்று சொல்லும் வண்ணம் உடனாய் நின்றுதான் விளையாட்டாகும் என்றவாறு.

தானேயாய் நிற்பதுபோலச் சிவம் உயிர்க்குயிராய் ஒன்றியும் வேறாயும் விளங்கும்; எனக்கு அறிபொருளான பரசிவம் எனக்குத் துணையாய் யான் செய்யும் வினைகளுக்குப் பாதுகாப்பாய் நின்றது; அது அவன் செய்யும் விளையாட்டாம் என்பது கருத்து.

ஒன்றதுவாலே உலப்பிலி – தன்னோடு ஒப்பாரும் மிக்காரும் இன்றி ஏகனானமையால் அழிவற்ற சிவம் என்க. 'ஒன்றென்றது ஒன்றே காண்' என்ற சிவஞானபோத வெண்பாவையும் சிந்திக்க, இது,

ஏகமேவாத்விதீயம்

என்னும் சாந்தோக்கியப்பகுதியின் கருத்தையும்,

ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்து:

என்னும் சுவேதாச்சுவதரக் கருத்தையும் விளக்கி நிற்றல் காண்க. தன்னின் வேறிலான் எனவே தோற்றமின்மை பெறுதும், அதனால் ஈறின்மையும் பெறுதும் என்பார் 'உலப்பிலி' என்றார்.

தானாகி நின்றது – சிவம் ஒன்றொடுங்கூடாது தான் தானேயாய்த் தனித்து நிற்றல். அஃதாவது அநாதி முத்த சித்துரு வாகிய முதல்வன் ஒன்றினும் தோய்வின்றித் தானே சுயம்பிர காசமாய் நிற்கும் தன் உண்மையில் 'சிவம்' எனப்படுவர் என்பதாம். தான்; அசை.

உயிர்க்குயிராய் நிலைதுன்றி – ஒன்றோடும் ஒன்றாது தானேயாய் நிற்பதுபோல உயிர்க்குயிராய்ப் பொருந்திய காலத்தும் வேறறியப்படாது உயிரோடு உயிராய்க் கலந்து நின்று என்பதாம். இது சிவம் ஒன்றான நிலை கூறுவதாம்.

அவை அல்லவாகும் – பொருட்டன்மையால் உயிரின் வேறாகிச் சுட்டற்று நிற்கும் முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடை யதாம். இது வேறாந்தன்மை கூறியது.

துணையென்ன நின்றதுதான் விளையாட்டு – அடியேன் வினைப் போகங்களைத் துய்க்கும் போதும் வினை களைச் செய்யும்போதும் துணையாக என்னுடன் நின்றது அவன் புரியும் விளையாட்டாகும் என்பது. இது உடனாய் நிற்றல் கூறியது.

இங்ஙனம் மூவகைப்பட்டு நிற்கும் தன்மையால் சத்தி எனப் பெயர் பெறும் என்பது சிவாகம நூற்றுணிபு.

என்னுள் நேயம் – என் உள்ளத்தே அறியப்படு பொருளானது; என்பது பிரிக்க முடியாத தாதான்மியத்தால், சிவம், சிவம் சத்தி என இருதிறப் பட்டப் பின் உயிர்கள் பொருட்டுப் பஞ்சகிருத்தியம் புரியும் வகையில் பதி எனப்படு தலைக் குறித்தவாறு. மக்களால் என்றும் அறியப்படு பொருள் அரசனாதல்போல உயிர்களால் அறியப்படு பொருள் சிவமேயாம் என்பதால் பதியாதல் உணர்த்தப் பெற்றது என்க.

இங்ஙனம் பரசிவமாயும், சிவம், சத்தி, பதிகளாயும் இறைவன் நின்று உபகரித்தலை உணர்த்தியது இம்மந்திரம்.
(108)

**நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோ**
**டாய்க் குடிலையுள் நாம் அடைந்திட்டுப்**
**போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு**
**வீயத் தகாவிந்து வாக விளையுமே.** 1812

இம் – எனின், பரசிவம் மாயேயங்களோடு நிற்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அறியப்படு பொருளாக விளங்கும் நின்மல சொரூபியான சிவம் சத்தியோடு கூடி அதனைத் தொழிற் படுத்தவே, சுத்த மாயையினின்றும் நாதம் தோன்றி, விரிந்து, நிவிருத்தியாதி பஞ்சகலைகளாகக் கூடி அழியத்தகாத மாயா காரியமான பஞ்சகலைகளாகக் கூடி அழியத்தகாத மாயா காரியமான மாயேயங்களாக விரியும் என்றவாறு.

நின்மல சிவம், சத்தியைக் கலக்கிச் சுத்தமாயையி னின்று நாதமும், அதனின்று பஞ்சகலைகளும், அதனின்று விந்து காரியமான மாயேயங்களும் தோன்றச் செய்யும் என்பதாம்.

நின்மலன் சத்தியோடாய் நாதம் அடைந்திட்டுப் போய், புணர்ந்திட்டு விந்துவாக விளையுமென முடிக்க.

ஞானமே சொரூபமாக அடியார்கள் மனத்தில் விளங்கும். அநாதியே மலரகிதனாகிய சிவம் என்பார் ‘நேயத்தே நின்றிடும் நின்மலன்’ என்றார்.

சத்தி – சிவத்தோடுவேறனறி நிற்பதாகிய கருணை. குடிலை – மாமாயையாகிற சுத்தமாயை. நாதம் – ஒலி வடிவான தத்துவம். கலை – நிவிருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்துமாம். விந்து – விந்து சத்தி. இது காரியமாக விரியினும் காரணமாய நிலையில்அழிவற்ற பரவிந்து ஆதலின் 'வீயத்தகா விந்துவும்' என்றார். வீயத்தகா- அழியத்தகாத. காரண காரியங்களுக்குள்ள ஒற்றுமைபற்றி குடிலை முதல் மண்ணீறாக விரிவனவற்றை 'விந்துவாக விளையுமே' என்றருளினார். (109)

**விளையும் பரவிந்து தானே வியாபி**
**விளையுந் தனிமாயை மிக்கமாமாயை**
**கிளையொன்று தேவர் கிளர்மனு வேதம்**
**அளவொன் றிலாவண்ட கோடிக ளாமே.**

**1813**

இம் – எனின், திருவருட் சத்தியினின்று வேதமுதல் அண்டகோடிகள் அனைத்தும் ஆகின்றன என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: அனைத்துமாய் விளையும் சிவசத்தி எங்கும் நிறைந்திருக்கும்; அதினின்று தோன்றுவதாய தனி மாயை மாமாயைகளினின்று முப்பத்து முக்கோடிதேவர்களும் கூறுகின்ற மந்திரவடிவாய வேதங்களும் அளவற்ற அண்ட கோடிகளும் தோன்றும் என்றவாறு.

திருவருட் சத்தியினின்று இருவகை மாயைகளும் மாயேயங்களாகிய வேதமுதல் அண்ட கோடிகளீறான அனைத்தும் விரிகின்றன என்பது கருத்து.

பரவிந்து – சிவசத்தி. அது எல்லாவற்றினும் கலந்து அருவாய்நிற்கும் ஆதலின் 'தானே வியாபி' எனப்பட்டது.

அதினின்று விளைவன தனிமாயையான அசுத்தமும், மாமாயையான சுத்தமும். மாமாயையைத் திருவருள் ஆணையாகிற சிவசத்தி நேரே தொழிற்படுத்தும். அதினின்று வேதமுதலான ஒலி உலகங்களும் சுத்த தத்துவங்களும் கலைகளும் விளைவனவாம்.

அசுத்தமாயை வினையிற் கட்டுண்ட உயிர்களைப் பொதுவகையான் மயக்கி நிற்கும் அருவமாதலின் தனிமாயை எனப்பட்டது. அநந்தேசுரர் சத்தி கலக்கக் கலக்குண்ட பாகத்தால் அசுத்தமாயா தத்துவங்களும், அளவற்ற அண்ட கோடிகளும் தோன்றுவன. இவையனைத்தும் ஆன்மாக் களிடத்து வைத்த அளவிலாப் பெருங்கருணையாகிற திருவரு ளாதலின் திருவருள் வைப்பினதாயிற்று இம்மந்திரம். **(110)**

# 10. அருளொளி

அருளாகிய ஒளி ஆன்மாவினிடம் பரவியபோது, விளையும் அநுபவ வேறுபாடுகளை விதி முகத்தானும் மறை முகத்தானும் விளக்குவது இவ்வதிகாரம். திருவருள் வைப்பின் கண் இறைவன் உயிர்களினிடம் திருவருளை வைத்தமையான் ஒலியுலகும் பொருளுலகும் விரிந்தமை உணர்த்தி, அவை உயிர்கட்கு நுகர்ச்சிக்குரியன ஆனமையையும் காட்டினார். இவ்வதிகாரம் அவ்வருள் ஒளியாய் உயிரினிடம் வியாபித்தபோது உண்டாகும் இன்ப விளைவுகளை ஒன்பது மந்திரங்களான் உணர்த்துதலின் அதிகார இயைபும் காண்க.

அருளிற் றலைநின் றறிந்தழுந் தாதார்
அருளிற் றலைநில்லார் ஐம்பாச நீங்கார்
அருளிற் பெருமை யறியார் செறியார்
அருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே. 1814

இம் – எனின், திருவருளால் அவதரித்தவர்களே அருளின் பெருமையை அறிந்து அவ்வருளிற்றோய்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவருளே எமக்குப் பற்றுக்கோடாவது; உய்விப்பதும் பேரின்பத்துய்ப்பதும் வேறின்று என்று தெளிந்து அதில் தலைப்பட்டு நின்று என்றும் உணர்ந்து தோயாதவர்கள் அருளாணையின் வழியே நில்லார்கள்; ஐவகைப் பாசங்களி னின்றும் விடுபடார்கள்; அதன் பெருமையை அறியமாட் டார்கள்; அதனுள் அழுந்த மாட்டார்கள். திருவருளால் தோன்றித் திருவருளே கண்ணாகக் கொண்டு காண்பவர்களே திருவருளை அறிந்தவரராவார் என்றவாறு.

திருவருளால்தோன்றியவர்களே அத்திருவருளை உள்ளவாறு உணர்ந்துய்வார்கள் என்பது கருத்து.

தலைநிற்றல் – அருளே நமக்கு அனைத்தும் என்று அதன் வழியொழுகல். தன்முனைப்பு இன்றி ஊட்டினும் காட்டினும் ஒறுக்கினும் செறுக்கினும் எல்லாம் திருவருளே என்று விருப்பு வெறுப்பின்றி அடங்கியிருத்தல்.

அறிதல் – திருவருளை உள்ளவாறு உணர்தல். உயிர் போகங்களின் அழுந்திய காலத்து உடனின்று ஊட்டுவதாயும், அங்ஙனம் ஊட்டும்போது அவற்றின் நிலையாமையையும், அவற்றான் வரும் துன்பங்களையும் காட்டி அறிவு விளக்கம்

செய்வதாயும், சிவஞானத்தாற் செல்நெறி காட்டுவதாயும் இருப்பதை உணர்தலாம்.

அழுந்துதல் – நீருள் முழுகிய தோணி போல அருளில் தன் வசமற்றுத் தன் செயலற்று அடங்கியிருத்தல். இங்ஙனம் இல்லார் நீங்கார், நில்லார், அறியார், செறியார் என்க.

ஐம்பாசங்களாவன ஆணவம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி என்பன. அருளில் பிறந்திட்டு அறிந்து அறிவாரே அறிவார் என வினைமுடிபு வருவித்து முடிக்க.

இதனால்அருளில் தோய்தலும் அருளால் விளைவதே என்பது வலியுறுத்தப்பெற்றது. (111)

**வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி**
**ஆரா அமுதளித் தானந்தி பேர்நந்தி**
**பேரா யிரமுடைப் பெம்மான்பே ரொன்றினில்**
**ஆரா அருட்கடல் ஆடுகென் றானே. 1815**

இம் – எனின், குருநாதன் சிவமந்திரத்தை உபதேசித்து உய்யக் கொண்டமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மீளவும் பிறவாப் பெருநெறி உதவினன் நந்தியென்னும் பெயரையுடைய பெரிய குருநாதன்; அம்மட்டோ! உண்ண உண்ணத் தெவிட்டாத அமுதத்தையும் உதவினன்; ஆயிரம் திருநாமங்களையுடைய பெருமான் தனதுபெயராகிய ''சிவ'' என்பதொன்றால் என்றும் தெவிட்டாத திருவருட் கடலில் ஆடுக என்று அருள் செய்தான் என்றவாறு.

சிவ என்னும் திருவைந்தெழுத்தை அருளிப் பிறவியைப் போக்கித் திருவருட் கடலில் ஆழச் செய்தான் சிவ குருநாதன் என்பதாம்.

வாரா வழி – மீட்டும் வினைச் சேடத்தால் கன்ம பூமியில் பிறவாநெறி 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப் படுவர். மற்றீண்டு வாராநெறி' எனல் காண்க. பேர்நந்தி என்பதில் நந்தி என்பது சிவபெருமான் என்னும் பொருளது. மா நந்தி பெரிய குருநாதன்.

ஆர்தல் – உண்டமைதல். ஆரா – நுகர்ந்து மனம் நிறையாத மேன்மேலும் நுகரத்தக்க அமுது என்க. இது சிவானந்தம்.

பேர் ஒன்று – 'சிவ' என்னும் சூக்கும ஐந்தெழுத்து. இது மலவெழுத்தும் மாயையெழுத்தும் உயிரெழுத்தும் நீங்கிய சுத்த பஞ்சாக்கரம் ஆதலின், சத்தியாகிய அருளும் சிவமாகிய கடலுமாய் ஆடுவாரை ஆடுகின்றேம் என்ற உணர்வையும் போக்கித் தானேயாய் வியாபித்து நிற்கின்றமையின் 'அருட் கடல் ஆடுக என்றான்' என்றதாம்.

இது ஒளியுள் ஒளியாய் அடங்குக என்றது. (112)

**ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்**
**தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்**
**கூடிய வாறே குறியாக் குறிதந்தென்**
**ஊடுநின் றானவன் தன்னரு ளுற்றே. 1816**

இம் – எனின், அருளொளி தன்னுள் கலந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆனந்தக்கூத்து ஆடியும், சிவன் புகழே பாடியும், கண்ணீர் மல்கியும், வாய்க்கு வந்தன புலம்பியும் என் தலைவன் எங்கே எங்கே எனத் தேடியும் சிவத்தின் பெருமையைக் கண்டேன்; அதனைத் தியானித்த வண்ணமே, அவனைத் தானேயாகிய அந்நெறியில் தன்னருளால் என் மனத்துற்று என் உயிர்க்குயிராய்க் கலந்து நின்றான் என்றவாறு.

அன்புமீதூர்ந்து ஆடியும் பாடியும் தொழுதும் நின்றேன்; அவன் அருளால் என் உயிர்க்குயிராய்க் கலந்து நின்றான் என்பது கருத்து.

சிவன் பெருந்தன்மையைக் கண்டேன்; சிவன் பெருந் தன்மையைக் கூடியவாறே குறி தந்து அவன் அருளுற்று என்னூடு நின்றான் என முடிக்க.

'தொழுதுளம் உருகி அழுதுடல் கம்பித்து, ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்........நல் இடையறாஅன்பின் கசிவது பெருகி' என்ற போற்றித் திருவகவலிலும் இக்கருத்து மிளிர்தல் காண்க.

கூடியவாறு – தைலதாரை போன்று இடையீடில்லாத தியான யோகத்தால். குறியாக்குறி – தியானம் தொடங்கும் போது நினைப்பானும் நினைவும் பொருளும் வேறாய்த் தோன்றும்; முறுக முறுகப் பொருளொன்றேயாய் அனுபவிக்கப் படும்; இதுவே குறியாக்குறி. அத்தகைய அனுபவ முதிர்வை அடைந்து என்றதாம்.

அங்ஙனம் அவன் என்னூடு நிற்றற்குக் காரணம் தன்னருளே என்பார் 'தன்னருள் உற்று' என்னூடு நின்றான் என்றார். (113)

உற்ற பிறப்பும் உறுமல மானதும்
பற்றிய மாயாப் படல மெனப் பண்ணி
அத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. 1817

இம் – எனின், திருவடி சூட்டியதன் விளைவுகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பெரிய குருநாதன், எடுத்த இப்பிறவியும் உன்னை அநாதியே பொருந்திய மலமும் உன்னைப் பற்றியுள்ள மாயைக் கூட்டம் என்று உணரச் செய்து, 'அத்தனையும் அகற்று' என பணித்து, என் தலைமீது திருவடி சூட்டினான்; அதனால் கற்றன விட்டேன்; திருவடியைத் தொழுதேன் என்றவாறு.

அத்தன் பிரபஞ்ச வாசனையைப் போக்கிப் பாசக்ஷயம் உண்டாக்கியமையின் சீவபோதம் கெட்டேன்; திருவடியைப் பணிந்தேன் என்பது கருத்து.

உற்ற பிறப்பு – வினைக்கீடாகக் கிடைத்த இப்பிறவி, லம் – அநாதியே செம்பினிற் களிம்பு போலப் பொருந்திய ஈவமலம். பற்றிய மாயாப் படலம் – அவ்வாணவத்தைப் போக்குதற்காகக் கூட்டப்பட்ட மாயையும் அதன் காரியமாகிய மாயேயங்களும். மாயை ஆகந்துகமலம் என்பார் பற்றிய மாயா படலம் என்றார். எனப் பண்ணி என்றது மாயாப் படலங் கள் நிலையற்றவை நித்தியமானவை அன்று என உணரச் செய்து, அத்தனையும் என்ற முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

நீ – விடு. நீத்தல் என்பதன் வினைப்பகுதியாகிய நீ, உகரச்சாரியை பெற்று நீவு என்றும், சாரியை பெறாதே நீ

என்றும் வரும். அடிவைத்தான் – திருவடி சூட்டினான். ஆணவ மலம் வாடுதற்காகத் திருவடி சூட்டினான். வேதகத்தால் இரும்பு பொன்னானாற்போலத் திருவடி சம்பந்தத்தால் ஆன்மா தூய்தாம் என்பது.

கற்றன – இதுவரை ஆன்ம போதத்தாற் கற்ற பாச ஞானங்கள். கழல் பணிந்தேன் – திருவடி ஞானம் பெற்றுப் பணிந்தேன் என்பது. (114)

**விளக்கினை யேற்றி வெளியை அறிமின்**
**விளக்கினின் முன்னே வேதனை மாறும்**
**விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்**
**விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே.1818**

இம் – எனின், ஞான ஒளியால் உணரத்தக்கது அருளொளி. அதனை அடைக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஞானவிளக்கை ஏற்றி எல்லையற்ற பரம்பொருளை அறியுங்கள்; பரம்பொருளின் சந்நிதியில் (தங்கம் செம்பினைச் சார்ந்து ஒளிமங்கியிருந்த தன்மை வேதியின் முன்பு கெடுதல் போல)மல மாயைகளான் விளைந்த மாற்றங்கள் நீங்கும்; விளக்கை விளக்கும் விளக்காகிய திருவருளுடையவர்கள் ஞான விளக்கின் முன்னர் விளங்கும் அருள் விளக்காவர் என்றவாறு.

ஞானவிளக்கால் மலவேதனை நீங்கச் சுயஞ் சோதியின் முன் விளங்கும் தீபமாவர் என்பது கருத்து.

தீபம் – சிற்றொளி. சுயஞ் சோதியாகிய விளக்குப் பேரொளி. அதன்முன் விளக்கொளி தன் தன்மை இழந்து

குன்றும். அருள் இருந்தால் விளக்கொளியும் பேரொளியின் முன் பிரகாசிக்கும் என்றவாறு.

வெளி – சிதாகாசவடிவாய கூத்தன், வேதனை - பரிணாமம்; துன்பமுமாம்.

விளக்கில் விளங்கும் விளக்காவது பேரொளியில் அடங்கித் தோன்றும் சிற்றொளியாகிய தீபம்.

இம்மந்திரம் அருளொளியின் முன்பு ஆன்மாவும் ஒளிபெற்று விளங்கும் என்பது உணர்த்திற்று. (115)

**ஒளியும் இருளும் ஒருகாலந் தீர**
**ஒளியுளோர்க் கன்றோ ஒழியா தொளியும்**
**ஒளியிருள் கண்டகண் போலவே றாயுள்**
**ஒளியிருள் நீங்க வுயிர்சிவ மாமே. 1819**

இம் – எனின், உயிர் ஒளிபெற்றுச் சிவமாகுந் தன்மையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அறிவும் அறியாமையுமாக இருக்கும் நிலை ஒருசேரக் கெட, என்றும் ஞானமயமாக இருப்பவர்க்கன்றோ அருளொளி நீங்காததாகும்; ஒளியைச் சார்ந்து ஒளியாயும் இருளைச் சார்ந்து இருளாயும் இருக்கும் கண்போல உயிரும் அறியாமையும் அறிவும் சார்ந்து இரண்டுமாய் இருக்குந் தன்மை கெடச் சிவஞானமேயான உயிர் சிவமாம் என்றவாறு.

அறிவும் அறியாமையும் ஆகிய இரண்டில் நீங்கி, ஞானமேயானபோது உயிர் சிவமாம் பேறு எய்தும் என்பது கருத்து.

ஒளி – பசுஞானம். இருள் – ஆணவமல காரியமாய அறியாமையும் மோகமும் முதலாயின. இவ்விரண்டும் பொன் விலங்கும் இரும்பு விலங்கும்போல உயிரினிடமாகச் சிவம் பிரகாசித்தலை உணர்தற்குத் தடையாம் ஆதலின், இரண்டுமே நீங்குதலை விரும்பினார் ஆசிரியர். ஒருகால் – ஒருசேர; அல்லது உறுதியாக எனலுமாம். உம்; தவிர்வழி வந்த சாரியை. ஒன்று நீங்க ஒன்று மேவுதலின் 'ஒருகாலந் தீர' என்றார்.

ஒளி உளோர்க்கு – பதிஞானமாகிய ஒளிபடைத் தோர்க்கு. ஒளியும் – அருளொளியும்.

ஒளி இருள்: உம்மைத் தொகை. ஒளியினையும் இருளையும் கண்ட கண்போல என்ற உவமை ஆன்மா ஆணவத்தைச் சார்ந்து ஆணவத்தோடத்துவிதமாயும் ஞானத் தைச் சார்ந்து ஞானமாயும் இருக்கும் நிலைமை கெட்டு என்பார் 'வேறாய் உள் ஒளி இருள் நீங்க' என்றார். அதற்கு ஏற்ற உவமை இருளொடு சார்ந்து இருளாயும், ஒளியொடு சார்ந்து ஒளியாயும் இருக்கும் கண் என்க.

ஆன்மா, என்றும் ஞான ஒளியாலே விளங்கின் சிவமாம் என்றும், உயிரிடம் அருளொளி அழியாது என்றும் உணர்த்தினமையால் அருளொளிக் கண்ணதாயிற்று இம் மந்திரம். **(116)**

**புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி**
**நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி**
**அறமே புகுந்தெனக் காரமு தீந்த**
**திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே.**
**1820**

இம் - எனின், இறைவன் செய்த உபகாரத்தை வியந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: புறச்சமய நெறிநின்றும் அகச் சமயம் புக்கும் புறந்திரிந்த என்னைப் பொன்போலும் திருவடி மலரை என் சிரத்தின்மீதும் உள்ளத்தும் மலரச் செய்து, என் நெஞ்சிற் புகுந்து, என்னை மலமற்றவனாகச் செய்து, புண்ணிய வடிவாகப் புகுந்து கிட்டுதற்கரிய அமுதை அடியேற்கு ஈந்த தன்மை எப்படியாயிற்றாம் என்று எண்ணி மயங்கியிருந்தேன் என்றவாறு.

ஒன்றற்கும் பற்றாத என்னையும் அடியனாக்கி அமுதூட்டிய தன்மை எப்படியாயிற்று என வியந்திருந்தேன் என்பது கருத்து.

நண்ணரிய ஞானவாரிதியில் ஆடவந்த நான் ஞான வாரிதியில் புகாது புறம்பான பொறி விருந்து தேடிப் பய னின்றிக் கழிந்தேன் என்பார் 'புயமே திரிந்து' என்றார்.

பொற்கழல் – பொன் போலும் போற்றப்படுவதாய திருவடி, கழல்ஈண்டு ஆகுபெயர். சூட்டி என்ற சொல் வழக் கால் கழல் பூவாக அல்லது மணிமுடியாகக் கொள்ளக் கிடந் தமை அறிக. கழல்சூட்டியது என் ஆணவமலச் சேட்டை அடங்க என்பது.

நிறம் – மார்பு; ஈண்டு நெஞ்சை உணர்த்தியது. மல சகிதனாகிய என்னை மலரகிதனாக்கி என்பார் 'நின்மலனாக்கி' என்றார்.

அறம் – புண்ணியம். இறைவன் புண்ணியமூர்த்தி ஆதலின் அறமே புகுந்து என்றார். எனக்கு ஆரமுது ஈந்த –

பிரகிருதி மாயா புவனத்துப் பிரகிருதி மாயையின் காரியமான உணவுகளை உண்டு கிடந்த எனக்குக் கிட்டுதற்கு அரிதாய் – உண்ணச் சிறப்புடைத்தாய் விளங்கும் அமுதைக் கொடுக்க என்க.

திறம் – தன்மை. 'ஆரமுது ஈந்த' என்பது அருளொளி யாதற் குறிப்பு உணர்த்துவது. (117)

**அருளது வென்ற அகலிடம் ஒன்றும்**
**பொருளது வென்ற புகலிடம் ஒன்றும்**
**மருளது வென்ற மனம்புகுந் தானைத்**
**தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே. 1821**

இம் – எனின், சிவம் என் மனத்திடங் கொண்டமை யால் விளைந்த பயன் இது என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எம் தலைவன் அறியாமையும் மயக்கமும் கெட என் மனம் புகுந்தான். அதனால், 'அருள்' என்று சிறப்பித்துச் சொல்லப்பெற்ற பரவெளி ஒன்றும், மெய்ப்பொருள் என்று சொல்லப்பெற்ற சிவமாகிய அடைக்கலத்தானம் ஒன்றும் ஆக ஆன்மா தெளிவுறும்; பின்னர் சிவகதி உண்டாம் என்றவாறு.

இறை மனத்தையிடமாகக் கொண்டமையான் அருளும் பொருளும் தெளிவாயின. பின்னர் சிவகதியாம் என்பது கருத்து.

ஐ – தலைவன். ஐ மருள் நீங்க மனம் புகுந்தான் என்க. மருள் – மயக்க உணர்வு. அவை மலத்தின் காரியமாகிய அறியாமையும், மாயையின் காரியமாய மயக்கமுமாம். உத்தமன் உள்ளிடம் புகுதலும் மாயையும் மலமும் கெட்டன என்பதாம்.

அவன் அருளால் அகம்புகுதலும், அருளும் பொருளும் தெளிவுற்றன என்பார் இங்ஙனம் கூறினார். பொருள் – சிவம். செம்பொருள் மெய்ப்பொருள் எனச் சிவம் சிறப்பிக்கப்படுதல் காண்க.

அருள் அகண்டமாய் ஒளியாய்த் தெளிவுறுத்துவதா தலின் 'அகலிடம் ஒன்றும்' என்றும், பொருளாகிய சிவம் ஆன்மாக்களுக்கு அடைக்கலத்தானம் ஆதலின் 'பொருளது என்ற புகலிடம் ஒன்றும்' என்றும் அருளினமை காண்க.

அருளும் பொருளுமே சத்தும் சித்தும் ஆனந்தமும் என்றும், இவற்றின் வேறாய் எம்முதலும் இல்லை என்றும் தெளிதல், அருள் – அம்மை. பொருள் – அப்பர். அம்மை யப்பரே உலகுக்கு அம்மையப்பர் எனத் தெளிந்தவழி விளை வது சிவகதி ஆதலின் பின் சிவகதியாம் என்றார். (118)

**கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை**
**வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருள் நீங்கிடும்**
**பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர்**
**தேறணி யோமிது செப்பவல் லீரே. 1822**

இம் – எனின், சிவன் ஒருவனே மெய்ப்பொருள் எனத் துணிக என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: முன்பு பிறந்து இருந்து இறந்தமையால் பிற கடவுளர்க்கு உள்ள மெய்ப்பொருள் என்னும் சிறப்பு நீங்கும்; பருந்துகள் வட்டமிடும் உடலைக் கீழே விழச் செய்த அவர்களின் உயிர்களைத் தேறுதலால் அணி செய்யோம்; இதனைத் துணிந்து நீங்களும் கூறுங்கள் என்றவாறு.

மற்றத் தெய்வங்கள் பிறந்திடும், இறக்கும் ஆதலால் அவைகட்கு மெய்ப்பொருள் என்னும் பெயர் பொருந்தாது; யாமும் கீழேவிழும் உடலைப் படைத்த உயிர்களாகிய அவர்களை மெய்ப்பொருள் என்று தேறேம்; நீவிரும் துணிந்து சொல்லுங்கள் என்பது கருத்து.

நீர் கூறுமின் என்றது உரைப்பது உண்மை நீங்களும் தேர்ந்து சொல்லுங்கள் என முன்னின்றாரை விளித்துக் கூறியது என்க. அயன் மால் முதலிய பிற தெய்வங்களை மெய்ப் பொருள் என்றல் சாலாது, அவர்கட்குத் தோற்றமும் கேடும் உண்மையின்; தோற்றக்கேடு உள்ளவர்க்கு அவையிலா தானே தலைவனாதலும், மெய்ப்பாருளாதலும் பொருந்தும் என்றவாறாம்.

வேறொரு தெய்வம் – பிறதெய்வம்.

பாறு – பருந்து, அணியும் – வட்டமிடும், பல கூடி நிரலாக வட்டமிடுதல், அணிசெய்தல் – படைசூழ்தலை அணி வகுப்பு என்றாற்போலக் கொள்க. சிவஞானியார் உடல் கீழே விழுதல் இல்லை. அங்ஙனம் விழுமாயின் அவர்கட்கு முத்தி இல்லை என்பது யோக நூற்றுணிபு.

உயிர் தேறு அணியோம் – அவர்கள் உயிரை மெய்ப் பொருளென்று தேறுதலால் அணிசெய்யோம்; என்றது அவர்களை மெய்ப்பொருளென்று தெளியோம் என்பது விளக்கிற்று.

அருளொளியால் மெய்ப்பொருள் துணியுமாறு
13 உரைத்தவாறு காண்க. (119)

# 11. சிவபூசை

சிவபூசை என்பது பூ, புகை, விளக்கு, நீர், திருவமுது இவைகளைக் கொண்டு சிவனைப் பூசித்தலாம். இது ஐவகைச் சுத்தியும் அமைத்து ஆசனமூர்த்தி மூல மந்திரங்களான் ஆசனம் இட்டு அவ்வாசனத்தில் மூர்த்தியை எழுந்தருளச் செய்து அதில் மூர்த்திமானாகிய சிவனைப் பாவனை செய்து வெளிப்படுத்தி, தூய மெய்யன்பால் அர்ச்சித்து துதித்து வழிபட்டுச் சிவவேள்வி செய்தலாம். இது சாதனங்களைத் திரட்டி வெளியிற் பூசிப்பதும் எல்லாவற்றையும் மனத்தாலே படைத்துக்கொண்டு மனத்தால் பூசிப்பதும் என இருவகைப்படும். புறப்பூசை கிரியை எனவும், அகப்பூசை ஞானபூசை எனவும் பெயர்பெறும். திருமூலதேவ நாயனார் இவ்விருவகைப் பூசைகளையும் தொகுத்து இருபத்து நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார். அருளொளி மிக்கார் சிவனே முதல் எனத்தேறி அருளொளி விளங்கப்பெற்றபோது அகத்தாலும் புறத்தாலும் அரனைப் பூசித்தலன்றி வேறுவினை நிகழ்த்தாமையின் அருளொளியை அடுத்துச் சிவபூசை ஓதப்பெற்றது அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிரானாற்கு வாயிகோ புரவாசல்**
**தெள்ளத் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.**
1823

இம் – எனின், உடம்பே ஆலயம் உயிரே சிவம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உடம்பே ஆலயம்; உடம்பினுள் விளங்கும் உள்ளமே அவன் எழுந்தருளியிருக்கும் கருப்ப வீடு; வாயே கோபுர வாசல்; நன்கு தெளிந்தவர்கட்கு உயிரே சிவலிங்கம்; கள்ளம் புரியும் புலன்கள் ஐந்தும் பெரிய விளக்கு என்றவாறு.

உடம்பு கோயில்; உள்ளம் கருவறை; வாய் கோபுர வாயில்; உயிர் சிவலிங்கம்; புலன்கள் காளா மணிவிளக்கு ஆம் என்பது கருத்து. இது ஞான பூசைக்குரிய விதானங்கள் உரைத்தவாறு.

பெருங்கோயில், நன்னிலத்துப் பெருங்கோயில் என்பது போல மாடக்கோயிலை உணர்த்தும், உள்ளம் உடம்பாகிய ஆலயத்து உயர்ந்த இடத்தில் உள்ளமையால் பெருங் கோயில் எனப்பட்டது.

ஊன் உடம்பு – ஊனாலாகிய உடம்பு. வள்ளற் பிரான்; சொற்பொருள் விரித்தல். பிரான் என்பதற்குப் பொருள் வள்ளன்மையுடையவனென்பதாம். ஆகவே வள்ளலாகிய பிரான். ஆன்மாக்கள் உள்ளக் குறிப்பு அறிந்து வேண்டுவன வழங்கலான் என்க.

தெள்ளத் தெளிந்தார்க்கு – மலவாசனை குன்றி, மாயா படலம் கிழித்து வல்வினையை உதறிய சிவஞானியர்க்கு என்க.

உயிர் மலத்தைச் சார்ந்திருந்தபோது மலத்தால் அறியாமை மிக்குப் பிரானை அறிய ஒண்ணாது தடுத்த புலன் கள். சிவத்தைச் சார்ந்த வழி இறைவனைக் காட்டும் மணி விளக்குப் போல உபகாரப்படுதலான் 'கள்ளப் புலன்' என்றார்.

காளா மணி – பருத்த அழகிய மணி. பெரிய விளக்கைக் காடாவிளக்கு எனல் காண்க. (120)

வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே. 1824

இம் – எனின், சிவபூஜையில் இறைவற்கு ஏற்பிக்கும் நைவேத்தியம் உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள் : யாகத்தில் அளிக்கப்படும் அவிசையுண்கின்ற விரிந்த சடையையுடைய சிவபெருமானுக்கு நிவேதிக்கவும் நாம் ஒன்றுமில்லேம்: காலை மாலைகளில் அவருக்கும் ஊட்டும் அவியாவன அவர் மனத்தை மகிழச் செய்யும் பாடல்களாகிய உணவை நிவேதிப்போம்; அது அவர்க்குப் பாலுணவாம் என்றவாறு.

வேட்ட அவி – வேட்டவியாயிற்று. யாகஞ் செய்யப் பட்ட அவிசு என்பதுமாம். விரும்பிய உணவை உண்ணும் எனவும் ஒரு பொருள் தோன்ற நிற்றல் காண்க,

காட்டுதல் – நிவேதித்தல் என்ற வடசொல்லின் தமிழ்ச் சொல். விரும்பியவற்றை உண்பார்க்குக் காட்ட யாம் ஒன்றும் உடையேமல்லேம் என்பது.

உள்ளம் குளிர்விக்கும் பாட்டு – இறைவனுடைய திருவுள்ளத்தை மகிழ்விக்கும் தோத்திரப்பாடல்கள்.

பாலவி – பால் உணவு. அவர்பால் சேர்ப்பிக்கும் உணவு எனலுமாம். இது ஞான பூசையில் தோத்திரமே நிவேதனமாதல் உணர்த்திற்று. (121)

பான்மொழி பாகன் பராபரன் தானாகு
மான சதாசிவன் தன்னையா வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாகுமே. 1825

இம் – எனின், சிவலிங்கத்துச் சிவனை ஆவாகிக்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: பால்போலும் மொழியினை உடையாளாகிய பராசக்தியை ஒரு பாகத்து உடையவனாகிய பராபரனேயாகும் சதாசிவமூத்த்தியை ஆவாகனம் செய்து, உச்சிமுகம் ஈசானமாகப் பாவித்து, சீலத்தோடு ஏனைய முகங்களையும் அவ்வத் திசைகளில் பாவிக்க, பெருமான் வெளிப்படுவர் என்றவாறு.

சிவபூசையில் சிவலிங்கமாகிய அருவுருவத் திருமேனியில் உச்சிமுகம் ஈசானமாகவும், கிழக்கு முகம் தத்புருடமாகவும், தெற்குமுகம் அகோரமாகவும், மேற்கு முகம் வாமதேவமாகவும், வடக்கு முகம் சத்தியோசாதமாகவும் கொள்க என்பது கருத்து.

ஞானபூசையிலே உயிரைச் சிவமாகப் பாவித்து முற்கூறியவாறு முகங்களைப் பாவிக்கின், தானே சிவம் ஆவன் எனவும், புறப்பூசையில் வைத்த குறியினிடமாகப் பாவிக்கின், பாவனையால் பூசிக்கப்பெறும் சிவன் சிவலிங்கத்தினிடமாகத் தோன்றுவனெனவும் பொருள் கொள்க.

சீல் + முகம். சீல் – சீலம்; அதாவது ஒழுக்கம். பயிற்சி எனலுமாம். இங்ஙனம் முகங்களைப் பாவித்துப் பயில்க என்பதாம். (122)

நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழல் ஈசனைக் காண வரிதாங்
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே.
1826

இம் – எனின், ஈசனைக் காணற்குரிய உபாயமும், அவரைப் பூசிக்கும் சாதனமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இடைவிடாது தியானிப்பதும் உண்மையான புகழைக் கூறுவதுமாகிய உபாயங்களானல்லது ஈசனைக் காணுதல் அரிதாம்; ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த ஈசனைக் கண்டு களிக்க வல்லவர் அவருக்குப் புனையத்தக்க மலரை யும், நீரையுங் கொண்டு போற்றுதற்கு வன்மை படைத்தவரே ஆவர் என்றவாறு.

தியானமும் வாய்மையும் உடையவரே ஈசனைக் காணற்குரியவர்கள்; பூவும் நீரும் கொள்பவரே போற்ற வல்லவர் என்பதாம்.

நினைவது – நினைப்பற நினைதல். அதாவது தைல தாரைபோல இடைவிடாது நினைதல். வாய்மை – உண்மை. இறைவன் புகழே மெய்ம்மை சேர்புகழாதலின் அது வாய்மை எனப்பட்டது. கனை கழல் – ஒலிக்கின்ற வீரக்கழல். வாய்மை மொழிவதும் வாய்மை நினைவது மல்லான் என்று கூட்டி, மெய்ப் பொருளைச் சிந்தித்தலும் அதனையே கூறுதலும் அல்லாமல் என்று உரைத்தலுமாம். (123)

மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமு தாம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே.1827

இம் – எனின், பூசைக்குரிய உபகரணங்களில் சிறந்தவை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருமஞ்சனத்தையும், பூமாலைகளையும் சாதனங்களாகக் கொண்ட வழிபாட்டால் விளங்கிய தேவர்கள் மனத்தில் இறைவன் என்றும் இடைவிடாது வீற்றிருத்தற்குரிய காரணம் அவர்கள் பஞ்சாமிர்தம் பதினாறு உபசாரங்கள் இவைகளைக் கொண்டு உச்சிமேல் கைகுவித்தலாகிய நமஸ்கார முத்திரையுடன் அர்ச்சித்தார்கள் என்றவாறு.

ஆகவே, திருமஞ்சனம் மாலைகளோடு பஞ்சாமிர் தமும் பதினாறு வகையான உபசாரங்களும் இன்றியமையாதன என்பதாம்.

மஞ்சனம் – இறைவனை ஆட்டுதற்குரிய நீர். மாலை – பூவும் அதனாலாகிய மாலையுமாம். நிலாவிய – விளங்கிய. பூவும் நீரும் சாதனங்களாகக் கொண்டு பூசித்தலால் விளங்கிய எனச் சிலசொல் வருவித்து முடிக்க.

சென்ற மந்திரத்துச் சிவனைக் காணுமுறை கூறியவர் இம்மந்திரத்து நிலைபெறுத்தும் உபாயமுரைத்தவாறு காண்க. அஞ்சமுதம் – பழம், தேங்காய், தேன், நெய், சர்க்கரை ஐந்தும் கூட்டிச் செய்யப்படுவது. அது ரசபஞ்சாமிர்தம் எனவும், பல பஞ்சாமிர்தம் எனவும் இருவகைப்படும்.

அஞ்சலி – கரம்குவித்தல். இது நமஸ்காரமுத்திரை எனப்படும். இது சிவபெருமான் ஒருவற்கே உரியது. பரதரும் நமஸ்கார முத்திரையால் சிவனைப் பாவனை செய்க எனல் காண்க. (124)

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு
நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. 1828

இம் – எனின், சிவபூசை சிவனை அடைதற்குரிய எளிய உபாயம் எனல் நுதலிற்று.

இ–ள்: சிவபூசையாகிய பதிபுண்ணியத்தைச் செய்பவர்களுக்குப் பூவும் நீரும் உள; சிவபெருமான் அவற்றை அன்புடன் இடுதலைக் கண்டு அருள்புரிவர்; அங்ஙனமாகவும் அளவற்ற பாவிகள் எம் இறைவனாகிய ஈசனை அடைய மாட்டாமல் நடுவில் பயனற்றுப் போகின்றனரே! என்னே அறியாமை என்றவாறு.

சிவனைப் பூசிக்கப் பூவும் நீரும் உள; வெளிப்பட்டு அருள் வழங்க அவன் காத்து நிற்கின்றான்; அங்ஙனமிருக்க, அறியாதார் வீணே பிறவிப்பயனை எய்தமாட்டாது அழிகின்றனர் என இரங்கியவாறு.

இதனால் சாதனங்களின் எளிமையும், இறைவன் கருணைமிகுதியும், அறியாதார் சிறுமையும் தெரிவிக்கப்படுதல் காண்க.

கோயில் என்பது தில்லையையே குறிப்பது போல, புண்ணியம் என்பது சிவபூசையாகிய பதிபுண்ணியத்தையே குறிக்கும். (125)

*அத்த னவதீர்த்த மாடும் பரிசுகேள்
ஒத்தமெய்ஞ் ஞானத் துயர்ந்தார் பதத்தைச்
சுத்தம தாக விளக்கித் தெளிக்கவே
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே.
1829

இம் – எனின், நவதீர்த்தங்களில் முழுகுதலின் பயன னைத்தையும் ஞானியின் பாதநீரைத் தெளித்துக் கொள்வ தனால் எய்தலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவபெருமான் உயிர்களை உய்யக்கொள்வதற் காக அருளிய ஒன்பது தீர்த்தங்களிலும் மூழ்குவதால் விளையும் நன்மைகளைக் கேட்பாயாக; இருவினையொப்பு மலபரிபாகம் பெற்ற உண்மை ஞானத்தால் உயர்ந்தார் திருமுடி கழுவிய நீரைத் தெளித்துக் கொள்ள முத்திப் பேறுளதாம் என்று மூலனார் கூறியது என்றவாறு. (126)

மறுப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமுள் ஏந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே. 1830

இம் – எனின், சிவபூசையில் செய்யப்படும் பிரார்த் தனையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தேவதேவனே! கன்ம பூமியாகிய இங்கு மல மாயைகளினால் தலைவனது தாளில் தலைப்படுதலை மறந்து

---

*இம்மந்திரம் சில ஏடுகளில் இங்கு இடம் பெற வில்லை. அதன் காரணமும் அதன் விளக்கமும் கண்டு தெளிக.

ாழ்ந்தாலும், பூவையும் நீரையும் சிறப்பாகத் திருத்தமாக ந்தி, மறவாமல் உன்னை வழிபடுகின்ற தன்மையை மிகுதி ாக அடைதல் வேண்டும்; அதனை அருளுக என்றவாறு.

தேவதேவ! எப்பிறவியிலும் நின்னைப் பூசிக்கும் த்தியை அருளுக என வேண்டியவாறு.

உயிர்கள் பிறவிச் சூழலில் அகப்படின், அதற்குரிய பினைவயப்பட்டு மயங்கிச் செய்வன தவிர்வன மறந்து உழலு ாதலின், தனக்கு ஒரு தலைவன் உளன்; அவன் சிவனே; அவனே நினைக்கத் தக்கவன்; பூசிக்கத் தக்கவன் என்பதை மறந்துவிடும். அங்ஙனம் மறவாது பூவும் நீரும் ஏந்திப் பூசிக்க வந்திக்க வாழ்த்த வரந்தரல் வேண்டும் என்று பூசையில் பிரார்த்திக்க என்பதாம். இம்மந்திரம் 'பிறவாமை வேண்டும்' என்னும் பெரிய புராணத்துப் 'பிறப்புண்டேல் நின்னை என்றும் மறவாமை வேண்டும்' என்ற பகுதியை நினைப்பித்தல் காண்க. (127)

**ஆரா தனையும் அமரர் குழாங்களுந்**
**தீராக் கடலும் நிலத்துய தாய்நிற்கும்**
**பேரா யிரமும் பிரான்திரு நாமமும்**
**ஆரா வழியெங்கள் ஆதிப் பிரானே.** 1831

இம் – எனின், ஆயிரம் திருநாமங்கள்கூறிப் பூசித்த தலின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆயிரம் திருநாமங்களையும், சிவபெருமானது சிறப்புத் திருநாமங்களையும் சொல்லிப் பொருந்திப் பூசிக்கும் சாதனையால் எம் ஆதிப்பிரானாகிய சிவன் வெளிப்படுவன்; அப்போது நீங்கள் வாழ்கின்ற இந்த நிலத்தில் வழிபாடுகளும்,

தேவர்கள் கூட்டமும் அலை ஓயாத கடலும் ஆகிய எல்லாம் உமது ஏவல்வழி உமதாய் நிற்கும் என்றவாறு.

ஆயிரந்திருநாமமும் சிவாதிநாமங்களும் சொல்லிச் சிவனைப் பூசிக்க அனைத்தும் நும் ஏவல்வழி நடக்கும் என்பதாம்.

ஆராதனை – வழிபாடு. வானவரும் வழிபடுவர் எனவே, பிற கூற வேண்டா என்பதாயிற்று. தீராக் கடல் – அலை ஓயாத கடல்; என்றது சிவபூசை செய்பவர் ஆணையிடு வாராயின், அதுவும் ஓசையின்றி அவரது ஆணைக்குக் கட்டுப் பட்டு நிற்கும் என்பது விளக்கி நின்றது.

பேராயிரம் கூறிப் பரவுதல் பெருமானுக்கு விருப்ப மாதலை 'பேராயிரம் பரவி வானோரேத்தும் பெம்மானை' 'பூவனூர்ப் புனிதன் திருநாமந்தான், நாவில் நூறு நூறாயிரம் நண்ணினார்' 'ஆயிரம் திருநாமம் சொல்லி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' எனவரும் திருமுறைப் பிரமாணங்களால் அறிக.

பிரான் திருநாமம் என்றது சிவாய தேவாய, பவாய தேவாய முதலிய ஒன்பது நாமங்களாம். அவற்றுள் சிறந்தது சிவன் என்னும் நாமம். இவைகளைச் சொல்லி என்பதாம்.

ஆராவழி – ஆர்தல் – பொருந்துதல். ஆகும் வழி – ஆவழி – ஆராவழி – தியானிக்கும் வழி என்க. பிரான் ஆவன் என வினைமுற்று வருவித்து முடிக்க. (128)

**ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்**
**தானந்த மில்லாத் தலைவன் அருளது**
**தேனுந்து மாமலர் உள்ளே தெளிந்ததோர்**
**பாரையுங் குணமும் படைத்துநின் றானே. 1832**

இம் – எனின், சிவனருள் சிந்தையில் நிறைந்தது; அவ்வருளில் இறைவன் வான் முதலிய ஐம்பூதங்களின் குணமாயினான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பசுவினிடமிருந்து அடையப் பெறம் பால் முதலிய ஐந்தானும் திருமஞ்சனம் செய்து தேவர்களின் கூட்டம் வணங்க, தனக்கு ஓர் உறுதியும் இல்லாது அநாதி நித்தியனாக விளங்கும் முதல்வன் திருவருள், தேனைப் பிலிற்றுகிற பெரிய தாமரைபோன்ற இதயத்துள்ளே தெளிந்திருந்தது; ஒப்பற்ற முதல்வன் பார் முதலிய பூதங்கள் ஐந்தினுக்கும் ஐங்குணங் களையும் படைத்தருளினன்; இதனை ஓர்க என்றவாறு.

முதல்வன் அருள் என் இதயத்தாமரையுள் தெளிந் திருந்தது; அதனால் இறைவன் பார் முதலிய பூதங்கள் ஐந்தற்கும் கடினமாய்த் தரித்தல் முதலிய குணங்களைப் படைத்தருளினன்; அதனை உணருகிறேன் என்பது கருத்து.

ஆன் ஐந்து – பஞ்சகவ்யம். அவை பால், தயிர்,மோர், நெய், கோசலம் என்பனவாம். இவற்றுள் மோர், நீக்கிக் கோமயம் கோடலும் ஒன்று. பால், தயிர், வெண்ணெய், மோர் என்பாரும் உளர். அமரர் கணம் ஆனைந்தும் ஆட்டித்தொழ என மாறுக.

அனைத்தையும் தன்னுள் அடக்கிப் புனருற்பவ காலத்துப் படைப்பான் சிவனே ஆதலின் 'தான் அந்தமில்லான்' என்றார். தனக்கு இறுதி இல்லாதவனே அனைத்திற்கும் இறுதி வழங்க முடியும் என்க.

அருளது; அது பகுதிப்பொருள் விகுதி. உந்து – பிலிற்றுகின்ற. மாமலர் என்றது இதயத்தாமரையை. என்

இதயத்துள்ளே அருள் தெளிந்து விளங்கிற்று. அதனால் பார்முதற் பூதங்கள் அனைத்திலும் கடினமாய்த் தரித்தல் முதலிய குணங்கள் அரனால் படைக்கப்பட்டதை உணர்ந்தேன் என்பதாம். பாரைங்குணம் – சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தும் ஆம். (129)

**உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி**
**மழைக்கொண்ட மாமுகின் மேற்சென்று வானோர்**
**தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப்**
**பிழைப்பின்றி எம்பெரு மானரு ளாமே.1833**

இம் – எனின், சிவனருள் பெறும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நல்ல இடத்தினின்று கைக்கொள்ளப்பட்ட பூவையும் நீரையுங் கொண்டு, சூல்கொண்ட மேகம்போல மேலே சென்று, தேவர்கள் தழைத்த நேசத்துடன் விளங்கிச் சந்நிதியில் நின்று துதிக்க, தவறாமல் எம்பெருமான் அருள் ஆன்மாவினிடமாகும் என்றவாறு.

வானோர் பூவும் நீருங்கொண்டு அன்புடன் ஏத்தப் பெருமான் அருள் தவறாதாம் என்பது கருத்து.

உழை – இடம். தூய்மை நிறைந்த இடத்தில் கொள்ளப் பட்ட பூவும் நீருமே பூசைக்கு உகந்தன. ஆதலான் 'உழைக் கொண்ட பூ நீர் ஒருங்குடன் ஏந்தி' என்றார்.

மழைக்கொண்ட மாமுகில் – சூல்கொண்ட கரிய மேகம், நெடுந்தூரம் சென்று குளிர்ந்த இடத்தில் நீரைக்

கொட்டும் முகில் போலப் பத்திமிக்கு இறைவன் மீது ஆனந்தத்தைச் சொரியும் வானவர்கள் என உவமையும் பொருளும் பொருத்திக் காண்க.

தழைக்கொண்ட பாசம் – தழைக்கின்ற அன்பு. பாசத்தால் என்க. தயங்கி நின்று – திருமுன் விட்டுப் பிரிய மனமில்லாது விளக்கத்துடன் தாமதித்து நின்று. எம்பெருமான் அருள் பிழைப்பின்றி ஆம் என்க. (130)

**வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு**
**உள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு**
**கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதார்**
**அள்ளற் கடலுள் அழுந்துகின் றாரே. 1834**

இம் – எனின், துன்பக் கடலுள் அழுந்துவார் யார் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வெள்ளமாகிய உள்ளே விரியப்பட்ட சடையுடைய சிவபெருமானுக்கு, மனத்தில் நிறைந்துள்ள அன்புக் கடலிற் புக்கு, நீண்ட சுமைபோன்ற பூவையும் ஏந்தி, ஓய்ந்து ஓய்ந்து, வருவதாகிய பிறவியென்னும் கள்ளக் கடலை விட்டு, உண்மையன்புடன் வணங்கமாட்டாதார் சேற்றுடன் கூடிய துன்பக் கடலுள் அழுந்துகின்றார்; என்னே அறியாமை என்றவாறு.

சிவபெருமான் திருவடிக்குப் பூவும் நீருங் கொண்டு போற்றப்படாதார் பிறவிக்கடலிற்பட்டு உழல்வர் என்பது கருத்து.

கடல் என்பனவற்றுள் முன்னது நீர்க்கடலையும், பின்னது கடல்போன்ற அன்பையும், அடுத்தது பிறவிக்கடலை

யும் இறுதியிலுள்ளது துன்பக்கடலையும் முறையே உணர்த்தின. அல்லற்கடல் அள்ளற்கடல் ஆயிற்று எனலுமாம். அல்லல் – துன்பம். கும்பீபாகம் என்னும் நரகமுமாம். (131)

**கழிப்படுந் தண்கடற் கௌவை யுடைத்து**
**வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்**
**பழிப்படு வார்பல ரும்பழி வீழ**
**வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே.1835**

இம் – எனின், உலகவர் சிவபூசை செய்ய அறியாது மயங்குவர் என அவர் நிலையும் ஞானிகள் நிலையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உலகவர் பலரும் நுகர்ந்து கழிக்கப்படுகின்ற குளிர்ந்த கடல்போலும் துன்பங்களை உடைத்து இறைவன் வழியின் கண்படுவராய் மலர் மொட்டு இவைகளைக் கொண்டு பூசைசெய்ய அறியாதவர்கள் பலரும் வீணே பழியை எய்துவர். பூசியாதவர்கள் என்ற பழிச்சொல் நீங்க மலபந்தத்தினின்றும் வெளிப்படுவோர் உச்சியில் சிவன் மேவி நின்றான் என்றவாறு.

பூசிக்க அறியாதார் பழிப்படுவர்; பழிதீரப் பூசிப்பவர்கள் உச்சியில் சிவம் விளங்கும் என்பது கருத்து.

கழிப்படும் தண்கடல் என்றது கழிகால்களாகிய உப்பங்கழிகளோடு கூடிய குளிர்ந்த கடல் எனவும், கழிப்படும் கௌவை எனக் கூட்டி உண்டு கழிக்கப்படுகின்ற துன்பங்கள் எனவும் பொருள் கொள்க. கௌவை – துன்பம். 'அரும்பொடு' மலர்கள் கொண்டு ஆர்வத்தை உள்ளே வைத்து என்றாற்போல 'மலர் மொட்டு அறியார்கள் பலர்' என்றார். பிறவி எடுத்ததன் பயன் இறைவனைப் பூசித்தலாக இருக்கவும் அது செய்யாமையின் 'பழிப்படுவார்' என்றார்.

பதி புண்ணியங்களைச் செய்து சிவஞானங் கைவரப் பெற்றுச் சிவபூசை செய்வோர் பழியிலிருந்து மீள்வர் என்பார். 'பழிவீழ வெளிப்படுவோர்' என்றார். சிவன் என எழுவாய் வருவிக்க. உச்சி – சகஸ்ராமாகிய பிரமரந்திரஸ்தானம். உச்சியில் வெளிப்பட்டு அருளுவன் சிவன் என்பதாம். (132)

**பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்**
**பயனறி வார்க்கரன் தானே பயிலும்**
**நயனங்கள் மூன்றுடை யானடி சேர**
**வயனங்க ளாலென்றும் வந்துநின் றானே.**
1836

இம் – எனின், இறைவனை எய்துதற்குரிய உபாயம் சிவபூசை ஒன்றே என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வாழ்வில் பயன்படக்கூடிய அறிவு ஒன்றே உள்ளது. அஃது யாதோவெனில் பலவகையான மலர்களைத் தூவி இறைவனைப் பூசித்துப் பயன் கண்ட பேர்க்குச் சிவபரம் பொருள் தானே வெளிப்பட்டும் உள் நின்றும் பழகும்; கண்கள் மூன்றுடைய பெருமான், திருவடியைச் சார உபாயங்களால் என்றும் எழுந்தருளிவந்து முன் நின்றருளுவன் என்றவாறு.

சிவபூசை செய்தல் ஒன்றே பிறந்ததன் பயனைத் தரும் செயல் ஆம். அதனைச் செய்யின் இறைவன் முன்னின்று அருள் செய்வன்; அவன் திருவடியைச் சேரலாம் என்பது கருத்து.

'புல்லிலை எருக்கமாயினும் வேண்டேம் என்னார், ஆதலின் வரையறை கூறாது பன்மலர் என்றாராயினும், வெண்ணிறமான மணமுள்ள மலர்கள் சாத்துவிகமும், செந்நிற

மலர்கள் ராஜசமும், நீலம் முதலிய ஏனைய நிற மலர்கள் தாமசமும் ஆதலின், இறைவன் பூசைக்கு உகந்தன வெண்ணிற மலர்களே என்பது ஆகமவிதி.

பயிலுதல் – இடைவிடாமல் உரைத்தல். நயனம் – கண். வயனம் – உபாயம். (133)

**ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்**
**றார்த்தெம தீசன் அருட்சே வடியென்றன்**
**மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற**
**தூர்த்தனை யாருந் துதித்துண ராரே.** 1837

இம் – எனின், சிவபூசை செய்தலின் இன்றியமை யாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருமேனி கொண்டருளிய என்னுடைய தலைவனும், என்றும் மூப்பு முதலியன எய்தாத முதன்மையான திருமேனியைத் தாங்கிய புண்ணிய வடிவானவனுமான இறை வனை யாரும் துதித்து உணரார்கள்; அங்ஙனமிருக்க, பெரிய பூக்களைத் தூவித் திருமுன்பு நின்று தொழுது ஆரவாரித்து எம்முடைய ஈசனது சேவடி என்று போற்றி ஏத்துவர்; என்னே அறியாமை என்றவாறு.

இறைவனை ஏத்துவார் துதித்துத் துதித்து மனம் கனிந்த பின்பு, மலர்தூவி வழிபட வேண்டியிருக்கக் கனிவின்றியே இறைவனை உணராதே ஏத்துவார்கள்; இஃது என்னே என்பது கருத்து.

ஆர்த்து என்பது வீண் ஆரவாரம் செய்து என்ற கருத்தினது. மூர்த்தி – திருமேனி கொண்டவன் என்க; காரணப்

பெயர். மூவா முதல் – என்றும் மூப்படையாத முதல்வன். முதலான உரு என அதற்கு அடைமொழி ஆக்கலுமாம். மூவா எனவே பிறப்பும் இறப்பும் மாற்றமும் இன்மை பெற்றாம்.

தீர்த்தன் – புண்ணியன். (134)

**தேவர்க ளோடிசை வந்துமண் ணோடுறும்**
**பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை**
**மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்**
**நீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. 1838**

இம் – எனின், தேவர்கள் பூசிப்பதும் நேசிப்பதும் புகழ்வதும் செய்வர்; மண்ணவரில் நினைக்கவல்லார் யார்? என இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: தேவர்கள் பூவையும் திருமஞ்சனங் கொண்டருளுதற்குரிய நீரையும் சுமந்து புனிதனை வழிபட்டுத் தோத்தரிக்கின்ற பரந்த புகழ் வந்து மண்ணுலகில் பரவும். அங்ஙனமாக. மூவர் தேவரொடும் கூடிக் கலப்பால் பல வடிவு தாங்கியும், அவரின் வேறாய் அவர்களையும் பணிகொள்ளும் முதல்வனாயும் நின்று அருள்புரியும் தன்மையை அறிந்து நினைக்கவல்லார் யாவர்? என்றவாறு.

சிவம் மூவராயும் முதல்வனாயும் நின்றருள்புரிவதை நினைப்பார் யார்? தேவர்களும் போற்றிப் புகழும் இசை இங்கும் பரவுகிறதே! என்பது கருத்து.

அயன், அரி, அரன்என்னும் மூவரினும் கலந்து நின்று; அவர்களைத் தத்தம் பணியில் இயக்கி நிற்கும் நிலையில் மூவராயும், அவர்கட்குத் தலைவனாய்த் தனித்து நிற்கும் நிலையில் முதல்வனாயும் சிவம் விளங்கும் என்பார் 'மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்' என்றார். (135)

உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில்
லீரே. 1839

இம் – எனின், உலகவரை நோக்கிப் பூசைசெய்க என ஊக்குதல் நுதலிற்று.

இ–ள்: தாம் உய்யுமாறு சிவத்தியானம் செய்ய வல்லோர் நடுவிலே, திருமஞ்சன நீரையும் பூவையும் ஏந்தித் தவறு நேராமல் ஈசனை எண்ணிப் பெரிய தவம் செய்து, மனத்தோடு இழைதலைக் கொண்ட திருவடியிலே கூட்டமாகிய மலர்களைத் தூவி, குளிர்ந்த மேகம் போல ஆனந்தக் கண்ணீர் பொழிய நிலைபெற்று நிற்பீர்களாக என்றவாறு.

திருவடி சேரும் சிந்தையாளர் நடுவே நீரும் பூவுங் கொண்டு இறைவனைப் பூசித்துக் கண்ணீர் மல்கக் கசிந்து நில்லுங்கள் என்பது கருத்து.

உழைக்க வல்லார் – தியான யோகத்தில் உழைக்க வல்ல மெய்யடியார்கள். உழை – பக்கம்; உழைக்கவல்லார் – சிவன்பால் அணுகும் நல்வாய்ப்பு உடையார் எனலுமாம். 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என்று மணிவாசகப் பெருமானும் வேண்டுதல் காண்க.

பிழைப்பு – குற்றம். சிவபூசைக்கண் நிகழும் குற்றங் கள் மந்திரலோபம். கிரியாலோபம், தந்திரலோபம், திரவிய லோபம், சிரத்தாலோபம் என ஆகமங்களான் விதிக்கப்படும் குற்றங்கள்.

இழைக்கொண்ட பாதம் – சிந்தையோடு இழைதலைக் கொண்ட திருவடி. இதனை 'நாயகன் சேவடி தைவரு சிந்தையும்' என்ற அனுபவம் கொண்டு தெளிக.

மழைக்கொண்டல் போல – மழையைப் பொழிகின்ற மேகம் போலக் கண்களிலிருந்து ஆனந்த நீர் பொழிய. கொண்டல் – பூசிப்பார்க்கும், கண்ணீர் மழைக்கும் ஒப்பாகக் கொள்க. நில்லீர் என்பது ஏவல் வினைமுற்று. நிற்பீர்களாக என்பதாம். (136)

**வென்று விரைந்து விரைப்பணி யென்றனர்**
**நின்று பொருந்த இறைபணி நேர்படத்**
**துன்று சலமலர் தூவித் தொழுதிடிற்**
**கொண்டிடு நித்தலுங் கூறிய வன்றே.** 1840

இம் – எனின், சிவபூசை செய்யுங்கள்; இதுவே உமக்கு உபதேசமாம் எனல் நுதலிற்று.

இ–ள்: ஐம்புலன்களையும் வென்று தூபமிடும் பணிகளைத் தாங்கிய அன்பர்களே! சிவன் நேர் நின்று அன்பு பொருந்தச் செய்யும் சிவப்பணி சித்திக்க நிறைந்த நீரும் பூவும் கொண்டு தூவி வழிபடுதலை நாடோறும் விடாதே கைக் கொள்ளுங்கள்; இவைகள் நுமக்குக் கூறிய உபதேசங்கள் அல்லவா? என்றவாறு.

சிவபுண்ணியம் மிகச் சிவபூசை செய்யுங்கள்; இதுவே உமக்குச் செய்யும் உபதேசமாம் என்பது கருத்து.

வென்று – ஐம்பொறிகள் வழியாக ஐம்புலன்களிற் சென்று மேன்மேலும் வினைகளைத் தேடிக்கொள்ளாதவாறு

மனத்தை வென்று என்பதாம். வென்ற பின்பு மனம் ஒன்றினும் பற்றின்றி நில்லாது ஆகலின், 'விரைந்து' என்றார்.

விரைப்பணி – மணந்தரும் தூபமிடும் தொண்டு. விளக்கு நற்றூபதீபம் விதியினால் இடவல்லார் எய்தும் பயன் மெய்நெறி ஞானமாகும் ஆதலின் விரைப்பணி ஏற்றமை கூறிய வாறாம்.

நின்று – திருவடிக்கண் பதித்த நெஞ்சாக நின்று. பொருந்த – அத்திருவடிக்கண் நன்கு பொருந்திப் பயில. இறைபணி நேர்பட – தன் செயலற்றுத் தான் செய்யும் பணிகள் யாவும் சிவப்பணியேயாகச் சிறக்க.

தொழுதிடில் நித்தலும் கொண்டிடும் என முடிக்க. கூறிய அன்றே – இவை நுமக்குக் கூறிய உபதேசங்கள் அன்றே என்பதாம். (137)

**சாத்தியும் வைத்தும் சயம்புவென் றேத்தியும்**
**ஏத்திய நாளும் இறையை யறிகிலார்**
**ஆத்தி மலக்கிட் டகத்தழுக் கற்றக்கால்**
**மாத்திக்கே செல்லும் வழியது வாமே. 1841**

இம் – எனின், சிவபூசையின் பயன் முத்தி அடைதலே எனல் நுதலிற்று.

இ–ள்: இறைவற்குப் பூமாலைகளைச் சாத்தியும், அருச்சித்தும், சுயம்பு என்று ஏத்தியும், வணங்கியும் நாடோறும் இறைவனை உணரமாட்டார் உலகவர்; உலகம் போகம் இவற் றில் வைத்த ஆசையை நீக்கி, மனக்குற்றங்களையும் களைந் தால் அதுவே பெரிய திசையாகிய வீட்டுலகிற்குச் செல்லும் நெறியாம் எ–று.

சிவபூசை செய்தலே சித்தசுத்திக்கு வழி; அதனைச் செய்யில் வீடுபேறு உளதாம் என்பது கருத்து.

சாத்தியும் என்ற சொல்லாற்றலால் மாலை முதலியன என்றும், வைத்தும் என்ற சொல்வழக்கால் நிவேதனங்கள் என்றும் கொள்க.

சயம்பு – சுயம்பு என்பதன் திரிபு. சுயம்பு என்பதற்குத் தானே தோன்றியவர் என்பது பொருள். நாளும் சாத்தியும் வைத்தும் ஏத்தியும் என்று கூட்டுக.

ஆத்தி – ஆர்த்தி என்பதன் திரிபு. ஆசை என்பது பொருள். மலக்கிட்டு – மயங்கச் செய்து. ஆசை மயங்கச் செய்தலாவது அதன் வலியை அழித்து அடக்குதல். அகத்தழுக்கு மனக் குற்றங்களாகிய காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியங்களாகிய பகைக் கூட்டம் ஆறும். மா திக்கு – பெரிய திசை; பரவெளியாகிய முத்திப் பெருவெளி என்க.

சில ஏடுகளில் 'ஆத்தி மலரிட்டகத்திழுக்கற்றக்கால்' என்றபாடம் காணப்படுகிறது. இழுக்கு என்ற பாடமே சிவபூசை என்ற அதிகாரத் தலைப்பிற்கு ஏற்ற சிறந்த பாடம் ஆகலாம் ஆய்க. (138)

**ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புற**
**மேவித் திரியும் விரிசடை நந்தியைக்**
**கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்**
**தாவிக்கு மந்திரந் தாமறி யாரே.** 1842

இம் – எனின், இறைவனை இலிங்கத்தில் ஆவாகிக்கும் முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இதயத் தாமரையின் அப்புறத்தில் இன்பு பொருந்த எழுந்தருளி உலாவருகின்ற விரிந்த திருச்சடையை யுடைய பெருமானை அழைத்து, தியானித்துக் கொண்டு சென்று சிவலிங்கத்தினிடம் தாபிக்கும் மந்திரத்தை அறியார் உலகவர் என்றவாறு.

இதயத்தாமரையின் உள்ளே நிலவும் பெருமானை அழைத்து, வெளியில் எழுந்தருளச் செய்து இலிங்கத்தினிடம் தாபிக்கும் மந்திரம் அறியார் உலகவர் என்பது கருத்து.

'கையில் பூவை எடுத்துக்கொண்டு மூடி தாமரை மொட்டுப்போலக் குவித்து சிவமூலமந்திரத்தையும் அகார முதல் உன்மனை வரையுள்ள பதினாறு பிராசாத மந்திரங் களையும் உச்சரித்து ஆவாகன முத்திரையால் புஷ்பங்களைச் சதாசிவமூர்த்தியினுடைய உச்சியிலே வைத்து; ஒளிமயமான வரும், அருவமானவரும் விபுவும் அறிவு ஆனந்தமயமான வருமாகிய பரசிவத்தைக் கன்மசாதாக்கியத்தில் விளங்குகிறவ ராகத் தியானித்து, சாவஞ்ஞதை முதலான ஆறு குணங்களோடு கூடிய ஆறு அங்க நியாசங்களைச் செய்து, மூர்த்தியின் இதயத்தில் ஸ்தாபன முத்திரையால் தாபித்து' எனவரும் பூசை முறையால் தாபிக்கு முறையைத் தெளிக. இப்பகுதியே தாபிக்கும் மந்திரம் எனப் படுவது. இதன் விரிவையும் பயனையும் சிவாக்கிர பத்ததி அகோர சிவ பத்ததி இவைகளிற் காண்க. கூவி – அழைத்து.

[illegible] ।
[illegible] ॥

என்று பிரார்த்தனை செய்து தாபித்தல் ஈண்டு விளக்கப் பெற்றது. சிவத்திடை – சிவம் நின்று நிலவும் குறியாகிய சிவலிங்கத்தில். எங்கும் வியாபித்துள்ள சிவத்தை இதயத் தாமரையினின்று சிவலிங்கத்தினிடத்து நிலவ வேண்டிக் கொள்ளுதல் பொருந்துமோ எனின், விறகில் தீ வெளிப்படுதல் போல மந்திரம் கிரியை பாவனை இவற்றால் இலிங்கத்தில் சிவத்தை விளங்கச் செய்தலே தாபனம் என்பது. அசிந்திய விசுவ சாதாக்கியத்திலும்,

ஸர்வம் ஶாக்தம் பராஃ க்ருத்ய தஸ்மிந் ப்ரகாரணே |
பூர்ணம் ஶாஶ்வதம் ஸத்ய ஜ்ஞாநாநந்த ஸ்வரூபகம் ||
வ்யாபகம் ஸர்வதத்த்வாநாம் அசிந்த்யம் நிர்மலம் |
பாப்ய பாபக ரஹிதம் வாங்மநோதீத கோசரம் ||
வ்யக்தம் கார்யார்த்த விஶேஷேண நிஷ்கலம் ஸகலாத்மநி |
பூர்ணாவாஹந ஸம்யோகம் ஶிவலிங்கே நியந்த்ரணாத் ||

என்று விளக்கப்பெற்றுள்ளமை காண்க. (139)

**சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கம்**
**காணு மளவுங் கருத்தறி வாரில்லை**
**பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு**
**மாணிக்க மாலை மனம்புகுந் தானே. 1843**

இம் – எனின், உயிரினிடமாகச் சிவம் பிரகாசிக்கச் செய்யும் முறையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சாணியுள் மறைந்த மாணிக்கத்தைக் காணும் அளவு அதன் உண்மையியல்பை அறிவார் யாரும் இல்லை; அதனைப் போற்றி மறைத்துள்ள மாசினைப் போக்கி நினைப்பவர்கட்கு மாணிக்கமலை போன்ற சிவன் மனத்தினுள் புகுந்து விளங்குவான் என்றவாறு.

புழுதியுள் மறைந்த மாணிக்கத்தைக் காணுமளவும் அதனைப் பற்றிய கருத்தொன்றும் அறியார்கள்; அதன் அழுக்கைப் போக்கி, அதனை நினைவோர்க்கு மாணிக்க மலை போல இறைவன் மனம்புக்கு விளங்குவன் என்க.

சாணாகம் – சாணி. சாண் ஆகம் எனப் பிரித்து எண் சாண் அளவினதாகிய உடல் எனலுமாம். மூல முதல் பிரமரந் திரம் வரையிலுள்ள ஆறு ஆதாரங்களிலும் சாண் சாணாக ஆறு சாண் அளவுள்ள உடல் என்பாரும் உளர். சாணி என்றது மலத்தை, அதனுள் அழுந்திய மாணிக்கம் ஆன்மா. அதனைக் காணுதலாவது ஆன்மா ஞானம் உடையது; ஞானத்தால் பரமனை அடையும் இயல்பினது என்னும் கருத்தை அறிதலாம்.

பேணி – உயிரைப் பேணி. பெருக்கிப் பெருக்கி – மல மாயைகளைத் துடைத்துத் துடைத்து. நினைவோர்க்கு – உயிர்க்குயிராய் ஒன்றாய் நிற்கும் சிவத்தை அறிவோர்க்கு. மாணிக்க மலைபோலும் கூத்தன் மனம் புகுந்தான் என்பதாம்.

(140)

**பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி**
**இருந்தன்மை யாலுமென் நெஞ்சிடங்**
**கொள்ள**
**வருந்தன்மை யாளனை வானவர் தேவர்**
**தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே.**

1844

இம் – எனின், என் மனத்தை இடங்கொள்ள எழுந் தருளும் பெருமானை வானவர் தேவர் தாங்கி நிற்பர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பெருந்தன்மையோடு கூடிய நந்தியும், மாறு பட்ட இருளாகியஆணவத்திற்குச் சக்கராயுதம் போன்றவனும், பேரருட்டன்மையால் என் மனத்தையிடமாகக் கொண்டு எழுந்தருளவருபவனும், வேண்டுவார்க்கு வேண்டுவதைத் தரும் தன்மையாளனுமான சிவனை வானவர்களாகிய தேவர் கள் தாங்கி நின்றார்கள் என்றவாறு.

என் மனதிடங்கொள்ளவந்த பெருமானைத் தேவர்கள் தாங்கி நின்றார்கள் என்பதாம்.

நந்தி(யை), நேமி(யை), வருந்தன்மையாளனை, தருந்தன்மையாளனைத் தேவர் தாங்கி நின்றார் என முடிக்க.

நந்தி – சிவன். அவற்குள்ள பெருந்தன்மையாவது கடியன், கலதி, காமி இவன் என்னாதே ஆட்கொள்கின்ற பெரிய குணம், உயிரின் உணர்தற்றன்மையோடு பிணங்கி அறியாமையை விளைவித்தலின் 'பிணங்கிருள்' எனப்பட்டது. அவ்விருளையும் அறுப்பதற்கு உரிய சக்கராயுதம் போன்றவன் என்பார் நேமி என்றார். காளைபோல்வானைக் காளை என்றது போல நேமிபோல்வானை நேமி என்றது உவமவாகு பெயர். உருவக அணி.

நான் ஒற்றற்கும் பற்றாத சிறு தொழிலும் சிற்றறிவும் உடையேனாக இருந்தும். பெரிய தன்மையால் என்னை ஆளது கொண்டான் என்பார் 'இருந்தன்மையாலும் என் நெஞ்சிடம் கொள்ள' என்றார்.

அவனே வலிய வந்து என் நெஞ்சிடங் கொண்டான்; தேவர்கள் அவனைப் பற்றித் தாங்கி நின்றார்கள் எனத் தம் பரிபாகச் சிறப்பும், தேவர்களின் பரிபாகம் இன்மையும் தோன்றக் கூறினார்.

வானவராகிய தேவர் என்க. (141)

**சமைய மலசுத்தி தன்செயல் அற்றிடும்**
**அமையும் விசேடமு மானமந் திரசுத்தி**
**சமையநிர் வாணங் கலாசுத்தி யாகும்**
**அமைமன்னு ஞான மானார்க் கபிடேகமே.1845**

இம் – எனின், தீட்சைகளின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சமயதீட்சையால் மூலமலம் தூய்மையுறும்; விசேட தீட்சையால் பசுகன்மம் தொலையும்; மந்திர சுத்தியும் உண்டாம்; அதன்மேலுள்ள சமயத்திற் சிறந்த நிர்வாண தீட்சையால் கலாசுத்தியாகும்; பரபரப்பின்றிஅமைதலைப் பொருந்திய ஞானமேயான பேர்க்கு அஸ்திராபிஷேகமாகிற ஆசார்யாபிடேகமாம் எ–று.

சமயம் விசேடம் நிர்வாணம் ஆசாரியாபிடேகம் அனைத்தும் முறையே மலசுத்தி, கன்மநாசம், மந்திரசுத்தி, கலா சுத்திகளை அளிப்பனவாம். அசிந்தியவிசுவ சாதாக்கியத்தில் சமயதீட்சாவிதியைப் பற்றிக் கூறும் போது,

வாமெளவ ஶோவநம் க்ஷயாத் பாஶவிஶ்லேஷ தத்ர
விஶேஷத:

எனச் சமயதீட்சையின் பயன் பாசமோசனம் எனக் கூறப்பட் டிருத்தல் காண்க.

விசேட தீட்சை சீடன் இதயத்திலிருந்து உயிரைச் சிவா சாரியன் சங்கார முத்திரையால் பிரித்து எடுத்து, வாகீஸ்வரி கர்ப்பத்தில் சேர்த்துச் சிவகுமாரனாக உற்பவிக்கச் செய்தல் ஆதலின், அவன் செய்யும் சிவபூசையில் மந்திரங்கள் அனைத் தும் பெருமானால் அதிட்டிக்கப்பட்டதாகவும், ஓங்காரம் முதல் நம: வரை பிராசாத மந்திரங்கள் மௌனமாக ஞானசத்தி

மயமாகத் தியானிக்கப்படுவதாலும் 'விசேடமுமான மந்திர சுத்தி அமையும்' எனக் கூறப்பெற்றது.

ஞுவஶ்ருகெஷு ஸவெ-ஷு ஸஊாவாஶ்ஶ ஶோ
ஜவெகஃ

என்னும் வசனப்படி, பூசைக்கு இடையூறு இல்லாமல் மௌன மாக ம்ந்திரசுத்தி செய்தல் சிவபூசையாகிய விசேட தீட்சிதன் கடமையாதல் அறிக.

நிர்வாண தீட்சை சமயத்திற்குச் சிறந்த தீட்சை ஆதலின் சமய நிர்வாணம் எனப்பட்டது. இத்தீட்சையில் சாந்தியதீதை முதலான பஞ்சகலைகளையும் சீடனுடைய உச்சியில் கட்டப் பெற்றுள்ள நூலில் அமைத்தலாகிய யோஜனமும், கலைகட்குத் தர்ப்பணமும், தீபனமும், விலோகனமும், சந்தானமும், பேதனமும், தாடனமும் செய்து சுத்தி செய்தலே சிறந்த கிரியை ஆதலின் 'நிர்வாணம் கலாசுத்தி ஆகும்' எனப்பட்டது.

இதன் விரிவையும் அதற்குரிய மந்திரங்களையும் தீட்சா விதியில் காண்க.

அபிடேகம் என்பது ஞானிகட்குச் செய்ய வேண்டியது. அதன் பயன் சாந்தமாகிய அமைதியும் சிவத்துவப் பிராப்தியுமாம். சீடனைச் சிவத்துடன் சேர்ப்பித்து நீ எல்லாம் அறிந்தவனாகுக; நித்திய திருப்தியுடையவனாகுக; அநாதி போதனாகுக; அழியா ஆற்றலுடையனாகுக; எல்லையற்ற ஆற்றலுடையனாகுக என்று ஆசி கூறி, அவனிடம் எல்லா ஆற்றலும் விளங்கப் பண்ணி, சிவமாந்தன்மை வழங்கலாம் என்பது ஆகமம்.

இம்மந்திரத்தின் சிறப்பும் முறையும் அறியாதார் இதனை இடைச் செருகல் என்று கருதி விடுப்பர். (142)

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது
ஊழில் உயிரை யுணரவுந் தானொட்டா
ஆழி யமரும் அரியயன் என்றுளோர்
ஊழி கடந்துமோ ருச்சியு ளானே. 1846

இம் – எனின், ஞானிகட்கு அல்லாது இத்தீட்சையின் இன்றியமையாமையும் சிவபூசையும் அறியவியலாது என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பல்லூழிக்காலம் பயின்றரனைப் பூசித்தார்க்கு அல்லது, வினைப்போகமற்ற சுத்தான்மாவை உணரவும் இயலாது; சுத்தான்மாவை அதிட்டித்து நிற்கும் பரசிவம், கடலிற்றுயிலும் திருமால் பிரமன் முதலானோர் ஒரூழிக்காலம் கடந்து முதிர்ந்தும் அவர்களுக்கு அறியப்பெறாமல் ஆராயப் படுகின்ற உச்சியில் விளங்குவன் என்றவாறு.

இவ்வுண்மை ஞானிகட்கல்லது அறிய ஒண்ணாதாம்; பிரமன் முதலானோர் பல்லூழிக்காலம் முயன்றும் அறியப் படாத சிவம் அந்த ஞானியர்களின் உச்சியில் உள்ளான் என்பது கருத்து.

இதனால் பதமுத்தியில் விளங்குவார் பல ஆண்டு முயன்றும் அறியப்பெறாத இறைவன் ஞானிகளின் சிரமீது விளங்குவன் எனச் சிவபூசையின் சிறப்புக் கூறப்பெறுதல் காண்க. (143)

# 12. குருபூசை

அஃதாவது, சிவபூசையை எழுந்தருளப்பண்ணித் தந்த சிவகுருவைப் பூசித்தலின் இன்றியமையாமையையும் பயனையும் பத்து மந்திரங்களான் உணர்த்துகின்றது இவ்வதிகாரம். முன்னர், சிவபூசை செய்யும் முறையையும், தீட்சை விதிகளையும், அவற்றாலெய்தும் பயனையும் அறிவித்த ஆசிரியர் இவ்வதிகாரத்தில் சிவத்துவ விளக்கந்தந்த சிவகுருவைச் சிவனாகவே பாவித்துப் பூசிக்க; நேசிக்க; வந்திக்க; வாழ்த்துக என்றுணர்த்துகிறாராதலின் அதன் பின்னர் இவ்வதிகாரம் அமைக்கப் பெற்றது.

**ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்**
**போகின்ற வுபதேசம் பூசிக்கும் பூசையும்**
**ஆகின்ற ஆதார மாறா றதன்மேற்**
**போகின்ற பொற்பையும் போற்றுவன்**
**யானே. 1847**

இம் – எனின், சிவகுருவைப் பூசிக்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அடியேனுக்குத் தாரகமாகின்ற குருநாதனுடைய திருவடித் தாமரையைப் பற்றி, வீட்டுலகிற்குச் செல்லும் உபாயத்தை அறிவிக்கும் உபதேசமாகிய ஐந்தெழுத்தையும், இறைவனைப் பூசிக்கும் பூசையையும், ஆதாரமாகின்ற முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து தத்துவாதீத வஸ்துவாகிய பரசிவத்தின்பால் அணுகுகின்ற அழகையும் யான் என் மனத்துப் போற்றுவேன் என்றவாறு.

ஆசாரியன் திருவடிகளைப் பற்றி அவன் தந்த உபதே சத்தையும், பூசையையும் தத்துவாதீதனாகிய பரசிவத்தை அணுகும் அனுபவத்தையும் போற்றுவேன் என்பது கருத்து.

ஆகின்ற நந்தி -- கடலுள் உடைகலப்பட்டார்க்கு உதவு கின்ற ஒருவன்போலப் பிறவியில் கிடந்துழலும் ஆன்மாக்கள் முத்திக்கரைசேர உதவுபவன் ஆசாரியன். உடைமரம் உபதேச மாகிய திருவைந்தெழுத்து ஆதலின், பிறவிக் கடலில் கரையேறத் துணையாகிற ஆசிரியன் என்றார். அவன் திருவடித் தாமரை சேமப் படகு போல்வதாகும். அதனைப் பற்றி இறைவனைப் பூசிப்பேன் என்றார்.

ஆதாரம் ஆறாறு – வினைப் போகங்களை நுகர்ந்து கழித்தற்கு ஆதாரமான மண் முதல் சிவம் ஈறான முப்பத்தாறு தத்துவங்கள்.

அதன்மேல் போகின்ற பொற்பு – அவற்றைக் கடந்து தத்துவாதீதனாகிய சிவத்தைச் சார்கின்ற அழகு. இது குருவின் திருவடியே பற்றி உபதேசத் துணைகொண்டு சிவத்தைச் சார்தலே குருபூசை என்கிறது. (144)

**கானுறு கோடி கடிகமழ் சந்தனம்**
**வானுற மாமல ரிட்டு வணங்கினும்**
**ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது**
**தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே. 1848**

இம் – எனின், மெய்யான பூசையே பயனுடைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: காட்டில் வளருகின்ற கோடிக்காவதம் மணம் வீசுகின்ற சந்தனத்தையும் மாமலர்களையும் வானம் பொருந்த

இட்டு வணங்கினாலும், இவ்வுடற் பற்றை நீக்கி மெய்ஞ் ஞானத்தால் உணர்பவர்களுக்கு அல்லாமல் ஏனையோரால், மணம் பொருந்திய மலர் போலும் திருவடியை அடைய முடியாது என்றவாறு.

உண்மை ஞானிகளின் சிவபூசை செய்யின் அடையப் பெறும் திருவடி தேக இந்திரிய கரணங்களில் பற்றுடையார் களால் அடைய இயலாது என்பது கருத்து.

கான் – காடு. மணம் எனப் பொருள் கோடலாம் ஆயினும், பின் கடிகமழ் சந்தனம் என வருதலின் காடு எனப் பொருள் கொள்ளப் பெற்றது. கோடி என்ற எண்ணலளவைப் பெயர் அளக்கப்படுகிற தூரத்தின் மேல் நின்றது ஆதலின். கோடி – காததூரம் எனப் பொருள் கொள்ளப்பட்டது. கமழ் – மணம்.

பீமசேனன் செய்த பூசைபோல் பூக்களை வானளாவ மலைபோலக் குவித்து வழிபட்டாலும் என்க. ஊன் – ஆகு பெயராக உடலை உணர்த்தியது. ஆகவே, உடற்பற்றை நீக்கி என்பதாம். இனம் பற்றி இந்திரிய கரணங்களும் ஓதப் பெற்றன. உணர்பவர் – ஞானிகள். தேன் – மணம்.

'பொக்க மிக்கவர் பூவும் நீருங்கண்டு, நக்கு நிற்பன் அவர் தம்மை நாணியே' என்ற திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்குறுந்தொகையும் காண்க. (145)

**மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்**
**ஆவியின் ஞான நெறிநிற்றல் அர்ச்சனை**
**ஓவற வுட்பூ சனைசெய்யில் உத்தமஞ்**
**சேவடி சேரல் செயலறல் தானே.** 1849

இம் – எனின், ஞானபூசையின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயர்ந்த ஞானத்தால் சிறந்து விளங்கப் பெறின், அவ்விடத்து உண்மைப் பொருளாகிய சிவத்தின் ஞான வழியிலே நிற்றலே அர்ச்சனையாம்; இடையறாது அகப்பூசை செய்யில் அதுவே சிறந்ததாம்; திருவடியைத் தியானித்தலாவது தன் செயலற்று விளங்குதலாம் என்றவாறு.

சிவஞானவழி நிற்றலே சிவார்ச்சனை; இடைவிடாத தியானமே உத்தமமான பீசை. செயலறுதலே திருவடியைத் தியானித்தல் என்பது கருத்து.

உயர்ந்தவற்றுள் எல்லாம் உயர்ந்தது ஆதலின் ஞானத்தை மேவிய ஞானம் என்றார். மேவிய என்பதற்குப் பொருந்திய எனலும் ஆம். அர்ச்சனை – பூசையுள் ஒரு அங்கமான மலரிட்டு, மந்திரத்துடன் வழிபடும் செயலாம். அது இறைவற்கும் நமக்கும் நெருங்கிய தொடர்பூட்டுவது ஒன்றாதலின், அதனை இடைவிடாது செய்ய மெய்யுணர்வே விளையும் என்பார் இங்ஙனம் அருளினார்.

உட்பூசனை – அகப்பூசை, மனத்தாலேயே எல்லாச் சாதனங்களையும் அமைத்துக் கொண்டு பூசித்தலாம்; இதனை 'மனமணியிலிங்கமாக' என்னும் திருவிருத்தத்தானும் உணர்க. ''ஞானநூல் தனை ஓதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா, ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை'' என்பதாலும் அறிக. மற்றும், மூலமந்திரத்தால் நெஞ்சைப் பூசைக்குரிய இடமாகவும், கொப்பூழை ஓம குண்டமாகவும், புருவ நடுவாகிய அநாகத்தைச் சிவம் விளங்கும்

இடமாகவும் கொண்டு பயில்வது ஞானபூசையாம் எனலும் ஒன்று. முன்னது ஞானத்திற் சரியையில் நிற்பார்க்கும், பின்னது ஞானத்தில் யோகத்தின் நிற்பார்க்கும் உரியனவாம் என்க. பின்னதே ஓவற உட்பூசனை செய்தல் என்பதால் குறிக்கப் பெற்றது.

செயலறவாவது சிவசிந்தனை ஒன்றே செயலாப் புறச் செயல்அற்று இருத்தல். அலையாத கடல்போல அமைதியுற் றிருத்தல். இங்ஙனம் ஞானபூசை. அகப்பூசை இயல்புகளை ஓர்க. (146)

**உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை**
**நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை**
**விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்**
**நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே.** 1850

இம் – எனின், முப்போதும் வழிபடுக என வலியு றுத்தல் நுதலிற்று.

இ–ள்: காலை நண்பகல் மாலை என்னும் முப்போதும் ஈசனை விரும்புங்கள்; விரும்பி சிவயநம என்று அவன் திருப்பெயரைப் புகழுங்கள்; புகழ்ந்து சோமன் சூரியன் அக்கினியென விரிகின்ற மூன்று சுடரிலும் பெரிய குருநாத னாகிய சிவன் விளங்குகின்றான்; விரும்புங்கள் என்றவாறு.

சிவயநம என மூன்று சுடரிலும் சிவம் பிரகாசித்தலை உணர்ந்து போற்றுங்கள் என்பது கருத்து.

''அந்தியும் பகலும் அஞ்சுபதம் சொல்லி, முந்தி எழும் பழைய வல்வினைமூடாமுன், சிந்தை பராமரியாத் தென்

திருவாரூர்புக்கு, எந்தைபிரானாரை என்றுகொல் எய்துவதே'' என்னும் சுந்தரர் தேவாரத்தானும் அறிக.

விரிசுடர் மூன்றினும் பேர் நந்தி நாயகன் ஆகும். நச்சுமின் என முடிக்க. (147)

**புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்**
**பண்ணிய மேனியும் பத்துநூ றாகுமாம்**
**எண்ணிலிக் கைய மிடிற்கோடி யாகுமால்**
**பண்ணிடில் ஞானியூண் பார்க்கில்**
**விசேடமே. 1851**

இம் – எனின், சிவஞானிக்கு அமுது அளித்தலின் சிறப்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவதலங்களில் சிவபூசை செய்தல் நூறு மடங்கு உயர்ந்ததாம்; தவஞ் செய்வார் திருமேனியைப் பூசித்தல் ஆயிர மடங்கு உயர்ந்ததாம்; சிவனடிப் பற்று ஒன்றேயன்றி வேறு எதினும் எண்ணமில்லாத சிவயோகிக்குப் பிச்சையிடின் கோடி மடங்கு உயர்ந்ததாம்; சிவஞானி ஊண் உண்டானாகில் அது மிக விசேடமாம் என்றவாறு.

பிறவிடங்களில் பூசை செய்வதினும் சிவத்தலத்துப் பூசை செய்தல் நூறு மடங்கு சிறந்தது; அதனினும் தவம் செய்வார் மேனியைப் பூசித்தல் ஆயிரம் மடங்கு உயர்ந்தது; சிவயோகி ஒருவர்க்குப் பிச்சை இடுதல் அதனினும் கோடி மடங்கு உயர்ந்தது; அதனினும் சிவஞானி ஒருவர்க்கு உண விடுதல மிகமிக விசேடமாம் என்பது கருத்து.

பண்ணிய மண் தலம் – தயிரில் நெய்போலச் சிவம் பிரகாசிக்கும் தலம். பூசை– பூசையின் பயன். பண்ணியமேனி–

தவம் பண்ணிய மேனி எனச் செயப்படுபொருள் வருவிக்க. விரதங்களானும் தவத்தானும் பண்படுத்தப்பட்ட எனலுமாம்.

எண் – மனத்தினது காரியமாகிய எண்ணங்கள். அஃது இலாதார் சிவயோகியர். அவர்கள் எண்ணம் தைலதாரை போல இடையீடின்றிச் சிவத்தையே பற்றி நிற்குமாதலின் இங்ஙனம் கூறினார்.

ஞானி ஊண் பண்ணிடில் எனக் கூட்டுக. ஞானி ஊணில் விருப்பில்லாதவன். அவன் உண்பானாயின் என அதன் அருமை தோன்ற நின்றமை காண்க. பார்க்கில் – அதனைப் பார்த்தாலும் விசேடம் எனவே, உண்பித்தால் உண்டாம் சிறப்பு உரைக்க இயலாதது என்பதாம். (148)

**இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை**
**வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்**
**இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை**
**வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே. 1852**

இ்ம் – எனின், ஞானத்தால் பூசித்தலே பூசை எனல் நுதலிற்று.

இ–ள்: பகலும் இரவும் அற்ற என்றும் ஒளி மயமான இடத்தில் வணங்குதலே சிவத்திற்கு உரிய பெரிய பூசையாகும்; பகலென்றும் இரவென்றும் விளங்கும் வேற்றுமை ஞானம் விளங்குமிடத்தில் செய்த வழிபாடு அனைத்தும் அசுரர் களுக்குப் பயன்படுவனவாம் என்றவாறு.

அபேதஞானம் விளைந்தவிடத்துச் செய்யப்பெறும் பூசனையே சிவபூசை; பேதஞானத்தால் செய்யப்படும் பூசை ஆசுரம் என்பது கருத்து.

இந்து – சந்திரன். இந்து இலங்கும் தலம் இரவு. பானு– சூரியன். தலம் – பகல் என்க. இரவு என்றும், பகல் என்றும் வேற்றுமை தோன்றாத அதாவது, என்றும் ஒளிமயமான இடம். அது சிவஞானத் தெளிவும் செயலும் சிறந்து தோன்றும் நிலை.

வாரி – பயன். பேதஞானத்தால் செய்யப்பெறின் அசுரப்பிரீதியாம். அபேதஞானநிலையில் ஆற்றப்படின் சிவப் பிரீதியாம் என்க.

பின்னரும் 'பகலும் இரவும் பயில்கின்ற' **(1885)** எனவும், 'இராப்பகலற்ற இடத்தே' **(1856)** எனவும் விளக்குதல் காண்க.

இங்ஙனமன்றி, இடைகலை பிங்கலைகளில் பிராணன் இயக்கும்போது இயற்றப்படும் பூசை அசுரப் பிரீதியாம்; சுழுமுனையில் இயங்கும்போது இயற்றப்படும் பூசை சிவப் பிரீதியாம் என்பாருமுளர். அவ்வுரை யோகமாமேயன்றி ஞான யோகம் ஆகாமை உணர்க. ஈண்டு அதிகாரப்பட்டு நிற்பது ஞானத்தில் யோகமாகலும் தெளிக. **(149)**

**இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்**
**விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே**
**சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு**
**நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே.** 1853

இம் – எனின், சாக்கிராதீதத்தே வழிபடுதலே நற்பூசை என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சந்திர கலையும் சூரியகலையுமாகி எழுகின்ற விந்து சத்தியும் நாதம் சிவமுமாகி விளங்கும் மேலிடமாகிய

சுழுமுனையில் நிலைத்த சிந்தனை மேலும் சாக்கிரா தீதத்தை அணுகிச் சிவத்தைப் பூசிக்க, அதுவே நல்ல பூசையாம் என்றவாறு.

புருவநடுவில் இடைகலையாகிய இந்துவும், பிங்கலை யாகிய பானுவும் இருபுறமும் விளங்க, நடுநாடியாகிய சுழு முனை இடைநிற்க அமைந்திருப்பது அநாகதமாகிய புருவநடு. அங்கு ஆன்மா உறைவது சாக்கிரம். சாக்கிரமாகிய விழிப்பு நிலையிலே கருவி கரணங்கள் அனைத்தோடும் ஆன்மா அத்தாணிமண்டபத்தே அரசு செலுத்தும் அரசன்போலச் செயற் படும். அந்நிலை மாறி, அந்நிலை கடந்து ஆஞ்ஞையில் அடங்கி நின்று பூசிப்பதே நற்பூசை என்பது விளக்கியவாறு.

இந்துவிலிருந்து விந்துவாகிய சத்தியும், பானுவி லிருந்து நாதமாகிய சிவமும் எழும் என நிரனிறையாகக் கொள்க. மீதானம் – மேலிடமாகிய புருவநடு.

சாக்கிராதீதத்துச் செல்லுதலாவது சாக்கிரநிலையி னின்றே பசுகரணங்கள் யாவும் சிவகரணமாகப் பெறுதல். இவர்கள் இயல்பைச் சிவஞான சித்தியாரில், ''சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகில் சர்வசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள்'' எனல் காண்க. இங்ஙனம் சாக்கிராதீதத்தே சுத்தாவத்தை எய்திச் சிவனைப் பூசித்தலே நற்பூசையாம் என்றவாறு. (150)

**மனபவ னங்களை மூலத்தான் மாற்றி**
**அனித வுடற்பூத மாக்கி யகற்றிப்**
**புனிதன் அருள்தனிற் புக்கிருந் தின்பத்**
**தனியுறு பூசை சதாசிவற் காமே.** 1854

இம் – எனின், சதாசிவமூர்த்தி ஏற்றுக் கொள்ளத் தகும் தனிப்பூசையின் சிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மனம் பிராணன் இவைகளை மூலமந்திரத்தால் வினைப் போகங்களைச் சாராது சிவனடியையைச் சேரும் வண்ணம் மாற்றி, அநித்தியமான இவ்வுடலைத் தத்தம் காரண மாகிய பூதங்களினும், அவற்றின் காரணமான தன்மாத்திரை களினும் ஒடுக்கி, சிவனருளிற் சேர்ந்திருந்து இன்ப நுகர்ச்சி யோடு இயற்றப்படும் தனித்த பூசையே சதாசிவமூர்த்திக் குரியதாம் எ–று.

மனம் பொறிவழிச் சென்று புலன்களை நுகர்ந்த வாறும், மனம் பொறிகளைப் பற்றிச் சென்று போகங்களில் பற்றாதவாறும் மாற்றிச் சிவனடியையே சேரும் வண்ணம் செய்து, பௌதிகமான உடலைத் தத்தம் காரணத்தில் ஒடுக்கி, அருளில்அருளால் புகுந்து செய்யப்படும் பூசையே சிவபூசை யாகும். அதனையே சதாசிவமூர்த்தி ஏற்பர் என்பது கருத்து.

இங்ஙனமன்றிக் கருவி கரணங்கள் மடங்காது காரியப் பட இயற்றப்படும் பூசனை ஆரவாரமேயன்றி அரனுக்கு ஆகாது என்க.

அருள்தனில் புக்கிருந்து அருளின் வியாபகத்துள் தான் அடங்கியிருந்து, அதாவது, ஆன்மச்சேட்டை அற்றுச் சிவச் செயலேயாய் என்க.

தனி இன்பத்து உறுபூசை என்க. சிவானுபவம் தவிர ஏனைய செயல்கள் அனைத்தும் இன்பத்துன்பக் கலப் பானவை; இஃது ஒன்றே தனி இன்பமயமானது என்றவாறாம்.

(151)

பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசர்க் கிணைமல ராகப்
பகலும் இரவும் பயிலாத பூசை
சகலமுந் தான் கொள்வன் தாழ்சடை யோனே.
1855

இம் – எனின், புறப்பூசை அகப்பூசைக்குள்ள வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பகல் இரவு என்கிற காலவேறுபாட்டினின்று இயற்றப்படும் பூசை அநாதிநித்திய சம்பந்தமுடைய ஈசரோடு இணைதற்குரிய மலராக விளங்க, பகலும் இரவுமாகிய கால வேறுபாடற்று எப்போதும் இயற்றப்படும் பூசையனைத்தையும் தாழ்ந்த சடையையுடைய பரமன் ஏற்றுக் கொள்வன் என்றவாறு.

காலத்தொடுபட்டக் கருதிச்செய்கிற பூசை, அவை கடந்து எப்பொழுதும் இயற்றப்படும் ஞானபூசைக்கு வாயிலாம்; ஆதலால், ஞானபூசையே சிவன் ஏற்றுக்கொள்ளும் நற்பூசையாம் என்பது கருத்து.

இயல்பு – பொதுவும் சிறப்புமாகிய இலக்கணங்கள்; அவற்றையுடைய ஈசன் என்க. ஈசர்க்கு இணைமலர் – ஈசரோடு இணைதற்குரிய பூசை. மலர்; மலரான் இயற்றப்படும் பூசையையும் உணர்த்திற்கு. ஈசர்க்கு; வேற்றுமை மயக்கம். (152)

*இராப்பகல் அற்ற இடத்தே யிருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகி
இராப்பக லற்ற இறையடி யின்பத்
திராப்பகல் மாயை இரண்டிடத் தேனே. 1856

---

*இது முன் 331ம் திருமந்திரமாக முதல் தந்திரத்தில் வந்திருத்தலின் விளக்கத்தை ஆண்டுக்காண்க.

# 13. மாகேசுரபூசை

சிவனடியார்களைச் சிவன் எனவே வழிபடுக என்னும் மரபின்வழி மாகேசுரர்களாகிய அடியார்களைப் பூசிக்கின்ற முறைமையினையும் பயனையும் உணர்த்துதலின் இவ்வதிகாரம் இப்பெயர்த்தாயிற்று. மாகேசுரர் – சிவனை இடைவிடாது நேசித்தும் பூசித்தும் வழிபடும் அடியார்கள். அவர்களைப் பூசை செய்தலும் அரன்பூசையே ஆதலால் குருபூசையின் பின் இதனை அமைத்தவாறாம். அதிகார இயைபும் இதனானே காண்க.

**படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்**
**படமாடக் கோயிற் பகவற்க தாமே. 1857**

இம் – எனின், அரன்பூசையினும் அடியார் பூசை சிறந்தது என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: படம்போல்வதான, மாடங்களையுடைய கோயிலுள் வீற்றிருக்கும் இறைவற்கு ஒருபொருளைக் கொடுத்தல், அது நடக்கும் மாடக்கோயிலாக விளங்கும் சிவனடியார்களுக்கு ஆகாதாம்; அவர்களுக்கு ஈயின், அது இறைவற்கு ஆம் என்றவாறு.

அரனுக்கு அளித்தால் அடியாரைச் சென்று சேருவதில்லை. அடியார்க்கு ஒன்று அளித்தால் இறைவற்கு ஆம் என்பது கருத்து.

படம் – உருவம் தீட்டிய துணி. முதன் முதல் திரு உருவங் கள் கிழியில் வன்னங்கொண்டு எழுதப்பெற்றமையின் அது படம் எனவும் கிழி எனவும் துணி எனவும் வழங்கப்படுவ தாயிற்று. மாடக்கோயில் – மாடங்கள்போன்ற உயர்ந்த கோயில்களாம். கோயில் அமைப்பு வகையுள் இது ஒன்று. 'ஊனுடம்பாலயம்' என்பார் ஆதலின், உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களையும் படம் பிடித்தாற்போலச் சிற்பம் செறியச் செய்யப்பெற்றது ஆகலின். 'படமாடக்கோயில்' என்றார். பகவன் – ஆறு குணங்களையும் உடைய பரமன். ஒன்று – எண்ணாகு பெயராகச் சிறு பொருளை உணர்த்தியது.

நடம் + மாடக்கோயில் – நடக்கும் மாடக்கோயில்களா கிய அடியார்கள். அடியார் சிந்தையுள் என்றும் இறைவன் வீற் றிருத்தலின் அவர்கள், நடக்கும் மாடக் கோயில்களாயினர். நம்பன் – சிவன். அடியார்களையும் அரன். எனவே புத்தி பண் ணும் மரபு பற்றி நம்பர் என்றார். அது – அப்பொருள். (154)

**தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்**
**துண்டது மூன்று புவனமும் உண்டது**
**கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்**
**றெண்டிசை நந்தி எடுத்துரைத் தானே. 1858**

இம் – எனின், ஞானி உண்டது ஞாலம் உண்டது என்ற உண்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கேடற்ற சிந்தையையுடைய தவத்தையே செல்வமாகக் கொண்ட சிவஞானியர் தாம் மகிழ்ந்து உண்டது மூன்று உலகமும் உண்டதாம்; அவர்கள் விரும்பி ஏற்றுக் கொண்டது மூன்றுலகமும் ஏற்றதாம் என்று எண்திசைக்கும் நந்தியாகிய சிவன் எடுத்து உரைத்தான் என்றவாறு.

சிஞானி உண்டதும் கொண்டதும் உலகம் உண்டதும் கொண்டதுமாம்; ஆதலால், சிவஞானியர் விசுவரூபர் என்பதாம்.

தண்டு – கேடு. தண்டறு சிந்தை – கேடற்ற சிந்தை. அதாவது, எவர்க்கும்ஏதொன்றும் கேடுசூழாத, தன் நிலையில் அஃதாவது திருவருள் அனுபவத்தினின்று தாழாத மனம் என்க.

நந்தி எண்டிசை(க்கும்) எடுத்துரைத்தான் எனக் கூட்டுக. உண்டது – உணவு முதலியன. கொண்டது ஆடை முதலியனவாம் என்க. (155)

**மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை**
**யாத்தனுக் கீந்த அரும்பொரு ளானது**
**மூர்த்திகள் மூவர்க்கு மூவெழு குரவர்க்குந்**
**தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே. 1859**

இம் – எனின், ஞானியார்க்கீந்தது மும்மூர்த்திகட்கும் குருமார்களுக்கும் கொடுத்ததாம் எனல் நுதலிற்று.

இ–ள்: ஒரு மாத்திரை கால அளவால் நிலைபெற்று எழுந்தருளியிருக்கும் மாகேசன் ஒருவனுக்கு அளித்த அரும் பொருள் மும்மூர்த்திகட்கும், மூத்த ஏழு குருமார்களுக்கும் தூய உரிமையாம்; அதனைத் தெளிந்து கொள்ளுமின் என்றவாறு.

மாகேசனுக்கு அளித்த பொருள் மும்மூர்த்திகட்கும் குரவருக்கும் அளித்ததாம் என்பது கருத்து.

மகேசன் என்பது இறைவனை உணர்த்தும். மாகேசன் என்பது ஆசாரியாபிடேகம் வரை பெற்ற மெய்யடியாரைக்

குறிக்கும். மகேசன் மாகேசன் இவ்விரண்டற்கும் உள்ள வேறுபாடு ஒரு மாத்திரையே. ஆதலால் 'மாத்திரை ஒன்றினின் மன்னி அமர்ந்துறை ஆத்தன், என்றார். ஆத்தன் – ஆப்தன் என்ற சொல்லின் திரிபு. ஆப்தன் – மிக்க நேசமுடையவன்.

மூர்த்திகள் மூவராவார் லயசிவம், போகசிவம், அதிகாரசிவம் ஆகிய அருவம், அருவாரூபம், உருவம் என்ற மூர்த்திகள், அயன், அரி, அரன்; என்பாருமுளர். அயன் முதலானோர் சமயம் முதல் ஆசாரியாபிடேகம் வரை பெற்று அனுபூதிமானாக விளங்கும் ஆசாரியனைக் காட்டிலும் சிறந்தவர்களல்லர். ஆதலால் அவர்களைக் கூறுதல் ஏற்பதன்று. அன்றிச் சிவதீட்சை பெற்றார்க்கு ஈந்த பொருள் சிவதீட்சை பெறாதாரை எய்தாது என்ற மரபும் ஆகமும் ஓர்க.

மூ எழு குரவர் – மூத்தோராகிய குரவர் எழுவர்; அம்பிகைகுரு, கந்தகுரு, கணாதிபகுரு, லக்ஷ்மி குரு, வாணிகுரு, சண்டகுரு, விஷ்ணுகுரு, என்பார். மேற்கு வாயிற் பூசையில் இவ்வெழுவரையும் வைத்துப் பூசித்தலும் சில மங்களின் துணிபாகலானும், இவர்களே எல்லாரினும் தாராதலாகானும், 'மூ எழு குரவர்க்கும்' என்றார். தந்தை ழி. தாய்வழி, மனைவிவழி மூத்தோர் என்பாரும் உளர். அவர்கட்குச் செய்யும் சடங்கு சென்று பற்றும் கிரியாயாமே யன்றி, மாகேசுர பூசையாகிய பதிபுண்ணியத்தில் பங்கு பற்றாதாம் என்பது.

தீர்த்தம் ஆம் – தூய உரிமையாம். (156)

**அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்**
**சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்**
**பகரு ஞானி பகலூண் பலத்துக்கு**
**நிகரிலை என்பது நிச்சயந் தானே. 1860**

இம் – எனின், அக்கிரகாரம் அமைத்தல் முதலிய வற்றினும் சிறந்தது மாகேசுரபூசை என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆயிரம் அகரங்கட்டி அந்தணர்களுக்கு ஈவதால் ஆம் பயன் என்ன? ஆயிரம் திருக்கோயில்களைக் கட்டி முடித்ததாலாம் பயன் என்ன? யாவரும் பாராட்டிப் பகரும் சிவஞானி ஒருவர் பகற்பொழுது உண்ணும் உணவால் விளையும் பயனுக்கு ஒப்பாகாது என்பது உறுதி என்றவாறு.

கருத்துவெளி. அகரம் – அந்தணர்கள் சேர்ந்து வசிக்கும் இடம். சிகரம் – கோயில். சிகரம் என்பது கோயிலின் கர்ப்பஇல்லின் விமானத்தின் பெயர். அது ஈண்டு ஆகுபெய ராய்த் திருக்கோயிலையே காட்டியது. பகரும் ஞானி – சிவானுபூதி மிக்கிருத்தலின் அனைவர்களாலும் புகழப்படுகிற சிவஞானி. ஞானி ஒருபோது அன்றி, இரவில் உண்ணா னாகலின் பகலூண் பலத்துக்கு என்றார். பலம் – பயன். **(157)**

**ஆறிதும் வேள்வி அருமறை நூலவர்**
**கூறிடும் அந்தணர் கோடிபே ருண்பதில்**
**நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை**
**பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே. 1861**

இம் – எனின், சிவஞானியருக்கு உணவளித்தலே உயர்ந்தது எனல் நுதலிற்று.

இ–ள்: ஆறு அங்கங்களையுடைய வேதங்களால் விதிக்கப்பெறும் வேள்விகளைச் செய்கின்ற அரிய மறைகளை யும் பூணு நூலையும் உடையவர்களாகக் கூறப்பெறும் அந்தணர் கள் கோடிபேர் உண்பதால் பேறு உண்டாம் எனின் அது

நெற்றியில் திருநீறணியும் சிவத்தொண்டர்க்கு ஒருபிடி அளிக்க நினைப்ப தால் விளையும் பேற்றிற்கு ஒப்பாமோ? ஆகாது என்றவாறு.

வேதவிதிப்படி வேள்வி செய்யும் கோடி அந்தணர் களுக்கு உணவளிப்பது புண்ணியம் என்றால் அது ஒரு ஞானிக்கு ஒருபிடி உணவளிக்க எண்ணும்போது உண்டாம் புண்ணியத்திற்கு ஈடாகாது என்பதாம்.

ஆறு – எண்ணாகுபெயராக ஆறு அங்கங்களை யுடைய வேதத்தை உணர்த்திற்று. இடுதல் – விதித்தல். வழியைக் காட்டுகின்ற என்பாரும் உளர்.

அருமறை – ருக், யஜுர், சாமம் என்ற மூன்றும் நூலவராகிய அந்தணர், கூறிடும் அந்தணர் என்க. உண்பதிற் பேறு எனில், நீறிடும் தொண்டர் ஓர் பிடி நினைவின் பேறது ஆகுமே? பயன் இலை எனக் கூட்டிப் பொருள் கொள்க.

கூறிடும் அந்தணர் – நூலவர் எனக் கூறப்பெறும் அந்தணர்; யாகத்தீயில் அவியை அந்தந்த தேவர்களுக்குக் கூறு செய்யும் அந்தணர் எனலுமாம். (158)

**ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று**
**நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்**
**ஆறணி செஞ்சடை யண்ண லிவரென்று**
**வேறணி வார்க்கு வினையில்லை தானே.**

**1862**

இம் – எனின், சிவனடியாரைச் சிவன் எனவே நினைத்து வழிபடுவார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இடபத்தைக் கொடியாகவும் வாகனமாகவும் உடையவனே! இறைவா!! எம்பிரான்!!! என்று திருநீற்றை அணிபவர்களாகிய அடியார்கள் பூமியின் இயங்குகின்ற தேவர்களாவர்; 'கங்கையைத் தரித்த சிவந்த சடையையுடைய அண்ணல் இவரே, என்று, வேறாக எண்ணி வழிபடுபவர்க்கு மேல்வினை இல்லையாம் என்றவாறு.

சிவனடியாரைச் சிவனெனவே எண்ணி வழிபடுவார்க்கு, பிராரத்தம், ஆகாமியம், சஞ்சிதம் என்ற இம் மூன்று வினைகளும் இல்லையாம் என்பது கருத்து. (159)

**சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட**
**பேர்நந்தி யென்னும் பிறங்கு சடையனை**
**நானொந்து நொந்து வருமள வுஞ்சொல்லப்**
**பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே.**

**1863**

இம் – எனின், சிவன் எழுந்தருளி வந்து அருளு மளவும் நந்தி நாமம் ஒழியேன் எனல் நுதலிற்று.

இ–ள்: சிவன் புகழைப் பெருக்கி அதனையே தாரக மாக மனத்துட் கொண்டதால் அடியேன் திருமுகமாய விட்ட நந்தியென்னும் பேரையுடைய விளங்குகின்ற சடையை யுடையவனை அடியேன் மனங்கனிந்து கனிந்து அவன் என்னி டத்தே எழுந்தருளி வருமளவும் யான் சொல்லுகின்ற அந்த நந்தி யென்னும் பேரைப் பிதற்றுதலை நீங்கேன் என்றவாறு.

சிவபெருமான் எழுந்தருளி வருமளவும் அவனது பெயரைப் பிதற்றொழியேன் என்பது கருத்து.

சீர் – புகழ்; நந்தி – சிவம். புகழோடு கூடிய சிவத்தை உளங்கொண்டு அதனால் திருமுகத்திலாய் விளங்குகின்ற எனலுமாம். வரும் அளவும் நான் நொந்து நொந்து சொல்ல என்க. விரும்பிய பெருமான் விரைந்தணுகாமையான் உண்டாகிய மனக்கசிவு நோதல். அதன் மிகுதியால் நொந்து நொந்து என அடுக்கினார். பிதற்றுதல் – வாய்வெருதல். நந்தி என்னும் பேர் – சிவ என்னும் நாமம். பிதற்று; முன்னிலைத் தொழிற்பெயர். **(160)**

**அழிதக வில்லா அரனடி யாரைத்**
**தொழுதகை ஞாலத்துத் தூங்கிருள் நீங்கும்**
**பழுது படாவணம் பண்பனை நாடித்**
**தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. 1864**

இம் – எனின், அரனையும் அடியாரையும் தொழுதலால் வரும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அழிவேயில்லாத அரனடியாரைத் தொழுந் தகுதிபெற்றோன் உலகத்தில் மிக்க அறியாமை ஒழியப் பெறுவன்; அறியாமை ஒழிந்தபின் விளங்கிய ஞானம் பழுதுறா வண்ணம் குணபூரணன் ஆகிய இறைவனைத் தேடித் தொழுதெழ உலகத்திலே ஓரின்பம் உண்டாம் என்றவாறு.

அழிதகவு இல்லா அரன் எனவும், அரன் அடியார் எனவும் இருமருங்கும் கூட்டிப் பொருள் காண்க.

தூங்கு இருள் – மிக்க இருள். இருள்போலப் பொருளை விளக்காத ஆணவவல்லிருள் என்க. அதனை நீக்கும் என்பதாம்.

இருள் நீங்கிய வழி உண்டாகும் ஒளிபோல அறி யாமை நீங்கியவழி உண்டாம் அறிவு பழுதுறாவண்ணம் என்க.

வையகத்து ஓர் இன்பம் ஆம் என்பது இம்மை இன்ப மும் உண்டாம் என்றது. ஆகவே, பாரிசேட அளவையால் மறுமை இன்பமும் தானே விளையும் எனக் குறித்தவாறு. (161)

**பகவற்கே தாகிலும் பண்பில ராகிப்**
**புகுமத்த ராய்நின்று பூசனை செய்யும்**
**முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூழி**
**அகமத்த ராகிநின் றாய்ந்தொழிந் தாரே.1865**

இம் – எனின், சிவஞானிகளின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவபெருமானுக்கு ஏற்ற அன்பு முதலிய பண்புகள் இல்லாதவராய்ப் புகும் மதம் பிடித்தவராக நின்று, இறைவனை வழிபடும் முகமனோடு ஒத்துப் பல்லூழிக்காலம் மனமயங்கி, இறைவனையே ஆய்ந்து, பிற பாச கன்மங்களி லிருந்து ஒழிந்தாரே சிவஞானியர் என்றவாறு.

சிவஞானியார் ஆவார் அன்பும் ஆசாரமும் சீலமும் இலராயினும் இறைவனை அனவரதமும் தியானித்துத் தம் உலக கன்மங்களிலிருந்து ஒழிவடைந்தவராவர் என்பது கருத்து.

பகவன் – சிவன். இறைமைக்குரிய ஆறு குணங்களை உடையவன். 'ஏதாகிலும்' என்றது அடியார்களிடம் அமைய வேண்டிய குணங்களில் ஒன்றும் என்பதுபட நின்றது. ஞானியர் அதிவர்ணாச்சிரமிகள் ஆதலின், அவர்களிடம் நோன்பு முதலி

யன நழுவிப் போகும். ஆதலால், அவர்கள் கன்மானுட்டங் களை விட்ட பாசண்டிகண் போலவும், காமுகர் போலவும், உலகவர் போலவும் காணப்பெறுவர், ஆதலால் 'பண்பிலராகி' என்றார்.

புகும் மத்தராய் – சித்தத்தைச் சிவன்பாலே செலுத்தும் மதம் பிடித்தவராய். மதம் – உறுதி. முகமம் – முகமன். அகம் மத்தராய் – இறைவன் பாலன்றிக் கருவி கரணங்கள் வழிச் செல்லாத மனமுடையராய் என்பது கருத்து. ஆய்ந்து – இறைவன் அருளையே தோய்ந்து. ஒழிந்தார் – உலக பாசகன் மங்களிலிருந்து ஒழிவடைந்தார் என்பதாம். (162)

**வித்த மாகிய வேடத்தர் உண்டவூண்**
**அத்தன் அயன்மால் அருந்திய வண்ணமாஞ்**
**சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்**
**முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே.**

**1866**

இம் – எனின், சிவஞானிகளின் சேடம் சிவகதி அருளும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சதுரப்பாட்டினையுடைய சிவவேடம் உடைய மெய்ஞ்ஞானியர் உண்ட ஊன், சிவன் திருமால் பிரமன் மூவ ரும் உண்டதாம்; மனந்தெளிந்த அவர்கள் உண்ட மிச்சத்தை உண்ணின் முத்தியுண்டாம் என்று நம் மூலன் மொழிந்த உண்மை எ–று.

சிவஞானிகள் உண்ட உணவு மூவரும் உண்டது ஆம்; அவர்கள் உண்ட பரிகலசேடத்தை நாம் உண்ணில் சிவஞானம் பெற்றுச் சிவகதி சேரலாம் என்பது கருத்து.

வித்தகம் – சாமர்த்தியம். மல மாயை கன்மங்கள் தம்மை வந்து தாக்காதவண்ணம் சாமர்த்தியம் வாய்க்கப் பெற்றவர்கள். வேடம் – விபூதி உருத்திராக்கம் சடை முதலிய சிவவேடம். அத்தன் – சிவன். இவர் பதமுத்தியின் நிற்கும் உருத்திரராம் என்க. இம்மூவரும் சிவசிந்தை மறவாத நிலையில் சிவனடியாரே ஆவர். ஆதலால் மூவரும் உண்டதாம் என்றனர். தாம் பெரியர் என்று முனைந்து நிற்பார்க்கு ஆகாது என்பதாம். சிவதீட்சையும் சிவானுபவமும் பெறாத கண்ணன் செய்த பூசைக்குப் பயன்படுத்தப்பட்ட மலர்கள் நிர்மாலியம் ஆகாமையும் வரலாற்றாற் காண்க.

'மூலன் மொழிந்ததே' என்றதால் சிலர் திருமூலர் வாக்கு அன்று இம்மந்திரம்; இடைச் செருகல் என்று விலக்கு வாருமுளர். இவர் உடலால் மூலனும் உயிரால் சிவயோகியும் ஆதலால், சிற்சில சமயங்களில் சிறந்த உண்மைகளைச் சாதித்துக் கூறவேண்டியபோது தான் வேறாய் நின்று இங்ஙனம் கூறுதலைக் காண்கின்றேம் ஆதலின் விலக்க வேண்டுவது இன்றாம். அன்றியும், உயிரின் கருத்து நா முதலிய உறுப்புக் களால் வெளிப்படுதலின், அவ்வுறுப்புக்கள் மூலனுடையது ஆதலின் இங்ஙனம் தன்னைப் படர்க்கையாகக் கூறலுமாம்.

**(163)**

**தாழ்விலர் பின்னும் முயல்வ ரருந்தவம்**
**ஆழ்வினை யாழ் அவர்க்கே அறஞ்செய்யும்**
**ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்**
**போழ்வினை தீர்க்கும்அப் பொன்னுல காமே.**

**1867**

இம் – எனின், சிவஞானியர்க்கே அறஞ்செய்க என வலியுறுத்தல் நுதலிற்று.

இ–ள்: ஒரு சிறிதும் குறைபாடிலராய், மேலும் மேலும் அரிய தவத்தின்கண் முயலுகின்றவராகிய சிவ ஞானியர் களுக்கே, நும்மை ஆழ்த்துகின்ற வினையாகிய பிராரத்த வினை வலிகுன்ற அறங்களைச் செய்யுங்கள்; அச் செயல் பிராரத்தத்தைத் தொலைத்தலோடு, நீக்குதற்கு அரிய வினைகளாகிய சஞ்சிதத்தையும், ஆகாமியத்தையும் ஒழிக்கும்; இன்ப மயமான முத்தியுலகு உண்டாகும் என்றவாறு.

சிறிதும் தாமதியாமல் மேன் மேலும் சிவனை நோக்கித் தவஞ் செய்வார்கட்கு அறங்களைச் செய்யுங்கள்; மூவினை களும் அகன்று முத்தராவீர் என்பது கருத்து.

சிவஞானம் பெற்றோம் என்று செம்மாந்திராது, வாசனாமலம் வந்து தாக்காத வண்ணம் மேலும் மேலும் தவஞ் செய்வாரே ஞானிகளாம் என்பார் 'தாழ்விலர் பின்னும் அருந்தவம் முயல்வர்' என்றார்.

அவர்க்கே அறஞ்செய்யும் என்பது உலகவரை முன்னிலைப்படுத்திக் கூறியதாம். போழ்வினை – அளவு காண இயலாதவாறு ஆழமான ஆகாமியமாய் ஏறிக்கொண்டே இருக்கும் வினைகள். ஆழ்வினை – யாரானும் நீக்குதற் கரியதாய், உண்டாலன்றி ஒழியாததாய் இறைவன் ஆணை ஒன்றால் மட்டும் வலிகுன்றுவதாய் உள்ள பிராரத்த வினை, அருவினை – எண்ணியதாய் ஈட்டப்பட்டுப் பரிபாகமுற்று முதிர்ந்து நுகர்ச்சிக்கு வர இருக்கும் சஞ்சிதவினை. பொன்னுலகு – இன்பமயமான உலகு என்றளவில் கூறிய பாராட்டுரை. (164)

# 14. அடியார் பெருமை

அஃதாவது அடியார்களின் பெருமையைக் கூறுவது என்பதாம். அடியார் ஆவார் இறைவனருள் ஒன்றிலேயே இணைந்துஅதன் வண்ணம் ஒழுகும் சிவமாம்பேறெய்த இருக்கும் சிவஞானிகள். அவர்களால் உலகு அடையும் நன்மைகளையும், இயல்புகளையும் விளக்குதலின் இவ்வதி காரம் இப்பெயர் பெற்றது. முன்னர் அடியார்களுக்கு அமுது அளித்தலே சிவகதி அருள்வது என்ற ஆசிரியர், அவர்கள் பெருமையினையும் உணர்த்தவேண்டுதலின்றி யமையாதது ஆகலின் அடுத்து இதனை அருளுகின்றார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**திகைக்குரி யானொரு தேவனை நாடும்**
**வகைக்குரி யானொரு வாதி யிருக்கிற்**
**பகைக்குரி யாரில்லைப் பார்மழை பெய்யும்**
**அகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே. 1868**

இம் – எனின், மெய்யடியார் வாழும் உலகுறும் நன்மைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பத்துத் திசைகளையும் தமக்கே உரிமையாகக் கொண்ட ஒப்பற்ற சிவபரம் பொருளையே தியானிக்கும் முறைகளுக்கு உரியவனாய் அதனைப் பற்றிவாதிட்டுச் சாதிக்கவும் வல்ல ஞானியொருவன் வாழின் அந்நாட்டுடன் பகை கொள்ளுதற்கு உரிய ஒருவருமிலராவர்; பூமியிலும் மழைவளம் குறையாது; அவ்வுலகிற்கு அகவிலை யேற்ற மாகிய குறைபாடு இல்லையாம் என்றவாறு.

சிவஞானியர் வாழும் நாட்டில் பகை இல்லை; மழை பெய்யும்; அகவிலை ஏற்றமில்லை என்பதாம்.

இருநிலனாய்த் தீயாகி ஒளியுமாகி எல்லாமாய் நிற்கும் இறைவன் விசுவரூபனாகையால் திகைக்கு உரியானென்றார். ஒருதேவன் எனவே ''சிவன் ஒருவனே தியானிக்கத் தக்கவன்'', அவனே முதல்வன் என்னும் உபநிடதக் கருத்தின் விளக்கம் கருதப்பெறும்.

நாடும் வகை – சிவத்தயே பேணி. அனந்தகல்யாண குணங்களில் ஆழங்காற்பட்டு நிற்றலாம்.

வாதி – சிவன் உண்மைக்கும் இயல்பிற்கும் பெறு பயனுக்கும் மாறு உரைப்பார் யாரேனும் உளராயின் வாதிட்டுச் சாதிக்கவும் வல்லார். அங்ஙனம் சாதித்தல் அவர்கட்குக் கல்வியான் விளைந்த செருக்கானன்று; ஆணவமலச் சேட்டையான் அன்று; உலகவர் திருந்த வேண்டும் என்ற அருள் உள்ளத்தான் என்க. (165)

***அவ்வுலக கத்தே பிறந்தவ் வுடலொடும்**
**அவ்வுல கத்தே அருந்தவ நாடுவர்**
**அவ்வுல கத்தே அரனடி கூடுவர்**
**அவ்வுல கத்தே அருள்பெறு வாரே. 1869**

**கொண்ட குறியுங் குலவரை யுச்சியும்**
**அண்டமும் அண்டத் தமரரும் ஆதியம்**
**எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தினுள்**
**உண்டெனில் நாமினி உய்ந்தொழிந் தோமே.**
**1870**

---

*இம்மந்திரம் முன்னர் ஆறாந்தந்திரத்தும் 1652ம் மந்திரமாக விளங்குதல் காண்க.

இம் – எனின், சிவஞானிகளின் பெருமைத் தன் மேலிட்டுக்கூறுதல் நுதலிற்று.

இ–ள்: யாம் மேற்கொண்ட குறிக்கோளும், எட்டுக் குலமலைகளின் உச்சியும், அண்டங்களும், அண்டங்களில் வாழ்கின்ற தேவர்களின் கூட்டமும், ஆதி பரம்பொருளும் எட்டுத் திக்கிலுள்ள அனைவர்களும் வந்து என் கையகத்தில் உளர் எனில், நாம் இனி உய்ந்தோம் என்றவாறு.

எல்லாமும் எல்லாரும் என்கையகத்துண்மையின் யாம் உய்ந்தேம் என்பதாம். தம்மேலிட்டு அடியார் பெருமை கூறியவாறு.

கொண்டகுறி – மேற்கொள்ளப்பெற்ற லட்சியம். லட்சியங்களுக்காகப் பலநாள் முயலவேண்டியதின்று. என் கையகத்து என்று எளிமைதோன்றக் கூறி அடியார் பெருமை விளக்கியவாறு. இவ்வாறே ஏனையவற்றிற்கும் கொள்க.

குலவரை – எட்டுக் குலமலைகள். அவற்றின் உச்சி பிறரால் எளிதில் அடைதற்கு இயலாதன. அவையும் கையகத்தன என்றதாம்.

அண்டமும் – சுத்தம் அசுத்தம் பிரகிருதி என்ற மூன்று மாயைகளிலும் உள்ள எல்லா அண்டங்களும், அண்டரும் எனப் பாடங்கொண்டு நெருங்குதற்கரிய அண்டத்தமரர் என அவர்க்கு அடைமொழி ஆக்குவாரும் உளர்.

ஆதி – அண்டத்தமரர்கட்கு ஆதியாயுள்ள முதல்வன். எல்லாரும் அடியார் ஏவல்வழி கேட்போர் என்பார் ‘கைத்தலத்தினுள் உண்டு’ என்றார். (167)

**அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்**
**கொண்ட சராசர முற்றுங் குணங்களும்**
**பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்**
**கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே.**
1871

இம் – எனின், எல்லாம் அடியருள் அடக்கம் என அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: உலகங்கள் ஏழும், எல்லையற்ற ஆகாயமும், உயிர்களும், உலகம் தம்முட் கொண்டிருக்கிற இயங்குவ நிற்பனவான யாவையும், ஒவ்வொன்றன் குண விசேடங் களும், பழமையான வேதங்களும், படைத்தல் காத்தல் முத லான தொழில்களும், அவற்றைத் திறமுறச் செய்கிற சிவபெரு மானும் என்னிடமன்றி இல்லையாம் என்றவாறு.

அண்டமுதல் அனைத்தும் அடியார்கண்ண என்பதாம். இதுவும் தம்மேலிட்டுக்கூறியதாம். (168)

**பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்**
**உள்நின்ற சோதி ஒருவர்க் கறியொணாக்**
**கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக்**
**கேட்டிடும்**
**அண்ணல் பெருமையை ஆய்ந்தது மூப்பே.** 1872

இம் – எனின், அடியார் மூப்பு இத்தன்மையதென்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பெண்ணல்ல, ஆணல்ல, பேடும் அல்ல, ஆன்மா தன் அறுவு அடங்கிச் செயலற்றகாலத்து உயிர்க்கு யிராக நின்ற சோதி ஆவான்; ஒருவராலும்அறிய இயலாதவன்; கண்ணாகிய கருவியின்றியே காண்பன்; செவி இல்லாமலே

கேட்பன்; இத்தகைய பெரியோனாகிய இறைவன் பெருமையை ஆய்ந்ததே மூத்த ஞானமாம்; அதனை உடையவரே அடியார் எ-று.

இறைவனுடைய தனித்தன்மையை உள்ளவாறு உணர்தலே அடியார்களுக்கு அமைந்த மூதறிவாம் என்பது கருத்து.

பெண் ஆண் என்பன சுட்டறிவுப்படுவதாய், காலம் நியதிகட்கு அடங்கியதாய், தோற்றக் கேடுகள் உடையதாய், வினைவயத்தான் விளைவதாய் இருத்தலின் இறைவன் அவை ஆகான் என்பார்'பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல' என்றார். இவை மூன்றுமாகான் எனவே கடந்தநிலை கூறியவாறு.

மூடம் – அறிவும் மனமும் காரியப்படுதல் இன்றி ஒன்றில் மடங்கிய நிலை. அந்நிலையில் ஆன்மா தன்னுள் ஒன்றிய இறைவனையும் அறியாதாகலின் 'மூடத்துள் உள் நின்றசோதி ஒருவர்க்கு அறியொணா' என்றார். கருவிகளின்றி அறிவான் அறியப்படுவது என்பார் 'கண்ணின்றிக் காணும் செவியின்றிக்கேட்கும்' என்றார். இங்ஙனமிருப்பது இறையியல்பு என்றவாறு.

**பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடகம்**
**உண்ணின்ற சோதியை யுற்றறி வாரிலை**
**கண்ணின்றிக் காணும் செவியின்றிக் கேட்கும்**
**அண்ணல் பெருமையை ஆய்ந்தவர் மூப்பே.**

எனச் சில ஏடுகளில் பாடமும் உண்டு. மூப்பு – முதிர்ந்த ஞானம். (169)

**இயங்கும் உலகினில் ஈசன் அடியார்**
**மயங்கா வழிச்செல்வர் வானுல காள்வர்**
**புயங்களு மெண்டிசை போதுபா தாள**
**மயங்காப் பகிரண்ட மாமுடி தானே.** 1873

இம் – எனின், சிவஞானிகள் சிவனைப்போல விசுவ ரூபிகள் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நிகழ்கின்ற இவ்வுலகில் சிவனடியார்கள் அறியாமையின் வயப்பட்டு மயங்காத செந்நெறிக்கண் செல்வர்; அதனால் அவர்கள் வானுலகையும் ஆள்வர்; அவர்கள் தோள்கள் எட்டுத் திசைகளே; திருவடிப் போது பாதாளத்தில் உள்ளன; ஒன்றொன்று கலவாத வெளி அண்டங்கள் அவர்களுடைய சிரம் என்றவாறு.

அடியார்கட்குத் தோள்கள் எண்டிசை; திருவடி பாதாளம்; பகிரண்டம் மாமுடியாம் என்பது. இயங்கும் உலகு – இறைவன் செய்யும் பஞ்சக்கிருத்தியத்தால் எஞ்ஞான்றும் காரியப்படும் பிரபஞ்சம். ஈசன் அடியார்க்கு மலமயக்கமும், மாயையின் சூழ்ச்சியும் இல்லை ஆதலின் 'மயங்காவழிச் செல்வர்' என்றார்.

''பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்'' என்றாற் போலப் போது பாதாளம் என்றமை காண்க. பகிரண்டம் – அண்டத்து வெளிப்புறம். பகிர் – வெளி அல்லது புறம். (170)

**அகம்படி கின்றதம் ஐயனை யோரும்**
**அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்**
**அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்**
**அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே.** 1874

இம் – எனின், சிவனடியார் எய்தும் இன்ப நிலைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நினைப்பவர் மனத்துப் பதிந்து உறைகின்ற நம் தலைவனாகிய சிவனையே ஆராயும் மனம் அடங்கப் பெற்றோர் துன்பங்களில் துடக்குண்ணார். ஆதலின் அகங்காரம் அடங்கப்பெற்ற உயிருள் புக்கு இறைவனை அறிகின்ற மனம் முனைப்படங்கி, எட்டு உறுப்பாலாகிய நுண் உடலை அழித்த லுமாம் எ–று.

சிவஞானியர் துன்புறார்; நுண்ணுடலையும் விட்டு விளங்குவர் என்பது கருத்து.

அகம் – மனம், அகம்படிகின்ற ஐயன் – மனத்தையே கோயிலாகக் கொண்டு நித்திய வாசம் பண்ணுகின்ற சிவன். அவனை ஓர்தலாவது அவனையே முழுமுதல் என்று எண்ணித் தியானித்தல். ஓரும்; அசையுமாம்.

அகம்படி கண்டவர் – அகங்காரத்தை அடங்கச் செய்தவர்கள். பதிபோதமிஞ்சிப் பசுபோதம் அடங்கப் பெற்ற வர்கள் என்பதாம்.

அல்லல் – பிறவியும் இறவியுமாய துன்பம்.

அகம்படி உள்புக்கு – அகம் படிந்த உயிருள் புக்கு எனச் சிலசொல் வருவிக்க. அறிகின்ற நெஞ்சம் சிவமே எமது தலைவன் என்று அனுபவிக்கின்ற மனம். அகம்படி கண்டு – நான் என்னும் அகங்காரம் படிந்து.

அழிக்கலும் எட்டு ஆம் எனக்கூட்டுக. எட்டு – தன் மாத்திரை ஐந்தும், மனம் புத்தி சித்தம் என்னும் மூன்றுமாகிய எட்டுமாம்.

இதனால் தன்முனைப்பு அடங்கித் தலைவன் தாளிற் தலைப்பட்டார் நுண்ணுடலும் நீங்கி, இன்பநிலையை எய்துவர் என்பது உணர்த்தப் பெற்றது. (171)

கழிவு முதலுங் காதற் றுணையும்
அழிவும தாய்நின்ற ஆதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருள் முற்றும்
ஒழியுமென் னாவி யுழவுகொண் டானே.1875

இம் – எனின், அடியார்கள் இயல்பு வேண்டுதலும் வேண்டாமையும் அற்று இறைவனை வழிபடுதலே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அடியேனுக்கு, பயன்படாது கழிந்த காலமும், கைம்முதலும், காதற்குரிய துணையும் நுகர்வால் அழிந்து பட்ட போகமுமாக உதவிய முதல்வனை (இடையறாது வழிபட)அவன், இகழும் புகழும் அவற்றால் விளையும் பொருளும் ஆகிய அனைத்தையும் நீங்கிய என் உயிராகிய புலத்தை உழுதான் என்றவாறு.

இருவினையொப்புப் பெற்ற என்னுடைய உயிராகிய நிலத்தைச் சிவபோகம் விளைவிக்க உழவுகொண்டான் முதல்வன் என்பது கருத்து.

கழிவு – தம் நுகர்வுக்கு உரியவாக இருந்தும் தமக்குப் பயன்படாது கழிந்துபோன போகங்கள். முதல் – நுகர்விற்குரிய முதல். தமது இன்பம் பெருக்கற்குரிய கைம்முதல் போல நுகர்வினை மிகுதிப்படுத்தியும் வாயிலாக இருந்தும் உதவும் முதற்பொருள். காதற்றுணை போகத்தை நுகர்தற்குத் துணையாய்க் காதன்மையுடையதாய் இருக்கும் மனைவிபோன்ற துணை. அழிவு – கழிவு முதலானவற்றை நுகர்வதால் விளை

யும் வினைக்கேடுகள். அனைத்துமாய் இருந்து உபகரிப்பவன் முதல்வன் என்பதாம்.

கழிவு என்பது நுகர்ச்சிக்கு உரியதாய், பின் கெடுவதாய கன்ம மலத்தையும், முதல் என்பது உடன் தோன்றி வலி குன்றிப் பரிபாக காலத்தும் உடனிருப்பதாய ஆணவத்தையும், காதற்றுணை என்பது விரும்பி நுகரப்படுதற்குத் துணையான கன்ம மலத்தையும் காட்டி இம்மும்மலங்களும், இறைவன் கூட்டக் கூடுவனவும், இறைவன் அருளால் வலிகுன்றி ஞான விளக்கம் நல்குவனவுமாக இருத்தலின, எல்லாமாய் நிற்பவன் அவன் என்று உபசரிக்கப்பட்டமை காண்க. இதனால் மலபரிபாகம் காட்டப்பெற்றது. இங்ஙனம் அன்றி, கழிவு – சொற்கு அடங்காத பெருமை. முதல் – எல்லையில்லாத முதன்மை, திருவருள் அம்மையாம் காதற்றுணை. ஒடுக்கம் அனைத்துமாய் இருப்பவன் ஆதிப்பிரான் என்பாரும் உளர்.

பழி – இகழ்ச்சி. புகழ் – புகழ்ச்சி. படுபொருள் – இவற்றால் விளையும் தாழ்வும் உயர்வும், அனைத்தையும் சமபுத்தி பண்ணுவதால் நீங்கிய என் உயிர் என்றது இருவினையொப்பு விளைந்தமை விளக்கப்படுகிறது.

உழவுகொண்டான் என்ற தொழிலால் ஆவி உழுநிலமாகக் கருத இருப்பதைக் காண்க. உழவுக்குரிய நிலம் மேடு பள்ளங்கள் போக்கிச் சமப்படுத்திய பின் உழுதொழிற்கு உரியாதல் போல, புலம்போன்ற என் உயிரில் மும்மலங்களாகிய மேடு காடு கரம்புகளைப்போக்கி, வினையொப்பாகிய சமம் வந்தபின் உழுது சிவபோகம் விளையச் செய்கிறார் என்பது விளக்கியவாறு.

இம்மந்திரம் தன்மேல் வைத்து மலபரிபாகமும் இருவினை யொப்பும் வந்தவரே அடியார் என்பதை விளக்கியவாறு.(172)

**என்தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்**
**அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்**
**ஒன்றா யுலகம் படைத்தான் எழுதினான்**
**நின்றான் முகில்வண்ணன் நேரெழுத் தாயே.**
**1876**

இம் – எனின், அடிமையின் தொன்மையை அறி வித்தல் நுதலிற்று.

இ–ள்: என் தாயோடு என் அப்பன் ஏழேழ் பிறப்பும் சிவனுக்கு அடிமை என உயிர் தோன்றிய அநாதி காலத்திலே எழுதிக் கொடுத்த ஆளோலையைத் தான் ஒரு முதலேயாய் நின்று உலகங்கள் அனைத்தையும் ஒருசேரப் படைத்தவனாகிய முதல்வன் எழுதினான்; மேகம்போலும் நிறமுடையவனாகிய திருமால் சான்றுக் கையெழுத்தாக நின்றான் என்றவாறு.

ஆன்மாக்கள் அன்றே சிவனுக்கு அடிமை என்ற ஆளோலை உண்டு; அதனை எழுதினவன் முதல்வன்; சான் றிட்டவன் திருமால் என அநாதியே ஆன்மாக்கள் அரனுக்கு அடிமை என்பது உணர்த்தப்பட்டது.

சுந்தரர் தேவாரத்து 'ஏழேழ் படியெமை யாளுங் கொண்ட' எனவும், 'எந்தை தந்தை தந்தைக்குத் தம்பிரானார்' எனவும் வருதல் காண்க.

என் தாயோடு என் அப்பன் என்றது தாய்வழி தந்தை வழி இரண்டு குலமுமே அடிமையாதலை விளக்கியவாறு.

அங்ஙனமாகவே அடிமைகட்குப் பிறந்தவன் அடிமை என்பது தாமே போதருமாகலான் என்க.

ஏழேழ் பிறவி – இருபத்தொரு தலைமுறை. ஏழெழு பிறவி என்ற பாடங்கொள்ளின் ஊர்வன முதல் தேவர் ஈறாக எழுகின்ற எழுவகைப் பிறவிகளும் என்க.

உலகம் ஒன்றாய்ப் படைத்தான் என்றதால் எல்லா அண்டங்களையும் ஒருசேரப் படைக்கும் ஆற்றல் பிரமனுக்கு இன்மையானும், அந்த அந்த அண்டங்களில் அவ்வப் பிரமர்கள் இருந்தே படைப்பர் ஆதலானும், முதல்வனாகிய பரசிவம் நெட்டெழுத்து எழுதினவன் என்று உரை காணப்பட்டது. நெட்டெழுத்து பத்திர வாசகம் எழுதிய எழுத்து. யார் பேருக்கு நாம் பத்திரம் எழுதிக் கொடுக்கிறோமோ அவர்களே நெட்டெழுத்தாளரானால் பத்திரம் செல்லாது என்பத உலகியலாயினும், 'அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் குன்றே அனையான் கொண்டபோது' நெட்டெழுத்து எழுத வேறெவரும் இன்மையானும் அவனை அன்றி வேறெவர்க்கும் நீதி வழங்கும் முதன்மையின்மையானும் எழுதியது இயைபுடைத் தென்க. பிரமன் என்பாரும் உளர்.

நேர் எழுத்து – நேர்ந்த எழுத்து. சான்றுக்கையெழுத்து என்பதாம். இதனால் உயிர்கள் என்றும் மீளா அடிமை என்பது உணர்த்தப்பெற்றது. **(173)**

**துணிந்தா ரகம்படி துன்னி உறையும்**
**பணிந்தா ரகம்படி பாற்பட் டொழுகும்**
**அணிந்தா ரகம்படி யாதிப் பிரானைக்**
**கணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே.**

**1877**

இம் – எனின், அடிமை முதல்வனைக் கைவிடுதல் இயலாது எனல் நுதலிற்று.

இ–ள்: இவனே நம் முதல்வன் எனத் துணிந்த அன்பர் கள் நினைப்பின் வண்ணம் நீக்கமற நிறைந்து உறைவன்; சிவப் பணி பலவும் செய்வார் உள்ளத்து அவர் சொற்படி வயப்பட்டு உறைவன்; இடைவிடாத தியானத்தால் தம்மைப் பூணாக அணிந்தார் இல்லத்து உறைகின்ற முதல்வனை எண்ணினார் ஒருவர்க்கு இடையில் கைவிடல் இயலுமோ என்றவாறு.

இடைவிடாது இறைவனைத் தியானிக்கும் சிவனடி யார்கள் இடையில் சிவனை மறத்தலென்பது இயலாத செயல் என்பதாம்.

துணிந்தார் – இவர் தேவர், அவர் தேவர் என இரண் டாட்டாது சிவனே முழுமுதல் என உறுதி பூண்டவர்கள். அகம்படி – உள்ளத்தின்படி. நினைத்த வண்ணம்; இது நினைவு கூறியது.

பணிந்தார் – காயத்தான் வழிபட்டார், இது காயச் செயல் கூறியது பாற்பட்டொழுகுதலாவது. அவர்கட்கு வேண்டுவன விளைத்து ஒழுகுதல். கணிந்தார் எண்ணுப வர்கள். நெடுநாள் பழகிய பொருளைக் கைவிட இயலாதது போலப் பலநாள் பயின்று அரனை அர்ச்சித்தார்க்கு அவனைக் கைவிடலாகாது; அடிமையாகவே இருக்கத் தோன்றும் என்றவாறாம். (174)

**தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி**
**மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்**
**புலைமிசை நீங்கிய பொன்னுல காளும்**
**பலமிசை செய்யும் படர்சடை யோனே.** 1878

இம் – எனின், பெருமானுக்கு உண்மைத் தொண்டு செய்தலால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒருவன் வானவர் தலைமேல் விளங்கும் தாழ்ந்த சடையினையுடைய சிவபெருமான்தம் திருவடிகளைத் தலைமேல் சூடி வைத்தனனாகி உண்மைத் தொண்டினைச் செய்ய, அவனை இழிதகைமை பொருந்திய மலகன்மங்களை நுகர்தலின்றி நீங்கியதாகிய பொன்மயமான ஒளிபொருந்திய வீட்டுலகை ஆளும் பயனைப் பொருந்தச் செய்வான் படரு கின்ற சடையோனாகிய பரமன் என்றவாறு.

திருவடியைச் சூடி, உண்மைத் தொண்டினைச் செய்யும் மெய்யன்பரைப் பரமன் வீட்டுலகத்து இருத்துவன் என்பதாம்.

தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி என்பதற்கு மிசச் சிறந்த தலைமைக்கண் விளங்கும் தேவர்களும் வணங்குகின்ற சடையினையுடைய நந்தி எனலுமாம். மிசை மிலை வைத்தனன். மேலே மிலைய வைத்தவன் என்க. மிலைதல் – சூடுதல். தாளை எனச் செயப்படுபொருள் வருவித்து உரைக்க.

திருவடியைச் சூடியவனாகி, மெய்ப்பணி செய்யப் படர்சடையோன் பொன்னுலகாளும் பலம் இசை செய்யும் எனக்கூட்டுக.

மெய்ப்பணி – பதி புண்ணியங்களாகிற சரியை கிரியை யோக ஞானங்கள். புலை – இழிதகைமை. அது அதன் காரண மாய மல கன்மங்களை உணர்த்திற்று. ஆகவே, மல மாயை கன்மங்களினின்று நீங்கிய பொன்னுலகு என்றவாறாம். பொன் னுலகு – ஒளியான வீட்டுலகு. பலம் – பயன். இசை செய்யும் – இசையச் செய்யும்; பொருந்தச் செய்யும் என்பதாம். (175)

அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியால் அறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கட்டி நடப்பார்
மறியார் புனல்மூழ்க மாதவ மாமே. 1879

இம் – எனின், அடிமை இலக்கணமும், அடியவர் பெருமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இளம் பருவத்திலேயே சிவனடியாரைப் புற வேடங்களான் அறிந்து (அவர்கட்குத் தொண்டு செய்து) இன்பம் கண்டது அடிமையாம். அவ்வடிமையை யுடையார் ஒன்றையும்குறியாராய், சடையை முடியாக எடுத்துக் கட்டி நடப்பார்கள். மீட்டும் வாசனாமலந்தாக்க மாயையின்கண் திரும்பார்; (அவர்கள் திருவடி கழுவிய) நீரில் முழுக, நமக்குப் பெரிய தவம் விளையும் என்றவாறு.

மெய்யடியார் ஒன்றிலும் பற்றின்றிச் சடைமுடியுடன் உலகியலில் திரும்பாது உதறித் தள்ளி நடப்பவர்கள்; அவர்கள் திருவடி தோய்ந்த நீரில் முழுகப் பெரிய தவம் உண்டாம் என்பது கருத்து.

அறியாப் பருவம் – தக்கன தகாதன, நல்லன கெட்டன என்று பகுத்தறிய இயலாத இளம்பருவம். முற்பிறப்பின் வாசனையால் அத்தகைய பருவத்தும் அரனடியார்களைக் கண்டு இன்பங்கொள்வதே மெய்யடிமையின் இலக்கணமாம்.

சேரமான்பெருமாள் அடிவண்ணானையும் வேடங் கண்டு அரனடியார் என்று எண்ணினமையும், முக்களாலிங்கர் திருவாவடுதுறை முனிவரர்களைக் கண்டு வழிபட்டமையும் கருதுக.

குறியார் – ஒன்றையும் உற்று உன்னாராகி, பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் ஆதலின் 'குறியார்' என்றார்.

சடைமுடி கட்டி நடப்பார் என்பது மெய்யடியார்களின் புறவேடம் கூறியவாறு.

மறியார் – சிவஞானச் செய்தி உடையார் மீளவும் வாசனாமலம் தாக்க உலகபாசத்தில் சிக்கார் என்பதாம். மறியார் புனல் எனக் கூட்டி, மடங்கி விழும் அலைகளை யுடைய புனல் என்பாருமுளர். இதிற்பொருள் இயைபின்மை காண்க. அடியார்கள் புனல் என்றது அவர்கள் திருவடி விளக்கிய நீரை. (176)

**அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்**
**சிவன்பால் அணுகுதல் செய்யவும் வல்லர்**
**அவன்பால் அணுகியே நாடு மடியார்**
**இவன்பாற் பெருமை இலயம தாமே. 1880**

இம் – எனின், மெய்யடியார்க்கு அன்பு செய்வார் அடையும் பயன் அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: சிவனடியார்பால் அணுகி, அன்பு செய்பவர்கள் சிவபெருமானிடம் அணுகவும் வல்லவராவர்; அங்ஙனம் சிவன்பால் அணுகி, அவனையே நுகரும் அடியார்கள் பெருமை அடியார்க்கு அடியனாகிய இவனிடம் அடங்கும் என்றவாறு.

அடியார்க்கு அன்புசெய்வார் சிவனை அணுகும் வன்மை பெறுவர். சிவனுக்கு அன்பு செய்யும் அடியவர்களின்

பெருமை அடியார்க்கு அடியனாகிய இவன் லயம் ஆம் என்பது கருத்து. இதனால் சிவனுக்கு அன்பு செய்தலினும் அடியார்க்கு அன்பு செய்தலே சிறந்தது என்பது விளக்கப் பெற்றது.

அவன் – மெய்யடியான். அவன் தன்பால் அணுகி அன்புசெய்பவர்களைச் சிவன்பால்அணுகுதல் செய்விக்கவும் வல்லன் எனக் கூட்டலுமாம். அப்பொருளில் செய்யவும் என்னும் தன்வினையைப் பிறவினையாக்குதல் வேண்டும். வல்லன் என்ற பாடத்திற்கு இயைந்த பொருள் இது. (177)

**முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்**
**எண்ணிறந் தன்பால் வருவர் இருநிலத்**
**தெண்ணிரு நாலு திசையந் தரமொக்கப்**
**பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே.** 1881

இம் – எனின், சிவனடியாரை வந்திக்க வானவரும் மண்ணில் வருவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: முற்பட்டு விளங்கும் சிவனைத் தரிசிக்கப் பதினெண்கணத்துத் தேவர்களனைவரும் எல்லையற்ற அன்பால் இப்பெரிய பூமிக்கண் வருவர்; அங்ஙனம் அவர்கள் வருவதால் பூமியானது எட்டுத்திசையும் ஆகாயமும் ஒக்கப் பன்னிருகாததூரம் சிவபதமாகத் திகழும் என்றவாறு.

சிவபெருமானுக்கு அடிமைபூணத் தேவர்களும் மண்ணிடத்து வருவர்; அதனால் பத்துத் திசைகளும் ஒக்கப் பன்னிருகாததூரம் சிவபதமாகத் திகழும் என்பதாம்.

முன் இருந்தார் – பார்முதல் அனைத்தும் தோன்றுதற்கு முன்னர் இருந்து அவற்றைத் தோற்றுவிக்கும் இறைவன்.

எண்கணத்தேவர்கள் முழுதும் எண்ணிறந்த அன்பால் முன்னிருந்தார் (தொழ) இருநிலத்து வருவர் எனக் கூட்டுக. ''வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச்சிப்பர், ஊனெடுத்துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ'' என்ற சித்தித்திரு விருத்தமும் இதனை நன்கு விளக்குதல் காண்க.

பன்னிருகாதம் என்றது வரையறை செய்ததன்று; பன்மை குறித்து நின்றது என்க.

வானவர் மண்ணில் வந்து அரனடிமையாவதால் மண்ணிடம் பத்துத் திசையும் சிவகந்தம் கலந்துநாறச் சிவ பதமாம் என்பதாம். (178)

**சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்**
**அவயோகம் இன்றி அறிவோருண் டாகும்**
**நவயோகங் கைகூடு நல்லியல் காணும்**
**பவயோகம் இன்றிப் பரலோக மாமே. 1882**

இம் – எனின், சிவயோகி தங்கிய தலவிசேடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவயோகியாகிய ஞானி பயின்ற அந்த இடத்து யோகம் பழுதுபடாமல் சிவஞானியர் தோன்றுவர்; புதிய போகப்பயன்கள் உண்டாகும்; நல்ல இயல்புகள் தோன்றும்; பிறவிக்கு ஏதுவாகிய மலச் சேர்க்கையின்றிப் பரலோகம் உண்டாம் என்றவாறு.

சிவயோகி வாழ்ந்த இடத்தில் சிவஞானியர் தோன்றுவர்; நற்குறிகள் தோன்றும்; புதிய புதிய யோகங்கள் உளவாம்; அங்கு வாழ்கின்றவர் அனைவரும் சிவ ஞானி களாய்ச் சிவலோகம் மேவுவார் என்பதாம்.

செறிந்த – இடைவிடாது பயின்ற. (179)

மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலம் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே.1883

இம் – எனின், அயன் முதலானோர் தொழிலும் அரன ருளாலேயே என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இறைவன் உதவிய அருளாணையான் மிக்க ஞாலத்தைப் படைத்தவனாகிய பிரமனும், மிக்க ஞாலங்கள் தந்தவனாகிய மாலும் முதலான உயர்ந்த வானுலகத்து அமரர் களுக்கு (எம்செயல் மேலுணர்வாலாயது என்ற) மேன்மை யான உணர்வுடையார் யார்? ஒருவரும் இலர்; மெய்யடி யார்களே எல்லாம் சிவன் செயல் என்னும் மேலான உணர்வு உடையார் எ–று.

பிரமனாதியர் படைத்தலதித் தொழில்கள் மேல் இருந்துவரும் அருளாணையால் என்பதனை உணரார்கள்; மெய்யடியார்கள் எல்லாம் சிவச்செயலே என்று மேலுணர்வு டையர் என்பது கருத்து.

படைத்தவன் (உம்) தந்தவன் (உம்) (முதலான) அமரர்களுள் மேல் உணர்வு ஆர்? சிவன் மெய்யடியார்களே மேலுணர்வார் என முடித்துப் பொருள் காண்க.

மேல் உணர்வான் – தம் அறிவின் எல்லையைக் கடந்து மேலுள்ள சிவன் உதவிய ஞானத்தான் என்க; ஞாலங்கள் தந்த வன். கருதல்–பாதுகாத்தல். மிகுஞாலம் – ஞாலத்தில் மிக்க தாகிய சுவர்க்கம். மேல் உணர்வு ஆர் – இச்செயல் எம் அறி வான் நிகழ்வதன்று. எமது மேலோனாகிய இறைவன் உதவிய உணர்வால் விளைவது என்ற உணர்வுடையார் யார் என்க. அங்ஙனம் உணர்பவர்கள் மெய்யடியாரே என்பதாம். (180)

# 15. போசனவிதி

அஃதாவது உணவு உண்ணும் முறைமை. உண்டல் வயிற்றுத்தீத் தணிய நிகழ்த்துவது. இதற்கும் முறைமை உண்டோ எனின், உண்டு என்க. விலங்குகளுக்கும் பறவை களுக்கும் பிற உடலொடு கூடிய உயிர்கள் அனைத்திற்குமே பசி உண்டு. பசி உண்டேல் உணவு உட்கொள்ளுதலும் உண்டு. விலங்கு முதலிய ஏனைய உயிர்கள் அருந்துவதிலும் மனிதன் அருந்துவதில் ஒரு சிறப்பு உண்டு. மனிதன் உணவைத் தன் உடல் பருக்க – பசித்தீத்தணிய என்று எண்ணுதல் கூடாது. சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் என எண்ணி அவர்களுக்கு அர்ப்பணம் செய்தே உண்ணவேண்டும். இதுவே போசனவிதி. ஏனைய ஆகம நூல்கள் உண்ணும் திசை, உண்ணும் பொருள், உண்ணும் முறை, உண்ணும்பொழுது காண்டற்கு உரியார். உடனிருந்து உண்டற்கு உரியார் முதலிய விதிகளை உணர்த்தும். ஆகமவழித்தாய இந்நூல் தனது அனுபவமும் விளங்க இரண்டு மந்திரங்களான் இயம்பும்.

**எட்டுத் திசையும் இறைவ னடியவர்க்**
**கட்ட அடிசில் அமுதென் றெதிர்கொள்வர்**
**ஒட்டி யொருநிலம் ஆள்பவர் அந்நிலம்**
**விட்டுக் கிடக்கில் விருப்பறி யாரே. 1884**

இம் – எனின், அடியவர்க்கு என்று அட்ட அடிசில் இறைவற்கு அமுதமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எட்டுத் திசைகளிலும் அடியவர்கட்காக அடப் பட்ட உணவை அமுதம் என்று இறைவன் எதிரே தாமே வந்து ஏற்றுக் கொள்வர்; ஒரு வயலையே பொருந்தி ஆள்பவர்கள்

அந்நிலம் பண்படுத்திப் பயிர் செய்யப் பெறாமல் விட்டுக் கிடந் தால் விரும்பிய போகத்தையும் அறியார்களாம் என்றவாறு.

ஒரு வயல் உடையார் தரிசு போட்டால்போகம் அறியாமைபோல அடியார்க்கென்றே சமைத்த உணவு இறைவற்கு ஆம் என்பது கருத்து.

இறைவற்கு அவன் அடியார் அனைவரும் நிலம். நிலத்தை உழுது, நீர் பாய்ச்சி, எருவிட்டுப் பயிர்செய்வது போல அடியார்கட்கு அன்பு செய்து அன்னமிடுவது, நிலத்தில் ஒரு பகுதி தரிசுபோட்டாலும் உடையன், விரும்பான்; விளைச்சலிராது. அதுபோல அடியார்களில் ஒருவர் உண்ண வில்லை யாயினும் இறைவன் விரும்பான் என்பதாம்.

''தனக்கென்று உலையேற்றார்'' என்று ஆசாரக் கோவையில் கூறப்படுதல்போல அடும்பொழுதே அடியார் களுக்கு என்று அடவேண்டும்; அந்த உணவே அரனுக்கு அமுதமாம் என்றமையால் இது போசன விதியாயிற்று.

வறியன் ஒரு செய்யாளன் அச்செய் விளையக் காக்கும் செயல்போல, அடியார்கள் அனைவரையும் உண்பித் தலே இறைவற்கு விருப்பாவது என்க. (181)

**அச்சிவன் உள்நின்ற அருளை அறிந்தவர்**
**உச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப்**
**பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்**
**திச்சைவிட் டேகாந்தத் தேறி யிருப்பரே. 1885**

இம் – எனின், அடியார்கள் பிச்சை ஏற்று உண்டு ஏகாந்தத்து இருத்தலே விதி எனல் நுதலிற்று.

இ--ள்: அச்சிவன் உடம்பினுள் உயிருக்குயிராக விளங்கும் திருவருள்வைப்பை உணர்ந்தவர்கள் உச்சிப் போதில் உடலுளிருக்கும் உயிராகிய கோயிலுக்காகப் பிச்சை ஏற்றுண்டு அறிவானும் அறிவும் அறியப்படு பொருளுமாய வேற்றுமை கெட அபேத ஞானத்தில் மேவி. ஒன்றினும் பற்று வையாது தனிமையில் தியானத்தால் உச்சிமண்டலமாகிய சகஸ்ராரத்தில் ஏறியிருப்பார்கள் என்றவாறு.

இம்மந்திரம் அடியார்கள் உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டான் ஆதலின் உடம்பை வளர்க்கப்பிச்சை ஏற்று உண்டு தியானத்தில் இருப்பர் என்பது கருத்து.

அச்சிவன் – எங்கும் நிறைந்த பொருளான சிவம். உள் நின்ற – உடம்புள்ளும் உயிருள்ளும் நிலைபெற்ற, சிவன் அங்ஙனம் கலந்துநிற்றல் கைம்மாறு இல்லாத கருணையால் என்பார் 'அருளை அறிந்து' என்றார்.

''ஒருபோது யோகியே'' என்ப ஆகலின் ஒவ்வொரு நாளும் உச்சிப்போதில் மட்டும் உண்ணவேண்டும் என்பதாம். உத்தமன் உறைகின்ற கோயிலாகிய உடம்பு வாழ்வதற்காக என்றது வினைகளைச் செய்யவும், போகங்களை நுகரவும் உண்பார்போல இருபோதும் முப்போதும் எப்போதும் உண்ணுதல் கூடாது என அறிவித்தவாறு.

சிவனடியார், அடுதல் அதற்கு உரியன ஆக்குதல் தேடுதல் முதலிய வினைகளில் ஈடுபடலாகாது. எட்டுத்திசை யிலும் அடியார்க்கு என்றிட்ட அடிசிடிலைப் பிச்சையாக ஏற்றலே சிறந்தது என்பார் 'பிச்சை பிடித்து' என்றார்.

அங்ஙனம் பிச்சை ஏற்ற உணவையும் மூன்று கவளம் அல்லது ஒன்பது கவளத்திற்கு மிகாதவாறு பிடித்து உண்ண வேண்டும். மிகுதியாக உண்டல் தவ ஒழுக்கத்திற்குத் தளர்ச்சி என்பார் 'பிடித்து' என்றார்.

அங்ஙனம் விதிப்படி உண்போர்க்கே தியானம் சித்திக்கும்; அத்துவித பாவனையில் அரனை வழிபடலாம் என்பார் 'பேதமற நினைந்து' என்றார்.

அரனை நினையும்போது வாசனையால் கண் காது மூக்கு முதலான இந்திரியங்கள் தம் பசியைப் போக்கிக் கொள்ளப் புலன்களை நாடுதல் கூடும். அங்ஙனம் அவற்றைப் புறமே போகவிடாது கட்டுப்படுத்துதல் மிக மிக இன்றியமையாதது என்பார் 'இச்சைவிட்டு' என்றார்.

'யோகத்திற்கு ஒருவர்' என்பது பழமொழியாதலின் தனிமையான இடமே யோகப்பயிற்சிக்குச் சிறந்தது என்பார் 'ஏகாந்தத்து' என்றும், அங்ஙனம் இருத்தல் உயர்தற்கு உபாயம் ஆகலின் 'ஏறி இருப்பர்' என்றும் கூறினார். ஏறுதல் உயிரைக் குண்டலினியோடு மதிமண்டலத்து ஏற்றுதல். (182)

## 16. பிட்சாவிதி

அஃதாவது, பிச்சை எடுத்தற்கு உரிய முறைகளைக் கூறும் அதிகாரம் என்பதாம். பிச்சை என்பது உயிர் வாழ்வதற்காக எடுக்கப்பட வேண்டுமே அன்றி பலவகையான உணவுகளை வேண்டியவாறே உண்ணலாம் என்பதற்காக இருத்தல் கூடாது என்பது ஆறு திருமந்திரங்களான் அறிவிக்கின்றார். முன்னர் 'பிச்சை பிடித்து' என்று தோற்றுவாய் செய்தமையின் அதனியலை அடுத்து அறித்தல் முறையாதல் காண்க.

**விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு**
**உச்சிக்கு முன்னே யுழவு சமைந்தது**
**அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ண மாட்டாதார்**
**இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே. 1886**

இம் – எனின், இச்சைக்குப் பிச்சை எடுத்தல் கூடாது எனல் நுதலிற்று.

இ–ள்: விதைகலம் உண்டு; பாதுகாப்போடு கூடிய ஒருவேலி நிலம் உண்டு; உச்சிப்போதுக்கு முன்பே உழவு முடிந்தது; அச்சமின்றி வயலை அறுத்து உண்ணமாட்டாதார் பிச்சை எடுப்பது இச்சை வயப்பட்டாம் என்றவாறு.

இம்மந்திரம் மந்திரமாகவே யோக நுட்பங்களை உருவகித்து உணர வைக்கின்றது. விச்சு – விதை. உயிர்க்கு விதை போல்வது பிராணன். கலம் – பன்னிரண்டு மரக்கால். விச்சுக்கலம் உண்டு என்றது பன்னிரண்டு மாத்திரை அளவாக வெளிப்படுகின்ற பிராணவாயுவை உண்டு. பதினாறு மாத்திரை அளவு இடது நாசியால் பூரித்து, அறுபத்து நான்கு மாத்திரைக்காலம் வலது நாசியால் விடுதல் பிராண ஆயாம முறையாதல் முன்னர் 'ஏறுதல் பூரகம்' (568) என்னும் மந்திரத்தால் உணர்த்தப் பெற்றமை காண்க.

வேலி செய் – வேலிகளையுடைய வயலுமாம். களிறு வந்துமேய்ந்துவிடாதபடி பாதுகாக்கப்பட்ட வயல்; என்றது இடகலை பிங்கலையாக இடைநடுவே தடுப்புச் சுவரோடு கூடிய நாசியை.

உச்சி – பிரமரந்திரம். அதற்கு முன்னே என்றது புருவ மத்தியாகிய சுழுமுனை கூடிய இடத்தை. உழவு – பிராணாயாம

முயற்சி. சமைதல் – தாரணை தியானங்களாக முதிர்தல். இடது நாசிவழியாகப் பூரிக்கப்பட்ட பிராணன் சுழுமுனையில் கும்பக மாம்போது ஒருவகை இன்பூற்று உடல் முழுதும் பரவும். அப்பொழுது நடுக்கம் அச்சம் முதலிய உயிர்க்குற்றங்கள் அகலும் ஆதலின், 'அச்சம்கெட்டு' என்று அருளப் பெற்றது. அச்செய் – அநாகதத்தானமாகிய வயலில் உள்ள சிவபோகத்தை. இடவாகு பெயராக விளைவை எண்ணுக. அறுத்து – தமக்கே உரியவதாக வரையறுத்து. உலகவர் இல்லிலே சென்று பிச்சை ஏற்றல் தம் இச்சைக்கே ஆம் என்றவாறு.

இதனால் பிராணாயாமத்தால் தியான சமாதியில் நின்று மதிமண்டலத்து அமுதம் உண்ணலே உண்மைப் பிச்சை என்பது உணர்த்தப்பெற்றது. (183)

**பிச்சைய தேற்றான் பிரமன் தலைதன்னில்**
**பிச்சைய தேற்றான் பிரியா ளறஞ்செய்யப்**
**பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்**
**பிச்சைய தேற்றான் பிரமன் பரமாகவே. 1887**

இம் – எனின், இறைவன் பிச்சை ஏற்றதன் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தன்பாகம் பிரியாளாகிய உமாதேவியார் முப்பத்திரண்டு அறங்களையும் செய்யத் தான் பிரமன் தலையில் பிச்சை ஏற்றான்; அவன் அங்ஙனம் பிரமன் தலையைக் காட்டிப் பிச்சை ஏற்றது பிரமனினும் தான் பரம் என்று உணர்தற்காக என்றவாறு.

இறைவன் பிரமகபாலத்தில் பிச்சை ஏற்றது பிரமனினும் தான் பரம்பொருளென்று உலகவர் உணர்ந்து உய்வதற்

காக என்பது கருத்து. பிரமன் பரம் ஆகவே என்பதற்குப் பிரமன் மேல்நிலையை எய்த எனலுமாம். இறைவன் திருக் கரத்தைச் சார்ந்தமையால் பிரமன் சிறந்தான் என்பது. (184)

**பரந்துல கேழும் படைத்த பிரானை**
**இரந்துணி என்பர்கள் எற்றுக் கிரக்கும்**
**நிரந்தர மாக நினையும் அடியார்**
**இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே.**
1888

இம் – எனின், இதுவும் அது.

இ–ள்: உலகம் அனைத்திலும் வியாபித்து நின்று, உலகத்தைப் படைத்த இறைவனை உலகவர்கள் இரந்து உண்ப வன் என்று ஏளனம் செய்வார்கள்; அவன் எதற்கு இரக் கின்றான்? இடைவிடாது தன் திருவடிகளையே தியானிக்கும் அடியவர்கள் இரந்து உண்டு, தன் திருவடியை நணுகச் செய்தான் அவ்வளவே எ–று.

அடியார்கள் யாக்கைக்கே இரை தேடிக் கழியாமல் பூக்கைக்கொண்டு அரனைப்போற்றுந் தொழிலேயே நிலைக்கச் சிவன் இரந்துகாட்டினான் என்பதாம். (185)

**வரவிருந் தான்வழி நின்றிடும் ஈசன்**
**தரவிருந் தான்தன்னை நல்லவர்க் கின்பம்**
**பொரவிருந் தான்புக லேபுக லாக**
**வரவிருந் தாலறி யானென்ப தாமே.** 1889

இம் – எனின், 'நல்லவர்க்கு இன்பந்தர இருக்கும் நாதனை அறியான்' என்பது அடாது, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவனை அணுகுதற்காக எழுந்துவர இருந்த மெய்யடியார் வரும்வழியிலே ஈசன் நிற்பன்; நல்ல மெய்யடியார்களுக்கு இன்பந்தர இருந்தான் அடியார்களுக்கு அடைக்கலமாகப் பொருந்த இருந்தான்; அவர்கள் தம்மிடம் அடைக்கலம்புக வர இருந்தான்; அவனை அடியார் அல்லல் அறியாதவன் எனல் பொருந்துமா? என்றவாறு.

சிவனைச் சேர அடியார்கள் ஓரடி எடுத்துவைத்தலும் அவன் நேரில்வந்து நிற்பன். இன்பந்தருவன்; அடைக்கலமாவன்; அடைக்கலம் புகுந்தால் அவர்களிடம் வர ஆயத்தமாவான்; அங்ஙனமிருக்க அவனை அறியாதவன் எனல் தகுமோ? என்பது கருத்து.

வர இருந்தான்; வினையாலணையும் பெயராய் ஏழனுருபு பெற்று வந்தது. சிவனாகிய தம்மிடத்தே வர இருந்த அடியாரிடம் என்பது. வழி நின்றிடும் – வழியிலேயே அடியாரை எதிர்ப்படக் காத்து நிற்பன் என்பதாம். ஆலால சுந்தரருக்கு வரும் வழியில் வழிகாட்டியாக நின்றபோது அவர் ''அந்தணன் இவ்வழிப்போந்த அதிசயம் அறியேனே'' என்றமை நினைவு கூர்க.

தன்னை – தனக்கு. நல்லவர்க்கு – விதிப்படி ஒழுகி மலகன்மங்கள் நீங்கிய மெய்யடியார்க்கு. இன்பமாகத் தன்னைத் தர இருந்தான் எனக் கூட்டலுமாம்.

பொர – பொருந்த பொரு என்னும் பகுதி அகரமாகிய வினையெச்ச விகுதி பெற்றதாகக் கொண்டு பொருந்த என உரைக்க.

புகலாக என்பது அடியார்வினை. அடியார் புகலாக வர இருந்தால் அச்சிவனை அடிமைவருத்தம் தெரியாதவன் எனல் தகுமோ என்பது கருத்து.

அடியார்கட்கு இன்பம் மிகத் தன்னைத் தர இருந்தான் என்பதால் பிச்சைக்காக ஞானியர் அலைதல் கூடாது; சிவன் விட்டது வழியெனச் சிந்தையைச் சிவன்பால் செலுத்தியிருத் தலே பிட்சாவிதி என்கின்றமையின் இம்மந்திரம் இவ்வதிகாரத் திற்கு ஏற்புடைத்தாதல் அறிக. (186)

**அங்கார் பசியும் அவாவும் வெகுளியுந்**
**தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்**
**பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்துந்**
**தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. 1890**

இம் – எனின், சிவனடியார்கள் என்றும் சிவனைத் தலைப்படுவர் எனல் நுதலிற்று.

இ–ள்: சிவனடியார், தீயை ஒத்த பசியும் ஆசையும் கோபமும் முதலான குற்றங்களில் தங்கார்; எடுத்த இவ் வுடலில் களிப்பால் மிகுதியுறார்; இந்தப் புவனத்தும் ஏனைய புண்ணிய லோகங்களிலும் தங்கார்; சிவபெருமானையே கூடுவர் என்றவாறு.

சிவனடியார் மனக்குற்றம் உடற்பற்று இடப்பற்று இவைகளைப் பொருந்தார்; சிவனடியையே பற்றி நிற்பர் என்ப தாம்.

அங்கியார் பசி: எதுகைநோக்கி அங்கார் பசி என ஆயிற்று. அங்கார் – அடையார் என்பாரும் உளர்.

புவனம்– கன்மக் கழிவிற்காகக் கிடைத்த இந்த உலகம். புண்ணிய லோகம்–செய்த புண்ணியங்கட்கு இயையப் பொருந்தப்போகும் சுவர்க்காதி உலகங்கள். பொங்குதல் – செருக்குதல். (187)

மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வர்
ஐயம் புகாமல் இருந்த தவசியரர்
வையகம் எல்லாம் வரவிருந் தாரே. 1891

இம் – எனின், சிவஞானியரில் கைநீண்டாரியல்பும், இருந்த இடத்து இருப்பவர் இயல்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உண்மையான உண்ஞானத்தால் மிகத் தெளிவுற்றவர்களாயினும் கைத்தலம் நீண்ட பேர்கள் இல்லறத்தார்களின் கடைவாயிலுக்குச் செல்வர்; பிச்சைக்குப் போகாமல் இருந்த இடத்திலே இருந்த தவசியர் உலகமனைத்தும் தம்பால் வர இருந்தாராவர் என்றவாறு.

சிவஞானி பிச்சைக்கு என்று வீடுவீடாகச் செல்லுதல் கூடாது என்பதாம்.

மெய் அகஞானம் – உண்மையான உண்ஞானம். புறத்தில் ஞானிபோல்வேடங்காட்டாது உண்மையாகவே மனத்தால் ஞானிகளாயிருப்பவர்கள் என்றதாம்.

கையம் நீண்டார் – கைத்தலம் நீண்டவர்கள். வாங்கித் தின்ன வேண்டும் என்ற ஆசையால் ஒன்றற்காக கைநீட்டியவர்கள். இதனான் உண்மை ஞானிகள் ஆயினும் கையேற்றல் கூடாது என்பது விதிக்கப்பட்டது.

ஐயம் – பிச்சை. இருந்ததவசியர் – தம் தவத்திலேயே கண்ணாகத் தவச்சாலையை விட்டுப் பிரியாத தவசியர். வைகம் எல்லாம் வர – உலகமனைத்தும் தம்பால் வர ''இருக்குமிடத்தேடி என் பசிக்கு அன்னம், அருத்தியுடன் இட்டாலருந்துவேன்'' என்றிருந்த துறவரசை நினைக்க. (188)

# 17. முத்திரைபேதம்

அஃதாவது தியான யோகத்தில் இடைவிடாது பயின்றதால் விளையும் அடையாளமாம். முத்திரை – அடையாளம். முத்திரைகள் மகாமுத்திரை, மகாபந்தம், மகாவேதம், கேசரி, ஒட்டியாணம், மூலபந்தம், ஜாலந்திரபந்தம், விபரீதகரணி, வஜ்ரோலி, சக்திசாலனம் என்ற பத்தாகவும், தடாக முத்திரை முதலான ஏழாகவும், சாண்டில்ய உபநிஷத்து யோகசூடாமணி முதலான யோகநூல்கள் தெரிவிக்கின்றன. அவை பெரும்பாலும் ஹடயோகத்திற்கு உரியனவாம். அவற்றை விடுத்து, சாம்பவிமுத்திரை கேசரி முத்திரை இவ்விரண்டுமே ஞான முத்திரைகளாதலின் அவற்றைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்திய எடுத்துக்கொண்டார். விதிப்படி பிச்சை எடுத்துண்டு தியான யோகத்தில் பிழையாத சிவயோகி. மனம் நிற்கவும் ஞானம் விளங்கவும் இம்முத்திரைகளைப் பயிலுதல் இன்றியமையாதது ஆதலின் பிட்சாவிதியின் பின்னர் இவ்வதிகாரம் அமைக்கப்பட்டது.

**நாலேழு மாறவே நண்ணிய முத்திரை**
**பாலான மோன மொழியிற் பதிவித்து**
**மேலான நந்தி திருவடி மீதுய்யக்**
**கோலா கலங்கெட்டுக் கூடுதன் முத்தியே.1892**

இம் – எனின், முத்திரையின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பதினொரு கருவிகளும் பசுபோத வழி நின்றும் பதிபோத வழியில் மாற அதனால் வந்தடைந்த முத்திரை பகுதிப்பட்ட உரையிறத்தலாகிய மோனமொழியிற் பதியச்

செய்து, அனைத்திற்கும்மேலான சிவபெருமானது திருவடியில் ஆரவாரமடங்கி உய்யக்கூடுகின்ற நல்ல முத்திப்பேறே யாம் என்றவாறு.

மோனத்தில் நிலைபெற்று, இறைவன் திருவடி கூடுதலால் நண்ணு முத்தியே முத்திரையால் விளையும் பயனாகும் என்பது கருத்து.

நாலேழு – நாலும் ஏழும் என உம்மைத் தொகை. நாலு – மனம், புத்தி, சித்தம் அகங்காரமாகிய அந்தக் கரணங்கள் நான்கு. ஏழு – ஆன்மாவின் அறிவை விளக்கம் செய்யும் வித்தியா தத்துவங்களாகிய காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மகத் என்னும் ஏழும். இவை உயிரினிடமாக நின்று மாயேயங்களைச் சென்றறிந்தும், கண்டறிந்தும் உயிர்களுக்குதவுவன ஆதலின் அவற்றை அவற்றின்கண் செல்ல விடாது தடுத்துச் சிவத்தின்பால் செலுத்துவதே மாறுதல் இது முத்திரைகளை அடைவதற்கு உபயோகமாம். இங்ஙனமன்றி, ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்தும் மனம் ஒன்றும் ஆகப் பதினொன்று என்பாரும், மண் முதல் பதினொது தத்துவங்கள் என்பாருமாகப் பலவாறு உரைப்பர். யோகநெறியில் அந்தக் கரணங்களும் ஒருவழிப்பட்ட வித்தியாதத்துவங்களால் ஆன்மாவினிடம் ஞானதீபம் ஒளிரச் செய்தலே ஏற்றதாதல் காண்க.

மாறவே நண்ணிய முத்திரை என்பது மாயேயங்களில் செல்லும் தத்துவங்களைச் சிவத்திடம் செல்லும்படி மாற, அதனால் அடையும் பேறே முத்தியாம் என்று அறிவித்தவாறு.

அவ்வண்ணம் முத்திரையில் பயின்றான் ஒருவன் மோன நிலையை அடைந்து, எண்ணம் இறைவனிடம் இழை

யோடி நிற்க வேண்டுமாதலின் 'மோன மொழியில் பதிவித்து' என்றார். மோனமொழி – ஊமை எழுத்தாகிய ஓம் என்பது. பாலான மோனமொழி – சிவம், சக்தி, நாதம், விந்து, மாயை என்ற ஐம்பகுதியதாய் ஒன்றாய் நிற்கின்ற ஓம் என்க. முத்திரை பயில்பவன் ஓம் என்னும் பிரணவத் தியானமே செய்வதற்கு உரியன் என விதித்தவாறு. மேலான நந்தி – பரம் என்று பாராட்டப்படுகின்ற அனைத்திற்கும் பரமான சிவம்; பராத்பரம் என்பது. பராபரம் என்பதும் இதுவே. திருவடிமீது உய்யக் கூடும் நன்முத்தி எனக் கூட்டுக.

கோலாகலம் – வீணான உலகியல் ஆரவாரங்களாகிய பாசஞானப் பரபரப்பு; அதுவும் கெட்டு என்றார்.

முத்திரை பதிவித்துக் கெட்டு உய்யக்கூடும் நன் முத்தி யாம் எனக் கூட்டுக. இம்மந்திரத்திற்கு வரலாற்றுக்கு ஒவ்வாக வேறு உரை கூறி இடர்ப்படுவாரும் உளர். அவற்றை ஈண்டுக் குறித்திலம்.

இம்மந்திரம் முத்திரையாவது மனத்தைப் பிரணவத்தில் பதிவித்து ஆரவாரம் அடங்கித் திருவடிகூடுதலே என்று அறிவிக்கிறது. (189)

**துரியங்கண் மூன்றுஞ் சொருகிட னாகி**
**அரிய வுரைத்தார மங்கே யடக்கி**
**மருவிய சாம்பவி கேசரி யுண்மை**
**பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. 1893**

இம் – எனின், சாம்பவி கேசரி முத்திரைகளின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மூன்று வகையான துரியங்களும் அடங்கும் இடமாகி, அரிய உரைகளைப் பேசுகின்ற நாக்கினை உள்ளே யடக்கி, புருவ மத்தியில் ஒளியோடு பொருந்திய சாம்பவியும் கேசரியுமே உண்மை ஒருகாலைக்கொருகால் பெருகிய ஞானம் விளங்கும் முத்திரைகளாம் என்றவாறு.

துரியநிலையும் மடங்கி, நாக்கினை உள்ளேயடக்கி யிருக்கும் கேசரி, சாம்பவி முத்திரைகளே ஞானமுத்திரை களாம் என்பது கருத்து.

துரியம் – பேருறக்க நிலை. சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என அது மூவகைப்படும். சீவதுரியமாவது உட லுடன் பிராணன் அடங்கியருக்கும் நிலை. பரதுரியம் – அருளில் ஆன்மா அடங்கிய் நிலை. சிவதுரியம் – சிவத்தி னிடம் சீவன் அடங்கிய நிலை. இந்த மூவகைத் துரியங்களும் அடங்கிய நிலை ஞான முத்திரைகளாகிய சாம்பவி கேசரிகள் என்க. துரியம் கண் மூன்றும் சொருகு இடனாகி எனக் கொண்டு, பேருறக்க நிலையாவது கண்களும் அறிவும் அடங்கிய நிலை எனலுமாம்.

தாரம் – நா. அது அரிய உரைகளை உரைத்தற்குக் கருவி ஆதலின், 'அரிய உரைத்தாரம்' எனப்பட்டது. நாவை அடக்குதலாவது புருவமத்தி வரை நாவை மடக்கி மேலே செலுத்துதல்.

மருவிய – சார்ந்த. இதற்குத் தக புருவநடுவைச் சார்ந்த எனச் செயப்படுபொருள் வருவிக்க.

சாம்பவி கேசரி முத்திரைகளோடு கூடிய யோக நிலை முன்னர் மூன்றாந்தந்திரத்து 799 முதல் 824 வரையுள்ள

மந்திரங்களால் உணர்த்தப்பட்டது. சாம்பவிசம் – சுகம்; பவதி– உண்டாக்குவது சாம்பவி – அன்பர்களுக்குச் சுகத்தை உண்டாக் குவது என்ற காரணம் பற்றி வந்த பெயர். தியானத்தால் சம்பு வாகிய சிவத்தை அடைவிப்பதால் வந்த பெயருமாம். சுக வடிவாய் நிற்பதால் வந்த பெயர் என்பாரும்; சம்பு – ஞானம், ஞானம் வெளிப்படுவதால் வந்த பெயர் என்பாரும் உளர். அவற்றின் விரிவைப் பாதஞ்சல யோக சூத்திரத்துக் காண்க.

கேசரியாவது பிராணவாயு சுழுமுனையிற் செல்லும் பொழுது உண்டாகும் அனுபவம். இதனைப் பற்றிச் சாண்டில் யோபநிஷத்தில் 'இடை பிங்கலைகளின் மத்தியில் இருக்கும் சூனியம் வாயுவை விழுங்கும்போது கேசரி முத்திரை சித்திக் கிறது. என்று கூறப்பட்டுள்ளது. புருவ நடுவில் மனம் ஒடுங்கும் நிலை துரியம். அத்துரியமும் கடந்த அனுபவநிலை கேசரி முத்திரை என்க.

இவ்விரு முத்திரைகளும் ஞானம் விளங்கச் செய்த லின் ஞான முத்திரைகள் எனவும்படும். (190)

**சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்**
**ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை**
**ஓம்பயில் ஓங்கிய வுண்மைய கேசரி**
**நாம்பயில் நாதன் மெய்ஞ்ஞான முத்திரையே.**
**1894**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: சாம்பவி முத்திரையானது சிவபரம் பொருளின் திருவருட்பார்வையை விளைவிப்பதாம்; இனிப் பிறப்பில்லாத திருவருள் விளக்கமான கையாற் குறிக்கப்பெறும் சின்முத் திரையே பிரணவத் தியானத்தோடு கூடிய மெய்ம்மையான

கேசரி முத்திரையாம்; இவ்விரண்டும் சிவயோகிகளாகிய நாம் பழகக்கூடிய உண்மை ஞான முத்திரைகளாம் என்றவாறு.

திருவருள் நோக்கமே சாம்பவி முத்திரை; சின்முத்திரையே கேசரி முத்திரை; இவை இரண்டும் ஞான முத்திரைகளாம்; இவையே சிவயோகிகளாகிய நாம் பயிலத் தக்கவை என்பது கருத்து. (191)

**தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும்**
**ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலால்**
**ஏனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட**
**மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே.**

1895

இம் – எனின், இம்முத்திரைகட்கு வேறு பெயரும் அதன் காரணமும் விளக்குதல் நுதலிற்று.

இ–ள்: ஆதாரத்தில் விளங்குவது சதாசிவம்; ஆதாரமின்றி நிராதாரத்தே அறிவுருவாய்த் திகழ்வது பரசிவம்; ஆதலால் சிவமாம் சொரூபம் மறைந்த மவுனமுத்திரையே முடிந்த முத்தி நிலையாம் என்றவாறு.

சதாசிவம் – அநாகதமாகிய ஆதாரத்தில் விளங்கும் அருவுருவம். அதனையுங் கடந்து அறிவுருவாய்த் திகழ்வது பரசிவம். அவ்வுருவம் மறைந்து அதுவதுவாய் நிற்கும் நிலை மோனமுத்திரை. இதுவே முதிர்ந்த முத்திநிலை என்பது கருத்து.

தானம் – ஆதாரம். சதாசிவம் விளங்கும் ஆதாரம் அநாகதம். (192)

வாக்கு மனமும் இரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம்
வாக்கு மனமும் மவுனமாஞ் சுத்தரே
ஆக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே. 1896

இம் – எனின், மவுனத்தியல்பும் வகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வாக்குச் செயலறுதலும், மனம் செயலறுதலும் இரண்டும் மவுனமாம்; இரண்டும் மவுனமானவரே சுத்தான்மாக்கள் ஆவர். அச்சுத்தநிலையை அறிவார் யார் என்றவாறு.

வாக்கு அடங்குதல், வாக்கு மவுனம், மனம் அடங்குதல், மனமவுனம், வாய் பேசாமை மட்டும் மவுனமாகாது; ஊமையாம், இரண்டும் மவுனமாதலே தூயநிலை. அச்சுத்த நிலையால் விளையும் பலனை அறிவார் யார் என்பது கருத்து.

மவுனம் என்பது வாய்வாளாமை மட்டுமன்று; மனமும் அடங்கவேண்டும். அப்போதுதான் மலகன்மங்கள் வலிகுன்றும். ஆன்மா தூயதாமென்பது. (193)

**யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியாம்**
**ஏகத்த ஞானத்து முத்திரை எண்ணுங்கால்**
**ஆகத் தகுவேத கேசரி சாம்பவி**
**யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. 1897**

இம் – எனின், கேசரி, சாம்பவி யோகங்களுக்குரிய முத்திரையும் அப்பெயர் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யோகம் சித்தியாயிற்று என்பதை உணரும் வாயில் ஒப்பற்ற அட்டமாசித்திகளை எய்துதலாம்; ஒப்பற்ற ஞானத்தைப் பெற்றமைக்குரிய அடையாளத்தை ஆராயும் போது, திருவருளால் கைகூடத்தக்கனவும் வேதங்களில் கூறப் பட்டனவுமான கேசரி சாம்பவி யோகங்களுக்கு உரிய கேசரி முத்திரையும், சாம்பவி முத்திரைகளுமேயாம் என்றவாறு.

ஞானம் பெற்றமைக்குரிய அடையாளம் சாம்பவி முத்திரையும், கேசரி முத்திரைகளும் ஆம் என்பது கருத்து.

யோகம் - அட்டாங்க யோகம்; அட்டாங்க யோகங் களை நெடுநாள் பழகிக் கைவந்தமையை அறியும் உபாயம் அணிமாதி அட்டமாசித்திகளை எளிதாகச் செய்தலாம். ஆகவே யோக முத்திரை சித்திகளை விளையாடுதல் என்பது.

ஏகத்த ஞானம் - ஒப்பற்ற ஞானம். ஞானம் ஒன்றே நிரதிசய முத்தியின்பத்திற்குரிய ஒரே உபாயமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

ஆகத் தகும் என்பதற்கு ஏற்பத் திருவருளால் வசமாகத் தக்க எனச் சில சொல் வருவித்துப் பொருள் கொள்க.

கேசரியோகம் சாம்பவியோகம் இரண்டும் முன்பு மூன்றாந் தந்திரத்து மொழியப்பெற்றன. அவை சித்தியானதை அறிதற்குரிய உபாயம் அம்முத்திரைகள். அவை சிவஞானம் கைவந்தமையைக் காட்டுவனவாம் என்பது. (194)

**யோகியெண் சித்தி அருளொலி வாதனை**
**போகிதண் புத்தி புருடார்த்த நன்னெறி**
**யாகுநன் சத்தியும் ஆதார சோதனை**
**ஏகமுங் கண்டொன்றில் எய்தநின் றானே.**

**1898**

இம் – எனின், யோகி போகி சத்தி இவர்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: யோகியாவான் அட்டமாசித்திகளையும் பெற்று, அவை பெறுதற்கு உபாயமான திருவருள் நாதத்தில் வசிப்பவன்; போகியாவான் புத்திதத்துவ விளைவான நால் வகைப் புருஷார்த்த நல்லொழுக்கத்தில் நிற்பவன்; சத்தியா வான் ஆறு ஆதார சோதனைகளிலும் குண்டலினியும் தானு மாக ஒன்றாய்க் கண்டு, ஒப்பற்ற இடமாகிய உச்சியில் (சகஸ்ரா ரத்தில்) சத்தியும் தானும் வேறற்ற நிலையில் ஒன்றி நின்றவனே யாம் என்றவாறு.

யோகி, சித்திகளை எய்திய சித்தன்,. போகி, திருவருள் நாதத்தில் வசிக்கும் அனுபவி. சத்தி, குண்டலினி யோடு அந்நியமாய்க் கூடி ஆயிரம் இதழ்த் தாமரையில் ஆனந்தப்படுமவன் என்பது கருத்து.

அருள் ஒலி வாதனை – திருவருள் நாதமாகிய பிரணவ ஒலி என்றும் சிந்தையில் ஒலித்துக்கொண்டே இருக்கும் அனுபவ அறிவாம். கருவி கரணங்களுக்கு அப்பாற்பட்டு என்றும் ஓம் ஓம் என்ற ஒலி அனுபவம் உறுதல் யோகமாம் என்பது. அது கேட்போர் என்றும் எங்கும் துன்பமேயுறார் ஆதலால் யோகி எனப்படுவார் என்பதாம்.

போகி – நுகர்பவன். நுகர்பவன், என்றும் தனியாய்த் தன் புத்தியால் 'யான் போகி, அது போகம்' என உணர்பவன் ஆதலின் போகி புத்தியால் புருடார்த்த நல்லொழுக்கங்களில் நிற்பவன் ஆயினன் என்க.

புருடார்த்தம் – அறம் பொருள் இன்பம் வீடு என்பன. வீடும் போகிக்குப் போகமாமோ எனின், ஆம். தன் செயலற்று

நுகரவேண்டிய வீட்டின்பத்தை யான் நுகர்கிறேன் என்று முனைந்து நின்று உணர்வானாயின் அந்நிலையில் அவன் போகியே ஆவான் என்க.

சத்தி – சத்தியோடு கூடியவன். சத்தி – குண்டலினி. ஆதாரம் – மூலமுதல் உச்சிவரையுள்ள ஆறு ஆதாரம். ஆறு ஆதாரங்களிலும் பிராணனும் குண்டலினியும் ஒன்றாக நின்று அனுபவித்து உச்சியிலும் ஒன்றாகவே உணரும் அனுபவம் சத்தியாம் என்பது. (195)

**துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்**
**அவாவறு மீரை வகையங்க மாறுந்**
**தவாவறு வேதாந்த சித்தாந்தத் தன்மை**
**நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே. 1899**

இம் – எனின், சுத்த சைவ நெறியாகிய யோகநெறியின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: யோகமார்க்கமாகக் கூறப்படும் பன்னிரு நெறியே மென்மையான பதினாறொடுக்கமாகிய பிராசாத நெறிகளாம்; அவற்றுள் பத்துவகை நெறியால் பற்றறும்; அவற்றின் அங்கமான ஆறும்கேடற்ற வேதமுடிவான சித்தாந்தத்தன்மையயாம்; இவற்றைக் குற்றமற்ற மனத்தோடு தியானிக்க நல்ல சுத்தசைவம் ஆம் என்றவாறு.

யோகநெறி அனுபவம் முதிரச் சோடச பிராசாத அநுபவம் உண்டாம்; அவற்றுள் பத்து பற்றறுக்கும்; ஆறு சித்தாந்தச் செந்நெறியான சுத்தசைவம் ஆம் என்பது கருத்து.

துவாதச மார்க்கம்–மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, தாலு, ஆஞ்ஞை, பிரமரந்திரம், உபரிசிரஸ், துவாதசாந்தம், வெளி, பரவெளி என்னும் பன்னி ரண்டு நெறிகளாம். துவாத சாந்தமாகிய நெறி எனினுமாம்.

மென்மை – நுட்பம் உணர்த்தி நின்றது. மென் சோடச மார்க்கம் – மிக நுட்பமான சோடச பிராசாத நெறிகளாம். அவையாவன. அகாரகலை, உகாரகலை, மகாரகலை, விந்து கலை, அர்த்தசந்திர கலை, நிரோதினி கலை, நாதகலை, நாதாந்த கலை, சத்திகலை, வியாபினி கலை, வியோமரூபை, அனந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பனவாம். இவற்றுள் அகாரகலை முதல் வியாபினி வரையுள்ளவை பற்றறுதலாகிய பயனைத் தருவனவாம். ஏனைய நான்கும் சித்தாந்த செந்நெறியாகிய ஞானமுத்திரை அனுபவமாம் என்பது.

துவாதச மார்க்கம் – யோக மார்க்கமெனவும், சோடச மார்க்கம் – சரியையிற் சரியை முதலான பதினாறு நெறிக ளெனவும், ஈரைவகையங்கம் – பத்து அங்கம் எனவும், ஆறு – காமாதியாறு எனவும் கூறுவர் சிலர்.

நவா அகம் – குற்றமற்ற. ஆசை அற்ற எனலுமாம். ந அவா என்று நிலைமொழியை மட்டும் இன்மைப் பொருளைக் குறிக்கும் வடசொல்லாகக் கொண்டு ஆசையற்ற என்பர்.

(196)

**மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை**
**ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை**
**தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை**
**கானிக்கு முத்திரை கண்ட சமயமே.** 1900

இம் – எனின், இன்ன முத்திரைக்கு இன்னாரெனல் நுதலிற்று.

இ–ள்: மோனமுத்திரை முத்தர்க்குரிய முத்திரையாம்; ஞானமுத்திரை ஆசாரியருக்கு உரியதாம்; சித்தம்இனிக்கும் முத்திரை சித்தாந்த முத்திரையாம்; இவை புகழப்படும் சமயங் கண்ட முத்திரையாம் என்றவாறு.

மோனமுத்திரை முத்தர்க்கும், ஞானமுத்திரை குருவுக் கும், தேனிக்கும் முத்திரை சித்தாந்த நெறியில் நிற்பார்க்கும் உரியனவாகப் புகழப்படும் சமயங்கள் புகல்கின்றன என்பதாம்.

மோனமுத்திரை – வாய்வாளாது பிரணவத் தியானத்தில் இருக்கும் அசைவற்ற உயிர்ப்படங்கிய நிலை. இதற்குரியார் முத்தியை விரும்புவாராகிய முமுட்சுக்களாவார்.

ஞானமுத்திரை – சீவன், மல மாயை கன்மங்களினின்றும் நீங்கிச் சிவத்தோடு தாடலைபோல மடங்கி நிற்றலை உணர்த்தும் சின்முத்திரையாகும். இது ஆசாரியன் இருந்து பார்க்கும்போது சாதகமுத்திரை எனவும், சீடனுக்கு உபதேசிக்கும் பொழுது போதக முத்திரைஎனவும் இருவகைப்படும். இவ்விரு முத்திரைகளும் ஆசாரியனுக்கே உரியவை.

'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்' என்புழிப்போல தேனித்தல் சிந்தை அமுது ஊற இருத்தல். அதற்குரிய முத்திரை யாவது ஆனந்தானுபவம் வெளிப்படுக்கும் மெய்ப்பாடு. இதுவே சுத்தாத்துவித நெறிக்கு உரிய முத்திரையாம்.

இம்மூன்றும் கானிக்கும் சமயங்கண்ட முத்திரையாம் எனக்கூட்டுக. கானித்தல் – புகழ்ந்து பாடப்படுதல். கானிக்கும்

என்பதற்கு வாயு அடங்கும் என்பாரும் உளர். இச்சொல் இப்பொருள் பயக்கும் பகுதி உடையதாயின் காண்க. (197)

தூநெறி கண்ட சுவடு நடுவெழும்
பூநெறி கண்டது பொன்னக மாய்நிற்கும்
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீனெறி கண்டுள நின்மல னாமே. 1901

இம் – எனின், ஆதார அனுபவம் அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: தூயநெறியாகிய பிரமரந்திரத்திற்கண்ட சுவடு உச்சித்துளை வழியாக மேலெழும்பும்; உச்சிப் பூவாகிய சகஸ்ராரத்திற்கண்டது பொன்போன்ற ஒளியுடையதாய் விளங்கும்; அதற்குமேலுள்ள நெறியாகக் காணப்பட்டது வெண்மையான சந்திரமண்டலமாம்; அது நீலமானது; அதனைத் தரிசித்தவன் மலரகிதனாக விளங்குவன் என்றவாறு.

இங்ஙனம் ஆதாரங்களில் கண்டு அனுபவித்து மேலும் உன்மனைவரை செல்லின் அவன் மலங்களினின்றும் விடுபட்டு ஞானியாவான் என்பது.

பதி அனுபவம் அன்றி, வேறொன்றும் புலனாகாத நெறி ஆதலின் உச்சியாகிய பிரமரந்திரம் 'தூநெறி' எனப் பட்டது. சுவடு – முத்திரை. நடு – உச்சித்துளை. பூ – உச்சிப் பூவாகிய சகஸ்ராரம். சகஸ்ராரத்தில் சிவம் பொன் நிறமாய்ப் பிரகாசிக்கும் அனுபவம் 'பொன்னகமாய் நிற்கும்' என்பதால் உணர்த்தப்பட்டது.

மேல் நெறிகண்டது – உச்சிப்பூவிற்கு மேலுள்ள நெறி யாகக் காணப்பட்டது. வெண்மதி மேதினி – சந்திர மண்டலம்.

அந்த மண்டலத்தின் அதிபதி திருமால் என ஆகமங்கள் கூறுத லான். அதனையுங் கண்டு கடந்து நெறி காணின் மலரகிதனா வன் சாதகன் என முத்திரைகள் உணர்த்தப் பெற்றன. (198)

# 18. பூரணகுகைநெறிச் சமாதி

சமாதி என்பதுஉயிரும் மனமும் ஒத்தநிலை. நீரில் உப்பு கரைந்து ஒன்றானாற்போல மனமும் உயிரும் ஒன்றாதலே சமாதி. பிராணன் ஒடுங்க மனம் அதில் ஒடுங்குகிற அந்நிலை தான் சமாதி எனப்படுவது. அதாவது மனத்தின் சகல சங்கற்ப விகற்பங்களும் கெட்டு உயிர் இறைவனோடு ஒன்றுபட்டுப் பல காலம் பிரியாத நிலைமை. இதன் இலக்கணம் வராகோபநிட தத்தில்,

*𑌸𑌲𑌿𑌲𑍇 𑌸𑍈𑌨𑍍𑌧𑌵𑌂 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌭𑌜𑌤𑌿 𑌯𑍋𑌗𑌤𑌃*
*𑌤𑌥𑌾𑌤𑍍𑌮𑌮𑌨𑌸𑍋𑌰𑍈𑌕𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।*
*𑌯𑌦𑌾 𑌸𑌂𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇*
*𑌤𑌦𑌾 𑌸𑌮𑌰𑌸𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥*

என்று கூறப்பெற்றுள்ளது. இச்சமாதி, யோகநூல்களில் இராஜ யோகம், உன்மனி, மனோன்மணி, அமரத்வம், லயம், தத்து வம், சூனியாசூனியம், பரமபதம், அமனஸ்கம், அத்வைதம், நிராலம்பம், நிரஞ்சம், ஜீவன் முத்தி, சகஜம், துரியம் என்ற பெயர்களாலும் அழைக்கப்பெறும்.

இது சித்திக்கப் பயிலும் முறை யோக சூடாமணி உபநிடதத்தில் பிராணாயாமம் பன்னிரண்டு நாள்வரை நிலைத்து நிற்கப் பயில்வதென்று கூறப்பட்டுள்ளது.

*𑌦𑌿𑌨𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌕𑍇𑌨𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌸𑌂𑌯𑌮𑌾𑌤𑍍*

என்பது மேற்கோள்.

குகை என்பது ஒடுங்கிய இடம். மனம் கண்வழியாகப் புலன்களிற்சென்று பற்றாது நாடிய ஒன்றையே நாடி நிலைத் திருப்பதற்கு ஏற்ற ஒடுங்கிய இடம். மலைக்குகை. கட்டுக்குகை போன்றன. நினைத்த மாத்திரத்தில் நின்மல சமாதி கைகூடும் சித்தி பெறாதார் இத்தகைய இடங்களில் புகுந்து மனோவிருத் தியை அடக்குவது வழக்கம். குகை – இருதய குகையுமாம். இருதய குஹரம் என்றும் யோகநூல் வழங்கும். அந்நெறியில் நெடுநாள் மனம் லயித்து நிற்கப் பழகிய நிலையே பூரண குகை நெறிச் சமாதி என்பது. பூரணம் என்ற அடைமொழி சமாதியை விசேடித்து நிற்பது.

மேலதிகாரத்து, தாரணை நிலைப்பதற்கு உபாயமான முத்திரா பேதங்களை மொழிந்த ஆசிரியர், இவ்வதிகாரத்தில் தாரணையின் முதிர்ச்சியான பூரண சமாதி இதய குகையில் நிலைக்குமுறையை உணர்த்துதலின் அதிகார இயைபும் இதனானே விளங்கும்.

**வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி**
**உளரொளி பானுவின் உள்ளே யொடுங்கித்**
**தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியுள்**
**உளதுறும் யோகி யுடல்விட்டாற் றானே. 1902**

இம்மந்திரம் என்னுதலிற்றோ எனின், சிவயோகி விதேகமுத்தி யடைந்தபின் அவனான்மா சென்றுறையும் இடங்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள்: சிவயோகி வினைப்போகத்திற்காகத் தாங்கிய இவ்வுடலை விட்டானாயின், அவன் ஆன்மா, வளர் பிறைக் காலமாகிய பூருவபக்ஷமுழுதும் தேவர்களோடு தங்கி யிருந்து, பின் எல்லாப் பொருளையும் உணருகின்ற ஒளிக் கதிர்

களையுடைய சூரியனுக்குள்ளே ஒடுங்கி, தளர்ச்சியில்லாத பிதிர்தேவதைகளின் பதவியிலே சிலநாள் தங்கியிருந்து, நிறைமதி நாளில் என்றும் உள்ளதாகிய பரசிவத்தினிடமாக ஒடுங்கும் என்றவாறு.

சிவயோகி விதேகமுத்தி எய்தியவுடன் அவனுயிர் தேவர்பாலும், சூரியனிடத்திலும், பிதுர்தேவதைகளின் பதவி யிலும், நித்திய வஸ்துவாகிய பரசிவத்தினிடத்திலும் தங்கும் என்பது கருத்து.

தேவர்கள் தாம் செய்த பசு புண்ணியத்தின் பயனை நுகர இந்திரலோகத்தில் இன்பம் துய்ப்பவர்கள். சிவயோகி தொடக்க நிலையில் பசு புண்ணியங்களும் செய்திருப்பானா தலின் அவன் உடலைப் பிரிந்தவுடன் உயிர் மாத்திரமாய்த் தேவருடன் கூடி, பசுபுண்ணியப் பயனாகிய இன்பத்தைத் துய்ப்பன். சுவர்க்காதி இன்பங்கள் ஞானத்தை எய்துதற்குத் தடை ஆதலின் அதனை நுகர்ந்து கழித்தபின் சிவசூரியனிடத் தில் ஒளியாய் அடங்கியிருந்து தூய்மையுறுவன். பின் மக்கள் செய்யும் கன்ம பலன்கள் வந்துபற்ற அதற்காகப் பிதிரு பதத்தில் இருந்து அவர்கள் செய்யும் தான தருமாதி ஈமக் கிரியையால் விளையும் பயனைத் துய்ப்பான். பின்பு நிறைமதி நாளில் சிவவியாபகத்து சிவத்துவ வியாபகம் எய்துவன் என்பதாம்.

உளர் ஒளி: வினைத்தொகை. எல்லாப் பொருளினி டத்தும் வியாபித்து வளர்க்கும் ஒளிவடிவாய் என்க. பானு – சிவசூரியன். பேரொளியில்அடங்கி ஒளி பெறுதலைப் 'பானு வின் உள்ளே ஒடுங்கி' என்பதாற் குறித்தவாறு.

ஞான ஒளிபெற்று விளங்கும் ஆன்மா பிதிர்பதம் எய்தியவழி மீளவும் மனை மக்கள் என்ற பற்றால் தளர்ச்சி

யுறாது. அதாவது ஒளிபெற்ற தன்னிலையிற்றாழாத பிதுரு தேவதைகளின் நிலை யெய்தும் என்பதை 'தளர்வுஇல் பிதிர்பதம்' என்பதாற்குறித்தார். தங்கி ஊருக்குச் சென்றவன், வந்த காரியம் முடியுமளவும் விடுதியிற்றங்கி, முடிந்தபின் மீளுதல் போலத் தம் மக்கள் பொருட்டுச் செய்யும் கடன்களின் பயனை நுகருமளவும் பிதிருபதத்திற்றங்கி, நுகர்ந்து தொலைத்த பின்னர் மீளவும் மேனிலை எய்துவர் என்பதாம்.

சசி – சந்திரன்; பூரனை. உளது – நித்தியப் பொருளாகிய சிவம். இவ்வண்ணம் சிவயோகி விதேகமுத்தி எய்திய பின் எய்துநிலைவேறுபாடு உணர்த்தியவாறு காண்க. (199)

**தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது**
**போன வியோகி புகலிடம் போந்துபின்**
**ஆனவை தீர நிரந்தர மாயோகம்**
**ஆனவை சேர்வார் அருளின்சார் வாகியே.**

1903

இம் – எனின், சமாதி கைகூடாதவர்கள் நிலைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இவ்வண்ணம் இவை யாவும் ஒத்து எங்கும் சமாதி கைகூடாதுபோன விதேகி தாம் புகுதற்குரிய இடமாகிய பூமியிற் பிறந்து, பின் பிறப்பிற்கான பிராரத்த கன்மம் நீங்கி, இடையீடின்றித் திருவருளைச் சார்ந்து நின்று யோகத்தை யடைவர் என்றவாறு.

இவ்வண்ணம் தேவர்பதம் முதலான நிலைகளைப் பெறத்தக்க சமாதிகைகூடாது இறந்தவர்கள், மீண்டும் இப் பூமியிற் பிறந்து திருவருட் சார்பால் யோகத்தைப் பொருந்துவர்

தான்: அசை. முன்மந்திரத்திற் கூறியவண்ணம் தேவர் சூரியன் சந்திரன் முதலான நிலைகளைக் குறிப்பது 'இவை' என்னும் சுட்டு. இவையொக்கும் சமாதி – இவைகள் முறை முறையே பொருந்தும் சமாதி. கைகூடுதல் – பயிற்சி பலனளித்தல்.

வியோகி – உடலினின்று உயிர் பிரிந்தவன். சமாதி யால் எய்தவேண்டிய இன்பநிலைகளை எய்தாமல் இறந்த மையின் 'சமாதி கைகூடாதுபோன வியோகி' என்றார்.

புகலிடம் – மீளப்பிறத்தற்கு இடமாகிய பூமி. பசு புண்ணியங்களைச் செய்து பதமுத்தி பெற்றார் புண்ணியப் பயன் வற்றியபோது அடைக்கலம் புகும் இடம்பூமி ஆதலின் அதனைப் புகலிடம் என்றார். ஆனவை என்ற குறிப்பு பின் நுகரத்தகுவனவாகிய வினைச்சேடங்களை, அவை கழிய என்க. நிரந்தரமாய் – இடையீடு இன்றி.

சமாதி கைகூடாதபேர்கள் வியோகமெய்கின் மீளவும் கன்மபூமியிற் பிறந்து திருவருளைச் சார்ந்து யோக சித்தி பெறுவர் என்பதாம். (200)

**தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி**
**ஆன சிவயோகத் தாமாறா மவ்விந்து**
**தானதி லந்தச் சிவயோகி யாகுமுன்**
**ஊனத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே.**

1904

இம் – எனின், சிவயோக நெறிநின்று சித்திபெற்று உய்யுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இங்ஙனம் பூமியில் பிறந்து மக்கள் நெறியாகிய சரியை கிரியை யோகங்களினின்று பழகி எல்லாவற்றிலும் சிறந்ததான சிவயோகத்தில் தலைப்படும்; விந்து சித்தியில் சிவயோகி தலைப்படும் முன்பு வச்சிரகாயமாகிய அழியா உடலை அடையும் எ–று.

மீளப் பிறந்து சமாதி கைகூடாதான் மக்கள் நெறியில் வாழ்ந்து சிவயோகி ஆவதற்கு முன்னர் உடல் சித்தி பெற்று வச்சிரகாயம் ஆவன் என்பது கருத்து.

தான் என்றது வியோகியை. புவியோர் நெறி தங்குத லாவது தத்தம் கன்மத்துக்கு ஈடாகப் பிறந்து புவன போகங் களை நுகரும் மக்கள் வாழும் நெறியில் ஏனையோரைப் போலத் தாமும் புசிப்பன புசித்திருத்தல். ஆன சிவயோகம் – நன்மையைத் தருவதாகிய சிவயோக நெறி. அதன்கண் ஆம் என்றவாறு.

அவ்விந்துதானதில் – விந்துசக்தியில். சிவயோகி ஒன்று கூடுவதற்கு முன்பு என்றவாறாம். ஊனம் – உடல், ஊனத்தோர் சித்தி காயசித்தி; இழிந்த சித்தி என்பார் சிலர், அது பொருந்தாமை அறிக.

இதனால் மீளப் பிறந்த சிவயோகி, சிவசக்தியின் அரு ளால் சிவயோகி ஆவதற்கு முன்பு காயசித்தி பெறுவன் என்பதாம். (201)

**சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்**
**தவலோகஞ் சேர்ந்துபின் றான்வந்து கூடிச்**
**சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்**
**புவலோகம் போற்றுநற் புண்ணியத் தோரே.**

இம் – எனின், சிவயோகி உடல்விட்டபின் எய்துகின்ற நிலைவேறுபாடுகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவயோகியாகிய ஞானியர் நிலைகெட்டு உடல் தளர்ந்து உயிர் நீங்கின் தபோலோகம் சார்ந்து, பின்னர்ச் சிவயோக வாயிலாகச் சிவஞானம் பொருந்தி நிலைபேறுற்று விளங்குவர்; அவர்கள் புவலோகத்தாற் போற்றப்பெறும் புண்ணியராவர் என்றவாறு.

சிவயோகி உடல்விட்டபின் தபோலோகத்தைச் சேர்ந்து சிவயோக வாயிலாகச் சிவஞானம் பெற்றுப் புவலோக வாசிகளால் போற்றப்பெறும் புண்ணியராவர் என்பது கருத்து.

சிவயோகிஞானி – சிவயோகத்தின் வழி சிவஞானம் பெற்றவன்; என்றது சோபானக் கிரமத்தில் ஞானம் பெற்றவன் என்பதாம்.

சிகைந்து – சிவஞானசித்தி முற்றுப்பெறுதற்கு முன் நிலைதடுமாறி. அஃதாவது மனம் ஒன்றிச் சிவவாழ்வு வாழ்ந்த சிவயோகி மீளவும் வாசனை தாக்கப் பொறியின் பங்கட்கு அடிமையாகிச் சிவசிந்தனை மாறி உலகவர்போல உழலுதல்.

இந்நிலை விளைதல் தவக்குறையால் ஆதலின், அவர்கள் மீளவும் தவ உலகிற் பிறந்து பொறியடக்கமாகிய தவங்களைச் செய்து ஞானம் கூடப் பெற்று என்பார், 'தவ லோகம் சேர்ந்து.....சேர்ந்தவர்' என்றார்.

நிற்பார் என்பது என்றும் நிலைதளராது உறுதியுடன் நிற்பார் என்னும் பொருளது.

புவலோகம் – பூலோகத்திற்கு மேலதான ஒளியுலகு. அதில் வசிப்பவரும் போற்றத்தக்க புண்ணியர் ஆவர் என்க.

(202)

**ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டால்**
**தானற மோனச் சமாதியுள் தங்கியே**
**தானவ னாகும் பரகாயஞ் சாராதே**
**ஊனமின் முத்தராய் மீளார் உணர்வுற்றே. 1906**

இம் – எனின், சிவஞானி உடல் விடின் எய்தும் பேறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: குறையில்லாத சிவஞானியாகிய நல்ல யோகி உடலைவிட்டு பிரிவானாயின், சீவபோதம் நீங்கப் பெற்று மோன சமாதியுள் நெடுநாள் இருந்து, சிவோகம்பாவனையில் இருப்பதாகிய பரகாயத்தைப் பொருந்தாமல் குறையில்லாத முத்தான்மாவாய் விளங்குவன்; மீளவும் ஆன்ம போதமுறான் என்றவாறு.

சிவஞானி உடல்விடின் மோனசமாதியுள் தங்கி; சிவமே தானாய் நின்மல முத்தனாய் விளங்குவன்; மீளவும் சீவபோதம் சேரான் என்பது கருத்து.

ஊனம் – குறைபாடு, சிவஞானியெய்தும் குறை யாவது இங்குளிருந்த பாண்டம்போல வாசனை கெடாது மீண்டும் பாசம்பற்ற உலக போகங்களில்உழலுதல்; அத்தன்மையில்லாத ஞானியே ஊனமில் ஞானி ஆவன்.

முன்னைய மந்திரத்தில் கூறியதுபோலத் தன்னிலை குலையாமல் சிவஞானியான நிலையிலேயே உயிர்விட்டால் அடைகின்ற பயன் மோன சமாதியுள் பலநாள் தங்குதலாம்.

மோனசத்தி – உறக்க மில்யோகத்து உறங்கிடுதல். இது பின் ஒன்பதாம் தந்திரத்தில் விளக்கப்பெறும் மோனசமாதியுள் சிவஞானி இருக்கும்போது தான் என்ற சீவபோதமில்லையா மாதலால் 'மோனசமாதியுள் தானறத் தங்கி' என்றார்.

தான் அவனாகும் பரகாயம் – ஆன்மா சிவமாதலாகிய சிவோகம் பாவனையாகிற மேலான உடல். சிவோகம் என்பது அநுபவம். சிவோகம் பாவனை பரகாயம். பாவனையும் ஒருடலாய் அனுபவத்திற்குத் தடையாம் ஆதலின் பாவனா சரீரத்தையும் சாராமல் நின்மலமுத்தராவர் என்றார். உணர்வு உற்று – நான் நுகர்கிறேன் என்ற உணர்வைப் பொருந்தி. (203)

**செத்தார் பெறும்பய னாவது ஏதேனில்**
**செத்துநீர் சேர்வது சித்தினைக் கூடிடில்**
**செத்தா ரிருந்தார் செகத்தில் திரிமலஞ்**
**செத்தார் சிவமாகி யேசித்தர் தாமே.** 1907

இம் – எனின், சிவயோக ஞானியாயிருந்து செத்தவர்கள் மும்மலங்கெட்டு முத்தராவாரென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இறந்தார் எய்தும் பயனாவது எதுவென வினாவில், நீர் இறந்தபின் எய்துவது சித்துக்களைக் கூடினால் செத்தார் செத்தாரல்லர்; உலகத்து இருந்தாராவர்; மும்மலங்களும் செத்த நின்மலர் சிவமேயாகிச் சித்தர் ஆவர் என்றவாறு.

சித்துக்கள் செய்யும் சித்தர் செத்தாராயின் அவர்கள் செத்தவர் அல்லர்; உலகத்து இருந்தவர் ஆவர், மும்மலங்களும் அற்றவர் செத்தாராயின் சிவமாகிய சித்தராவர் என்பது கருத்து.

செத்தார் – இறந்தார். வினாவை அநுவதித்துக் கூறியது 'செத்து நீர் சேர்வது' என்பது. சித்து – அட்டமா சித்திகள். திரிமலம் – ஆணவம் கன்மம் மாயை. அவை சாதலாவது ஆணவம் வலிகுன்றி அகறலும் ஏனைய இரு மலங்கள் கெட்டொழிதலுமாம். (204)

**உன்னக் கருவிட் டுரவோ னரனருள்**
**பன்னப் பரனே யருட்குலம் பாலிப்பன்**
**என்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞானி**
**தன்னிச்சைக் கீச னுருச்செய்யுந் தானே.1908**

இம் – எனின், சிவஞானிக்கு ஈசன் அருளுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தியானசமாதிக்கேற்ற பீஜத்தை மனத்தில் எண்ணி ஞான சொரூபியாகிய பரசிவத்தினருளைப் பலகாலும் சிந்திக்க, பரசிவமே அந்த ஞானிக்குத் திருவருட் கூட்டத்தை அருளுவன்; அங்ஙனம் பெற்ற அருட்குவியலை எத்தகைய பரிபாகமுடைய சீடர்களுக்கும் விரும்பி அளிக்கும் சிவஞானி யின் விருப்பிற்குத்தக ஈசன் உருக்கொண்டருளும் என்றவாறு.

ஆகவே சிவஞானி ஞானக்கருவைத் தம் மனத்து எண்ண அருளுண்டாம்; அவ்வருளைத் தம் மாணவர்கட்கு அளிக்க விரும்பின் பரசிவமே வேண்டுருக்கொண்டு அருளும் என்பது கருத்து.

உன்ன – இடைவிடாது தியானிக்க. கரு – பீசாட்சரம்; அதுதான் பிரணவபீசம். உரவோன் – ஞானமே வடிவான பரசிவம், பன்னுதல் – பலகாலும் சொல்லல். ஈண்டுச் சிவயோக

சமாதி கூறப்படுதலின் சொலற்கு, அடியான தியானம் என உரை கூறப்பட்டது. அருட்குலம் – திருவருட்கூட்டம். வேண்டிய உருத்தாங்கி இறைவனே அருளும் என்பது. (205)

**எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்**
**தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம்**
**அங்காங் கெனநின்று சகமுண்ட வான்தோய்தல்**
**இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே.** 1909

இம் – எனின், எங்கும் நிறைந்த பொருளான சிவம் சிவஞானியின் சிந்தையில் தங்கும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அங்கே அங்கே எனச் சேய்மைக்கண் விளங்கி உலகைத் தன்னடக்கி நிற்கும் ஆகாயத்தில் தான் தங்குதலை விட்டு எங்குமாய் நிறைந்த பரசிவம். எங்கும் சிவம் வியாபித்தலையும் அருள்சுரத்தலையும் உணரும் சிவஞானியின் இதய கமலத்து எங்கும் பரந்த தற்பரம்பொருளான சிவம் என்றும் வீற்றிருக்கும் என்றவாறு.

பரிபூரணமான பரசிவம் வானைவிட்டுச் சிவஞானியின் சிந்தையில் சந்ததமும் விளங்கும் என்பது கருத்து.

உண்மைஞானம் கைவரப்பெறாத பாச பசு ஞானியர்க்கு ஆங்கு ஆங்கு என நின்று ஆகாயத்து வியாபியாய் நிற்கும் சிவம் என்பார் அங்கு ஆங்கு என நின்று சகமுண்ட வான் தோய்தல் என்றார். சகம் – உலகம். இது உலககாரணமான பூதங்களையுணர்த்திற்று. எல்லாப் பூதங்களையும் பௌதிகங்களையும் தன்னகத்து அடக்கி விரிந்து இடங்கொடுத்திருப்பது வான் என்பதாம், ஆயினும் தன்னகத்தடக்கி வானாய்ப் பரந்து நிற்பது சிவம் என்பது 'இங்கு இறந்து எங்குமாய் நிற்கும் ஈசன்' என்பதால் உணர்த்தப் பெற்றது.

முன்னிரண்டடிகளும் எங்குமாய் நிற்கும் சிவம் அநவரதவாசம் செய்யச் சிந்தை பரிபாகப்படும் முறையுணர்த்துகிறது. சிவஞானி எங்கும் சிவத்தைக் கண்டும் அருளே வடிவான இதயத்தை உடையவன் ஆதலால் அத்தகைய ஞானியின் உள்ளத்திலே பரம்பொருள் தங்கும் என்க.

தற்பரம் – பரம் என்பன யாவற்றிற்கும் பரமான சிவம்.

இங்ஙனம் இவ்வதிகாரத்துச் சிவயோகி சமாதியாய் எங்கும் வியாபித்து நிற்கும் நிலையும். சிவயோகி சிந்தையில் எங்குமான சிவம் வியாபித்து இருக்கும் நிலையும் உணர்த்தப்பெற்றன. (206)

# 19. சமாதிக்கிரியை

அஃதாவது சிவஞானி விதேகமுத்தி எய்தியபின் அவன் உடற்குச் செய்யவேண்டிய சமாதிச் சடங்குகளின் இன்றியமையாமையும் முறைமையும் அறிவிப்பது. இதில் சிவாகம நெறியும் – வைதிக நெறியும் பெரிதும் வேறுபாடுடையவாம். அவற்றினுடைய விரிவைச் சிவாக்கிர பத்ததியிலும், விதிமுறையை அசிந்திய விசுவசாதாக்கியம், சித்தாந்த போதம், சுப்பிரபேதம் முதலிய ஆகமங்களிலும் அறியலாம்.

முன் பூரணகுகைநெறிச் சமாதியை உணர்த்திய ஆசிரியர் திருமூலதேவர், அதற்குரிய கிரியைகளை உணர்த்துதலின் அதிகார இயைபும் அறியப்பெறும்.

**அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்**
**வெந்திடி னாடெலாம் வெப்புத் தீயினில்**
**நொந்தது நாய்நரி நிகரி லுண்செரு**
**வந்துநாய் நரிக்குண வாகும்வை யகமே. 1910**

இம் – எனின், ஞானியின் தேகத்தைச் சுட்டெரிக்கின் உளவாம் தீங்குகள் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எல்லையற்ற சிவஞானியின் உடல் தீயில் வெந்து கெடுமானால் நாடெல்லாம் வெப்பு நோயால் வெந்து கெடும்; சும்மா கிடத்தி நாய்நரி உண்ணுமாயின் நாட்டிலே போர்மூண்டு நாடுமுழுதும் நாய்நரியுண்ண அழியும் என்றவாறு.

இம்மந்திரத்தான் சிவஞானியின் உடல் சமாதி செய்ய வேண்டியதன் இன்றியமையாமை வற்புறுத்தப் பெற்றது.

வெப்புத்தீ – சுரநோய்; அம்மை முதலிய வெப்பு நோய்; தீப்பிடித்தல் முதலியனவுமாம். இதனை

*யஷிவா ஒஹநஂ கூாய–ரா ஒ்ராஜஂராஷ்ட்ர விநாஸநம் ॥*

என்ற சித்தாந்த போத வசனத்தாலும்,

*ஸ்வாஹ்யாஷ்டு காய–ராஹாவாஹூாஹூாஃ யெஹூவணெஃ ஸஹ*

என்னும் அசிந்திய விசுவசாதாக்கியத்தாலும்,

................ஜ்ஹவய–ராஷிஷ–ாத்ர்ஷா

*ஒஹநஞாஂ நகூாவீ–ந்த யதீநா ஞ்ஞாவட க்ரியா ।*

என்னும் சுப்பிரபேத வசனத்தானும் தெளிக. (207)

**எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்**
**அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்**
**மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்**
**எண்ணரு மன்னர் இழப்பார் அரசே. 1911**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: எண்ணமும் அற்ற சிவஞானியின் உடலில் எரி தாவினால் சிவாலயத்தைக் கொளுத்திய பாவம் பொருந்தும்; பூமியில் மழை விழா; உலகம் பஞ்சமாம்; கணக்கற்ற அரசர்கள் அரசையிழப்பர் எ–று.

ஏனைய வெளி. (208)

**புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது**
**நண்ணி யனல்கோக்கில் நாட்டில் அழிவாகும்**
**மண்ணி லழியில் அலங்கார பங்கமாம்**
**மண்ணுல கெல்லா மயங்குமனல் மண்டியே.**
**1912**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: சிவஞானியரின் உடலைப் புதைப்பது புண்ணியமாம்; பொருந்தி நெருப்பை வைத்துச்சுடின் நாட்டில் அழிவு உண்டாம்; புதைக்காமல் மண்ணில் கிடந்து அழியின் உலகு அழகு கெடும்; மண்ணுலகு அனைத்தும் தீப்பிடித்துக் கெடும் எ–று.

ஏனைய வெளி. (209)

**அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்**
**அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்**
**சுந்தர மன்னரும் தொல்புவி யுள்ளோரும்**
**அந்தமில் இன்ப அருள்பெறு வோரே. 1913**

இம் – எனின், சமாதி செய்விப்பார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எல்லையற்ற சிவஞானி திருவருளைச் சார்ந்து உடலைவிடின் அவ்வுடலைக் குகையொன்று கட்டி அதில் இருக்கச்செய்தால் அழகிய மன்னர்களும் தொன்மையதான புவிக்கண் வாழும் மக்களும் எல்லையற்ற இன்பத்தையும் சிவனருளையும் பெறுவர் எ–று.

ஏனைய வெளி. (210)

**நவமிகு சாணாலே நல்லாழஞ் செய்து**
**குவைமிகு சூழவைஞ் சாணாகக் கோட்டித்**
**தவமிகு குகைமுக் கோணமுச் சாணாக்கிப்**
**பவமறு நற்குகை பத்மா சனமே.** 1914

இம் – எனின், சமாதிக்குரிய குகையின் அளவும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒன்பது சாண் ஆழமும், தோண்டிய மண் குவியலைச் சூழ ஐந்து சாணகலமுமாக வளைத்து, தவத்திற் குரிய மிக்க குகையின் முக்கோணமும் மும்மூன்று சாண் நீளமுள்ளதாகச் செய்து பிறவியறுக்கும் நல்ல குகையில் இருத்துக என்றவாறு.

ஒன்பது சாண் ஆழமும், ஐந்து சாண் அகலமும் உடையதாகத் தோண்டி, குழியில் மும்மூன்று சாண் நீளத்தில் முக்கோண வடிவமாகக் குகையை அமைக்க வேண்டும் என்பதாம்.

காமிகாகமத்தில்,

யதீநாம் த்ரிகோணம் து ஸ்யாத் ந்ருணாம் சதுரச்ரகம் து

எனவும், அசித்திய விசுவசாதாக்கியத்தில்,

ஹஸ்தத்வயம் விஸ்தாரம் ஸ்யாத் தத்தைர்க்யம்।

எனவும், சுப்பிரபேதத்தில்

வாஸ்யாத் த்ரிகோணேந।

எனவும் கூறப்பட்டிருத்தல் காண்க.

ஒரு முழம் இரண்டு சாண் அளவினதாகலின் ஒன்பது சாண் என்ற திருமூலர் வாக்கு நாலரை முழம் ஆழம் என்பதையும், ஐந்து சாண் அகலம் என்பது இரண்டு முழ அகலம் என்பதையும் குறிப்பித்தவாறு.

குழிக்குள் குகை முக்கோண வடிவமாகக் கட்ட வேண்டும்; ஒவ்வொரு கோணமும் மும்மூன்று சாண் நீளமுள் ளதாக இருக்கவேண்டும் என்பதை உணர்த்துவது 'தவமிகு குகை முக்கோணம் முச்சாணாக்கி' என்பது. (211)

**தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை**
**நன்மலர்ச் சோலை நகரினற் பூமி**
**உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்**
**இந்நிலந் தான்குகைக் கெய்தும் இடங்களே.** 1915

இம் – எனின், சமாதிக்குகை அமைத்தற்கு உரிய இடங்கள் இவையெனல் நுதலிற்று.

இ–ள்: அடக்கஞ் செய்விப்பவனுக்குச் சொந்தமான மனை, சாலை, குளக்கரை, ஆற்றின் நடுப்படுகை, பூந் தோட்டம், நகரிலே நல்ல பூமி, நினைத்தற்கரிய காடு, உயர்ந்த மலைச்சாரல் இவ்விடங்களே குகை செய்தற்கு உரிய இடங் களாம் என்றவாறு.

ஏனைய வெளி. (212)

நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செய்யும் நேர்மைய தாமே.
1916

இம் – எனின், குகையின் அளவு உணர்த்துதல் நுத லிற்று.

இ–ள்: நல்ல குகை நாற்புறமும் ஐந்தடி அகலமும், நிற்கின்ற உயரம் ஒன்பதடி நேராக அமைய, அழகமைந்த குறுக்களவு மூன்றுக்கு மூன்று அமையச் செய்யும் நேர்மை யுடையது என்றவாறு.

குழியினளவு அகலம் ஐந்தடி, உயரம் ஒன்பது அடி, உட்புறம் முக்கோணமாக மூன்றுக்கு மூன்றடி அமைய ஆக்குதல் வேண்டும் என்பது. (213)

பஞ்ச லோகங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட்டதன்மேலே
பொன்செய்த நற்சுண்ணம் பொதிய
லுமாமே. 1917

இம் – எனின், குழியில் இடத்தகும் பொருள்களை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பஞ்சலோகங்களையும் நவமணிகளையும் பரப்பி, மிகுதியாக அமுத்தி, அதன்மேல் ஆசனமிட்டு, முஞ்சிப் புல்லைப் பரப்பி, விபூதியைக் கொட்டி, அதன்மேல் பொற் சுண்ணம் இட்டுப் பொதிதல் உரியதாம் என்றவாறு.

பஞ்சலோகங்கள் – பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பன. நவமணி – வயிரம், வயிடூரியம், மரகதம், முத்து, பவழம், கோமேதகம், புஷ்பராகம், மாணிக்கம், குருவிந்தம் என்பன. முஞ்சிப்புல் – தருப்பைப்புல். பொற்சுண்ணம் – மஞ்சள் முதலியன கூட்டி இடித்த பொடி.

சித்தாந்தபோதம் கனனவிதியில்,

𑌹𑌾𑌰𑌿𑌦𑍍𑌰 𑌚𑍂𑌰𑍍𑌣𑌲𑌵𑌣𑍈𑌰𑍍𑌭𑌿𑌰𑍍 𑌭𑍂𑌮𑌾
𑌪𑍂𑌰𑌿𑌤𑌕𑍁𑌕𑍍𑌷𑍍𑌯𑌃 । 𑌤𑌦𑍁𑌪𑌰𑌿 𑌶𑌵𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌶𑌾
𑌮𑍇𑌵 𑌕𑍁𑌶𑌾𑌸𑌨𑍇 । 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌯𑍋𑌰𑍍𑌦𑍍𑌵𑌿𑌤𑌯𑍇 𑌦𑍇𑌶𑍇𑌷𑌾
𑌹𑌾𑌰𑌿𑌦𑍍𑌰𑌲𑌵𑌣𑌸𑍍𑌸𑌹 । 𑌪𑌶𑍍𑌚 𑌸𑌹𑍈𑌨𑌵𑌾
𑌪𑍂𑌰𑍍𑌯 𑌪𑌾𑌂𑌸𑍁𑌭𑍈𑌸𑍍𑌸𑌮𑌕𑌮𑍍 । 𑌕𑍃𑌤𑍍𑌵𑍈𑌵
𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌕𑍃𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌸𑌦𑍍𑌗𑌤𑍈 𑌸𑍀𑌕𑍃𑌤𑍈 ॥

என்று மஞ்சட்பொடி உப்பு இவற்றால் இரண்டுசாண் நிரப்பி அதன்மேல் சவத்தை வைத்துச் சூழ மஞ்சட்பொடியும், உப்பும் ஒருசாண் அளவு கொட்டி அதற்குமேல் ஒருசாண் மண்ணால் நிரப்புக என்று கூறப்படுகின்றது. (214)

நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சார்ந்து புழுகுபன் னீர்சேர்த்து
ஒள்ளிய தூபம் உவந்திடு வீரே. 1918

இம் – எனின், சமாதிக் குகையின் உள்ளே செய்யப் படும் கிரியைகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: குகையின் நடுவில் நான்கு சதுரமாகச் செய்து, அதன்மேல் தேனொழுகும் மாலை, சந்தனம், கத்தூரி, தெளிந்த சாந்து, புனுகு, பனிநீர் இவற்றைக் கலந்து தெளித்து, ஒளி பொருந்திய தூபத்தை மகிழ்ந்து இடுங்கள் என்றவாறு.

ஏனைய வெளி. (215)

ஓதிடும் வெண்ணீற்றால் உத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிருத்தி விரித்திடு வீரே. 1919

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: புகழ்ந்து ஓதப்பெறும் வெண்ணிற்றால் குப்பாயமாகிய உரைமீதில் உத்தூளனமாகக் கொட்டி ஆசனத்தின் மேல் வைத்து, மலர் அறுகு சுண்ணம் விபூதி ஆகியவற்றால் விளங்கச்செய்து, மீதில் வைத்துப் பரப்புக என்றவாறு.

சமாதியிலிடும் குப்பாயத்தில் விபூதி, பூ, அறுகு, சுண்ணம் இவற்றால் பரப்பி ஆசனத்தின்மீது வைத்துப் பரப்புக என்பதாம். (216)

விரித்தபின் னாற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் குழைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே. 1920

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: விரித்த பிறகு நான்கு பக்கமும் நன்றாகப் பரப்பி, நான்கு புறமும் பொரிக்கறி, உணவு, இளநீர், குருபீடமாகிய திருவடி இவற்றை வைத்து, காதணி முகம் கண் இவற்றைச் சாத்தியபின்னர் மேலே ஒரு வட்டமிடுக என்றவாறு.

குருத்தலம் – குருபீடமாகிய திருவடி நிலை. குழை குண்டலம். பார்வை – திருக்கண். இவற்றைச் சாத்தி என்க.

(217)

மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்வமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே.
1921

இம் – எனின், நீராட்டும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மேலே சொரியும் வெண்ணீறு, பொற்சுண்ணம், பூ இவை பலவற்றையும் கொண்டு வில்வம், தர்ப்பைப்புல், பாதோதகமாகிய திருவடி விளக்கிய நீர் இவற்றால் திருமஞ்சனம் செய்து, பூமிக்கு மேல் மூன்றுக்கு மூன்று அடியாக அழகாக நிலத்தைச் செய்யுங்கள் என்றவாறு.

ஏனைய வெளி. (218)

ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
போதும் இரண்டினில் ஒன்றைத்தா பித்து
மேதகு சந்திதி மேவுத் தரம்பூர்வங்
காதலிற் சோடசங் காணுப சாரமே. 1922

இம் – எனின், பீடத்தின்மீது வைக்கத் தகுவன இவை யென உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆசனத்தின் மேல் அரசங்கன்று, சிவலிங்கம் ஆகிய இரண்டில் ஒன்றைத் தாபித்து, சமாதியின் வடக்கி லாவது கிழக்கிலாவது சோடச உபசாரங்கள் செய்க என்றவாறு.

ஏனைய வெளி. (219)

# 20. விந்துற்பனம்

அஃதாவது, விந்துவின் தோற்றம். விந்து – மாயை யின் காரியமான சகத்தின் தோற்றத்திற்கு அடியான ஆற்றல். உற்பனம் – தோன்றுதல். ஆகவே விந்துவின் தோற்றம் என்பது பொருளாம். சகத்தின் தோற்றத்திற்கு மூலமான சுத்தம் முதலான மாயையினின்று விரியும் வகையும், பிண்டத்தில் விந்துவினின்று புணர்ச்சியாகிய காரியத்தான் கரு உருக் கொள்ளுமாறும் உணர்த்துவது இவ்வதிகாரம். திருமூலதேவ நாயனார் யாண்டும் அண்டம் பிண்டம் இவற்றை இணைத்தே கூறுவதராதலின் ஈண்டும் சில மந்திரங்களான் அண்டநிலைக்கு அடியான பர அபர விந்துவின் வெளிப்பாட்டையும், பிண்டத் திற்குக் காரணமான கரு விந்துவின் தோற்றத்தையும் உணர்த்து கிறார்.

முன் அதிகாரத்து ஆன்மா சிவத்தினிடம் ஒடுங்குதலாகிய அநுபவ சமாதியும் உயிர் உடலை விட்டுச் சிவத்தைச் சார்தலாகிய வியோக சமாதியும் உணர்த்தி, அவ்விரண்டையும் எய்தினார்க்கு இயற்றப்படும் இருவேறு வகையான கிரியைகளையும் உணர்த்தினார். இவ்வதிகாரத்துஅநுபவ சமாதியில் பராபர விந்து வெளிப்பட்டு உலகம் யாவையும் தம்முள் உணருமாறும், போகவிந்து வெளிப்பட்டுக் கரு உருக்கொள்ளுமாறும் உணர்த்துதலான் அதிகார இயைபும் ஒருவாறுணரலாம்.

**உதயத்தில் விந்துவில் ஓங்குகுண் டலியும்**
**உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான்**
**விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி**
**கதியிற் கரணங் கலைவை கரியே. 1923**

இம் – எனின், விந்துவினின்று ஏனைய தத்துவங்கள் விரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிருட்டி காலத்தில், விந்துவில் தோன்றி விளங்கும் குண்டலியும், தோன்றுதற்கிடமாகிய பராகாயத்தில் வைந்தவம் ஒன்பதும், பிரமன் முதலான ஒன்பது பேதங்களும் அவற்றின் சக்திகளும், இத்தத்துவங்களின் நடையால் அந்தக் கரணங்கள் பஞ்ச கலைகள் வைகரியாதி வாக்குகள் இவை அனைத்தும் விரியும் என்றவாறு.

விந்துவினின்று குண்டலியும், இந்த இரண்டின் கூட்டத்தால் பராகாயத்தில் நவந்தருபேதமும், சக்திகளும், அந்தக் கரணங்கள் கலைகள் வாக்குகள் அனைத்தும் விரியும் என்பது கருத்து.

உதயத்தில் – ஆதிசிருட்டியிலும் அவாந்தர சிருட்டியிலும், பரசிவம் தானேயாய் இருந்து, தன்னிற் சத்தியைத் தோற்றுவித்து, அனைத்துலகையும் உடலையும் ஆக்கத் திருவுளம் பற்றிய ஆதிசிருட்டியிலும், இடைக்காலத்தில் அனைத்தையும் தன்னுள்ளே ஒடுக்கி நின்று மீள உற்பவஞ் செய்யத் திருவுளம் பற்றுகின்ற இடைப்படைப்பிலும் என்க.

விந்து என்பது நாதபிந்து சமஷ்டிரூபமாய், பஞ்ச கலைகட்கும் மூலமாயிருக்கும் சிவசத்தி. இது பரசிவத்தினது கிரியாசத்தியின் காரியப்பாட்டால் வெளிப்படுவது. குண்டலி என்பது பரசிவத்தின் ஞான சத்தியின் காரியப்பாட்டால் வெளிப்படும் சக்தி. பிருதிவி முதல் குடிலையீறான தத்துவங்கள் இதினின்றும் தோன்றுவன. இதனை,

पृथ्व्यादिकुटिलान्तं तु षट्त्रिंशत्तत्त्वरूपकम् ।
शिवेच्छया कुटिलोत्पन्नं नादतत्वं प्रधानकम् ॥
पृथ्व्यादि कुटिलान्तं तु तत्वं कुण्डलिनोदयम् ।
यथा कुण्डलिनी शक्तिर्मायाकर्मानुसारिणी ।
नादविन्द्वादिकं कार्यं तस्या इति जगत्स्थितिः ॥

எனவரும் ஞானசித்தியாகமம் நன்கு விளக்கும்.

வயிந்தவம் – விந்து காரியம். இது விந்து நாதம் கலை இவற்றின் கூட்டால் விளைவதாய், அகாராதி கலைகளாயும் நிவிர்த்தாதி கலைகளாயும், ஐந்தொழிற்கும் அடியாய், ஐவகை வாக்குகளும் தோன்றுதற்குக் காரணமாய் இருப்பது. இதனை,

वैन्दवं तत्वमध्यास्ते विन्दुनातकलोदितम् ।
विन्दुनादकलामध्ये अकारादिसमुद्भवम् ॥
निवृत्यादिकलारूपा अकाराधिकलोदिता ।

पंचकृत्यं तदाकारं पंचवाग्वृत्तिकारणम् ।
पंचमाक्षरसंभिन्नं सर्वं बैन्दवमुद्भवम् ॥
अध्वषट्कमिति प्रोक्तं सर्वं पंचकलामयम् ।

எனவரும் வாக்கியங்களைக் கொண்டு தெளிக. இத்தனையும் சுத்தமாயா காரியமாதலின் இவை விரிதற்கு இடந்தந்து நிற்பது பராகாயம் என்பார். 'உதயக்குடிலில் வயிந்தவம்' என்றார்.

ஒன்பான் பிரமாதிகள் – பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரம், சதாசிவம், விந்து தத்வம், நாத தத்வம், சத்தி தத்வம், சிவதத்வம் என்ற ஒன்பதும் அவற்றின் சக்திகளும்.

கரணம் – மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு. கலை – நிவிர்த்தி, பிரதிட்டை, வித்யை, சாந்தி, சாந்தியதீதை என்பன. வைகரி – வைகரிமுதலான வாக்குகள். அவை வைகரி, மத்தியமை, பைசந்தி, சூக்குமை என்பன.

வேத ஆகமங்கள் அனைத்தினும் சாரமாயுள்ளது பராத்பரம். அதினின்று பரையாகிய பரவிந்துவும், அதினின்று பராசக்தியும், ஞானம், இச்சை, கிரியை இவற்றின் நடுவில் சதாசிவமும், நாத விந்துக்களும் ஆகிய ஆறு தத்துவங்கள் விரிந்தன. சதாசிவத்தினின்று மகேசன் நடுவில் உருத்திரனும், உருத்திரனிடமிருந்து திருமாலும், அவனிடமிருந்து பிரமனும் விரிந்தனர் என்று ஞானசித்தியாகமம் கூறுகிறது.

सर्ववेदागमार्थस्य यत्सारं तत्परात्परम् ।
यत्तत्वं तत्पराकारं परबिन्दूद्भवं ततः ॥
परात्परादि नादान्तं द्वादशं तत्वमुच्यते ।

परात्परात्परोत्पन्ना पराशक्तिस्तदुद्भवा ॥
इच्छाज्ञानक्रियाशक्तिस्तत्पराशक्तिसम्भवा ।
ज्ञानेच्छास्वक्रियामध्ये शिवशक्तिसदाशिवम् ॥
नादबिन्दुविभेदोक्तं षट्तत्वं तत्प्रकाशितम् ।
सदाशिवान्महेशस्य मध्ये रुद्रोद्भवं तथा ॥

என்பது அப்பகுதி. வாதுளசுத்தாக்கியையில்,

बिन्दुमध्ये गतो नादो नादमध्ये तु मूर्तयः ।
मूर्तिमध्ये गतं तत्वं तत्वमध्ये गतं शिवम् ॥
शिवमध्ये गतं नृत्तं नृत्तमध्ये तु शान्तकम् ।
अतीतं शान्तमध्ये तु शान्त्यतीतं परात्परम् ॥

எனவருவது கொண்டும்,

"ஆதியோ டந்தம் இலாத பராபரம்
போதம தரகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாம்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே"

"நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த இச்சையில் வந்தெழும் விந்துவே"

எனவரும் திருமந்திரங்களைக் கொண்டும் அறியலாம். உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான் வகையினதாக வெளிப் படுதலை,

बैन्दवं कुण्ठलीव्याप्तं बिन्दुनादोदयोदितम् ।
बैन्दवं तत्त्वमध्यास्ते बिन्दुनादकलोदितम् ॥
बिन्दुनादकलामध्ये अकारादिसमुद्भवम् ।
अकारोकारमकारश्च बिन्दुनादेतिपञ्चमम् ॥
कलाध्वा मध्यमे भागे पंचाख्वा चैवमुद्भवम् ।
अकारे वैखरी जाता उकारे मध्यमोदिता ॥
मकारे पश्यन्ती जाता बिन्दौ सूक्ष्मा तथोदिता ।
नादाच्चैवातिसूक्ष्मा वाक् जाता पंचकलोदिता ॥
निवृत्यादि कलारूपा अकारादिकलोदिता ।

என்ற ஞான சித்தியானும்,

"விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த அபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே"

"உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன ஐங்கலைக் கொன்றாம் உதயமே"

"விளங்கு நிவிர்த்தாதி மேவகரா தி
வளங்கொள் உகார மகரத் துள்விந்து
களங்கமில் நாதாந்தங் கண்ணினுள் நண்ணி
உளங்கொள் மனாதியுள் அந்தமு மாமே"

என்ற திருமந்திரங்களானும் உணர்க. (220)

செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்
செய்திடு நாதபே ததிற னாவாறுஞ்
செய்திடு மற்றவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாறாறு சேர்தத் துவங்களே. 1924

இம் – எனின், விந்து முப்பத்தாறு தத்துவங்களாக விரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவின் பேதங்களால் விளையுந்தன்மை இருபத்தைந்து தத்துவங்களைத் தோற்றுவிக்கும்; நாத தத்துவத்தின்பேதத்தால் விளையுந் தன்மை இருபத்து நான்கு தத்துவங்களைச் செய்யும்; விந்துவும் நாதமும் ஆகிய அவை நான்கின் தன்மைகளைச் செய்யும்; இரண்டின் திறமாகிய வைந்தவம் முப்பத்தாறு தத்துவங்களைச் செய்யும் என்றவாறு.

விந்து நாதம் வைந்தவம் இவைகள் முறையே இருபத்தைந்து, இருபத்து நான்கு, முப்பத்தாறு தத்துவங்களைத் தோற்றுவிக்கும் என்பது கருத்து.

விந்து பேதத்திறன் – விந்துவின் வகைகளாகிற ஆறு தத்துவங்களும், இங்ஙனமே நாத பேதங்களும் ஆம். இதனை,

नादबिन्दुविभेदोक्तं षट्तत्वं तत्प्रकाशितम् ।

என்னும் ஞானசித்தி வசனத்தால் அறியலாம்.

விந்து சத்தியினின்று மாயையும் மாயையினின்று இருபத்தைந்து ஆன்ம தத்துவங்களும் தோன்றின என்பதை,

बिन्दुभेदमिति प्रोक्तं तद्भेदं पञ्चविंशतिः ॥

என்னும் ஞானசித்தியாலும் தெளிக. நாத பேதத்திறன் நாலாறு என்பதனை,

**चतुर्विंशत्तथाभेदं नादरूपं कलामयम् ।**

என்னும் ஞானசித்தி வாக்கியத்தால் தெளிக. நாலாறு என்பது கலாமயமான இருபத்து நான்கு தத்துவங்களை என்க.

ஈரிரண்டின் திறமாவன பரநாதம் அபரநாதம் பரவிந்து அபரவிந்து என்ற வகையான் நான்காதலை உணர்த்தியது. இதனையும் ஞானசித்தி தெளிவிக்கும்.

ஆறாறு தத்துவங்கள் – முப்பத்தாறு தத்துவங்கள். அவைகளை,

**पृथिव्यादिशिवान्तानि षट्त्रिंशत्तत्वसाधनम् ।**

என்பதனாலும் உணர்க. (221)

**வந்திடு பேத மெலாம்பர விந்து**
**தந்திடு மாமாயை வாகேசி தற்பரை**
**உந்து குடிலையோ டேமுறு குண்டலி**
**விந்துவில் இந்நான்கு மேவா விளங்குமே.**

1925

இம் – எனின், பரவிந்துவினின்று சிவதத்துவங்கள் தோன்றுமுறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தோன்றும் வேறுபாடுகள் அனைத்தும் பர விந்துவிற்கு மேலதாக மாமாயையும், அதன்மேல் வாகீஸ் வரியும், அதன்மேல் பரையும், இயக்கும் பிரணவம் விருப்ப மிக்க குண்டலி சக்தி இவைகளும், விந்து சத்தியினிடமாகப் பொருந்தி விளங்கும் என்றவாறு.

பரவிந்துவில் மாமாயை வாகீஸ்வரி தற்பரை முதலியனவும், விந்துவில் குடிலை குண்டலிகளும் தோன்றுமென்பது கருத்து.

பரவிந்து – போதாநந்த மயமாய் – ஒப்பற்று – அளவிடற் கரியதாய ஆற்றல், மாமாயை – சுத்தமாயை வாகேசி – வாகீஸ்வரி; ஒளிமயமாய் உணர்வு விளக்கந் தருவதாய அருட் சத்தி, தற்பரை – பரசிவத்தின் அருள்.

குடிலையாகிற பிரணவம் அனைத்தையும் இயக்குதலின் 'உந்து குடிலை' எனப்படும். ஏம்; ஏமம் என்பதன் குறுக்கம்; இன்பம்; பாதுகாப்பு என்பது பொருள்.

இம்மந்திரத்தால் வைந்தவமாகிய க்ஷித்யாதி குடிலாந்தத்திற்கு மூலமான பரவிந்து முதல் விந்துசக்தி வரையுள்ளவற்றின் தோற்றமுறை அறிவிக்கப்பெற்றவாறு காண்க. (222)

**விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி**
**வளங்கொள் உகார மகாரத் துள்விந்து**
**களங்கமில் நாதாந்தங் கண்ணினுன் நண்ணி**
**உளங்கொள் மனாதியுள் அந்தமு மாமே. 1926**

இம் – எனின், சுத்த மாயையினின்று, நிவிர்த்தாதி கலைகளும் அகாராதி பிரணவமும் அந்தக்கரணங்களும் விரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விளங்குகின்ற நிவிர்த்தியாதி பஞ்சகலைகளும், பொருந்திய அகாரம் முதலானவற்றோடு வளம் மிக்க உகாரம் மகாரம் விந்து குறையற்ற நாதம். நாதாந்தம் இவற்றைக் கருதின் உள்ளே பொருந்தி அறியப்படும் மனம் முதலான அந்தக்கரணங்கள் ஆம் என்றவாறு.

निवृत्यादिकलारूपा अकारादिकलोदिता ।

எனவரும் ஞானசித்தி வசனமும் நிவிர்த்தாதி கலைகளிலிருந்து அகாராதி கலைகள் விரியுமாற்றை உணர்த்துகிறது. நிவிர்த் தாதி பஞ்சாகலாத்மகமாயுள்ள அகராதி பஞ்சவர்ண பிரண வோதயமான வைகரியாதி வாக்கு பஞ்சகத்திற்கு மூலம் என்பதாம்.

களங்கமில்நாதம் நாதாந்தத்தை நண்ணி என்பது சிறந்த பாடம். கண்ணினுள் நண்ணி எனின் பொருள் வலிந்து கொள்ளவேண்டியிருப்பினும் வழக்காற்றில் வந்தமையால் அப்பாடமே கொள்ளப்பட்டது.

மனாதிஉள் அந்தமும் ஆம் எனப் பிரித்து, மனாதியாக எண்ணப்படுகின்ற அந்தக்கரணங்கள் விரியும் என்க. (223)

**அந்தமும் ஆதியு மாகிப் பராபரன்**
**வந்த வியாபி யெனலாய வந்நெறி**
**கந்தம தாகிய காரண காரியந்**
**தந்தைங் கருமமுந் தான்செய்யும் வீயமே.**
**1927**

இம் – எனின், விந்துவே பீஜமாமம் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: இறுதியும் முதலுமாய பராபரன் எல்லாவற் றையும் தன்னகத்து அடக்கிநிற்கும் வியாபியான மாயை என்னும் முதற்காரணத்தினால், கிழங்கு என்னும் காரண காரியத்தைத் தந்து பஞ்ச கிருத்தியங்களையும் பண்ணும் வீசமாகும் என்றவாறு.

விந்துவே இறைவன் மாயையாகிய முதற்காரணத்தினின்று உலகு உடல் இவற்றைத் தோற்றுவிக்கும் வித்தாக நிற்கும் என்பது கருத்து.

சங்கார காரணனே சிருட்டிக்கும் உரியவனாதலால் 'அந்தமும் ஆதியுமாகிப் பராபரன்' எனப் பெற்றது.

மாயை ஆகந்துகமலமாய் உயிரின் ஆணவ அழுக்கைப் போக்க இறைவன் புணர்க்க வந்ததாகலானும், அனைத்தையும் அடக்கி நிற்றலானும் 'வந்த வியாபி எனலாய அந்நெறி' என்றார், என்றது மாயையை.

கந்தம் – கிழங்கு. கிழங்கு வித்தின் காரியமாயும், முளையின் காரணமாயும் நிற்கும் தன்மையதாகலின் 'கந்தமதாகிய காரண காரியம்' எனப்பட்டது.

இறைவன் இயற்றும் ஐந்தொழிற்கும் வித்தாய், காரணப் பிரபஞ்சம் காரியப் பிரபஞ்சம் இரண்டுமான கிழங்கினைப் படைத்தது விந்து என்பதாம்.

வீயம்– பீஜம் என்பதன் வடமொழியாக்கம். வீயம் என்பதற்கு வியம் என்பதன் நீட்டலாகக் கொண்டு, பெருமை எனப் பொருள் செய்து இடர்ப்படுவர் பலர். அஃது ஈண்டுப் பொருந்தாமை தெளிவு.

இறைவன் விச்சதின்றியே விளைவு செய்வான் என்றது அவனது அளவிலாற்றலை விளக்க வந்தமையொன்றே. ஆயினும் மூலமின்றி முதலும் முடியா வினைகள் ஆகலின் பஞ்சகிருத்தியங்களுக்கும் விந்து சக்தி உரியதாதல் விளக்கப்பெற்றது. (224)

வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய வகண்டமும் அண்டமும் பாரிப்பக்
காயஐம் பூதமுங் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம்புற மாகுமே. 1928

இம் – எனின், விந்து சக்தியால் அனைத்தும் விரிதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வித்தான விந்துவின் ஆற்றலால் அண்டம் அகண்டம் இவைகளைத் தாங்க, ஆகாயமுதலான ஐம்பூதங் களும், காரியமாக அசுத்த மாயையினின்று தோன்ற விந்து அவற்றின் அகமாயும் புறமாயும் நிற்கும் என்றவாறு.

விந்து வித்தாய் அனைத்தையும் தாங்க, ஐம்பூதங் களும் அசுத்த மாயையினின்று தோன்ற, அகமாயும் புறமாயும் விந்து விளங்கும் என்பது கருத்து.

அகண்டம் – துண்டிக்கப்படாதது; எல்லையற்றது என்பதாம். அண்டம் – எல்லை வரையறுக்கப்பட்ட உலகம். விந்துவாகிய சுத்தமாயை அனைத்துலகையும் ஒளியாய்ப் பரவி நிற்க ஐம்பூதங்களும், அவற்றின் காரணமாய் சுத்த மாயையின் காரியமான அசுத்த மாயையும் விரிய, விந்து அகமும் புறமும் வியாபித்து நடத்தும் என்றவாறு.

பாரிப்ப – தாங்க; விரிக்க என்றுமாம். காயம்; ஆகாயம் என்பதன் குறை. காய ஐம்பூதமும் காரியம்; (அவை) மாயையில் ஆயிட எனப் பிரிக்க.

அகம் புறம் ஆகுமே என்றது அகத்துள் கருவி கரணம் முதலாய தனுவாகவும் புறத்துப் புவனமாகவும் ஆகும் என்பதாம். (225)

புறமகம் எங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை
உறமகிழ் சத்தி சிவபாத மாயுட்
டிறனொடு வீடளிக் குஞ்செயற் கொண்டே.1929

இம் – எனின், நாத விந்துக்களின் நிறமும் தெய்வமும் பயனும் கூறுதல் நுதலிற்று.

இ–ள்: அகத்தும் புறத்தும் புகுந்து விளங்குகின்ற விந்துவின் நிறம் வெண்மை; நாதத்தின் நிறம் செம்மை; அவை பொருந்துதலால் ஆனந்தத்தை விளைவிப்பதாய சத்தி. சிவத்தின் பதிதலாம்; அவை செயலைக் கொண்டு ஆயுள், திறன், வீடு இவற்றை அளிக்கும் என்றவாறு.

நாதமும் விந்துவும் செம்மையும் வெண்மையும் உடையதாய் ஆனந்தத்தை அளிப்பதாய் அகம் புறம் எங்கும் வியாபித்துச் சத்தி சிவங்களின் பதிதலாய் ஆயுள் வலிமை மோட்சம் இவற்றை அளிக்குமென்பது கருத்து.

சத்தி சிவபாதம் – சத்தி நிபாதம் என்பது போலச் சத்தி சிவங்களின் பதிதல். அஃதாவது திருவருள் வடிவான சத்தியும் சத்தனாகிய சிவமும் ஆன்மாவினிடம் விளங்கித் தோன்றுதல்.

செயல் – வினைகள். அவை பதிபுண்ணியமும் பசு புண்ணியமுமாகிய செயல்கள். அவற்றைக் கொண்டு பந்தரூப மான ஆயுள் போகம் இவற்றையும் மோட்சத்தையும் அளிக்கும் என்பதாம். பசுபுண்ணியம் செய்யும்போதுதான் அவை நல்லதும் கெட்டதுமாகப் பயனைக் கொண்டு இரண்டு வகை யாய்ச் சுவர்க்க நரகங்களை அளிக்கும். பதிபுண்ணியம் எஞ் ஞான்றும் நல்வினையேயாய் ஞானத்தை நல்கி அதன் வாயி

லாக வீடுபேறு உதவும் என்க. ஆகவே மாயாகாரிய தனு முதலியவற்றைத் தோற்றுவித்தலோடு வீடளிக்கும் செயல்வரை உதவுவது விந்து என உற்பனம் உரைத்தவாறு. (226)

**கொண்டஇவ் விந்து பரமம்போற் கோதற**
**நின்ற படங்கட மாய்நிலை நிற்றலிற்**
**கண்டக லாதியின் காரண காரியத்**
**தண்டம் அனைத்துமாய் மாமாயை யாகுமே.**
**1930**

இம் – எனின், விந்து காரண மாயையாகவும் காரிய அண்டமாகவும் விரியும் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இங்ஙனம் செயலைக்கொண்ட விந்து பரசிவத்தைப் போலக் குற்றமற நின்ற ஆடையும் குடமும் போலப் பொருளாய் உருக் கொண்டு அழிவின்றி நிலைபெறுதலால் இவற்றைச் செய்து விரிந்த ஆதி சத்தியால் காரணமான மாயையாகவும் காரியமான அண்டங்களாகவும் ஆம் என்றவாறு.

விந்து பரசிவம்போல வேண்டுருப்பெற்றுப் படமும் கடமும்போல நின்று நித்தியமாய் ஆதிசத்தியால் காரண காரியங்களான மாயையாகவும் அண்டங்களாகவும் தோன்றும் என்பது கருத்து.

ஒலியாயும் ஒளியாயும் உள்ள நாத பிந்துக்கள் சிவம் சத்தி என நின்று நினைந்த உருவத்தைப் பெற்றுக் கடம்போல அளவுட்பட்டு விரிந்து அண்டமாயும், படம்போல அனைத்தையும் வியாபித்து நின்று விரிந்து மாமாயையாயும் தோன்றச் செய்யும் என்பது. ஆதி – ஆதிசத்தி. மாமாயை – சுத்தமாயை. (227)

அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி
இதுவித்தி லேயுள வாற்றை யுணரார்
மதுவித்தி லேமல ரன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் தானே.
1931

இம் – எனின், விந்துவில் சிவம் கலந்து நிற்குநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பீசமாகிய விந்துவில் சிவம் வெளிப்பட்டுத் தோன்றும். இச்சிவம் விந்துவிலுள்ள முறைமையை மக்களுணரார். தேனும் மகரந்தமும் நிறைந்த மலர்மேல் எழுந்தருளிய அன்னமாகி உலகப் பொதுவாகிய மன்றத்திலே நின்ற கூத்தப் பெருமான் விளங்குவன் என்றவாறு.

விந்துவில் சிவம் என்றும் கலந்து நிற்கும்; இதனைப் பலர் உணரார்; மன்றத்தில் நிலைபெற்ற ஆனந்தக் கூத்தப் பெருமானாகிய புண்ணியன் விந்துஸ்தானத்தில் மலரிலே அன்னமாகி விளங்குவரென்பது கருத்து.

அதுவித்திலே என்பதை வித்து அதிலே என்று உருபு பிரித்துக் கூட்டுக. வித்து – விந்து. விந்திற்குப் பீஜம் என்பது ஒரு பெயராதலின் அதனைத் தமிழாக்கி வித்து என்றார். நந்தி – சிவம். அண்ணிக்கும் என்றது விந்து சத்தியில் கலந்திருக்கும் சிவம் 'தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' என்றபடி இனிதாம் என்றதாம்.

மது – தேன். வித்து. மகரந்த கோசங்கள் ஆகிய இவை மலர்க்கண்ணவாகிய உறுப்பு. மகரந்த கோசங்களில் மதுவைச் சுரக்கின்ற மலர் என்றது பதினாறு இதழோடு கூடிய இதயத்

தாமரையை. அதில் அன்னமாகி ஞானமா நடராசப் பெருமான் வீற்றிருப்பார் என்று கூறியது அசபையாகிய அம்சமந்திரத் தியானம் அறிவித்தவாறு.

பொதுவை வித்தாகக்கூறியது சிற்சபையிலிருந்து பெருமான் ஐந்தொழில் அருள் அநுபவ நடனம் புரிதலானும், வித்திலே முளை உண்டாயதுபோல அங்கிருந்தே அனைத்தும் ஆக்கப்படுதலானுமென்க. (228)

**வித்தினி லன்றி முளையில்லை அம்முளை**
**வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை**
**வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல**
**அத்தன்மை யாகும் அரனெறி காணுமே.**

1932

இம் – எனின், விந்து சிவம் இவற்றிற்குள்ள இயைபு கூறுதல் நுதலிற்று.

இ–ள்: வித்திலிருந்தல்லது முளை உண்டாதல் இல்லையாம்; அம்முளையும் வித்திலன்றித் தோன்றாதாம்; வித்தும் முளையும் வேறல்ல; அதுபோன்றே சிவமும் விந்துவும் ஆம்; இதனை அறியுங்கள் என்றவாறு.

சிவசத்திகளின் வேறற்ற தன்மையை வித்துமுளை இவ்வுவமை வாயிலாக விளக்கியவாறு அரனெறி; சிவமும் அவன் உலகத்தைக் காணும் நெறியும் என உம்மைத் தொகையாகக் கொள்க. ''வித்துண்டாம் மூலம் முளைத்தவா தாரகமாம்'' என்னும் சிவஞான போத வெண்பாக்கொண்டும் தெளிக. (229)

அருந்திய வன்ன மவைமூன்று கூறாம்
பொருந்து முடன்மனம் போமல மென்னத்
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்
டிருந்தன முன்னாள் இரதம தாகுமே. 1933

இம் – எனின், பிண்டோற்பனத்திற்குரிய விந்து விளையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உண்ட உணவு உயிர் பொருந்துதற்கு இடமான உடலும், மனமும், கழியுமலமும் என்ன மூன்று பகுதியாம்; திருந்திய உடலும் மனமுமாகிய இருபகுதிகளும் சேர்ந்து முன்னாள் இரசமாம் எ–று.

உண்ட உணவு உடற்கூறும், மனக்கூறும், மலக் கூறும் என மூன்றாகப் பிரிந்து மலம் கழிந்தொழிய மனமும் உடலும் வளர்க்குங்கூறுகள் சேர்ந்து இரசமாம் என்பது கருத்து.

மனத்தை வளர்க்கும் பகுதியும் உடலை வளர்க்கும் பகுதியும் கூடியே உடலுற்பனத்திற்குரிய விந்துரசமாம் என்பது. (230)

இரத முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரிய துளிவிந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே. 1934

இம் – எனின், உடலுற்பனம்........... ஆம் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இரசமுதலான எழுவகைத் தாதுக்களில் மூன்றினாலே, உரிய நாளில் ஒருபுல்லின் நுனியிற்றங்கும் பனிபோல அரிய துளிவடிவாக விந்து ஆம்; அங்ஙனம் சுரந்த விந்து இருபத்தொரு நாட்கள் வரை உடம்பில் வளரும் என்றவாறு.

எழுவகைத் தாதுக்களில் இரத்தம், இரசம், சுக்கிலம் என்ற மூன்றும் கூடிச் சிவதாதுவாகிய விந்துவாம். அது புல் நுனியிற் பனிபோல உரிய நாளிற் சுரப்பது. இருபத்தொரு நாள் வரையில் உடலில் வளர்ச்சியுறும் என்பது கருத்து.

இத்தகைய அரிய விந்துவை வீணே கழித்தல் எவ்வளவு அறியாமை என்பது உணர்க. (231)

**காயத்தி லேமூன்று நாளிற் கலந்திட்டுக்**
**காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து**
**நேயத்தே நின்றோர்க்கு நீங்கா**
**விடாமையின்**
**மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே.1935**

இம் – எனின், விந்து ஐயமும் நாசமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: இங்ஙனம் உடலில் மூன்று நாள்கள் கலந்தபின் உடலிலேயே விந்துவானது தன் மனவிந்து ஆகும். பின்னர்க் கலையாகிற ஞனவிந்துவாகும்; அங்ஙனமாகிப் பின் திருவடிக் கண் நீங்காத நேயத்து நின்ற பேர்க்கு, புறத்தொழுக விடாமை யால் அவர்களை விட்டு நீங்கா; அங்ஙனமன்றி மாயாகாரிய மாகிய புவனத்துப் போகத்துள் திளைப்போர்க்கு மனத்துடன் அழியும் என்றவாறு.

இருபத்தொருநாள் உடலிலேயே வளர்ந்த விந்து, கழிக்கப்பெறாமையான் உடலிலேயே மூன்றுநாள் கலந்திருந்து, தன்னிலைமாறி மனோவிந்துவாக மாறும். பின் ஞான விந்துவாய் அறிவு மாத்திரையாய் விளங்கும். அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையில் திருவடிப்பற்று நீங்காதார்க்கு விந்து ஐயமாம், போகத்துள் ஈடுபடுவோர்க்கு மனமும் அழிந்து விந்துவும் அழிந்து விந்து க்ஷயமாம் என்பது கருத்து.

நேயம் – ஞேயம்; அறியப்படுவது என்பது பொருள். அது சிவத்திருவருள். (232)

**அழிகின்ற விந்து அளவை யறியார்**
**கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரார்**
**அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்**
**அழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே. 1936**

இம் – எனின், விந்துக்கேட்டால் விளையுந் தீமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அழிகின்ற விந்தவின்அளவை அறியாத மக்கள் இறந்து அழிகின்ற தன்னை மனத்தால் காத்தலையும் தெளியமாட்டார்கள். அழிகிற உடலில் அழிந்து சோர்ந்தோர் தாம் அழிவதை அறிந்தும் விந்து அழித்தலை ஒழியார் என்றவாறு.

விந்துவின் அருமையறிந்தும் அறிவிலிகள் விந்து கழிதலை நீக்கார்; என்னே அறியாமை என்பது கருத்து.

போகத்தில் பல துளிகளாகக் கழிகின்ற விந்துவைக் கூட்டின் ஓராண்டில் போகத்திற்கென்று விதித்த நாளில்

கழிவதே ஒருநாழியாம் எனக் கருவுபநிடதம் உரைக்கும். ஆயிரம் சொட்டுக் குருதியும்; மூவாயிரம் சொட்டு இரதமும், சுக்கிலமும் சுண்டிக் கலந்து ஒரு சொட்டு விந்தாம். அது எத்துணை உயர்ந்தது; அரியது. அது அழியாமல் பாதுகாக்க வேண்டுமாயின் போக இச்சையின்றி மனத்தைச் செந்நெறியிற் செலுத்த அது உடம்பிலே சுவறும். உடம்பிலே சுவறிய விந்து நினைவு விந்தாய் மனத்தைச் சாரும். அந்த நிலையில் திருவடிக் கண்நீங்காத பற்றுக் கொண்டபோது அது ஞானவித்தாய் அறிவு மாத்திரையாய் நிகழும். இங்ஙனம் அடக்கி ஆளுதலே விந்து ஐயமாம். இதனை அறியார் விந்து அழிந்து உடலையும் சோர்வுக்கு உள்ளாக்கிக் கெடுவர். தாம் கெடுவதையும் அறியார் என்றவாறு. இங்ஙனம் வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு. (233)

## 21. விந்துஜயம் – போகசர வோட்டம்

அஃதாவது விந்து வெளிப்படாது அடக்கும் முறைமையையும், போககாலத்துப் பிராண வாயுவின் ஓட்டத்தால் விந்துவை மிகுதியாக வெளிப்படா வண்ணம் அடக்கும் உபாயமும் ஆம். விந்து பிண்டோற்பத்திக்கு உரியதாம். இது உடலின் சாரமாய் – உள்ளத்தின் உறுதியாய் – மனவளர்ச்சிக்கு மருந்தாய் – சிவயோகத்தின் முதற்படியாய் இருத்தலின் இதனை அடக்குதல் இன்றியமையாததாம்; ஆதலால் விந்துற்பனத்தின்பின் இது வைக்கப்பட்டது.

**பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்**
**ஓர்க்கின்ற வுள்ளம் உருக அழல்மூட்டிப்**
**பார்க்கின்ற கண்ணாசை பாழ்பட மூலத்தே**
**சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே.** 1937

இம் – எனின், விந்துவை வென்றவனே சிவயோகி யாவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நம்மை விரும்பிப் பார்க்கும் பெண்களை நாம் பாராமல் அகன்று சென்று, ஆராய்கின்ற மனம் உருக, மூலக் கனலை மூட்டி விருப்பத்துடன் சென்று பற்றுகின்ற கண்ணின் ஆசையானது பாழ்பட்டுப் போக, கண்ணை அதன் மூலமாகிய மூக்கினடியில் சேர்க்கின்ற யோகியே சிவயோகி என்றவாறு.

மாலைதனில் வந்து வீதிகளில் நின்று கண்வலை வீசி மாந்தர்களைப் பிடிப்பது மாதர் இயல்பாதலின் 'பார்க்கின்ற மாதரை' என்றார்.

அவர்கள் பார்க்கும்போது ஆடவன் நோக்கினால் கண்ணொடு கண்ணினை நோக்கு ஒக்கின், காமமாய்க் காத லாய்க் கலவியாய் வளரும் ஆதலின்அவர்களைப் பாராமலே அகல்வதுஅவசியம் என்பார் 'பாராது அகன்றுபோய்' என்றார்.

மனித இயல்பு மாதர் மாலை முதலியவற்றை விருப்பத் துடன் வலியநோக்கி நாளடைவில் மாதரை வசப்படுத்துதல் ஆதலின் மாதரே விரும்பி நோக்கினாலும், தாம் எதிர் நோக்காது அகலுதலே யோகியின் சிறந்த முதற்கடமை என்பதைத் தெரிவித்தவாறு.

பற்றியதைப் பற்றிநின்று பலவழியாலும் ஆராய்தல் உள்ளத்து இயல்பு என்பார் 'ஓர்க்கின்ற உள்ளம்' என்றார். அதனை ஒருவழிப்படுத்தி உயர்த்த, பிராணாயாம முறையால் மூலக்கனலாகிய குண்டலியை மேலே எழச் செய்து மனத்தைக் கடவுள்பால் கனிய வைக்கவேண்டுமென்பார் 'உருக அழல் மூட்டி' என்றார்.

கண்ணாசை பாழ்படக் கண்மூலத்தே சேர்க்கின்ற யோகி என்று கூட்டுக.

ஏனைய மூக்கு நாக்கு முதலிய பொறிகள் தம்பால் வந்து பொருந்திய புலன்களையே சென்று பற்றிச் சிந்தையில் விருப்பத்தை விளைவிப்பனவாகக் கண்மட்டும் தானே பொருள்களை வலிந்து சென்று பற்றி ஆசையை வளர்ப்பது ஆதலின், 'பார்க்கிற கண்ணாசை' என்றார்.

அவ்வாசை கெடும் உபாயம் கண்மூலமாகிய புருவ மத்தியில் அதாவது விந்துத்தானத்தில் மனம் கண்வழி போகாது தடுத்து நிறுத்துதல் ஒன்றே என்பார் 'கண்ணாசை பாழ்பட மூலத்தே சோர்க்கின்ற யோகி, என்றார்.

இதனால் இச்சையைவென்று இதயத்தில் இறைவனை இடைவிடாது எண்ணுபவனே சிவயோகி என்பது தெரிவிக்கப் பெற்றது. (234)

**தானே யருளாற் சிவயோகந் தங்காது**
**தானேயக் காமாதி தங்குவோ னும்முட்குந்**
**தானே யதிகாரந் தங்கிற் சடங்கெடும்**
**ஊனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே.1938**

இம் – எனின், காமவசப்பட்டோன் காயம் கெடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவருள் வசமாகத் தானாகவே சிவ யோகத்தில் தங்கிப் பயிலாது அந்தக் காமம் குரோதம் முதலிய வற்றுள் பழகுவோன் அஞ்சுவன்; தானாகவே காமாதிகளில் அதிகாரம் செலுத்தின் உடம்பு அழியும்; உடம்பு தனக்குளி

ருக்கும் உயிரைப் பாதுகாக்க முடியாமல் மாய்ந்து ஒழியும் என்றவாறு.

சிவயோக மார்க்கத்தில் தங்காது போகமாகிய அவயோகத்தில் ஈடுபடுவதால் உடல் அழியும்; உயிர் பிரியும் என்பது கருத்து.

சிவயோகம் வலிந்து பற்றப்படுவதன்று; பற்பல பிறவிகளில் செய்த புண்ணிய விசேடத்தால் தேங்காயில் இளநீர் சேர்வது போல உயிரில் திருவருள் தானே பொருந்துவதென்பார் 'தான் ஏய் அருளால் சிவயோகம் தங்காது' என்றார்.

காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்ற உட்பகை ஆறு. எல்லாப் பகைகட்கும் காமமே வித்து ஆதலின் காமம் முற்கூறப்பட்டது. சிவப்பணி செய்து திருவருளால் சிவயோகத்தில் தங்கவேண்டிய ஆன்மா, ஆணவமலத்தால் கட்டுண்டு அறியாமைமிக்கு, காமத்தில் தன்முனைப்பாற்கெடுகிறது என்பார். 'தானே தங்குவோன்' என்றார். உம்; சாரியை, காமத்தில் ஈடுபடுபவனுக்கு அச்சம் இயல்பு ஆதலின் 'உட்கும்' என்றார்.

அதிகாரம் – ஒன்றை அடிமைப்படுத்தி அதிலேயே உறைந்து நிற்றல்; ஈண்டுக் காமத்தில் உறைத்து நிற்றலை உணர்த்திற்று. காமாதி அதிகாரத்தில்தானே தங்கி எனலும் ஆம். சடம் – உடல். ஊன் – ஆகுபெயராய் உடலை உணர்த்திற்று. உடல் உயிருக்கு இடமாய் அதனைப் பாதுகாப்பது. விந்து அழிய உயிர் பிரியும் என்றவாறாம். (235)

**மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டில்**
**ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்**
**ஏயாவெண் ணாளின்ப மேற்பனி மூன்றிரண்**
**டாயா அபரத்து ளாதிநாள் ஆறாமே.** 1939

இம் – எனின், மாதரைக்கூடும் நாட்கள் இவையென உணர்த்துதல்நுதலிற்று.

இ–ள்: மாதர்வசப்பட்டுச் சென்று இவர்கள் அவர்கள் கூட விரும்பினால் மாறி மாறி வந்துகொண்டேயிருக்கின்ற பூர்வம் அபரம் என்னும் இருபட்சத்துள் வளர்பக்கமாகிய பூர்வபக்கத்திலே முதல் எட்டுநாளும் மாதர் இன்பத்தைப் பொருந்தாமல் அதற்குமேல் ஆறு நாட்களிலும் கூடி விந்துவைப் பதிக்க. அபரபக்கத்தில் முதல் ஆறுநாளும் போகத்திற்கு ஆம் என்றவாறு.

வளர்பிறையில் பின்ஆறுநாளும், தேய்பிறையில் முன் ஆறுநாளும் சூரியகலைக்கு உரிய நாளாதலின் அதில் கூடினால் விந்து விரயமாகாது என்பது கருத்து. மாயாள் – மயக்குவதையே தொழிலாகக் கொண்டுள்ள மாயையின் வடிவாகிய மாதர்கள், காந்தத்தைக் கண்ட இரும்புபோல ஆடவர்கள் மாதர்கள் வசப்படுதலின் 'மாயாள் வசத்தே இவர் சென்று' என்றார்.

வளர்பிறையும் தேய்பிறையும் மாறிமாறி வந்து கொண்டே இருத்தலின் 'ஓயா இருபக்கம்' என்றார். வளர் பக்கம் – சந்திரன் வளரும் பக்கமாகிய அமாவாசை அடுத்த பிரதமை முதல் பதினைந்துநாளும். அதில் பின் ஆறு நாள் ஆடவன் உடலில் சூரியகலை மிஞ்சியிருக்கும் நாள். இங்ஙனமே தேய்பிறையில் முன் ஆறு நாளும் இவற்றில் கூடினால் விந்து அழியாது. (236)

**ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்**
**வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ**
**டேறும் இருபத் தொருநா ளிடைத்தோங்கும்**
**ஆறின் மிகுத்தோங்கும் அக்காலஞ் செய்யவே.**

இம் – எனின், மங்கையரை மருவுங்காலம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சகமார்க்கமாகிய யோகநெறியிற் பயில்வோர் மங்கையர் பூப்பெய்திய ஐந்து ஆறு பதினொன்று ஆகிய இந் நாட்களிலன்றி ஏனைய நாட்களில் கூடுக; இதனின் வேறாகிய சரியை கிரியையில் நின்று இறைவனிடம் அன்பு செய்வோராய இல்லறத்தார், மாதர்கள் பூப்பெய்தியபின் கருப்பாசயத்தில் இதழ்கள் குவிந்துகொண்டே வரும் இருபத்தொரு நாளுக்குள் இடைப்பட்ட ஆறுக்கு அப்பாற்பட்ட நாட்களில் கலவி செய்க என்றவாறு.

யோகிகள் மாதர்கள் பூத்த முன் ஐந்து நாளும் ஆறாம் நாளும், பதின்னொன்றாம் நாளும் அன்றி மற்ற நாளில் கூடுவர். இல்லறத்தோர் முன் ஆறுநாளும் நீக்கி விதித்த ஏனைய நாட்களில் கூடுவர் என்பது கருத்து.

சகமார்க்கம் –தோழமை நெறி. இறைவனைத் தோழனாக்கொண்டு இடைவிடாது பழகும் நெறியாகிய யோக மார்க்கம். இதிற் பயிலுவோர் மாதர்கள் பூப்படைந்த முதல் ஆறு நாளிலும் பதினொராம் நாளிலும் கூடுதல் ஆகாது என விலக்கப்பட்டது. அவை மாதர்களுக்கு ஆற்றல் நின்ற காலமாதலின் அதில் கூடினால்யோகி தோற்பான் மாதர் வெல்வர் என்பதாம்.

வேறன்பு வேண்டுவோர் என்பதற்குச் சகமார்க்கத்தின் வேறாகிய சரியை கிரியைகளில் நிற்பார் எனப் பொருள் கொள்க. பூ வரின் – மாதர்கட்கு மாதவிடாயுண்டாகும் பூப்பு வந்தால்.

தோடு – இதழ். மாதர் கர்ப்பாசயம் மலர் போன்றது. அது இருபத்தொரு இதழ்களை உடையது. பூத்தால் நாளுக்கு

ஓரிதழாக இருபத்தொராம்நாள் முழுதும் குவிந்துவிடும். ஆதலால் குவிந்தபின் கலத்தால் பயன் இல்லை; ஆதலின் 'இருபத்தொரு நாள் இடை' என்றார்.

தோங்கும்; துவங்கும் என்பதன் திரிபு. பூப்பு துவங்கிய முன் ஆறுநாளும் புணர்ச்சிக்குரிய நாளன்றோதலின் அதற்குமேல் புணர்க என்பார் 'தோங்கும் ஆறின் மிகுத்து ஓங்கும் அக்காலம் செய்க' என்றார். ஓங்கும் அக்காலம் – ஆண் வீரியம் மிக்கு விளங்கும் காலம். பூப்பு ஆடியபின் ஈராறு நாளும் கருவயிற்றூறும் காலம் ஆதலின் பிரியப்பெறான் என்பதும் இக்கருத்தை ஒட்டியதே. (237)

**செய்யும் அளவிற் றிருணன் முகூர்த்தமே**
**எய்யுங் கலைகாலம் இந்து பருதிகால்**
**நையுமிடத் தோடி னன்காம நூல்நெறி**
**செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே. 1941**

இம் – எனின், புணர்தற்குரிய போகசரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: போகம் செய்யும் அளவில் உடையது இருளோடு கூடிய நாளில் நல்ல முகூர்த்தத்திலேயாம்; விந்துவைக் கருவில் பாய்ச்சக்கூடிய காலம் சந்திரகலை சூரிய கலையுள் அடங்கி ஓடினால் நல்ல மன்மத சாத்திர நெறியிலே புணர்க; இடைநாடி ஒழிந்து பிங்கலையில் பிராணன் இயங்கும்போது விந்துவை விடுக்க எ–று.

இராக்காலத்து நல்ல முகூர்த்த நேரத்திலே வலது நாசி வழியாகப் பிராணவாயு இயங்கிக் கொண்டிருக்கும்போது காம நூலின் விதிப்படி அமுதநிலை அறிந்து தாடனம் முதலிய

கிரியைகளைச் செய்து வலதுபாகத்திலே விந்துவிட்டால் ஐயமாம் என்பது கருத்து.

'செய்யும் அளவிற் றிருநான் முகூர்த்தமே' எனப் பாடங்கொண்டு உண்மை உணரமாட்டாது இடர்ப்படுவாரும் உளர். விந்துப்பெருக்கம் அம்பு எய்வது போல் ஆதலின் கலையை 'எய்யும் கலை' என்றார்.

இந்து கால் பருதி நையுமிடத்து ஓடி எனக்கூட்டி சரம் சந்திரகலையில் மாறிச் சூரியகலையில் ஓடும்போது எனப் பொருள் கொள்க.

வலம் இடம் தீர்ந்துவிடுக்க என்பதற்கு, பிராணவாயு: இடகலை பிங்கலையில் ஓடாமல் கும்பகத்தில் இருக்கும்போது விடுக எனலும் ஆம். (238)

**விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போல்**
**நடுங்கா திருப்பானும் ஐயைந்து நண்ணப்**
**படுங்காதன் மாதின்பாற் பற்றற விட்டுக்**
**கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே. 1942**

இம் – எனின், கலவி செய்யும் முறைமை கூறுதல் நுதலிற்று.

இ–ள்: மிக்க காதலையுடைய பெண்களிடம் ஆசையை அறவேவிட்டு விரைவால் மூச்சுக்காற்றின்றி அந்தக் கரணங்களையும் அகமார்க்கமாக்கி, பொறி புலன்கள் ஒரு வழிப்பட்டு நிற்க, சித்த சலனமின்றி இருப்பவன் இந்திரியத்தை முனைந்து நின்று கருப்பையுள் செலுத்துக; மாதர்பால் ஆசையை விட்டு மனத்தை ஒருவழிப்படுத்தி விந்துவை விடுக என்றவாறு.

படுசுட்டிப்பயல் என்பதுபோல, படுங்காதல் மாதர் என்பது மிகுந்த காதலையுடைய பெண்களை உணர்த்திற்று. அவர்கள்பால் ஆசைமிக்கிருப்பின் புணர்ச்சியுள் தோல்வி யுண்டாய் விந்து விரைவிலே வெளிப் போந்து விரயம் 'ஆம் ஆதலின் பற்று' அற விட்டு என்றார்.

மனம் முதலிய அந்தக்கரணங்கள் மாதர்களின் அவய வச் சிறப்பில் ஈடுபட்டுச் சிதறிப்போகவிடுதலாகாது என்பார். 'கரணம் கருத்துறக் கொண்டு' என்றார். விரைந்து புணரும் போது விளையும் பெருமூச்சும் கூடாது என்பார் 'கடுங்கால் கருத்துறக் கொண்டு' என்றார். ஐயைந்து – பொறியும் புலனு மாகிய பத்து. அவை நண்ணுதலாவது ஆடவர் பொறி புலன் களும் மாதர் பொறி புலன்களும் ஒன்றி நிற்றல்.

நடுக்கம் முதலியன இன்றிப் புணரின் உண்டாகும் கரு உறுதியாய் உரத்துடன் விளங்கும் என்பாார் நடுங்காது இருப்பான் இந்திரியங்களைப் போல் முனைந்துவிடும்' என்றார். காண்: முன்னிலை அசை. (239)

**கொண்ட குணனே நலனேநற் கோமளம்**
**பண்டை யுருவே பகர்வாய் பவளமே**
**மிண்டு தனமே மிடையே விடும்போதிற்**
**கண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே. 1943**

இம் – எனின், மாதர் அவயவம் என்ற உணர்வும் கெட்டு விந்துவை விடுக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மாதர்கள் கொண்ட குணமும், நலமும், அழகும், மென்மையும், பழமையான உருவமும், பவளம் போன்ற வாயும், ஒன்றோடு ஒன்று மிண்டு நின்ற ஸ்தனமும்,

இவற்றை நுகர்கின்ற கண் முதலிய கருவிகளும், மனம் முதலிய அந்தக்கரணங்களும் அகமார்க்கத்தில் செல்லக்கண்டு விந்துவை விடுக எ–று.

உடல் ஒன்றி மனம் ஒன்றிக் கருவி கரணங்கள் ஒன்றி விந்துவை விடுக என்பது கருத்து. இங்ஙனம் விடின் விந்து க்ஷயம் ஆகாது; ஐயமாம் என்பதாம். மிண்டுதல் – ஒன்றனி டத்தை ஒன்று பிடிப்பதற்காக நெருக்குதல்.

மிடையவிடும் போதில் – நெருங்கப் புல்லி விந்துவை கருவுட் பதிக்குங்காலத்து என்க.

மனத்தை இத்தனையழகிலும், ஈடுபடுத்தின் விந்து விரைவில் வெளிப்பட்டு விரயமாம்; ஆதலின் மனத்தை இவற்றில் ஈடுபடுத்தாதே; அகமார்க்கமாக்கு; விந்து ஐயமாம் என்பது உணர்த்தப் பெற்றது. (240)

**விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே**
**தொட்டுறுங் காலங்கள் தோன்றக் கருதிய**
**கட்டிய வாணாள்சா நாள்குணங் கீழ்மைசீர்ப்**
**பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே.**
1944

இம் – எனின், போகம் போகசரம், இவற்றால், பிறந்து நுகர இருக்கும் துன்ப இன்பங்களை அறியலாம் என்பதுணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவைக் கருப்பையில் விட்டபிறகு கருவின் தோற்றமானது விதியின்படி அதனைத் தீண்டும் காலம் முதலிய வற்றை நன்கு ஆராய்ந்து அவ்வுயிரின் உடம்போடு கட்டிய

வாழ்நாளையும் சாம்நாளையும் குணங்களையும் இழிவையும் புகழத்தக்க உயர்வையும் இது இது என்று எண்ணிப்பார்க்க என்றவாறு.

கருப்பதிந்த காலத்திலேயே புணர்ச்சி நிலை சரவோட்டம் இவற்றைக் கொண்டு பிறக்கும் குழந்தையின் வாழ்நாள் சிறுமை மேன்மை முதலான குணங்கள் அனைத்தையும் ஆராய்ந்தறியலாம் என்பது கருத்து.

விதியிலே தொட்டு உறுங்காலங்கள் – இப்பிறவியில் இவை இவை நுகரத்தக்கன என்று விதிக்கப்பெற்று நியதி தத்துவத்தாலே வரையறுக்கப்பட்ட பிராரத்த கன்மங்களைத் தீண்டி, பூமியில் பிறவியைப் பொருந்துகின்ற காலங்கள். இதனால் கருப்பதிந்த காலத்திலேயே விதியும் விடாது பற்றும் என்பது வலியுறுத்தப்பட்டது.

தோன்றக் கருதிய கட்டிய வாழ்நாள் – பூமியில் பிறக்கக் கருதிய கணந்தொட்டு அவ்வுயிரோடு கட்டியுள்ள வாழ்நாள். இதனால் வாழ்நாளின் தொடக்கம் குழந்தை பிறக்கக் கருதிய கணத்திலிருந்து என்பது உணர்த்தப் பெற்றது.

சீர்ப்பட்ட நெறி – புகழ் உண்டாதற்கு ஏதுவாகிய உயர்ந்த நெறிகள்; அவை கல்வி கேள்வி ஒழுக்கம் முதலாயின.

(241)

**பார்த்திட்டு வையத்துப் பரப்பற் றுருப்பெற்று**
**வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே**
**சேர்த்துற் றிருதிங்கள் சேரா தகலினும்**
**மூப்புற்றே பின்னாளி லாமெல்லா முள்ளவே.**

1945

இம் – எனின், அற்ப ஆயுளுள்ள குழவியாயினும் மூப்பு முதலிய உண்டெனல் நுதலிற்று.

இ–ள்: சரவோட்டத்தால் முற்கூறிய அனைத்தையும் ஆராய்ந்து உலகத்துப் பரபரப்பாகிய சலனம் இல்லாமல் உருக் கொண்டு கச்சினை வருத்தும் கொங்கைகளை உடைய மடந் தையைப் பிரிந்து பிறந்த குழவி சேர்க்கப்பெற்ற இரண்டு மாதம் கூடப் பொருந்தாமலிறக்கினும் மூப்பினை அடைந்து பின்னாள் விளையும் அனைத்தையும் எண்ணி அறியும்படி அமைந் துள்ளது என்றவாறு.

பிறந்து இரண்டு மாதந்தான் இருக்கும் குழந்தையாயி னும் அதற்குள் அக்குழவி எய்தும் பேறு இன்பம் துன்பம் அனைத்தையும் அன்றே உணரும் என்பது கருத்து. வையத்துப் பரப்பு – உலகத்து ஆரவாரம். புணர்ச்சிக் காலத்துத் தாயும் தந்தையும் ஆரவாரத்தில் ஈடுபடாது மௌனமாய் இருப்பது அவசியம் என்பது இதனால் வலியுறுத்தப் பெற்றது. இதனை 'முறையான பெண்ணாணும் மௌன முற்றால், மோசமில்லை கரு அங்கே தரிக்கும் பாரு' என்ற அகத்திய வைத்திய சாரமும் நன்கு விளக்கும்.

உருப்பெற்று – வடிவு முதிர்ந்து. அது யூகிமுனிவர் வைத்திய சிந்தாமணியிலும் கர்ப்ப உபநிடதத்திலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வளர்ச்சி ஐந்தாவது நாளிலிருந்து பத்தாவது மாதம் வரையில் நிகழும். இதனை 'ஆகாநாள் விந்துவிட்ட ஐந்தாம் நாள் கருப்போலாகும்...தசம் பிறவிதானே, என்னும் அகத்தியர் பிண்டோற்பத்தி செய்யுளாலும் அறிக.

இருதிங்கள் சேராது அகலினும் முழுதும் இரண்டு மாதம் சேராமலிருந்தாலும், அதற்குள் இளமை பிணி மூப்பு அனைத்தும் உண்டு என்பதாம். (242)

வித்திடு வோர்க்கன்றி மேலோர்
விளைவில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தினில் வித்தை விதற வுணர்வரேல்
மத்தி லிருந்ததோர் மாங்கனி யாமே. 1946

இம் – எனின், விந்துஞானம் உடையார்க்கே சிவம் வெளிப்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விதைப்போர்க்கன்றி ஏனையோர்க்கு மேலே ஓர் விளைவு இல்லையாம்; மிகுதியாக ஆராய்ந்த அறிவுமில் லையாம்; விந்துவிலிருந்து வெளிப்படும் வித்தைச் சலனமற உணர்வாராயின் சிவம் மத்திலிருந்த மாங்கனியாகும் என்றவாறு.

விதைத்தவனே மேல் விளைச்சலை நுகர்வான்; அவ னுக்கே எதனையும் ஆராயும் அறிவு உண்டாம்; விந்துவில் வெளிப்பட்ட சீவனை ஆராயும்போது சிவம் மத்திலிருந்த மாங் கனி போல நடுக்கமும் சஞ்சலமுமாம். மத்தில் இருந்ததோர் மாங்கனி – ஆராயும் வன்மை பொருந்திய உயிராகிய மத்தில் இருந்த மாங்கனி போலும் சிவம். உள்ளங்கை நெல்லிக்கனி என்பது போல மத்திலிருந்த மாங்கனி என்பதும் தெற்றெனத் தோற்றுதலுக்கு எடுத்துக் கூறப்படும் பழமொழி. (243)

கருத்தினில் அக்கர மாயுவு மியாவுங்
கருத்துளன் ஈசன் கருவுயி ரோடுங்
கருத்தது வித்தாய்க் காரண காரியங்
கருத்துறு மாறிவை கற்பனை தானே. 1947

இம் – எனின், கருப்பதியும் காலத்திலேயே மேல் விளைவு அனைத்தும் அடங்கியிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எழுத்துக்களும் ஆயுளும் பிற அனைத்தும் கருவில் பதியும் உயிரோடு அதன் கருத்தில் அமைந்துள்ளன. ஈசனும் அக்கருத்தில் எழுந்தருளியுள்ளான்; அக்கருத்தின் மூலமாய்க் காரண காரியம் காணுதல் கற்பனையே என்றவாறு.

கருப்பதியும்போதே உயிரோடு அதன் கருத்தில் கலை காலம் முதலிய அனைத்தும் அமைந்துவிடுகின்றன. அவற்றை இயக்கக் கடவுளும் கலந்திருக்கிறார். இங்ஙனம் கருத்துக்கு மூலமாய், காரண காரியமாய் இறைவன் கருத்திலே பொருந்த நாம் மாறி எண்ணுவது கற்பனையே. உண்மையல்ல என்பது கருத்து.

அக்கரம் – அகாரம் முதல் க்ஷகாரம் இறுதியான ஐம்பத் தொரு எழுத்துக்கள். எழுத்தால் விளையும் எண்ணெண் கலை ஞானங்களே ஈண்டு அக்கரம் எனப்பட்டன. கலைஞானங்கள் குடியிருப்பது அவரவர் கருத்திலாதலின் 'அக்கரம் கருத்தினில்' எனப் பெற்றது.

ஆயுவும் – வினைப்போகங்களுக்காக அந்தந்த உயிர் களுக்கு வரையறுத்துக் கொடுக்கப்பட்ட வயதும் அதுவும் கருவிலே உயிரின் கருத்திலே அமைந்தது. மரத்தின் தன்மை அனைத்தும் வித்திலே அடங்கியிருப்பது போல, உயிரின் ஆயுள் போகம் அனைத்தும் கருத்தில் அடங்கியுள்ளன என்பதாம்.

கருவில் உயிர்க்கு உற்ற துணையாய், வினைப்போகங் களை அளந்து ஊட்டும் அன்னையாய், நன்னெறிப்படுத்தும்

தந்தையாய் இறைவன் கலந்து உடனிருக்கின்றான் என்பது. 'கரு உயிரோடும் உருத்துளன் ஈசன்' என்றதால் உணர்த்தப் பெறுகிறது. இதனை அப்பர் சுவாமிகள் 'கருவியாய்க் கிடந்து உன் கழலே நினையும் கருத்துடையேன்' என்று அறிவிக்கின் றார்கள்.

இவ்வண்ணம் இறைவன் கருவிலுள்ள உயிரின் கருத்துக்கே வித்தாயும் அதற்குக் காரணமாயும் கருத்தால் விளையும் ஆயுள் போகம் முதலிய காரியங்களாயும் அந்தந்த உயிரின் கருத்திலே அமைந்திருக்கவும் அதற்கு மாறாக எண்ணு கின்ற எண்ணங்கள் அனைத்தும் வெறும் கற்பனையே உண்மை யன்று என்பதை விளக்குவன பின் இரண்டு அடிகளும். ஆகவே இறைவன் உயிருக்குக் கருவாய் அதன் கருத்திலே கலந்து விளங்குகின்றான் என்பதுணர்த்தப் பெற்றது. (244)

**ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்**
**அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி**
**ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்**
**அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே.**

**1948**

இம் – எனின், விந்து ஜயத்தால் விளையும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: என்றும் நீங்காத விந்து உடலின்கண் வேறாய் நிற்க, அழியாத உயிரும் அளவிலாற்றலும் திருவருட் சத்தியும் துணை நிற்கும்; அவ்விந்து மூலக் கனலால் வற்றி உடம்போடு ஒன்றுபடின் என்றும் நீங்காத புத்தி தபம் ஜெபம் மோனம் என்றும் அழியாத எண்வகைச் சித்திகள் எல்லாம் உண்டாம் என்றவாறு.

விந்து உடலைவிட்டு அழியாமல் உடலுக்குள்ளேயே இருந்தால் அளவிலாற்றலும், மரணம் மூப்பு இன்மையும் உண்டாம். விந்து வற்றி உடலோடு ஒன்றிவிடின் புத்தி ஜபம் தபம் சித்திகள் எல்லாம் விளையும் என்பது கருத்து.

அதிபலம் என்பது உடலின் ஆற்றலையும், சத்தி என்பது மன ஆற்றலையும் குறித்து நின்றன. ஒழியாத புத்தி என்பது ஆணவமலச் சேட்டையால் அஞ்ஞானத்தால் மறைக் கப்படாத அறிவு என்பதாம். ஒழியாத என்ற அடைமொழியை ஏனைய தபம் செபம் முதலியவற்றோடும் ஒட்டுக. (245)

**வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்**
**துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று**
**முற்று மதியத் தமுதை முறைமுறை**
**செற்றுண் பவரே சிவயோகி யாரே.** 1949

இம் – எனின், சிவயோகிகளின் சிறப்பியல்பை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்து வற்றி உடலோடு சுவறிப்போக மூலா தாரத்தில் உள்ள குண்டலியாகிய நெருப்பைக் கொளுத்தி விந்து கீழ்நோக்காதவாறு தடுத்து மேலே ஏற்றி நெருங்கிய சுழி முனையாகிய நடுநாடியின் வழியாக மூலக்கனலில் சொருகி விளக்கம் பெற்றுப் பூர்ண சந்திர வடிவான சஹஸ்ராரத்திலுள்ள அமிர்தத்தைப் பல தடவை பெருக்கி உண்பவர்களே சிவ யோகியர் ஆவர் என்றவாறு.

மூலக்கனலால் விந்துவை மேல்நோக்கச் செய்து வற்றச் செய்து மதிமண்டலத்து அமுதை இடைவிடாது உண்ப வர்களே சிவயோகியர் என்பதாம். விந்துவை வென்றவரே சிவயோகியாவர் என்றவாறு. (246)

யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
போகியும் ஞான புரந்தர னாவோனும்
மோக முறினு முதையமிர் துண்போனும்
ஆகிய விந்து அழியாத அண்ணலே. 1950

இம் – எனின், இதுவும் அது.

இ–ள்: யோகவானும், ஞானியும், உத்தமனான சித்தனும், போகியும், ஞானபுரந்தானும், மகிழ்ச்சியால் விளையும் அமுதத்தை உண்பவனும் மோகமுற்றாலும் விந்துவை வென்ற வீரராவர் என்றவாறு.

சிவயோகி முதலானவர் மோகமுற்றாலும் விந்துவை வென்ற வீரர்களே என்பது கருத்து.

யோகி –́ பன்னிரண்டு நாள் வரையில் இடைவிடாத தியான சமாதியிலிருந்து பழகியவன். ஞானி – யோகப் பயிற்சியால் சிவமேயான செல்வன். உத்தமசித்தன் – சித்தத்தை அடக்கியாண்டு சித்திகளைத் தன்னலத்துக்காகப் பயன்படுத்தாது உலகை வாழவைக்கும் உத்தமமாய சித்திகளை உடையவன். போகி – உள்ளவாறு போகங்களை நுகரத்தக்க புத்தி ஆற்றல் படைத்தவன். ஞானபுரந்தரன் – ஞானேந்திரன்; ஞானிகட்கெல்லாம் அரசாகிய ஞானி.

மோகம் உறினும் – முற்கூறிய இவர்கள் ஒரொருக்கால் வாசனையால் தாக்குண்டு மயங்கினும் என்க. முதை – மகிழ்ச்சி. அது குண்டலியை மதிமண்டலத்தில் ஏற்றியதால் விளையும் இன்பம். இத்துணைப் பேரும் விந்துவை வென்றவர்கள் என்பதாம். (247)

**அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்**
**மண்ணிடை மாய்க்கும் பிராணனாம் விந்துவுங்**
**கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்**
**துண்ணில் அமிர்தாகி யோகிக் கறிவாமே.1951**

இம் – எனின், சிவயோகியர் சிவஞானியர் ஆகும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவயோகிக்குச் சிவமே உடலாகியதால் சிவாக் கினியாகிற விந்துவும் இம்மண்ணில் மாய்க்கப் பெற்ற விந்துவும் தியானிக்கப்படுகிற மூலக்கனலோடு பிணைத்து கலந்து எரித்து உண்டால் அதுவே உண்ணும் அமிர்தமும் ஆகி அறிவாம் என்றவாறு.

சிவாக்கினியாகிற விந்துவையும் உயிராகிற விந்து வையும் மூலக்கனலோடு மூட்டி எரித்து உண்டால் அதுவே அமிர்தமுமாய் ஞானமும் ஆம் என்பதாம்.

அண்ணல் – சிவபெருமான். சிவயோகி சதாசிவத் தியானத்தால் தன் ஊனுடல் கழித்து, சிவ உடலைப் பெற்றவ னாதலின் 'அண்ணல் உடலாகி' என்றார். அவ்வுடலுள் நீங் காது நிற்கும் வெம்மை வடிவான சக்தி அவ்வனல் விந்து.

உரிய காலம் வரையில் உலகத்து வாழும் நமக்குக் கழிக்கப்படுவன இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்கள் ஆதலின் 'மண்ணிடை மாய்க்கும் பிராணன்' என்றார். பிராண னாம் விந்து – உயிராகிய விந்து. அதுவும் அழற்பிழம்பு வடிவானது.

கண்ணுங்கனல் – மூலாக்கினி. இது கொழுந்து விட் டெரிவதும் கிளர்ந்து எழுவதும் தியானத்தால் ஆதலின் 'கண்ணுங்கனல்' எனப்பட்டது.

இம்மூன்றையும் கலந்து எரித்தலாவது, புருவ மத்தியாகிய விந்துத் தானத்தில் தியானிக்கப்படுகின்ற பொருளாகிய சிவமும் தியானிப்போனாகிய உயிரும் திருவருட் சத்தியாகிய குண்டலியும் ஒன்றுகூடி விளங்கச் செய்தல். அங்ஙனம் அவை ஒன்று கூடும்போது மதிமண்டலத்து அமுதம் பெருகும்; யோகி அதனை உண்டு ஞானியாவான் என்பதாம். (248)

**அறியா தழிகின்ற வாதலால் நாளும்**
**பொறியால் அழிந்து புலம்புகின் றார்கள்**
**அறிவாய் நனவி லதீதம் புரியச்**
**செறிவா யிருந்து சேரவே மாயுமே. 1952**

இம் – எனின், விந்துவை வெல்லுகின்ற உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவின் அருமையும் பெருமையும் அறியாமையால், அழிகின்றதால் நாடோறும், இந்திரியங்களால் மனம் அழிந்து உடல் அழிந்து புலம்புகின்றார்கள் மக்கள்; ஞானமே சொரூபமாய், நனவிலேயே துரியாதீதத்தில் சிவத்தொடு செறிந்திருந்து பொருந்த, விந்து ஊர்த்துவ விந்துவாய் உடலொடு ஒட்டி உறைந்துவிடும் என்றவாறு.

இடைவிடாத தியான சமாதியால் விந்து வெளிப்பட்டழியாது, உடலொடு ஒட்டி வற்றிவிடும். நித்யானந்தத்தை எய்தலாம்; அங்ஙனமிருக்க அறியாமல் சிலர் பொறிவழி நின்று விந்து அழிந்து புலம்புகின்றனர் என்பது கருத்து.

அறியாது என்பதற்கு இவர்கள் அறியாமலே கனவிலும், இவர்களிடமுள்ள அறியாமையால் நனவிலும் விந்து பொறியுணர்வால் கெடுகின்றது எனலுமாம்.

பொறியால் நாளும் அழிதலாவது, பொறியின்பங் காரணமாக தினமும் மாதரைப் பொருந்த விந்தழிதல்; அதனால் விளையுங்கேடு புலம்புதல்; உடல் வலிகுன்றி மனவுறுதி தளர்ந்து, எழுதற்கு என் செய்வேம் எனக் களைத்தல்.

நனவு – ஆன்மா எல்லாக் கருவி கரணங்களோடும் கூடிப் புருவமத்தியாகிற சிம்மாசனத்திலே கொலுவீற்றிருந்து அரசு செலுத்தும் நிலையாகிற விழிப்புநிலை. அதிலே ஞான சொரூபியாய் ஆன்மா துரியாதீதம் என்ற கடந்த நிலையை எய்தச் சிவத்தோடு செறிவாயிருந்து அதாவது தியான சமாதிக் கண் வீற்றிருந்து, விந்து உடலொடு சேர வற்றிக்கெடும் என்பதாம். ஆகவே தியானசமாதியொன்றே விந்துவை வெளிப் பட்டழியாது தடுத்து உயர்த்தி உடலொடு வற்றச் செய்யும் உபாயம் என்பது உணர்த்தப்பெற்றது. (249)

**மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்**
**காதல தாகிய காமங் கழிந்திடுஞ்**
**சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ்**
**சோதியி னுள்ளே துரிசறுங் காலமே.** 1953

இம் – எனின், விந்துவை வெல்லுமுறை மனமாற்றத் திலே உருவாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பெண்களை உயிர்களைக் கொல்லவரும் எமனாகக் கருதக் காதலாகிய காமம் நீங்கும்; காதல் நீங்கச் சாதல் இல்லை; நூறு கோடி ஆண்டுகள் ஒளி வடிவான சிவத்தோடு கலந்து ஆன்மாவைப் பற்றியுள்ள ஆணவத் துரிசுகளை அறுக்கும் காலமாம் எ–று.

விந்துவை வென்றவன் சதகோடி ஆண்டு ஆண வத்தை வென்று ஒளியுடன் ஒளியாய் விளங்குவன் என்பது கருத்து.

மாதர் – காதல் என்பது பொருள். காதல் விளைவிக் கும் பெண்களை மாதர் என்றது பண்பாகுபெயர், காதற் கருவி யாகிற பெண்களை எமன் என்று பாவிக்கக் காதல் விளையாது ஆதலின் 'மாதரைக் கூற்றம் என்று உன்ன' என்றார்.

கூற்றம் – உடலுயிர் கூறு செய்யும் தெய்வம். மான வரும் கூற்றம் – வினைப்போக முடிவின்கண் உயிரை உடம்பி னின்றும் பிரிக்கவரும் எமன்.

காதலது ஆகிய காமம் – காதலால் விளைவதாகிய காமம். காமம் – பெர்றியின் பத்தின் மிக்குத் தோன்றும் ஆசை. கழிந்திடும் – நீங்கும்.

காமமே உயிர்க்கொல்லி. காமம் என்னும் நாமமும் இல்லை எனில் கடுங்கேடு எனும் நாமமுமில்லை நரகமும் இல்லையாம் என்பார் 'சாதலும் இல்லை' என்றார். உயிர் வர்க்கங்கள் அழிவது காமத்தால் என்க.

சதகோடி ஆண்டினும் – நூறு கோடி ஆண்டினும் என்றது ஆன்மா நித்தியம் என்பதைக் குறிப்பித்தவாறு. சோதி யினுள்ளே – ஒளிப்பிழம்பான பரசிவத்தினுள் ஆன்மா பொறி யின்பத்திற்காக மாதரைச் சாராது பேரின்பத்திற்காகப் பெரு மானைச் சார்ந்தபோது ஒளியோடு கூடி ஒளியாய் விளங்கு தலின் ஆன்மா ஆணவக் களிம்பற்றுக் களிக்கும் காலம் அதுவாம் என்றவாறு. துரிசு – குற்றம். உயிர்த்துரிசு – ஆணவம். (250)

காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங் களின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே. 1954

இம் – எனின், விந்துவை வென்றவனது உயர்வு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவை வென்றவன் காலத்தை வென்றவன்; விந்துவால் வெல்லப்பட்டவன் காலத்தால் வெல்லப்பட்டு அழிந்தவனாவன்; விந்துவை வென்று விளங்கும் காலங்களில் பிராணாயாம முறையால் மேலெழுந்து வந்த குண்டலினி யாகிற சத்தியோடு கூடும் கூட்டத்து இன்பத்தை அறியாதவன் ஆவான் என்றவாறு.

விந்துவை வென்றவன் காலத்தை வென்று நீண்டநாள் சிற்சத்தியோடு கூடிச் சிவயோகியாய்ச் சிவபோகத்தாழ்ந்து விளங்குவன் என்பது கருத்து.

காலம், இறப்பு, நிகழ்வு எதிர்வென முக்கூற்றதாய் உயிர்கள் வினைப்போகங்களை நுகர்தற்குத் துணையாய் விளங்குந் தத்துவம். அதுவே மக்களை இறப்பு பிறப்புக்களால் ஆட்டிவைப்பது. அதனையும் வென்று நித்யனாய் விளங்கு வான் விந்துவை வென்றவன் என்பதாம்.

விந்து செற்றவன் என்பது விந்துவைச் செற்றவன். விந்துவால் செறப்பட்டவன் எனச் செய்வினையானும் செயப்பாட்டு வினையானும் பொருள் அமைந்திருத்தல் காண்க.

ஒவ்வொரு நாளும் கழியும் சில துளி விந்துவால், உடல் கெட்டு உயிர் மக்கிய வீட்டில் குடியிருக்க மாட்டாது கழிய மடிவான் என்பார் 'காலங்கடந்து அழிந்தான்' என்றார். காலங்கடந்து – மூப்பு எய்தி.

விந்துவை வென்று சிவயோக நெறியில் மூலத்தி லிருக்கும் குடிலையாகிற குண்டலினி அன்னையை, கும்பகப் பிராணாயாமத்தால் மேலே எழுப்பி, விந்துத் தானமாகிய புருவ மத்திவரையில் கொண்டு சென்று அவ்வன்னையோடு கூடி என்றும் தங்குவதால் விளையும் பேரின்பத்தையுணரார் விந்துவால் வெல்லப்படுகின்றவர்கள் எனக்கூட்டிப் பொருள் காண்க.

இங்ஙனமன்றிப் போககாலத்தில் வெளிப்படுகிற தனஞ்செயன் என்னும் வாயுமூலமாக வந்த புணர்ச்சி இன் பத்தை அறியார் என்பாரும் உளர். சிறந்தது கொள்க. (251)

**கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்**
**நலத்தக வேண்டிலந் நாரி யுதரக்**
**கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை**
**விலக்கு வனசெய்து மேலணை வீரே. 1955**

இம் – எனின், போகவின்பம் பெருக உபாயம் உரைத் தல் நுதலிற்று.

இ–ள்: தன்னிடத்துக் காதலால் விளையும் இன்பம் தக்கவாறு மிகவேண்டின், கூடுவதற்கு முதல் நாளிலேயே மனைவியின் வயிறாகிய கலத்திலுள்ள மலத்தையும் வாத பித்த சிலேஷ்மங்களையும் விளக்குமளவு விலக்கிப் பின் புணர்வீராக என்றவாறு.

புணர்ச்சிக் காலத்துக் கலவியின்பமும், சந்ததியின்பமும் வேண்டின் பெண்ணின் வயிற்றிலுள்ள மல முதலியவற்றை முதனாளே நீக்கிப் புணர்க என்பது கருத்து.

"மாதா உதரம் மலமிகில் மந்தனாம்
மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே"

என்பது திருமந்திரமாதலின் அவற்றை விலக்குக என வற்புறுத்தியவாறாம். (252)

**மேலா நிலத்தெழு விந்துவும் நாதமுங்**
**கோலால் நடத்திக் குறிவழி யேசென்று**
**பாலாம் அமிர்துண்டு பற்றறப் பற்றினால்**
**மாலா னதுமாள மாளுமவ் விந்துவே.** 1956

இம் – எனின், விந்து மாளும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துற்பனத் தானமாகிய புருவ மத்தியில் விளையும் விந்துவும் நாதமும் அதோமுகமாகாதவாறு சுழுமுனை வழியே செலுத்தி, குறித்த நிலமாகிய துரியத்திற் செலுத்தி, அங்கே விளையும் பால்போன்ற வெண்மையான அமிர்தத்தையுண்டு, பற்றி நிற்கின்றோம் என்றபற்றும் நீங்கப் பற்றினால் மயக்கம் அழிய விந்துவும் வற்றும் என்றவாறு.

மேனோக்கிய விந்து நாதங்களை மதிமண்டலமாகிய துரியத்தானத்து நிறுத்தி, சிவனருளோடு சேர்க்கின் அமுதம் ஊறும்; அதனையுண்டு மோகம் நீங்க விந்து ஐயம்செய்க என்பது கருத்து.

மேலாம் நிலம் ஆறாதாரங்களில் மேலாகிய வித்துத் தானம்; அது புருவமத்தி. அங்கே மனோமயமான விந்து உற்பத்தியாகி இதயமுதலிடங்களைப் பொருந்தி இரசம் சுக்கிலம் இவற்றுடன் கலந்து, கீழ்நோக்கிப் பாய்ந்து கழியும். அங்ஙனம் அது கெடாதவண்ணம் மேனோக்கிச் செலுத்த, பிராணாயாமம் என்ற துணை கொண்டு துரிய நிலமாகிய பிரம ரந்திரத்தில் செலுத்துக. அப்போது மதிமண்டலமாகிய அங்கே அமுதம் ஊறும். உண்டு, மயக்கம் தெளிந்து விளங்குக. விந்துவை ஜயிக்கலாம்.

மேலாம் நிலம் – துரியாதீதம் என்பாரும் உளர். விந்து ஜயம் செய்யும் யோகி சாதகனாதலின், அநுபவிக்குரிய துரியாதீத நிலையைக் கூறுதல் பொருந்தாதாம்.

கோல்– மாடு முதலிய விலங்குகளைத் தன்வழிச் செலுத்தக் கோலைப் பயன்படுத்துவது போல நடுநாடியின் முடிச்சாகிய சுழுமுனையால் செலுத்துக என்று சுழிமுனை யைக் கோல் என உருவகித்தார். திருமூலர் இடையர் திரு மேனியைத் தாங்கியதால் அதற்கேற்பக் கோல் என்று கூறினார். குறிவழி – குரு உபதேச வழியே என்க. பசுவைக் கோலால் நடத்திக் குறிவழி நடத்தினால் பாலாம் அமுது பெறலாம் என்ற பொருளும் தொனித்தல் காண்க.

விந்துக்ஷயத்திலும் புணர்ச்சிக் காலத்து, கோலால் நடத்திக் குறிவழியே செலுத்தின் பாலாகிய அமுது வெளிப் படும். அதுபோல விந்துவை மேல்நோக்கிச் செலுத்தின் நித்தியானந்தத்தை அருளும் மதிமண்டலத்துப் பாலமுதம் உண்ணலாம் என்பது கருதவைத்தவாறு. பால் பித்தம் தெளிக் கும் மருந்துமாகும். அது போல மதியமுதம் மல மயக்கம் போக்கும் மருந்தாம் என்றவாறு. (253)

விந்து விளைவும் விளைவின் பயன்முற்றும்
அந்த வழிவும் அடக்கத்தில் ஆக்கமும்
நந்திய நாதமும் நாதத்தாற் பேதமுந்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே.
1957

இம் – எனின், விந்து உற்பனம் முதலியவற்றை உள்ள வாறுணர்வோர்க்கு விந்து ஜயமாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்து விளையும் முறைமையும், அவ் விளை வின் முதிர்வால் எய்தும் பயனும், அதன் அழிவும், விந்துவை அடக்கி ஆள்வதால் அடையும் சிறப்பும், பெருகிய நாதமும், அதன் வகையும் ஆராய்ந்து அறிவோர்க்கு விந்து ஐயமாம் என்றவாறு.

விந்து விளைவும் – துளிரத்தம் சுண்டி ஒருதுளி சுக்கிலம் ஆதலும், எண்பது துளி சுக்கிலம் சுண்டி ஒரு துளி விந்துவாதலும் ஆகிய விளைவு.

விந்து நன்றாக விளைந்து முதிருமானால் உடல் ஒளியும் உறுதியும் உடையதாகும். இவையே அதன் பயன் என்க. அந்த அழிவும் என்பது விந்து நாசமும் அதனால் விளையும் தீமைகளுமாம்.

அடக்கத்தில் ஆக்கமும் –விந்துவை வெளிப்படுத்தாது அடக்கிக் கொள்வதால் விளையும் உயர்வும். அவை மன ஒரு மைப்பாடும் திடமும் சலியாத சொற்செயல்கள் உடைமையும் ஆம்.

நந்திய நாதம் – பெருகிய நாதம். நந்துதல் பெருகுதல் 'நந்தம்போற் கெடும்' என்பது போலக் கொள்க.

நாதம் – விந்து முற்றி மணி ஆனபோது விளையும் ஒலி. அதன் பேதம் – மணியோசை முதல் சங்கோசை ஈறாகச் சொல்லப்பட்ட பதினாறு வகை ஒலிக்கூறுகள். இவற்றை உள்ள வாறு உணர்வோர்க்கு விந்துஜயம் ஆம் என்றவாறு. (254)

விந்துவெண் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய அங்கியி னாலே நயந்தெரித்
தந்தமில் பானு அதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. 1958

இம் – எனின், விந்துவை அமுதமாக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்து என்கின்ற வித்தை அது பொருந்தியிருக் கின்ற மூலாதாரத்திலேயே ஓங்கி வளர்கின்ற குண்டலித் தீயால் விரும்பி எரித்து அவ்விந்துவை முடிவற்ற சூரியமண்ட லத்தில் ஏற்றி மதிமண்டலத்தைச் சாரச் செய்தால் குளிர்ந்த அமுதமாம் என்றவாறு.

விந்துவை மூலத்தீயால் சுட்டு, சூரியமண்டலத்தி லேற்றி, சந்திரமண்டலத்தைச் சாரவைத்தால் அது அமுதமாம் என்பது கருத்து.

மூலம் – குறிக்கும் குதத்துக்கும் இடைப்பட்ட இடம். பானுகண்டம் கொப்பூழ் முதல் இதயம்வரை உள்ள சூரியமண் டலப்பகுதி. சந்திரமண்டலம் – புருவமத்திக்கு மேல் உச்சிஉரை உள்ள பகுதி. விந்துவை மூலக்கனலால் சுட்டு, வலப்பால் உள்ள பிங்கலை நாடியின் வழியாக ஏற்றி, அதன்மேல் இடநாடி வழியாகச் சகஸ்ராரம்வரை உயர்த்திச் செல்லின், இவ்வெப்பம் தாக்கி மதிமண்டலத்து அமுதம் சுரக்கும் அதனால் நெடுநாள் வாழ்வும் பேரின்பமும் பெறலாம். (255)

**அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள**
**அமுதப் புனலோடி அங்கியின் மாள**
**அமுதச் சிவபோகம் ஆதலாற் சித்தி**
**அமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே.1959**

இம் – எனின், சிவயோகி அமுதலாப்பிலாவனம் செய்யும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அமுதமாகிய சந்திரமண்டலத்துள்ள விந்துவில் உடற்கண் தோன்றிய விந்து கலந்து லயமாக உடம்பு முழுவதும் அமுதப்புனல் பரவி இதயத்துள்ள சிவாக்கினியில் இலயிக்க, அமுதமயமான சிவபோகம்விளையும்; ஆதலால் சிவயோகிக்கு அமுதாப்பிலாவனமாகிற சித்தி பொருந்தும் என்றவாறு.

மதி மண்டலத்தில் மதிவிந்துவொடு உடல் விந்து என்ற அமுதநீர் பெருகி இதயச் சோதியுள் ஒன்ற, சிவபோகம் சித்திக்கும்; ஆதலால் அமுதாப்பலாவன சித்திவிளையும் என்பது கருத்து.

சசிவிந்து – மூலாக்கினி மதி மண்டலத்திலுற்று எரிக்கும்போது விளையும் அமுதத்துளி.

ஆம் விந்து – நமது உடற்கண் விளையும் சுக்கில காரியமாகிய விந்து. இவ்விந்து குண்டலியோடு மதிமண்டலம் சென்றபோது ஒளியுள் ஒளி மாய்ந்தது போல மாளும் என்பது முதலடியால் உணர்த்தப் பெற்றது.

அமுதப்புனல் –இன்ப உணர்ச்சியின் மிகுதியால் விளையும் வியர்வை உமிழ்நீர் முதலியன. இது மதி மண்டலத்து அனுபவம் ஏற்படும்போது விளையும் அனுபவம்.

இப்புனல் இன்ப நுகர்வாய் வெளிப்பட்டுச் சிவானுபவமாக மறையும்; அதுவே சிவபோகமாம். இதனை விளக்குவன பின்னைய இரண்டடிகளும்.

அமுதாப்பிலாவணம் – அமுதத்தில் மூழ்கி எழுந்தது போலும் அனுபவம். சிவாகமங்களில் ஆத்மார்த்த பூஜையைக் கூறுமிடத்து, 'பூஜகன் சிவோகம்பாவனை செய்து அமிர்தாப்பி லாவனம் செய்க' எனவரும் பகுதியால் அமுதம் தடாகமாக நிறைந்திருக்க அதில் மூழ்கி எழுந்தவனுக்கு மயிர்க்கால் தோறும் இன்ப உணர்வு வெளிப்படும். இதுவே அமுதாப்பிலா வனமாம். ஆகம நெறியும் பத்ததி விதியும் அறியாதார் 'அமுதாப்பலாவனம்' எனப் பிரித்துத் திருவடி இன்பமாகிற கனி பழுத்த பலாத்தோப்பு என உரைப்பர். ''நரிப்பாய் நாயேன்'' என்பதற்கு நரியின் மீது பாய்கிற வேட்டை நாயினை ஒத்த யான் என உரை எழுதிய புறச் சமயத்தாரின் உரை போல்வது இது என ஒழிக.

அமுதாப்பிலாவனம் என்பது எதுகை நோக்கி அமுதப் பலாவனம் என ஆயிற்று. (256)

**யோகமவ் விந்து ஒழியா வகைபுணர்ந்**
**தாகம் இரண்டுங் கலந்தாலு மாம்குறாப்**
**போகஞ் சிவபோகம் போகிநற் போகமா**
**மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே.** 1960

இம் – எனின், சிவயோகிக்குப் போகமும் யோகமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: யோக நெறியால் விந்து அழியாதவாறு ஆணும் பெண்ணுமாகிய இரண்டு உடலும் கலந்து புணரினும் விந்து

நழுவிப் பெண்ணிடத்துப் பொருந்தாது; அது போகமேயாம். ஆனால் அது சிவபோகமாம்; போகியாகிய மூடர்கள் நல்ல போகமாக மாதர்க்கு மோகம் தணியும்படிக் கலவி செய்யார் என்றவாறு.

யோகி மாதரைப் புணர்ந்தாலும் விந்து நழுவாது; போகமும் உண்டாம். ஆனால் அப்போகம் சிவபோகமா யிருக்கும். போகியாகிய மூடர்கள் மாதர்கள் மோகம் கெட முயங்கமாட்டார்கள். அதற்குள் விந்து வழிந்து வீணாவர் என்றவாறு. (257)

**மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து**
**காதலி னால்விடார் யோகங் கலந்தவர்**
**மாதர் உயிராசை கைக்கொண்டே வாடுவர்**
**காதலர் போன்றங்ஙன் காலாஞ் சாற்றிலே.**
**1961**

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: யோகநெறியிலே கலந்து வாழ்கின்ற யோகிகள், புணர்ச்சியில் பெண்களிடத்து விந்துவைச் செலுத்தினாலும் அவ்விந்துவைக் காதலோடு செலுத்தமாட்டார்கள்; மாதர்களோ யோகிகளை உயிர்போலக் கருதி ஆசைகொண்டு வாடுவார்கள்; சொல்லுமிடத்து நெடுநாள் பழகிய காதலர்கள் போல அக்கணமே உயிர்க் காதல் கொள்வர் என்றவாறு.

யோகியர் விந்து விடார்; விட்டாலும் காதலோடு விடார்; மாதர்கள் அவர்களை உயிராக மதித்து உண்மைக் காதல் கொண்டு வாடுவரென்பது கருத்து.

செலுத்தினும் என்ற உம்மை எதிர்மறை. பாலையைக் கடந்தவன் தண்ணீர் பருகியதுபோல மாதரைக் கண்டபொழுது காதலாகி விந்துவை நழுவவிட்டவர் மாதர்கள் ஆசையையும் பெற முடியாமல் வருந்துவர் என்பதாம். இதனால் விந்துவை வென்றவர் மாதரையும் வென்றவர் எனப் புலப்படுத்தப் பட்டது.

விந்து வெளிப்படாமல் போகம் செய்வது சிவபோகம் என்று உரைப்பாரும் உளர். சிந்தையை மாதரிடத்து வைத்து மயங்கிப்போகிக்குமது ஒருபோதும் சிவபோகம் ஆகாது. ''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே'' என்பது போல யோகியின் மனம் சிவத்திடத்தே பதிந்திருப்பதால் அது சிவபோகமாயிற்று.

கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமாப் போல நம்பியாரூரர் பரவையாரிடம் பழகி வந்தமையால் இருவர் நெறியும் சிவபோகமாயிற்று. நம்பியாரூரர் பரவையாரைச் சிவனருள் என்றே திளைத்தார். பரவையார் சிவபெருமான் இன்னருள் பெற்று என்னை உடையவரானார் என்று திளைத்தார். அதனாலேயே, இருவர் எய்திய போகமும் சிவ போகமாயிற்று. இஃது உணராது விந்து வெளிப்படாப் போகம் சிவபோகம் எனல் சிறிதும் ஏலாமை தெளிக. (258)

**சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்**
**ஏற்றிய மூலத் தழலை யெழமூட்டி**
**நாாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ**
**டாற்றி யமுதம் அருந்தவிந் தாமே. 1962**

இம் – எனின், விந்து தமக்கேயாம் நெறி உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: முற்கூறிய விந்துவும் சத்தியால் ஜயம் ஆகும்; தூண்டிவிட்ட மூலாதாரத்திலுள்ள கனலை மேலெழச் செய்து, சிதறிப் போகாவண்ணம் நடுநாடியிலேயே நாதத்தோடு ஒன்றச் செய்து, அமுதம் உண்ண, விந்து அழியாமல் தமக்கேயாம் என்றவாறு.

விந்துவைக் குண்டலியோடு மேலெழச் செய்து மதி மண்டலத்தமுது உண்ண விந்து கெட்டொழியாது தமக்கேயாம் என்பது கருத்து.

விந்துவை வெல்வது சத்தியால் என்றது. தளராத மன உறுதியும் அதற்குக் காரணமான திருவருட் சத்தியும் துணையானால் முடியும் என்றவாறாம்.

மூலத்தழல் மூலாதாரத்தில் சுருண்டு கிடக்குமாதலின் அதனைப் பிராணனை ஆளுமுறையால் ஏற்றிவிட வெளிப் பட்டுத் தோன்றுமென்பார் 'ஏற்றிய மூலத்தழல்' என்றார். எழமூட்டுதல் – ஆதாரங்கள் தோறும் பொருந்திப் புருவமத்தி வரையில் உயரச் செய்தல்.

நடுநாடி – சுழிமுனை. நாதத்தோடு ஆற்றி – நாதத் தோடு விந்துவையும் ஒன்றச் செய்து, நாதவகை முன்னரே கூறப்பட்டது.

விந்து ஆம் என்பதற்கு அவ்விந்து தமக்கேயுரிய தாம் எனச் சிலசொல் வருவித்து முடிக்க. (259)

**விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல**
**வந்த வனன்மயிர்க் கால்தோறும் மன்னிடச்**
**சிந்தனை மாறச் சிவமக மாகவே**
**விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே.** 1963

இம் – எனின், விந்து உடல் வித்திலே ஒன்றும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவும் நாதமும் உயர்ந்து பொருந்த வந்த மூலக்கனலின் வெப்பம் மயிர்க்கால்தோறும் நிறைய, நம் சிந்தனை பசுபோத நிலையை விட்டு மாறிச் சிவோகம் பாவனையில் நிலைபெற, உண்மையான உடலின் வித்திலே விந்து கலந்து மறையும் என்றவாறு.

மூலக்கனல் மயிர்க்கால்கள் தோறும் வெளிப்படச் சிவோகம்பாவனை புரிய விந்துலயமாம் என்பதாம்.

சிந்தனை மாற – தனு கரண புவன போகங்களாகிற மாயையைப் பற்றிய உயிர் சிவத்தைச் சார்ந்து சிவமாக என்பது.

சிவம் + அகம்; சிவம் நான் என்ற அநுபவம் முதிர. மெய்க்காயம் – விஞ்ஞானமய கோசமாகிற ஞானசரீரம். அதன் வித்து – உண்மை ஞானம்.

மாளும் – வெளிப்பட்டழியாது மறையும். (260)

**வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்**
**வித்துக்குற் றுண்ணாமல் வித்துச்சுட் டுண்பவன்**
**வித்துக்குற் றுண்பானில் வேறல னீற்றவன்**
**வித்துக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே.**
**1964**

இம் – எனின், விந்துவை உடலோடு சுவறச் செய்தவ னியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விதையைக் குற்றி உண்பவன் விளைவின் நலத்தை அறியாதவன்; வித்தைக் குற்றியுண்ணாமல் வறுத்துண் பவனும் வித்தைக் குற்றியுண்பவனில் வேறு அல்லன்; முடிவு வரை விளங்கும் யோகி விதையைக் குற்றியுண்ணாமல் உடற் புலம் முழுதும் விதையை விதைத்து வைத்தவன் ஆவன் என்றவாறு.

விதையைக் குற்றித் தின்பவனும் பொறித்து உண்ப வனும் சமந்தான். மூன்றாமவன் விதையை விதைத்து அதன் பயனை உண்பவன்; அவனே சிவயோகி என்பது கருத்து.

இது பிறிதுமொழிதல் என்னும் அணி. வித்து என்றது விந்துவை. அதனைக் குற்றி உண்ணுதலாவது மாதர்போகத்தில் ஈடுபட்டு விந்துவை வீணே கழித்துச் சிற்றின்பத்தைச் சிறுகணப் பொழுது பெற்று மகிழ்தல்.

வித்துச் சுட்டு உண்ணுதலாவது விந்துவை அடயோக நெறியால் வெளிப்படாது நிறுத்துதல். இச்செயல் தேங்கிய குளம் கரை உடைபடுவதுபோலக் கனவினாலும் நரம்புத் தளர்ச்சியினாலும் ஒரேடியாக வெளிப்பட்டு வீணாதலும் கூடுமாதலின் போகியும் இவனும் சமமாவான் என்றார்.

ஈற்றவன் – அழிவின்றி எந்நாளும் வாழும் சிவயோகி. மூன்றாமவன் என்றும் ஆம்.

வித்து வித்தான் – வித்தினை விதைத்தான். உடல் முழுதும் அவ்விந்துவை வியாபிக்கச் செய்து சிவமயமாய் வச்சிரகாயம் பெற்றவன் என்பதாம். (261)

**அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு**
**மன்னப் பிராணனாம் விந்து மறித்திட்டு**
**மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட**
**வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே. 1965**

இம் – எனின், விந்து மாய்க்கும் வகை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அன்னசாரமாய் விளையும் விந்து உடலில் கூறும்படியான முறைகளைக் கண்டு பிராணவாயுவாகிற விந்துவைக் கும்பமாக நிலைபெறத் தடுத்து மேலேற்றி மின்னலை ஒத்த ஒளியையுடைய விந்துவை ஒலிவடிவாகிய நாதத்தின் முடிவிற் செலுத்த. பிரணவ எழுத்து வடிவாகிய விந்து வெளிப்படாது உடலிலே சுவறும் என்றவாறு.

அன்னவிந்துவாகிய உடல்விந்தைப் பிராணவாயு வாகிற விந்துவால் மறித்து, மின்னொளி வடிவாக மேலே செலுத்தி, நாதாந்தத்தில் கலப்பித்தால், விந்து உடலோடு ஒட்டும் என்பது கருத்து.

பிராணனாம் விந்து மன்ன எனக் கூட்டுக. மன்ன – நிலைபெற, விந்து நாதங்கள் ஒளியும் ஒலியும் ஆதலின் விந்துவை 'மின் ஒத்த விந்து' என்றார். வன்னத்திரு விந்து – எழுத்து உருவாய் ஒளிவிடும் விந்து. (262)

**அன்னம் பிராணனென் றார்க்கு மிருவிந்து**
**தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்**
**சொன்ன மாமுருத் தோன்றும்எண் சித்தியாம்**
**அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே. 1966**

இம் – எனின், விந்துவை வென்றார் இயல்புணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: மக்கள் அனைவர்க்கும் அன்னவிந்துவும் பிராண விந்துவும் என்கிற விந்து இருவகை உண்டு; அவற்றை அடக்கும் வகை அறிந்து, சுவறச் செய்து அதனைச் சாதிக்க வல்ல பேருக்கு வடிவம் பொன்னிறமாம்; அட்டமாசித்திகளும் உண்டாம்; அத்தகைய சிவயோகிகள் அனைவரும் அழியாது என்றும் வாழ்வர் என்றவாறு.

அன்னமும் பிராணனுமாகிய இருவகை விந்துக்களின் நிலை அறிந்து அடக்கி ஆண்டு வெல்லவல்ல சிவயோகியர் உடம்பு பொன்னாம்; எண்வகைச் சித்திகளும் தானே வந்து எய்தும்; அவர்கள் நீடூழி வாழ்வார்கள் என்பது கருத்து.

அன்னம் – உண்ணும் சோறு; அன்ன விந்து – அன்னத்தின் சாரமான சுக்கிலத்தின் முதிர்வான விந்து. பிராணன் – மூச்சுக் காற்று; அது வாரசரத்திற் கூறியவண்ணம் இயங்குவதால் விளையும் விந்து பிராணவிந்து. அன்னவிந்து போகத்தால் கழிந்து வீணாம். பிராணவிந்துவும் போகத்தாலும் தொழிலாலும் கழிந்து வீணாம். அவை வீணாகாது உடம்பிலேயே நிலைக்கும் வண்ணம் சாதிக்க வேண்டும்; அங்ஙனம் செய்வோரே யோகியர்.

பிராணவிந்துவைக் கும்பகஞ் செய்து அடக்கினால் உரோமம் கறுக்கும்; உறுப்புச் சிவக்கும்; பொன்னிறமாகும் என்பது முன்னர் மூன்றாந் தந்திரத்துப் பிராணாயாமப் பகுதியில் கூறப்பட்டது.

அன்னவிந்துவை அடக்கும் உபாயம் இவ்வதி காரத்துக் கூறப்பட்டது. இருவகை விந்துவும் போகத்தில்

சேர்ந்தே அழியுமாதலின், அங்ஙனம் அழியாத போது விளையும் பயன் சேர்த்தே கூறப்படுகிறது.

அன்னவர் எல்லாரும் அழிவற நிற்பர் என்பது. ஆரிடம் பற்றி எல்லாம் அழிவற நின்றதே என முடிந்தது.

(263)

**நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனாய்**
**ஒன்று மகாரம் ஒருமூன்றோ டொன்றவை**
**சென்று பராசத்தி விந்து சயந்தன்னை**
**ஒன்ற வுரைக்க புவதேசந் தானே.** 1967

இம் – எனின், விந்துவை வெல்லும் மந்திர உபதேசம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவைந்தெழுத்தில் முதற்கண் நின்ற சிகாரமே தியானிக்கும் பிராணனாக அதனோடு ஒன்றிய மகாரம் முதலான மூன்றோடு ஒன்றும் ஐந்தாம்; அவை புருவமத்தியிற் சென்று பராசத்தியோடு ஒன்ற, விந்து ஜயமாம்; அதனை உபதேசமாகப் பொருந்தவுரைக்க என்றவாறு.

சிவ்யநம என்பதனைப் புருவமத்தியில் பராசத்தி யோடு ஒன்றவைத்துத் தியானித்தால் விந்துவை வெல்லலாம்; இதனையே உபதேசமாக உரைக்க என்பது உருத்து.

சிகாரமே திருவைந்தெழுத்தில் தலையாய் ஆன்மா முதல் அனைத்தையும் இயக்குவிப்பதாதலின், நினைக்கும் ஆன்மா அபேதஞானத்தால் சிவமே ஆகவேண்டும் என்பார். 'நின்ற சிகாரம் நினைக்கும் பிரணனாய்' என்றார்.

மகாரம் ஒரு மூன்றொடு ஒன்று – வயநம என நான்கு எழுத்துக்களும். அவை ஒன்றுதலாவது சிவயநம எனச் சேருதல்.

அவை புருவ மத்தியில் விளங்கும் பராசத்தியோடு சென்று பொருந்தத் தியானிக்கின் விந்து அழியாது. ஆதலால் இம்மந்திரத்தை உபதேசமாகப் பொருந்த உரைக்க என்பதாம். (264)

**தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை**
**வானே யுயர்விந்து வந்த பதினான்கு**
**மானே ரடங்க அதன்பின்பு புத்தியுந்**
**தானே சிவகதி தன்மையு மாமே.** 1968

இம் – எனின், விந்து சயத்தால் சிவகதி சித்திக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உபதேசம் சிவமாகிய தானல்லாது வேறொன்று இல்லையாம்; மதிமண்டலம் வரையில் பரகாயத்து உயர்ந்து செல்லுகின்ற விந்துவிலிருந்து தோன்றிய அகாரம் முதல் ஆஞ்ஞை ஈறான பதினான்கு கலைகளும் மகத்தத்துவமும் அடங்க, அதன்பின்பு புத்தி தானே சிவகதி எய்தும் தன்மையைப் பெறும் என்றவாறு.

திருவைந்தெழுத்து அல்லது வேறு இல்லையாம். அதனை எண்ண விந்துமேல் நோக்கிச் செல்லும். விந்துவிலிருந்து தோன்றிய பதினான்கு கலைகளும் மகத்தத்துவத்தில் அடங்கும். அதன்பின் புத்தி தானே சிவகதி சேரும் தன்மையில் ஆம் என்பது கருத்து.

தான் ஏய் உபதேசம் – விந்துவை வென்று சிவகதியைச் சேரவிரும்பும் ஆன்மாவாகிய தான் அடையும் உபதேசம். ஏய்தல் – பொருந்துதல்; அடைதல்.

தான் அல்லாது – சிவமாகிய தான் அல்லாது; என்றது சிவயநம என்னும் திருவைந்தெழுத்து ஒன்றே அல்லாமல் என்க. திருவைந்தெழுத்தை எண்ணும்போது ஆன்மா சிவத்தைச் சார்ந்து சிவமேயாய் இருத்தலின் 'உபதேசம் தானல்லாது ஒன்று இல்லை' என்றார்.

வான் ஏய் உயர் விந்து – சகஸ்ராரமாகிய வான மண்டலம் வரையில் உயரும் விந்து. திருவைந்தெழுத்தை விடாது கணிக்க, விந்து கீழ்நோக்காது மேல்நோக்கிச் சென்று, பரையொடு கூடுமாதலின் விந்துவை 'வான் ஏய் உயர் விந்து' என்றார்.

வந்த பதினான்கு – பரவிந்துவிலிருந்து தோன்றிய அகாரகலை, உகாரகலை, மகாரகலை, விந்துகலை, அர்த்த கலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியோபினி கலை, வியோமரூபாகலை, அனந்தாகலை, அனாதாகலை, அனாசிருதாகலை என்ற பதினான்குமாம்.

மான் – மனத்தோடு கூடி செயப்படுவதாகிய சமனா கலை, மனஸாஸக என்பது சமனா என்றாயிற்று. அதனைத் திருமூலர் மான் என்று குறிப்பிடுகிறார்.

புத்தி – அறிவால் தியானிக்கப்படும் உன்மனை. உன்மனையாவது பரை, பரசிவம் முதலாய ஏனைய கலைகள் புத்தியிற் பதிய ஆன்மா தானே சிவத்தில் சேரும் தன்மையைப் பெறும் என்பதாம். (265)

விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் சிவோகமே. 1969

இம் – எனின், உயிர்களின் தோற்றமும் சிவோகம் பாவனையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவும் நாதமும் விளைவதால் இவ் வுலகத்தில் தோன்றிய பலவகைப்பட்ட உயிர்களும் உடலோடு கூடித் தோன்றியதாம்; நித்தியமான உயிர்கட்கெல்லாம் முதலும் இறுதியுமாயிருக்கிற மந்திரங்களும் விந்து அடங்க அதனால் விளையும் சிவோகம் பாவனையாம் என்றவாறு.

இவ்வுலகத்து உயிர்கள் உடலொடு கூடி விளங்குவது விந்து நாதங்களின் விளைவால் ஆம். உயிர்களுக்கு ஈறும் முதலுமாம் மந்திரமும் விந்து முனைப்பு அடங்குதலால் விளையும் சிவோகம் பாவனையாம் என்பது கருத்து.

சிவமே சங்காரகாரணன் ஆதலாலும் புனருற்பவமும் அதனின்று விளைதலாலும், 'அந்தமுமாம் ஆதியுமாம் சிவோகமே' என்றார். சிவோகம் பாவனை முதிர்தல் விந்து சயத்தால் ஆதலின் 'விந்து அடங்க விளையும் சிவோகமே' எனப்பட்டது. (266)

வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
அறுக்கின்ற நாள்வரும் அத்திப் பழமே. 1970

இம் – எனின், விந்துசயத்தால் வினையை வெல்ல லாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவை மீண்டும் முளையாதவாறு வறுக் கும் முறைமையும் எங்கும் உலாவருதலாகிய மனத்தின் வெற்றியைத் தடுத்து நிறுத்தும் முறைமையும் அதனைப் பெரிய பொன்மலையாகிற சுழுமுனையை ஒட்டி உயர்கின்ற முறைமை யும் ஆகிய அனைத்தும் அத்திப்பழம் போல்வதாகிய உடலுக் குக் கொடியவினைகளைப் போக்கிய நாளின் கண் வருவன வாம் என்றவாறு.

வினையைப் போக்குகின்ற நாளிலே விந்துசயமும் மனோசயமும் சுழுமுனைத் தியானமும் கைவரும் என்பது கருத்து.

வறுக்கின்றவாறு – விந்து முளைத்துப் பிறப்புக்கு ஏது வாகாமல் அடக்குதல்.

மனம் மாயையாகிய உலகத்தில் தோன்றிய பல பொருள்களிடத்தும் சென்று பற்றுவதாதலின் அது உலகத்தில் உலாவரும்; அதனைச் சிவமாகிய ஓரிடத்து நிலைத்து நிற்கும் படி நிறுத்தும் வல்லமை பிராரத்த கன்மமும் ஏனைய கன்மச் சார்பும் கழிந்தாலன்றி இல்லையாதலின் 'வினையை அறுக் கின்ற நாள் உலாவரும் மனத்து வெற்றி நிறுக்கின்றவாறு ஆம்' என்றார்.

நீள்வரை – உயரத்தில் நீண்டுவளரும் மலையாகிய உடல். ஏனைய விலங்கினங்களைப் போலன்றி மனித உடல் உயர்ந்து வளர்வது ஆதலின் 'நீள்வரை' எனப்பட்டது. உடலை மேரு, சுவர்ணகிரி, பொன்மலை என வழங்குவது சித்தர் மரபு.

நீள்வரை ஒட்டிப் பொறித்தலாவது உடலினுள் நடுநாடி வழியாக ஒட்டி மனத்தை மேல் ஏற்றுதல். பிராரத்தத்தை உண்டும் ஆகாமிய சஞ்சிதவினைகள் வந்து பற்றாதவாறு தடுத்தும் நீக்குதலாகிய செயல், அறுத்தல் என்பதால் விளக்கப் பெற்றது. உடல், பல வித்துக்களையும் புழுக்களையும் உள் ளடக்கி நிற்பதாதலின் அத்திப்பழமாக உருவகிக்கப்பெற்றது. மன்னரும் 'அத்திப்பழமும் அறைக்கீரை நல்வித்தும், கொத்தி உலைப்பெய்து' என்றருளியமை காண்க. உடலை அத்திப் பழமாக உருவகித்தல் திருமூல தேவர்க்கு வழக்காதல் பிற விடங்களிலும் கண்டு தெளிக. அங்ஙனமிருக்க அத்தீப்பழம் எனக் கொண்டு தீப்பிழம்பாகிய சிவப்பழம் என இயைபில்லாப் பொருள் கொள்ளவேண்டுவது இல்லையாம். (267)

**விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்**
**சந்திர னோடே தலைப்படு மாயிடில்**
**அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்**
**அங்குதி மந்திரம் ஆகுதி யாகுமே.** 1971

இம் – எனின், விந்துஜயத்தினால் வரும் நன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: விந்துவும் நாதமும் ஒன்றுகூடி உயர்ந்து சென்று மதிமண்டலத்தைப் பொருந்துமாயின், பராகாயத்திலிருந்து அமுதம் சுரக்கும்; அங்கு உண்டாகின்ற பிரணவ பஞ்சாக்கர நாதமே ஆகுதிக்கு உரிய மந்திரமாம் என்றவாறு.

விந்து நாதங்கள் மேல்நோக்கிச் சென்று மதி மண்டலத்தைச் சார அமுதம் சுரக்கும். அப்பொழுதுஅங்கு அனுபவத்துக்கு வரும் ஓம் எனும் ஒலியே ஆகுதி மந்திரமாம் என்பது கருத்து. (268)

மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
இனத்தெழு வார்கள் இசைந்தன நாடி
மனத்தில் எழுகின்ற வாக்கு வசனங்
கனத்த இரதமக் காமத்தை நாடிலே. 1972

இம் – எனின், காமத்தை விரும்புதலால் வருகின்ற கேடு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: காமத்தை விரும்பினால் மனத்தோடு கலந்து அனுபவிக்கப்படுகின்ற சத்துப் பொருளாகிய சிவமும் மனத் தோடு கூடிய செவி முதலான பொறிக் கூட்டத்து எழுகின்ற புலன்களில் தமக்கு இசைந்தனவற்றை நாடி எழுதலால் மனத்தி லெழும் வாக்குக்கள் கனத்து ரசமாகப் பயனின்றிக் கழியும் என்றவாறு.

காமத்தைக் கருதின் மனத்தில் சிவம் தோன்றாது. மனம் பொறிவழிப்பட்டுப் புலன்களை நாடி வாக்கும் வசனமும் கனத்து ரசமாகக் கழியும் என்பது கருத்து.

உயிராகிய உள்ளத்தோடு கலந்து விளங்கும் சிவம் காமத்தை நாடினால் தான் கரந்து ஆன்மாவை முற்படுத்திக் காமத்தில் திளைக்கச் செய்யும்; ஆதலின் 'காமத்தை நாடில் மனத்தொடு சத்தும் கனத்த இரதமாம்' எனப்பட்டது. மனம் – ஆன்மா. சத்து – என்றும் நிலைத்த பொருளாகிய சிவம்.

மனம் செவி என்ன இனத்தெழுவார்கள் – அந்தக் கரணமும் புறக்கரணமுமாகிய கரணக் கூட்டங்களுடன் கூடிப் புலன்களை விரும்பி முளைத்து எழும் காமிகள்.

இசைந்தன நாடி – தத்தமக்கு விருப்பான போக போக்கியங்களை விரும்பி.

மனத்தில் எழுகின்ற வாக்கு – சூக்குமை மத்திமை முதலியன. வசனம் – வைகரியாய்ப் பிறர் செவிக்கண் சென்று சேரும் வாக்குகள்.

கனத்த இரதம் – பருச்சுவை. நுண்ணுணர்வாய் அறிவாதலால் நுகரப்படும் சிவானுபவம் அருட்சுவை. பொறி புலன்களால் நுகரப்படும் காம அனுபவம், பருச்சுவையாகிய கனத்த இரதம். இது பயனற்றுக் கழிவது ஆதலால், கனத்த இரதம் என்றார். இரதம் ஆம் என வருவித்து முடிக்க. (269)

**சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்**
**தொத்தறி கின்ற விடமும் அறிகிலர்**
**மெய்த்தெறி கின்ற விடமறி வாளர்க்கு**
**அத்தன் இருப்பிடம் அவ்விடந் தானே.** 1973

இம் – எனின், நாதத்தின் உண்மையிருப்பிடமே நாதன் இருப்பிடம் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நாதமும், அதனை உணர்கின்ற மனமும், மனம் அறியும் கருத்தும் ஒத்து அறிகின்ற இடத்தை உலகவர் அறியார். அதனை உள்ளவாறு உணர்வாராயின் அதுவே அத்தன் இருப்பிடம் என்பதையும் அறிவர் என்றவாறு.

நாதம், நாதத்தை அறியும் மனம் அதன் பொருள் இம்மூன்றும் ஒத்து உணரப்படும் இடமே இறைவன் இருப்பிடம் என்பது கருத்து.

சத்தம் – ஒலிவடிவான சுத்தமாயா காரியமான நாதம். ஒலிப்பொருளை உணர்த்துதலின் உணரும் வினைமுதல் மனமாயிற்று. மனக்கருத்து – மனத்தால் அறியப்படும் ஒலியின்

பொருள். மனம் சுத்த சாக்கிரத்தில் புருவமத்தியில் அரசு வீற்றிருந்து எல்லாவற்றையும் அறியும் ஆதலின் மூன்றும் ஒத்து அறியும் இடம் புருவ மத்தியாம். அதுவே இறைவன் சத்தியோடு விளங்கும் இடம்; அதனை உணா்ந்தவரே இறைவனை உணா்ந்தவா் என்க. (270)

**உரமடி மேதினி யுந்தியி லப்பாம்**
**விரவிய தன்முலை மேவியகீ ழங்கி**
**கருமுலை மீமிசை கைக்கீழிற் காலாம்**
**விரவிய கந்தர மேல்வெளி யாமே. 1974**

இம் – எனின், உடலின் ஐம்பூதநிலை அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: வலிய பாதம் நிலமாகும்; கால்களுக்கு மேல் உந்தி வரையில் நீராம்; உந்திமுல் மார்புவரை நெருப்பாம்; மார்பு முதல் தோள்வரை காற்றாம்; கழுத்தும் அதன் மேற்பகுதியும் ஆகாயமாம் என்றவாறு.

கால் எல்லாவற்றையும் தாங்கும் வன்மையதாதலின் 'உரம் அடி' எனப்பட்டது. மாா்பளவு அங்கி ஏறினும், முலைகளின் கீழ்ப்பகுதியே தீ என்பது 'முலை மேவிய கீழ் அங்கி' எனலால் காண்க. கருமுலை – கரிய நுனியையுடைய முலை. விரவிய கந்தரம் – தலையையும் உடலையும் கலந்து இணைக்கின்ற கழுத்து. (271)

# 22. ஆதித்தநிலை—அண்டாதித்தன்

சூரியன் அண்டத்தும் பிண்டத்தும் உள்ளத்தும் உணர்வினும் அந்தந்த இடத்துக்கு ஏற்பக் கலந்து நிற்கும் நிலையைக் கூறுவது ஆதித்த நிலையாம். ஆதித்தன் என்பது அதிதியின் புதல்வரான பன்னிரண்டு சூரியர்களையும் காரணப் பெயராய் உணர்த்தி நிற்கும். அவர்களுக்கும் ஒளிதருகின்ற காரண சூரியனையும் சிவ சூரியனையும் இடுகுறி அளவாய் உணர்த்தலும் உண்டு. இச்சூரியனைக் கலந்து நிற்கும் நிலையினை நான்கு அதிகாரங்களால் உணர்த்தத் தொடங்கி, முதற்கண் பன்னிரண்டு சூரியர்களும் அண்டங்கள்தோறும் விளங்கும் முறைமையினை உணர்த்துவது அண்டாதித்தன் என்னும் இவ்வதிகாரம். சரவோட்டம் கூறியபிறகு சூரியநிலையை அறிவிப்பது இன்றியமையாதது. ஆதலின் விந்துஜயத்தை அடுத்து இது வைக்கப்பெற்றது.

**செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்**
**மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்**
**எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி**
**தஞ்சுட ராக வணங்குந் தவமே.** 1975

இம் – எனின், சூரியன் முதலியோர் மேருமலையை வலம் வருதலின் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: சூரியன் முதலாகிய தேவர்கள் மஞ்சு சூழ்ந்த மேருமலையை வலம் வருதற்குரிய காரணம், ஒளி வடிவுடைய எம் ஈசனாகிய இறைவனுடைய இரண்டு திருவடிகளின் ஒளி தம்மொளியாக வேண்டும் என விரும்பி வணங்கும் தவமேயாம் என்றவாறு.

சூரியன் முதலிய தேவர்கள் இறைவன் திருவடிப் பேரொளியால் தமக்கு ஒளி மிக வேண்டும் என்னும் கருத்தா லேயே மேருமலையை வலம் வருகின்றார்கள் என்பது கருத்து. செஞ்சுடரோன் முதலாகிய தேவர்கள் என்றது முப்பத்து முக் கோடி தேவர்களை.

மஞ்சு – வெண்மேகம். சுடரோன் – சுடர்வடிவாகிய சிவபெருமான். அவர் திருவடியின் ஒளி யாரும் எளிமையிற் காண இயலாதவாறு பேரொளியாய்த் திகழும் ஆதலின் அவற்றைத் தம் ஒளியாகப் பெறவேண்டித் தேவர்கள் மேருவை வலம் வருகின்றார்கள் என்க.

தேவர்கள் இறைவனிடமிருந்தே ஒளிபெற்று உயர்கின் றனர் என்பது அறிவித்தவாறு. (272)

**பகலவன் மாலன் பல்லுயிர்க் கெல்லாம்**
**புகலவ னாய்நின்ற புண்ணிய நாதன்**
**இகலற ஏழுல கும்முற வோங்கும்**
**பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே.** 1976

இம் – எனின், சூரியன் உயர்வு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சூரியனே திருமாலும் ஆவன்; பல்வேறு உயிர் கள் அனைத்திற்கும் அடைக்கலத்தானமாய் நின்ற புண்ணிய நாதனுமாகிய சிவனுமாவன்; பகைமை அற ஏழு உலகங்களும் மிக ஓங்கி வளர்தற்கு ஏதுவாகிய சூரியனே எல்லா உயிர் கட்கும் முதற்பொருளுமாவன் என்றவாறு.

அண்டாதித்தனே திருமாலும் சிவனொளியுமாவன். ஏழு உலகங்களும் வளர்தற்குரிய முதற்பொருளும் ஆவன்

அண்டாதித்தனைச் சிவசூரியன் என்றும் சூரிய நாராயணன் என்றும் கூறும் வழக்குண்மையும் ஓர்க. சூரிய ஒளியினாலேயே எல்லா உயிர்களும் வளர்தலின் 'பகலவன் பல்லுயிர்க்கு ஆதியுமாம்' என்றார். (273)

**ஆதித்தன் அன்பினோ டாயிர நாமமுஞ்**
**சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்**
**வேதியர் வேண்டினும் விண்ணவர்**
**சொல்லினும்**
**ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே. 1977**

இம் – எனின், சிவசூரியன் அண்டாதித்தனுள் உள் ளொளியாய் விளங்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அண்டாதித்தன் சிவாதித்தனிடம் அன்பு பூண்டு ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி அருச்சிக்க அவ்வாதித் தனுக்குள்ளே சிவம் சுடர்விடும் ஒளியாய்க் கலந்து நிற்கும்; இங்ஙனமே அந்தணர்கள் வேண்டித் துதித்தாலும் விண்ண வர்கள் துதித்தாலும் சிவபெருமானிடம் அன்பு முதிர்கின்றவாறு இவ்வாறாம் என்றவாறு.

சிவசூரியனை ஆயிரம் திருநாமம் சொல்லி ஏத்தச் சிவ சூரியன் உள்ளொயியாய்க் கலந்து நிற்பன்; இங்ஙனமே வேதி யரும் விண்ணவரும் வேண்டித் துதித்தாலும் சிவபெருமா னிடம் அன்பு முதிரும் என்பது கருத்து.

வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும் என்பதற்கு வேதியர் பிரார்த்தனையாகிற ஆரிடச் சொல்லினும் விண்ணவர் தோத்திரமாகிய துதியினும் மக்களுக்கு அன்பு முதிரும் என உரைத்தலும் ஆம். சூரியன் அருச்சித்து

இறைவனை உள்ளொளியாய்ப் பெற்றதுபோல மக்களும் வேதியர் விண்ணவர் சொற்களால் துதிசெய்யின் இறைவனிடம் அவர்கட்கு அன்பு முதிரும் என்பதாம். (274)

தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சட ராகுமே. 1978

இம் – எனின், அண்டாதித்தனே எல்லாமாயிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அண்டாதித்தனே உலகுக்கு மெய்ப்பொருளாக இருப்பன்; சத்தியாக இருப்பான்; சிவமாக இருப்பன்; மதியாக இருப்பன் என்றவாறு.

சூரியனே மெய்ப்பொருள், பராசத்தி, பரசிவம், சந்திரன் அனைத்தும் ஆம் என்பது கருத்து.

தானே என்பதற்கு மேல் ஓதிய சிவபெருமானே என்று உரை கூறுவாரும் உளர். சிவமே எல்லாமாயிருத்தலைப் பின்னர் சிவாதித்தன் என்னும் அதிகாரத்தில் கூறுதலானும், இவ்வதிகாரம் அண்டாதித்தனைப் பற்றியது ஆதலானும் தானே என்பதற்கு அண்டாதித்தனே எனப் பொருள் கூறுதலே பொருந்துவதாம்.

அண்டாதித்தன் உலகுக்கு என்றும் உள்பொருளாய் இருத்தலாவது, உலகம் உற்பவித்த காலத்திலேயே உடன் தோன்றி உலகம் உள்ளளவும் அதற்கு உறுதுணையாய் இருத்தல்.

உலகுக்குத் தையலாய் நிற்றலாவது பராசத்தியின் திருவருளால் உலகுக்கு முதற்காரணம் ஆனாற்போல உலக வளர்ச்சி மாற்றங்கட்குத் தான் து ணைக்காரணமாய் நிற்றல்.

சம்புவாய் நிற்கும் என்றது பராசத்தி மாயையினின்று உலகைத் தோற்றுவிக்க நிமித்தகாரணனாய் நிற்றலை. இதனால் அண்டாதித்தன் உலகுக்கு முதல் துணை நிமித்தகாரணமாக விளங்குதல் உணர்த்தப் பெற்றது.

ஆதித்தன் தண்சுடராம் என்றது உலகை வளர்க்கும் அருளைக் கருதி என்க. (275)

**வலையமுக் கோணம் வட்டம் அறுகோணந்**
**துலையிரு வட்டந் துய்ய விதமெட்டில்**
**அலையுற்ற வட்டத்தில் ஈரெட்டி டிதழா**
**மலைவற் றுதித்தனன் ஆதித்த னாமே.** 1979

இம் – எனின், அண்டாதித்தனுக்குரிய அகச்சக்கரத் தையும் புறச்சக்கரத்தையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வலையம் முக்கோணம் வட்டம் அறுகோணம் துலாக்கோல் இருவட்டங்கள் இவ்வடையாளங்களைப் பெற்ற ஆறாதாரங்களில் தூய்மையான அஷ்டதள பத்மத்தில் சுற்றிலும் அலையாகப் பொருந்திய வட்டத்தில் பதினாறிதழ்த் தாமரை யாக அண்டாதித்தன் ஐயமறத் தோன்றினான் என்றவாறு.

மூலாதாரம் முதல் இதயம் பிரமரந்திரம் இவற்றில் சூரியன் உதிக்கின்றான் என்பது கருத்து.

வலயம் முக்கோணம் இவைகள், மூலாதாரத்தில் விளங்கும் சக்கரத்தையும் மூன்றரை வலையவடிவான குண்ட லியையும் உணர்த்தும்.

அண்டாதித்தனைப் பிண்டத்தில் வைத்துத் தியானிக்கும் முறையில் முதற்படி இது. அதற்குமேல் வட்டமும் அறுகோணமுமாயமைந்த சுவாதிட்டான சக்கரத்தில் ஆதித்தன் விளங்குவதை 'வட்டம் அறுகோணம்' என்ற பகுதி அறிவிக்கிறது.

துலை இருவட்டம் என்பது அளவு ஒத்த இரண்டு வட்டங்களை இணைத்தது போன்ற கண்டப்பகுதி. இதில் விளங்குவது எட்டு இதழ்த் தாமரை. இதுவே விசுத்தி சக்கரம்.

அலையுற்ற வட்டத்தில் ஈரெட்டு இதழ் என்றது பிரமரந்த்தித்தில் விளங்கும் பதினாறிதழ்த் தாமரை. இவ்விடங்களிலும் குண்டலியோடு அண்டாதித்தனை வைத்துத் தியானிக் முறைமை கூறியவாறு. (276)

**ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்**
**சோதித் திலங்குநற் சூரிய னாலாங்**
**கேத முறுங்கேணி சூரிய னெட்டிற்**
**சோதிதன் னீட்டிற் சேடசந் தானே. 1980**

இம் – எனின், சூரியன் சிவத்துடன் விளங்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சூரியன் உள்ளே விளங்கும் முக்கோண சக்கரத்தில் சூரியன் ஒளிசெய்து விளங்குவன்; அவன் விளங்குகின்ற தானத்திற்கு நான்காவது தானமாகிய கிணறுபோன்ற விசுத்தித் தானத்தில் எட்டினால், ஒளி வடிவான சிவத்தோடு கூடிப் பதினாறு கலைகளோடும் பதினாறிதழ்த் தாமரையில் விளங்குவன் என்றவாறு.

சூரியன், தான் விளங்கும் முக்கோணச் சக்கரத்திலிருந்து மேலெட்டி விசுத்தித் தானத்தை அடையின் பதினாறிதழ்த் தாமரையில் உள்ள சோதிடோடு கலந்து விளங்குவன் என்பது கருத்து.

அண்டசூரியனைப் பிண்டத்தில் ஆறாதாரங்களில் வைத்துச் சிவசூரியனாகத் தியானிக்கும் உபாயம் இதனால் உணர்த்தப் பெற்றது.

ஆதித்தன் உள்ளிலான முக்கோணம் – சூரியன் தன்னுள் விளங்குவதாக உள்ள முக்கோண சக்கரம். சூரியன் மூலாதாரத்திலுள்ள முக்கோணத்துள் வட்ட வடிவாகத் தியானிக்கத் தக்கவன் என்பதும், அவனைத் தியானத்தால் மேலே எட்டச் செய்து விசுத்தி சக்கரமாகிய கண்டத்தினடிவரை கொண்டு சென்று பதினாறிதழ்த் தாமரையில் வைத்து அங்குள்ள சோதியுடன் கலக்கச் செய்க என்பதும் ஷட்சக்கர நிருபணத்தில் காணப்படும் உண்மை. அது இதனுடன் ஒத்திருத்தல் காண்க.

சோதித்து – ஒளிசெய்து, சோதி என்னும் பெயர்ச் சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்.

நாலாம் கேதம் உறும் கேணி – மூலத்திலிருந்து நாலாவது தானமாகிய விசுத்தி, மூலம், சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி என்க. விசுத்தித்தானம் கண்டத்தின் அடி, கண்டம் கேணிபோல வட்டமாய் உயர்ந்து விளங்குதலின் அதனைக் கேணி என்றார், கழுத்து மேலாலவஸ்தை கீழாலவஸ்தைகளில் இடைநிலையாய் கனவுக்குரியதாகலின் கேதக்கேணி எனப் பட்டது. கேதம் – துன்பம். நுகர்ச்சிக்குரிய பிராரத்த கன்மத்தில் மேல்வினைகளை ஆன்மா நுகரும் இடமாதலின் அது துன்பக் கேணியாயிற்று என்க.

எட்டில் – தாவில்; வினையெச்சம். சோதிதன் ஈட்டில்– அங்குள்ள சோதிவடிவான சிவத்தின் சேர்க்கையால் என்க. சோடசந்தானே – முழுக்கலைகளும் நிரம்பப் பெற்றுப் பதினாறிதழ்த் தாமரையில் விளங்குவன் என்க. (277)

**ஆதித்த னோடே அவனி யிருண்டது**
**பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது**
**சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற**
**வேதப் பொருளை விளங்குகி லீரே. 1981**

இம் – எனின், விசுத்தித் தானத்தில் சோதியுடன் கலந்த சூரியன் நிலை உணர்த்துதல்நுதலிற்று.

இ–ள்: ஆதித்தனோடு பூமியும் இருண்டது; சூரியன் பேதித்துச் சென்ற நான்கு கிரந்திகளும் அங்குள்ள நால்வகை வாக்குகளும் பிதற்றி ஒய்ந்தன. இவ்வண்ணம், சிவச்சோதி யுடன் விளங்கும் பராசக்தி செய்கின்ற அறிதற்கு உரியதான அநுபவப் பொருளை நீவிர் விளங்கிக் கொள்ள மாட்டீர் என்றவாறு.

சூரியன் சிவச்சோதியுடன் கலந்து வாக்குகளுக்கு எட்டாத ஞானமாகச் செய்கிறாள் பராசக்தி; அதனை உலக வர்களே உங்களால் அறிய இயலாது என்பது கருத்து.

ஆதித்தன் பெருஞ்சோதிப் பெருமானுடன் கலந்த போது அவன் ஒளி அப்பேரொளியுள் ஒன்றி , இல்லையாம்; அப்போது உலகமும் போகமும் ஒழியும்; சிவச் சோதியன்றி ஒன்றும் தோன்றாது ஆதலின் ‘ஆதித்தனோடே அவனி இருண்டது’ என்றார்.

அந்நிலையில் ஆன்மா தான் நுகரும் அநுபவத்தையும், சூரியன் கீழிருந்து மேல்வரையில் பேதித்துச் சென்ற கீழனுபவங்களையும் அறியாமல் பேரொளி நுகர்ச்சியில் திளைத்திருக்கப் பராசக்தி அருளுதலின் 'சோதிக்குள் நின்று துடையிடை செய்கின்ற வேதப் பொருளை விளங்குகிலீரே' என்றார். வேதப்பொருளாவது அறியப்படும் அநுபவப் பொருளாம். (278)

**பாருக்கும் கீழே பகலோன் வரும்வழி**
**யாருக்குங் காணவொண் ணாத**
**அரும்பொருள்**
**நீருக்குந் தீக்கும் நடுவே யுதிப்பவன்**
**ஆருக்கும் எட்டாத ஆதித்தன் தானே.** 1982

இம் – எனின், ஆதித்தன் தோன்றி மறையும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சூரியன் தோன்றுகின்ற இடம் பூமிக்குக் கீழேயாம்; யாருக்கும் காணமுடியாத அரும்பொருளாய் உள்ள அவன் நீருக்கும் தீக்கும் நடுவே உதிப்பவனாவன்; அவ்வாதித்தன் யாருக்கும் எட்டாத் தன்மையன் என்றவாறு.

சூரியன் பூமிக்குக் கீழே உள்ள வழியால் நீருக்கும் தீக்கும் நடுவே தோன்றி யாருக்கும் எட்டாத அரும் பொருளாயிருப்பன் என்பது கருத்து.

பார் – மூலாதாரம் – மூலாதாரத்தின் கீழுள்ள நடுநாடியின் நுனியே அவன் மேல் எழுந்து தோன்றும் இடமாதலின் 'பாருக்குக் கீழே பகலோன் வரும் வழி' என்றார்.

உடலில் கொப்பூழ்வரை அப்புமண்டலம். அதன் மேல் மார்புவரை தேயுமண்டலம் ஆதலின் இவை இரண்டிற் கும் நடுவே காணப்படுபவனாய் அப்புமண்டலத்தின் கீழ் யாராலும் அறியப்படாத நுண்பொருளாய் விளங்குபவன் என் பார் 'யாருக்கும் காண ஒண்ணாத அரும்பொருள்' என்றார்.

நீர் என்றது சுவாதிஷ்டானத்துக்கு மேலுள்ள மணிபூர கத்தானத்தை. அது அப்புமண்டலம்.

தீ என்பது அதற்குமேலுள்ள அனாகதஸ்தானம். அது தேயுமண்டலம். இவ்விரண்டுக்கும் இடையே தோன்றுபவன் சூரியன்.

இதில் பூமிக்குக் கீழிருந்து கடல்நீருக்கு அப்பால் வெற்று இடமாய் விளங்கும் இடத்திலிருந்து அண்டாதித்தன் தோன்றுவதும், அவ்விடம் யாராலும் அறியமுடியாதிருப்பது மாகிய இயற்கையும் தோன்ற நிற்றல் காண்க. அது அண்டா தித்தனது தோற்ற முதலியன எண்ணும் உபாயம் அறிவிப்பது.

பாருக்கும் கீழே பகலோன் வரும்வழி
யாருக்கும் எட்டா அகலம் உடையவன்
நீருக்குந் தீக்கும் நடுவே உதித்தவன்
ஊருக்கும் மேற்கே ஒடுங்குகின் றானே.

எனவும் பாடம். (279)

**மண்ணை யிடந்ததின் கீழோடும் ஆதித்தன்**
**விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்**
**கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்**
**எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே.**

1983

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: பூமியைப் பிளந்துகொண்டு அதன்கீழ் ஓடும் சூரியன் விண்ணைப் பிளந்து வெளியாகிய ஆகாயத்தின்கண் விளங்கும் கண்ணைத்திறந்து களிப்பூட்டுகின்ற ஆனந்தத்தால் நம்மால் தியானிக்கும் உரிமைக்கு உடனாய் நின்றான் என்றவாறு.

சூரியன் தோன்றி மறைந்து ஒளிசெய்யும் உபகாரத்தால் தியானப் பொருளாவன் என்பது கருத்து.

சூரியன் மேற்குத் திசையில் மறைதலை மண்ணைப் பிளந்துகொண்டு அதன் கீழே செல்வதாக உருவகித்தார். அங்ஙனமே தோன்றுதல் விண்ணைப் பிளந்து கொண்டு வெளிவருதலாகச் சொல்லப்பட்டது.

கண்ணை இடத்தல் – கண்ணை விழிக்கச் செய்தல். சூரியோதயமானவுடன் அனைத்துலகமும் கண் விழித்துக் களிப்பு எய்துதலின் 'கண்ணை இடந்து களிதந்த ஆனந்தம்' என்று குறிப்பிடப்பெற்றது.

எண்ணும் கிழமை – தியானிக்கும் உரிமை. இசைந்து நிற்றலாவது உடன்பட்டு நிற்றல்.

இம்மந்திரத்தில் மண்ணை இடந்து அதன்கீழ் ஓடும் ஆதித்தன் என்ற குறிப்பால் முதல் மந்திரத்து ஈற்றடி 'ஊருக் மேற்கே ஓடுகின்றானே' என்ற பாடமே ஏற்புடைத்தாதல் காண்க. இப்பாடத்தில் ஊரென்பது புரம் என்பதன் தமிழாக்கம் ஆதலின் புரம் என்பதற்கு ஈண்டு உடலின் மேலிடமாகிய அனாகதம் எனப் பொருள் கொள்க. (280)

பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே.1984

இம் – எனின், இதுவும் ஆதித்தனுடைய எழுச்சி வீழ்ச்சி இவற்றின் தத்துவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பூமியைப் பிளந்துகொண்டு சூரியன் வருகின்ற வழியை, மிகவும் கீழப்பட்ட நூலை ஓதிய உலகியல் ஞானிகள் எவரும் அறிய மாட்டார்கள். வீரனாகிய சிவபெருமான் எழுந் தருளியிருக்கின்ற திருமலையாகிய மேருவை வலம் வருதல் என்று சொல்லுவர் என்றவாறு.

ஊரை உணர்ந்தவர், மலை என்பது ஊர்த்துவ மேரு வாகிய உடலை என்று உணர்வர் என்பதாம்.

சூரியனுடைய தோற்றமும் ஒடுக்கமும் பற்றி உலகியல் ஞானிகள் ஒன்றும் உணரார். சிவபெருமான் எழுந்தருளியுள்ள மகாமேருமலையை வலம் வருவதாகக் கூறுவர்; மேருமலை என்பது பெருமான் எழுந்தருளியிருக்கும் நம்முடைய உடலே என்பது கருத்து.

கடைநூல் – உலகநூல். அருங்கடை நூல் – மிகமிகக் கீழ்ப் பட்ட நூல்கள். தீரன் – எல்லாவற்றையும் வென்ற மன உறுதியை உடைய சிவபெருமான். மகா மேருமலைக் கண் சிவ பெருமான் எழுந்தருளி இருப்பதாகப் புராணம் கூறும். சித்தர் மரபு சிவனுறை கோயிலாகிய உடலேமேரு என்னும். இதனால் மேருவை வலம் வருகின்ற சூரியன், உடலுள் நடுநாடி பற்றி மேலெழும் அண்டாதித்தனையே உணர்த்துதல் காண்க. **(281)**

# 23. பிண்டாதித்தன்

அஃதாவது பிண்டமாகிய இந்தச் சரீரத்தில் விளங்கும் ஆதித்தன் இயல்பை உணர்த்துவதாம். அண்டத்தில் ஆதித்த நிலையை உணர்ந்தபேர்க்கு அதனைப் பிண்டத்தினும் காணும் முறைமையினை, முன்னர் அண்டாதித்தனில் ஆறுமுதலாகப் பத்து வரையுள்ள ஐந்து மந்திரங்களான் தோற்றுவாய் செய் தார். இவ்வதிகாரத்து மூன்று மந்திரங்களான் உணர்த்துவான் தொடங்கி முதற்கண் பிண்டாதித்தனைக் காணும் முறைமை உணர்த்துகின்றார்.

**நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும்**
**கன்றாய நந்திக் கருத்துள் இருந்தனன்**
**கொன்று மலங்கள் குழல்வழி யோடிட**
**வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. 1985**

இம் – எனின், பிண்டத்தில் ஆதித்தனைத் தரிசிக்கு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நிற்றல் முதலிய எத்தொழிலைச் செய்யினும் என் மனத்துள் கன்றுதலால் காட்சியளிக்கும் சிவம், என் கருத்துள் மணியுட்சோதிபோல விளங்குவான்; அதனால் மலங்களை வருத்தி, பிராணன் நடுநாடியாகிய குழலின் வழியே மேனோக்கி ஓட, எதனையும் வென்று விளங்கும் விரிசுடராகிய ஆதித்தன் விளங்கித் தோன்றுவான் என்றவாறு.

எத்தொழிலைச் செய்யினும் சிவம் உயிர்க்குயிராய்க் கலந்து விளங்கும். அதனால் மலங்கள் கெட்டுப் பிராணன் நடு நாடிவழியே மேலேசெல்ல ஒளி அனைத்தையும் வென்று விளங்கும் பிண்டாதித்தன் வெளிப்பட்டருளும் என்பது கருத்து.

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் என்பன எத் தொழிலைச் செய்திடினும் ஏதவத்தைப்பட்டிடினும் என்பதை விளக்கி நின்றது. நந்தி – சிவம். கன்றாய நந்தி – எண்ணப்படு கின்ற அஃதாவது தியானிக்கப்படுகின்ற சிவம். சுரிந்த எனலும் ஆம். இப்பொருள் உரைக்குங்கால் நந்தி கன்றாய கருத்துள் எனக்கொண்டு கூட்டிக் கருத்துக்கு அடைமொழி ஆக்குக.

மலங்கள் கொன்று எனப் பொதுவினையாற் கூறிய தால், ஆணவமலத்தை மீட்டும் அங்குரியாதவாறு வித்தினை வறுப்பதுபோலக் கெடுத்து எனவும், ஏனைய மாயாமல கன்ம மலங்களை அடியோடு அழித்து எனவும் கொள்க.

குழல் – குழல் வடிவினதாகிய நடுநாடி. இதனை நாளம் எனக் கூறுதல் மரபாதலின் அதற்கேற்பத் தமிழில் குழல் என்றார். ஓடிட என்பதற்குப் பிராணன் என எழுவாய் அதிகார இயைபான் வருவித்துரைக்க.

வென்று விளங்கும் என்பதற்குச் செயப்படு பொருள் வருவிக்க. விரி சுடர் – புருவமத்தியில் விசுத்தியில் விரிந்து காணப்பெறும் ஆதித்தன். (282)

**ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு**
**சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்**
**பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்**
**ஆதித்த னோடே யடங்குகின் றாரே.** 1986

இம் – எனின், ஆதித்தன் அடங்கும் இடம் உணர் பவரே ஞானிகள் என்பது அறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: ஆதித்தன் மேலெழுந்து சென்று அடங்குமிட மாகிய ஆக்ஞைத்தானத்தைக் கண்டு அங்கேயே அவ்வொளி

யும் உயிரும் ஒன்றியிருக்கும்படிச் சாதிக்க வல்லவர்களே, தம்மை உணர்ந்தவராவர். உலகம் வேறுபட்டுப் பிதற்றுவ தெல்லாம் வீண்; இங்ஙனம் பிதற்றுவோர் ஆதித்தனோடு அடங்கி ஒழிபவர் ஆவர் என்றவாறு.

ஆதித்தன் காலம் அளப்போனாதலின் தம்மை உணர்ந் தவர் காலம் கடந்து நித்தியராய் விளங்குவரென்பார் 'ஆதித்தன் அடங்கும் இடம் கண்டு சாதிக்க வல்லவர் தம்மை உணர்ந் தவர்' என்றார்.

பேதித்து – வேறுபடுத்தி; பேதமையோடு எனலுமாம். ஆதித்தனோடு அடங்குகின்றார் என்பது காலத்துட்பட்டு அழிகின்றார் என்பதாம். (283)

**உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து**
**சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை**
**சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்**
**குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே.1987**

இம் – எனின், ஆதித்தனது லயத்தானத்தை அறிகின் றவரே வணங்கத்தக்கவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆதவன் மூலாதாரத்திலிருந்து உருவப்பட்டு அங்கிருந்து புறப்பட்டு உலகமாகிய உடலை வலம் வந்து சொருகிக் கிடக்கும் இடமாகிய புருவ மத்தியை அறிவார் யாருமில்லையாம்; அங்ஙனம் அறியுமவர்களுக்கு எனக்குள் அன்பானது தானே சுரந்து கிடக்கும் என்றவாறு.

ஆதித்தன் மூலத்தில் தோன்றி விந்துவில் மறைவதை அறிபவர்களே உண்மை ஞானிகளாவர்; அவர்களுக்கே என்னுள் அன்பு கனியும் என்பது கருத்து.

உறையிலிருந்து வாளை உருவினான் என்றார்போல மூலாதாரத்தில் மறைந்து கிடந்த பிண்டாதித்தனைப் பிராணா யாமத்தால் வெளிப்படுத்தி என்க.

உலகு' என்றது சங்கேதமாய்ப் பிண்டமாகிய உடலை உணர்த்திற்று. சொருகிக் கிடக்கும் துறை வெளிப்பட்ட ஆதவன் மறைந்துகிடக்கின்ற இடம். உலகத்தில் மதி தோன்றிய வுடன் ஆதித்தன் மறைதல் போல, மதிமண்டலத்தின் அடியில் அனாகதஸ்தானத்தில் தோன்றிய ஒளி மறையும் ஆதலின் அதனைத் 'துறை' என்றார். அதனை அறிபவர்களே தவஞானச் செல்வர்கள் ஆதலின் அவர்கள்பால் தம் அன்பு உருகிக் கிடக்கும் என்றார். (284)

## 24. மனவாதித்தன்

மனமும் ஒன்றி ஆதித்தனாகும் நிலையில் உணர்த்து தலின் இப்பெயர் பெற்றது. மனமும் ஒருகோசமாய் அதாவது மனோமயகோசமாய் உயிர் உறைதற்கு உரிய இடமாதலின் அதன்கண் ஆதித்தன் வெளிப்படு முறையும் அதனோடு உயிர் ஒன்றி ஒளிமயமாகும் முறையும் உணர்த்தும் ஐந்து மந்திரங் களையுடையது இப்பகுதி.

**எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்**
**எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப**
**விரிகதி ருள்ளே வியங்குமென் ஆவி**
**ஒருகதி ராகில் உவாவது வாமே. 1988**

இம் – எனின், மனோமய கோசத்தில் உவா என்பது யாது எனல் நுதலிற்று.

இ–ள்: எறிக்கின்ற கதிரையுடை சூரியனும், ஒளியோடு பனியையும், பொழியும் ஒளிவிடுகின்ற கிரணங்களையு முடைய சந்திரனும் ஒன்றற்கு எதிராக நின்று எறிப்ப, அந்த விரிந்த கதிருக்குள் இயங்கிக் கொண்டிருக்கிற என் உயிரும் கூடி ஒருகதிரானால் அதுவே உவா ஆம் என்றவாறு.

சூரியனும் சந்திரனும் எதிர் எதிராக ஒரே பாதையில் எறிக்க, நடுவே என் உயிரும் கூடி அனைத்தும் ஒரு கதிராகில் உவா நாளாம் என்பது கருத்து.

சூரியன் – பிங்கலை நாடி. சந்திரன் – இடகலைநாடி. இரண்டும் மாறி மாறி இயங்காமல் ரேசக பூரங்களைச் செய்து விளங்க அவற்றோடு உயிராகிய ஆன்மாவுங் கூடுவதே அமாவாசையாகிய உவாவாம் என்பது கருத்து.

உவா, அமாவாசை பூர்ணிமை இரண்டுக்கும் பொதுப் பெயராயினும், ஈண்டு சூரிய சந்திரர்கள் இருவரும் ஒரே பாதையில் விளங்குகின்றார்கள் என்றதால் அமாவாசை எனப் பொருள் காணப்பெற்றது.

எதிர்நின்று எறிப்ப என்பதற்கு உடலுள் மேலும் கீழுமாக ஆக்கினைத்தானத்தும் அனாகதத்தானத்தும் நின்று எறிப்ப என்க. இடைகலை பிங்கலை வழியாகப் பிராணன் ஒருங்குதொழிற்பட என்றவாறாம்.

இரண்டும் ஒளிப் பொருளாதலின் விந்துவாகிய புருவமத்தியில் இயங்கிக் கொண்டிருக்கின்ற உயிரும் பிரிப் பின்றியே ஒளியாகியே ஒன்றுமானால் அதுவே உவாவாம் எனப்பட்டது. இந்நிலை மனோமயகோசத்தில் நிகழ்வதா தலின் இவ்வதிகாரத்து ஆயிற்று. (285)

சந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. 1989

இம் – எனின், கலைகள் மடைமாறாது நடுநாடியில் நின்றால் சிவப்பேறு சித்திக்கும் எனல் நுதலிற்று.

இ–ள்: சூரியகலையில் சந்திரகலை வந்து பொருந்து கின்ற முறையும் சந்திரகலையில் சூரியகலை வந்து பொருந் தினால் அது பூசனைக்குரிய பொழுதாம்; இரு கலைகளும் ஒத்து இயக்கமின்றிச் சுழிமுனையில் நிற்க, சிந்தை தெளியும்; அங்ஙனம் தெளிந்தவர்களே சிவமானவர்கள் என்றவாறு.

இடைநாடியால் பூரித்துப் பிங்கலை நாடியால் இரே சிக்கும் பொழுதே, சிவபூசை சிவயோக முதலியவற்றிற்கு உரிய நற்பொழுதாம். அங்ஙனமின்றி மாறி இயங்கின் அது சிவ யோகத்திற்கு உட்பட்டனதான உலகியல் போக நிலையாம். ஆதலால் பழைய நிலையை விட்டுச் சிவயோக நிலையில் தங்கி, அதனையும் விட்டுப் பிராணனைச் சுழுமுனையில் கும்பகம் செய்பவர் சிந்தை தெளிந்து சிவமாவர் என்பது கருத்து.

முன்னர் வாரசரத்துள் பிராணன் மாறிமாறி வருதலை உணர்த்திய திருமூலதேவர், இதில் பூசனைக்கு உரிய பொழுது இது என வரையறுத்து, பூசனை முற்றிய சிவயோக நிலைக்குச் சுழிமுனையில் கும்பகம் செய்தலே உரிய முறையென உணர்த்தியவாறு காண்க. உபய நிலம் – இரண்டும் கூடிய புருவ மத்தியாகிய சுழிமுனை. (286)

ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகுமப் பூரணை யாமென் றறியுமே. 1990

இம் – எனின், பூரணை இதுவெனல் நுதலிற்று.

இ–ள்: உயிருக்குச் சிவானுபவத்தை விளைவிக்கும் சுழிமுனை இடகலை பிங்கலை குண்டலியாகிய மூலத் தீ இவை நான்கும் கலை என்னும் பெயரவாம்; சூரிய கலையும் மூலத் தீயும் சந்திரகலையோடு ஒன்ற விளைவது பூரணையாம் என்று அறியுங்கள் என்றவாறு.

மதிமண்டலத்து சூரியகலை, சந்திரகலை இவற்றில் இயங்கும் பிராணனும் குண்டலியும் ஒன்று சேர்வதே நிறைமதி நாளாம் என்பது கருத்து. (287)

**ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி**
**ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது**
**பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற**
**தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே.** 1991

இம் – எனின், பிண்டத்துள் சிவாதித்தன் விளங்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ.ள்: அனல் அண்டமும் ஆதித்தனண்டமும் ஆகிய இந்த இரண்டிற்கும் அப்பால், இயங்குகின்ற அப்பேரொளி மாயா காரியமான அண்டங்களிலுள்ள ஒருவராலும் உணர மாட்டாத உணர்வு வடிவானது; இப்பிரமாண்டத்துள் விளங்குகின்ற ஒளிவடிவாகிய இறைவனை அறிவார் யார்? அணுகுவார் யார்? ஒருவரும் இலர் என்றவாறு.

அறிவு வடிவாய் விளங்கும் சிவப்பேரொளியைப் புற அண்டங்களில் வாழ்வாராகிய பிறர் அறியமாட்டார் என்பது கருத்து.

பிண்டத்துள் சூரியமண்டலமும் தேயுமண்டலமுமாகிய இரண்டிற்கு மேல் வாயுமண்டலமாகிய இதயத்தில் அங்குஷ்டப் பிரமாணமாக விளங்குவது சிவஒளி; அதனை ஆசாரியர் மூலமாக உபதேசம் பெற்ற அனுபவ ஞானிகளே அல்லாமல் மாயா காரியமான அண்டங்களில் வாழும் மக்கள் உணரமாட்டார்கள் என்பதாம்.

பேரண்டம் – பிரம்ம அண்டம். பிண்டத்துள் மனஆதித்தனாய் விளங்கும் பரம்பொருளே பிரம அண்டத்திலும் ஒளியாய்க் கலந்து விளங்குகின்றது என்பதனை உணர்பவர்களும் அதனை அணுகுபவர்களும் யாரும் இலர் என்பது பின் இரண்டு அடிகளால் விளக்கப்பெறுகின்றது. (288)

**ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்**
**ஒன்பது மீசன் இயலறி வாரில்லை**
**முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்**
**இன்ப மிலாரிருள் சூழநின் றாரே.** 1992

இம் – எனின், நவக்கிரகங்கள் ஆற்றல் சிவன் அருளால் வந்தது என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சூரியன் முதலான ஒன்பது கோள்களையும் விரும்பி இவ்வுலகம் சுழல்கின்றது; இவ்வொன்பதும் இறைவனுடைய அருளியல்பால் இயங்குவனவே; அதனை அறிவார் யாரும் இலர்; முன்பு அவ்வொன்பது கோள்களையும் விரும்பி இறைவன் அருளைப் பெறாதவர் ஆவர்; அதனால் இன்பமும் இலராவர்; அறியாமையில் அழுந்தி நிற்பர் என்றவாறு.

இவ்வுலகம் ஒன்பது கோள்களால் நடப்பதாக உணர்ந்து இறைவன் இயல்பை மறந்தவர்கள் இன்பத்தையும் இழந்தவர்கள் என்பது கருத்து.

நவக்கிரக சாந்திகள் செய்து தமக்கு நல்லூழை விளைவித்துக் கொள்வதாக எண்ணுபவன் சைவன் ஆகான். கோள்கள் இறைவன் அருளால் ஆணைவழி இயங்குவன; அதனை உணராது கோள்களை நம்புவது துணிப்படகைக் கொண்டு நெருப்பாற்றைக் கடக்க முயல்வது போலும் அறிவீனமாம்; இதனால் மன ஆதித்தனாய் மன்னுபவன் மகேசனே; அவன் கோள்களில் ஒருவனாகிய ஆதித்தனல்லன் என்பது அறிவுறுத்தப்பெற்றது. (289)

# 25. ஞானாதித்தன்

அஃதாவது மனத்தில் ஒளியாய் விளங்கிய ஆதித்தன் சிவஞானிகளின் அனுபவத்தில் புருவ மத்தியில் சுடர்விடும் சோதியாக விளங்குவதை உணர்த்துவது ஞான ஆதித்தனாம். மனத்துள் ஆதித்தனைக் காண்பவன் அனுபவ ஞானியே. ஞானாதித்தனை அறியமுடியாது ஆதலின் மன ஆதித்தனுக்குப் பின்னர் ஞானாதித்தன் வைக்கப் பெற்றது.

**விந்து அபரம் பரமிரண் டாய்விரித்**
**தந்த அபரம் பரநாத மாகியே**
**வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்**
**துந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே.**
**1993**

இம் – எனின், ஞானமயமான அருணோதயமாதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விந்துவாகிய சுத்தமாயை பரம் அபரம் என இரண்டாய் விரிந்து, அந்த அபரத்திலிருந்து பரநாதம் தோன்றி, அதனின்று நிவிர்த்தியாதி பஞ்சகலைகளும் தோன்றின; அவையே ஞானாதித்தனின் உதயமாம் என்றவாறு.

அபரவிந்துவிலிருந்து பரநாதமும், அவையிரண்டினு மிருந்து பஞ்சகலைகளும் தோன்றுதலே அருணோதயம் என்று அறிக என்பது கருத்து.

ஞானசத்தியிற் சிவமும் கிரியாசத்தியில் சத்தியும் இச்சையில் அபரவிந்துவும் அதிலிருந்து பரநாதமும் அவை இரண்டிலுமிருந்து நிவிர்த்தியாதி பஞ்சகலைகளின் வடிவா யுள்ள அகாராதி பஞ்சவர்ணப் பிரணவ உதயமான வைகரி யாதி வாக்குகளும் தோன்றி மல மறைப்பையகற்றி அறிவு விளக்கத்தைச் சிறிது அளித்தலின் அதுஅருணோதயம் எனப் பட்டது. இதனை முன் 1923-ஆம் திருமந்திர உரைப்பகுதி யில் காட்டப்பெற்ற ஞானசித்தி வசனத்தானும் அறியலாம்.

விந்து ஒளிவடிவினதாதலின் அதில் அறிவுமயமாய் நிற்கும் நிலையும் அறிவு காரியப்படும் நிலையாகிய கீழ் நிலையும் என இரண்டு உண்டு. ஆதலின் அதனைப் பரவிந்து அபரவிந்து எனப் பிரித்தார். அபரவிந்துவிலிருந்து பரநாதம் அபரநாதம் தோன்றும். அபரவிந்து பரநாதம் இரண்டிலிருந்து நிவிர்த்தி முதலான பஞ்சகலைகள் தோன்றும்; அவையே ஞான அருணோதயம் ஆம் என்க. (290)

**உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்**
**தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்**
**வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்**
**குள்ளன ஐங்கலைக் கொன்றாம் உதயமே. 1994**

இம் – எனின், அருணோதயத்தின் விளைவு உணர்த் துதல் நுதலிற்று.

இ–ள்: உள்ளத்தில் எழுகின்ற அருணோதயத்தி லிருந்து உண்டாகும் ஓசைதான் தெளிந்த பரநாதத்தின் செயல்; இதனின்று வள்ளலாகிய சிவனருளால் பரவிந்துவோடு கூடிப் பஞ்சகலைகளிலிருந்தும் ஐந்து வாக்குகள் உண்டாம் என்ற வாறு.

அபரவிந்து பரநாதம் அவற்றின் காரியமாகிய பஞ்ச கலைகளிலிருந்து வைகரியாதி வாக்குகள் விரியும் என்பது கருத்து.

बिन्दुमध्ये तथा नादं बिन्दुनादद्वयोदितम् ।
बिन्दुनादस्तथा मध्ये निवृत्यादिकलोदयम् ॥
निवृत्यादिकलामध्ये वैखर्यादिसमुद्भवम् ।
बैन्दवस्थानमध्यस्थे इच्छाज्ञानक्रियोद्भवम् ॥
विज्ञानादित्रयोत्पन्नमीशानादित्रयोद्भवम् ।
कारकत्रयसम्भिन्नं तत्वत्रयसमुद्भवम् ॥
कारकत्रयसम्बन्धादधः सर्वसमुद्भवम् ।
बिन्दुभेदमिति प्रोक्तं नद्भेदं पञ्चविंशतिः ॥
चतुर्विंशत्तथाभेदं नादरूपं कलामयम् ।
सूक्ष्मवाग्भवमित्यर्थं वाग्रूपं शक्तिषष्ठकम् ।
अकारोकारमकाराश्च बिन्दुनादं तदन्तकम् ॥
षट्कलाशक्तिमध्यस्थे वैखर्यादिसमुद्भवम् ।
व्योमा वागीश्वरी शक्तिः पञ्चवाहक्रमादिकम् ॥
उत्तरानुत्तरव्याप्तं पूर्वपश्चिम ऊर्ध्वकम् ।
दिशः पञ्च तत्ता शक्तिरुद्भवं व्योमशक्तितः ॥

என்ற ஞானசித்திப் பிரமாணத்தால் பஞ்சகலைகளிலிருந்து வைகரியாதி வாக்குகள் தோன்றியமை உணர்க. இன்னும் அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் அபரவிந்து பரநாதங்களி லிருந்து தோன்றிய கலைகளிலிருந்து வைகரியாதி வாக்குகள் தோன்றின எனக் கூறியிருத்தல் காண்க. (291)

**தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்**
**மூவர் பிரானென முன்னொரு காலத்து**
**நால்வர் பிரானடு வாயுரை யாநிற்கும்**
**மேவு பிரான்என்பர் விண்ணவர் தாமே.1995**

இம் – எனின், மூவர்பெருமான் சிவம் எனல் நுதலிற்று.

இ–ள்: தேவதேவனாகிய சிவபெருமான் பத்துத் திசை களிலும் உதிக்கும் மூவர்கட்கும் பிரான் என்றும், முன்னொரு காலத்து நால்வர்கட்கும் பிரான் என்று விண்ணவர் கூறுவர் என்றவாறு.

எங்கும் தோன்றும் பரசிவம் மூவர்க்கும் நால்வர்க்கும் பிரான் என விண்ணவர் போற்றுவர் என்பது கருத்து.

தேவர்பிரான் – தாம் தலைவர். தாம் தலைவர் என அதிகார மலத்துள் கட்டுண்டு பதவிகளில் இருப்பவர்கட்குத் தலைவன் என்றது அவரவர்களை அந்தந்தப் பதவியிலிருக்கும் வண்ணம் பணித்தவன் என்பதாம்.

திசைபத்து – நேர்த்திசை நான்கும் கோணத்திசை நான்கும் விண்ணும் மண்ணுமாகிய பத்தும் என்க. அவற்றில் எங்கும் உதயஞ்செய்தலாவது அங்கங்கே தோன்றித் தான் எங்குமாயிருக்கும் பரிபூரணத்தன்மையை வெளிப்படுத்தல்.

மூவர் – அயனும் மாலும் அரனுமான முத்தொழில் செய்வார். அவர்கட்குத் தலைவராதல் காரணத்தலைவர்களாக. பிரமாதிகளாக விளங்குதல். நால்வர் – காரணேஸ்வரர்களான பிரமனாதிகளும் ஈஸ்வரனும் ஆன நால்வர். அவர்கட்கும் தலைவர் பரசிவம்.

நடுவாய் உரையா நிற்கும் மேவு பிரான் – நால்வர் உள்ளத்தும் உயிர்க்கு உயிராக நின்று அவர்களைப் பணி கொண்டு அவர்களால் விரும்பி அன்பு செய்யப்பெறும் பரசிவம்.

இதனால் ஞானாதித்தனாகிய பரசிவமே எல்லார்க்கும் தலைவனாய் எங்கும் தோன்றுவது எனல் அறிவிக்கப்பெற்றது. (292)

**பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை**
**மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு**
**செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்**
**கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே.** 1996

இம் – எனின், ஞானாதித்தன் பேரொளிப்பிழம்பாய் உயிருட் கலந்திருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பொய்ம்மையொடு இயல்பாகவே பொருந்தாத உண்மைப் பொருளாவானும், புவனங்கனைத்திற்கும் தலைவனும், எந்தையும், கரிய இருளை அகத்தும் புறத்தும் போக்கும் மதியும் தீயும் ஞாயிறும் ஆகிய செய்யப்பட்ட இருளாகிய மாயாமலத்தையும் போக்கும் ஞானச் செல்வனாகிய சிவன் அடியேனுடைய சிறிய இருளையும் போக்க என்னுயிர்க்கு உயிராக கலந்திருந்தான் என்றவாறு.

பரசிவம் ஞானாதித்தனாக என்னுள் கலந்திருந்தான் என்பது கருத்து.

மெய்யன் எனவே பொய்யிலன் என்பது போதரு மாயினும் பொய்யிலன் மெய்யன் என்றது. அநாதியே பாசங்களின் நீங்கியவன் என்பதையும் நித்தியன் என்பதையும் குறிப்பிடுவனவாம்.

புவனாபதி – புவனங்கட்குத் தலைவன் என எல்லாம் உடைமை குறித்தது. எந்தை – உயிர்களைத் தந்தை போலக் காப்பவன். மை இருள் – கரிய புறவிருளும் அறியாமையாகிற கருமையையுடைய ஆணவ இருளும், செய் இருள் – மையிருள் போக்க இறைவன் கூட்டிய மாயா மலமாகிய இருள். கை இருள் – அற்பமாகிய இருள்; வாசனாமலம். அதனையும் போக்க என்னுள் கலந்திருந்தான் என்பதாம். **(293)**

**தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க**
**அனித்திடு மேலை யருங்கனி யூறல்**
**கனிச்சுட ராய்நின்ற கயிலையில் ஈசன்**
**நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே.**
**1997**

இம் – எனின், ஞானாதித்தன் அநுபவமும் கயிலைக் காட்சியும் ஒன்றெனல் நுதலிற்று.

இ–ள்: ஒப்பற்ற சுடராகிய பரசிவம் தான் எற்றுதலால், விளங்குகின்ற ஆணவ இருள் நீங்க, பெறுதற்கு அரிய கனியி னின்று ஊறுவதாகிய தேன் போலும் இனிய அமுதம் சுரக்கச் செய்யும். இந்த நிலை கனிந்த சுடர் போன்ற கயிலையில் மிக்க அச்சுடர்மேல் ஈசன் நின்ற அழகினை உடையதாம் என்றவாறு.

ஆணவ இருள் நீங்க – மதியமுதம் ஊற – உச்சியில் ஆஞ்ஞையில் ஞானாதித்தன் விளங்கும் நிலை ஒளிவிடுகின்ற கயிலையில் அச்சுடர்மேல் ஈசன் நின்ற அழகினை உடையது என்பது கருத்து.

சுடர்கள் யாவும் தோன்றிநின்று மறையுந்தன்மையன வாய், பரசிவத்தின் ஆணைவழி நின்று ஒளி செய்வன ஆகலின் அவற்றிற்கு ஒளிதந்து ஆட்டுவிக்கும் சிவச்சுடர் 'தனிச்சுடர்' எனப்பட்டது.

எற்றி தயங்கிருள் நீங்க; எற்றுதல் – கல் எற்றுதல் போலத் தோயாமல் உதைத்துத் தள்ளுதல். மலம் ஆன்மாவின் அறிவை மறைக்கும் தீய சக்தி ஆதலின் அதனொடு படாமல் அதனைத் தன் திருவடியால் எற்றினார் என்பார் இங்ஙனம் கூறினார்.

ஒளிப்பொருளன்மையால் தானே ஒளிபோல்வதால் வியங்குகின்ற ஆணவம். ஆலையில்லா ஊருக்கு இலப்பைப்பூ சர்க்கரையாதல் போலவும், கம்பனில்லாத ஊரிலே வம்பன் கம்பனானது போலவும் ஆணவம் ஞானமில்லாத ஆன்மாக்கள் பால் தன் விளக்கம் முழுதுங்காட்டி விளங்குமாதலின் 'தயங்கு இருள்' எனப்பட்டதன்றிப் ''பொன் தயங்கு மேனி'' ''கொன்றை தயங்கு பொன்சடை'' என்றாற் போலத் தானே ஒளிசெய்து விளங்குதலைக் குறித்ததன்று.

நீங்க என்றது ஒளி மறையின் மீண்டும் வெளிப்படும் என்ற நயம் தோன்ற நின்றது. சூரியன் உதிக்க இருள் அகன்றது என்றதுபோலச் சிவஞானம் விளைய ஆணவஇருள் அகலும்; சிவச்சார்பு சிறிது நீங்க ஆன்மா தனுகரணாதிகளாகிற மாயா சம்பந்தத்தால் மலச்சார்பு பெற்ற வழி மீண்டும் தலைகாட்டும் என்பதாம்.

அனித்திடும் என்பது அண்ணித்திடும் என்பதன் எதுகைநோக்கிய திரிபு. இனிக்கும் என்பது பொருளாம். மேலையூறல் – மதிமண்டலத்தமுதம். கனியூறல் – கனி போலும் ஊறல்; கனிந்த ஊறுல் என வினைத்தொகை யாக்கலுமாம்.

கனிச்சுடர் – கனிந்த அருளொளி. அருளொளியாய் நின்ற கயிலை என்க. ஈசன் – எல்லாம் உடைமையாகப் பெற்றவனாகிய பரமேஸ்வரன்.

நனிச்சுடர் மேல்கொண்ட – மிக்க பேரொளியின் மேல் வீற்றிருக்கின்ற. வண்ணம் – அழகு. கனிச்சுடர் என வினைத் தொகைக்கண்ணும். நனிச்சுடர் என உரிச்சொற்றொடர்க் கண்ணும் வல்லின மிகாதாயினும் இங்கு மிகுந்து வந்தது எதுகைநயம் பற்றியென்க. (294)

**நேரறி வாக நிரம்பிய பேரொளி**
**போரறி யாது புவனங்கள் போய்வருந்**
**தேரறி யாத திசையொளி யாயிடும்**
**ஆரறி வாரிது நாயக மாமே. 1998**

இம் – எனின், ஞானாதித்தன் பெருமைகளைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அனுபவ ஞான வடிவாக ஆன்மாவினிடம் நிரம்பியுள்ள பேரொளியாகிய சிவம் ஆரவாரமின்றி எல்லாப் புவனங்களிலும் வியாபித்து நிற்கும்; ஆராய்ச்சி ஞானமாகிய ஆன்ம அறிவால் தேர்ந்து அறியமுடியாத எல்லாத் திசைகளிலும் நிரம்பியுள்ள ஒளியாகும்; இதனை அறிவார் யார்? இதுவே அனைத்திற்கும் தலையானதாம் என்றவாறு.

ஞானதித்தனே எல்லாமாய் – எங்குமாய் – எல்லா வற்றிற்கும் தலையானதாய் விளங்கும் என்பது கருத்து.

நேர் அறிவு – பிரத்தியட்சஞானம். அது கண்டறியும் அறிவாகிய அநுபவஞானம். ஒளியின் இயற்கை நீக்கமற நிறைந்திருத்தல். அறிவினியல்பும் நிறைந்து நிற்றல். ஆகவே அறிவாக நிரம்பிய பேரொளி எனப்பட்டது.

போர் – ஆரவாரம். போர் என்னும் காரணத்தின் பெயர் அதனால் விளையும் ஆரவாரமாகிய பேரொலியைக் காட்டியது ஆகுபெயராக. போய்வரும் என்றது பள்ளிக்குப் போய்வந்தான் என்பதுபோல ஒரு காலத்து இல்லையாகிச் சென்று மீண்டும்இல்லையாக வரும் என்பது பொருளன்று. வியாபித்து நிற்கும் என்னும் பொருளது. புவனங்கள் – சுத்தம் அசுத்தம் மிசிரம் பிரகிருதியாகிய மாயாகாரியமான எல்லா உலகங்களிலும் என்க.

தேர் – முதலினிலைத் தொழிற் பெயராக ஆராய்தலால் எனப் பொருள் பட்டது. திசை ஒளி – எங்கும் நிறைந்த ஒளி. இதனாலும் புவனங்கள் போய்வரும் என்பதனானும் இட வியாபகம் உணர்த்தப்பெற்றது.

இது – இவ்வொளியாகிய பரசிவம். நாயகமாவது தலைமை. இவ்வண்ணம் எங்கும் பரந்த பேரொளியே தலைமையானதாம்; முழுமுதற்றன்மையதாம் என்று அறிவித்தவாறு. (295)

**மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்**
**கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்**
**சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்**
**நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே.** 1999

இம் – எனின், பிண்டாதித்தன் முதலிய மூன்றின் இயல்பையும் தொகுத்துச்சுட்டல் நுதலிற்று.

இ–ள்: பிண்ட ஆதித்தனாய்ச் சூரியமண்டலம் தேயு மண்டலம் இவற்றுள் விளங்கித் தோன்றும் மன ஆதித்தன், அகமுகமாக மனத்துள் தியானிக்க, கதிர் விடுகின்ற ஞான ஆதித்தனாம்; அப்பொழுது நிலையாக நின்ற இடத்திலிருந்தே அநுபவ அறிவான் அறியவல்ல ஞானியர்க்கு இருந்த நிலையிலிருந்தே எங்கும் சென்று உணர்ந்துவரும் ஆற்றல் உடையதாம் என்றவாறு.

பிண்ட ஆதித்தனாய் மண்டலங்களில் விளங்கித் தோன்றும் மன ஆதித்தன் பொறிகளின் வழிச் சென்று வெளியிற்படாது அகமுகமாக்கப்படின் ஞானதித்ததனாம்; அதனை நின்ற நிலையிலிருந்தே உணரவல்லார்களுக்கு எட்டுத் திசையிலும் உள்ளவற்றை அறியும் சர்வஞ்ஞத்துவ சக்தியுண்டாம் என்பது கருத்து.

மண் தலத்துள்ளே மலர்ந்தெழும்ஆதித்தன் எனப் பிரித்து பிரகிருதி மாயா புவனங்களில் ஒன்றாக பிருதிவியண்டத்துள் தோன்றுகின்ற அண்டாதித்தன் எனப் பொருள் கோடலும் ஒன்று. அண்டாதித்தனைக் கண்டு கண்டு அதனைப் பாவனையால் பிண்டத்துள் ஒளி மண்டலத்தினுள் வைத்துப் போற்றிக் கண்டு மனத்தை ஆதித்தனாக அநுபவித்த வழி மனமாகிய பற்றுக்கோடும் நீங்க, அறிவே ஆதித்தனாய் அனுபவிக்கப்படுதலை அறிவித்தவாறு. (296)

**நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்**
**தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்**
**தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்**
**மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. 2000**

இம் – எனின், ஞானச்சுடர் விளங்குமிடங்களையும், அவற்றில் அதனை உணர்வார் யார் யார் என்பதனையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கொப்பூழ், கண், மூக்கு, கண்களின் நடுவாகிய புருவமத்தி, உச்சித்துளை இவ்வைந்திலும் ஒளிவிடுகின்ற சோதியைத் தேவர்களாகிய ஈசனும் திருமாலும் பிரமனும் ஆகிய மூவர்களும் சேர்ந்து உணர்ந்திருந்தனர் என்றவாறு.

கொப்பூழ் முதலிய ஐந்திடங்களிலும் விளங்குவது ஞான ஆதித்தன்; அவற்றை உணர்வார் மூவருமாவர் என்பது கருத்து.

தூபி – சிரம். ஈசன் – உருத்திரன். மூவரும் மாயா புவனவாசிகளாகிய அதிகார மலத்துள்ளவர்களல்லர்; அவர் களையும் ஆட்டிப்படைக்கும் காரணேஸ்வரர்களாமென்க. ஞானாதித்தனை அறியும்பேறு மாயேயமான புவனவாசிகட்கு இல்லையாதலால் என்க. (297)

# 26. சிவாதித்தன்

சிவசூரியன் என்பதுபோலச் சிவமே ஒளிதரும் பொருளாய் ஆன்மாவில் கலந்து காட்டும் தன்மையை உணர்த்துவது. ஞானத்தால் அறிவொளியைக் கண்ட ஆன்மாவினது அநுபவம் அடுத்து அறியப்படு பொருளாய சிவத்தை அறிபவனாகிய தன்னுட்கண்டு அது அஞ்ஞான இருளை அகற்ற ஒளிப்பிழம்பாய் இன்பமாய் மேவுமாதலின் ஞான ஆதித்தனை அடுத்து இவ்வதிகாரம் இடம் பெற்றது.

அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ணோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே.

2001

இம் – எனின், சிவப்பிரகாசத்தால் மலம் நீங்குதலை உவமவாயிலான் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பொருந்திய தண்கதிரும் வெங்கதிரும் ஆகிய இருசுடர் எழுச்சிக்கண் விளையும் அருணோதயத்தால் இவ்வுலகில் நெருங்கிய இருள் நீங்குதல்போல, மாறுபட்ட பாசமாகிய இருளும் அதன் காரியமாகிய அஞ்ஞானமும் அறிவுருவாகிய சிவப்பிரகாசத்தால் சென்றிடும்; மீண்டும் பாராதபடித் தொலைந்தது ஆம் என்றவாறு.

ஒளியுதயத்தால் இருள் அகன்றதுபோலச் சிவப்பிர காசத்தால் ஆணவ கன்ம மாயா மலங்களும் அவற்றின் விளை வாகிய அறியாமையும் அகன்று தொலைந்தே போயிற்று என்பது கருத்து.

அன்றிய பாசம் – மாறுபட்ட பாசம். ''அன்றினார் புரம் எரித்தார்க்கு'' என்பதுபோலக் கொள்க. பாச இருள்: பண்புத் தொகை.

ஞானச் சிவப்பிரகாசத்தால் – ஞானமயமான சிவாதித் தனால் என்க.

இருசுடர் – சூரிய சந்திரர். இருசுடர் எழுச்சிக்கு முன்னும் அருணோதயம் உளதாதல் தெளிக. ஆயினும்

சூரியன் தோன்றுவதற்கு முன் அருணோதயம் கூறுதலே வழக்காயிற்று. அருணோதயம் ஆக இருள் மறைந்தாற் போலச் சிவ சூரியன் எழ மலமும் அறியாமையும் அகன்றன; தொலைந்தன என்பதாம்.

தொலைந்ததே என்று மீளவும் கூறியது வாசனையாகக் கூட மீண்டும் வந்து ஆன்மாவை வாதியா என்பது புலப்படுத்த என்க. (298)

**கடந்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்**
**அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்**
**விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்**
**தடங்கிட நின்றது அப்பரி சாமே. 2002**

இம் – எனின், சிவன் ஒருவனே; அவன் அகண்டாகாரமாய் நித்தமாய வியாபியானவன் என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நீருள்ள குடங்கள் தோறும் சூரியன் தோன்றினாலும், அவன் அக்குடத்துள்ளேயே அடங்கிக் கிடக்க ஒருவன் மூடினால் சூரியன் அவற்றில் அடங்கான்; அத்தன்மை போல, திருநீல கண்ட சிவமும் தாம் விரும்பி எழுந்தருளிய உடலின்கண்ணதாகிய உயிரில் அடங்க நின்றதும் ஆம் என்றவாறு.

குடநீரில் காணப்படும் சூரியன் குடத்துள் அடங்காதது போல. காயத்துள் அடங்கிய காளகண்டன் காயத்துள் அகப்படான் என்பது கருத்து.

கடம் காயமும், நீர் உயிரும், சூரியன் சிவமுமாகக் கொள்க.

காயத்து அடங்கிட நின்றதும் என்று கூறினாரேனும் இறைவன் சித்தாகிய உயிரினிடமாகக் கலந்து காணப்படு வானே அன்றி மாயேயமாகிய உடலிற் பொருந்தான் ஆதலின் இடவாகுபெயராகக் காயத்தின் கண்ணதாகிய உயிரில் அடங்கான் என்க.

இதனால் இறைவன் ஒருவனே; உயிர்கள் பல; அவற் றினிடமாகக் கலந்து விளங்கும் சிவம் அவற்றினளவிலடங் காது கடந்தும் காப்பது என்பதுணர்த்தப் பெற்றது. (299)

**தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்**
**தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்**
**தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்**
**தானே வெளியொளி தானிருட் டாமே. 2003**

இம் – எனின், சிவாதித்தன் எல்லாமாயிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவமாகிய தானே விளங்குகின்ற சுடர் மூன்றும் இயைந்த ஓரொளியாய் விளங்கும்; தானே அயன் மால் என நின்று முதல்வனாதலை நிரூபிக்கும்; தானே சடமாகிய உடல் சித்தாகிய உயிர் என வேறுபாடின்றி இரண்டிலுங் கலந்து நிற்பன்; தானே ஆகாயமாயும் அதன்கண் ஒளியாயும் இருப்பன்; தான் இருளாயும் இருப்பன் என்றவாறு.

பரசிவம் ஒளியாயும் வெளியாயும் இருளாயும் உடலு யிர் போல வேறின்றிக் கலந்து விளங்குவன் என்பது கருத்து.

விரிசுடர் மூன்று – சூரியன் சந்திரன் அக்கினி என்பன. இவை ஒன்றன்தன்மை மற்றொன்றிற்கு இன்றித் தனித்தனியே

விளங்குவன. இறைவன் மூன்றின் தன்மையுங்கூடிய ஒரு பொருளாவன் என்பார் 'தானே விரிசுடர் மூன்றும் ஒன்றாய் நிற்கும்' என்றார். ஈண்டும் முக்கதிர் என்றது பிராகிருதமான சுடர்களையன்று; அவற்றின் காரணமான சுடர்களை என்க. அம்மூன்று கதிரும் தம்மிடம் ஏகதேசமாய்க் காணப்படத் தான் அவற்றிற்கும் ஒளிதந்து விளக்கமான ஒரு சோதியாய் இருப்பன் என்பார் 'ஒன்றாய் நிற்கும்' என்றார்.

உருத்திரன் சிவாம்சம் பெற்றுச் சாரூபமும் உற்றவனாதலின் 'அயன் மால் என நின்று தாபிக்கும்' என இருவரை மட்டும் எண்ணினார். தாபிக்கும் என்ற வினைக் கேற்ப முழுமுதல் என்பதை எனச் செயப்படு பொருள் வருவிக்க.

இது சித்து இது சடம் என்ற வேறுபாடின்றி, உடலும் உயிரும் வேறு பிரித்து அறியவொண்ணாதது போல அபேதமாய் நின்றனன் என்க.

தானே வெளி ஒளியாய் நிற்பன் என வினை வருவித்து முடிக்க. வெளி, ஒளிநிறைதற்கு இடமாகி நிற்கும் ஆதாரம். ஒளி, அதன்கண் நிறைந்துள்ள ஆதேயம். இரண்டும் அவனே என்பதாம்.

இருட்டாமே என்றது பேரொளியான இடத்துக் காணும் கண்கள் காரியப்படாமையின் கூறியதாம். அங்ஙனமன்றிப் பிணிக்கு மருந்து எனின் நீங்குதற்கு எனல்போல இருட்டிற்கும் அவனே அடைக்கலத்தானமாவான் எனலும் ஒன்று. ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஆகலானும் ''அருக்கன் நேர் நிற்பினும் அவ்விருளே காணார்க்கு இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்'' ஆதலானும் பாசத்தார்க்கு இருள் ஆவான் எனலுமாம். (300)

தெய்வச் சுடரங்கி ஞாயிறும் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே. 2004

இம் – எனின், சிவாதித்தன் அட்டமூர்த்தி வடிவமா னவன் என்பதை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தெய்வத்தன்மை பொருந்திய ஒளியோடு கூடிய தீயும் சூரியனும் சந்திரனும் மண்ணும் நீரும் அனலும் காற்றும் விண்ணும் ஆகிய எட்டும் சிவம் உறையும் திருமேனி களாம்; இத்திருமேனிகள் தாங்கியிருக்கின்ற பல உயிர்களும் ஐவர்க்கும் ஆறு அங்கங்கட்கும் இடமாம் என்றவாறு.

சிவனுறையுமிடம் எட்டும், எட்டிலுறையும் ஆன்மாக் கள் பஞ்ச பிரம ஷடங்க மந்திரங்கட்கு இடமாம் என்பது கருத்து.

அடுக்களைத்தீ ஈமத்தீ இவற்றின் நீக்குதற்குத் 'தெய்வச் சுடர் அங்கி' என்றார். வேள்வித்தீ என்க.

சைவப் பெரும்பதி – சிவ சம்பந்தமான பெரிய இடம். ஐவர் ஈசானாதி பஞ்ச பிரம மந்திரப் பொருளாவார். இடை – செறிந்த, ஆறங்கம் – இதயம் சிரசு சிகை கவசம் அஸ்திரம் நேத்திரம் என்ற ஆறுறுப்புக்களும் ஆம்; அவற்றிற்குப் பல்லுயிர் இடமாம் என்க.

சிவோகம்பாவனையில் கரசரணாதிகளைச் சிவாங்க மாகப் பாவிக்க, உயிர் பஞ்ச பிரம ஷடங்க மந்திரவடிவாம் ஆதலின் பல்லுயிர், ஐவர்க்கு, ஆறங்கங்களுக்கு இடமாம் என்றவாறு.

இதனால் அட்டமூர்த்திகளும் சிவனுறைபதி; பஞ்ச பிரம ஷடங்க மந்திரங்கள் உயிர் உறை இடம் என்பது உணர்த்தப் பெற்றது. (301)

# 27. பசுவிலக்கணம் – பிராணன்

பசு – ஆன்மா; அது இறைவனோடு என்றும் ஒன்றி நிற்பதாய். மலத்தொடு தோன்றித் திருவருளால் பிரிந்து சிவத்தொடு சார்ந்து பிரிப்பின்றி இன்பமயமாய் நித்தியமாய் இருப்பது; அணுவில் அணுவாயது என்பன முதலிய அதன் இலக்கணம் உணர்த்தும் அதிகாரம். முதலில் இறைவன் உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு உயிருக்குள்ளே இருக்கும் இயல்பை உணர்த்துகின்றார்.

**உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்**
**பன்னு மறைகள் பயிலும் பரமனை**
**என்னுள் இருக்கும் இளையா விளக்கினை**
**அன்மை யனென் றறிந்து கொண்டேனே.**
2005

இம் – எனின், இறைவனைத் தன்னின் வேறாகாத வனாக உணர்ந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தியானித்த அளவிலேயே உணரப்படும் ஏக னாகிய இறைவனை, பன்னிப்பன்னிப் பேசுகின்ற மறைகளிற் பலவிடங்களில் பேசப்படும் பரம்பொருளை என் உள்ளத்து விளங்கும் தூண்டா விளக்குப் போல்பவனை, என்னின் வேறாகாதவனாக ஒன்றிக் கலந்த உணர்வுமயனாக அறிந்தேன் என்றவாறு.

இறைவனை அநந்தியமாக அறிந்தேன் என்பது கருத்து.

சிவஞானிகள் தியானித்த மாத்திரத்தில் அவர்கள் அனுபவத்திற்கு விஷயமாகும் பெருங்கருணையாளன் சிவன் என்பது 'உன்னும் அளவில் உணரும் ஒருவன்' என்பதால் உணர்த்தப் பெறுகின்றது. ஒருவன் – தன்னில் வேறுபொருள் ஒன்றுமில்லாதவன்; என்க.

வேதங்கள் பலகாலும் பலவாகிய கருத்துக்களைக் கூறுதலால் பன்னும் மறைகள் எனப்பட்டது. பரமன் – மேலான வற்றுக்கு எல்லாம் மேலானவன். இளையாவிளக்கு – தூண்டா விளக்கு. 'என்றும் அன்னமயன் என்று' என்றும் பாடம் கொண்டு இடர்ப்படுவோரும் உளர். சிவாதித்தனை அன்னமய கோசம் என்றல் பொருந்தாதாம். ஆகவே அன்மையனன்று என்ற பாடம் கொள்ளப்பட்டது. அனன்யம் என்ற பாடமும் சில ஏடுகளில் காணப்படுகின்றது. அப்பொருள் ஏற்புடையது ஆயி னும் எதுகை ஒத்தின்மையால் கொள்ளப்படாதென்க. (302)

**அன்ன மிரண்டுள ஆற்றங் கரையினில்**
**துன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன**
**தன்னிலை யன்னந் தனியொன்ற**
**தென்றக்கால்**
**பின்ன மடவன்னம் பேறணு காதே. 2006**

இம் – எனின், சிவ சீவன்கள் அனன்னியமாதல் தோன்ற வேற்றுப்பொருள் வைப்பாக உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆற்றங்கரையில் இரண்டு அன்னங்கள் உள்ளன. இரண்டும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் ஒன்றில் ஒன்று பொருந்தியிருப்பனவாம்; அவற்றுள் ஒன்று தன்னி

லையில் என்றும் நிற்கும் தனிப்பரம் பொருளானது மற்றொன்று அதனின் வேறுபட்ட அறியாமையொடு கூடிய அன்னம் என்ற றிபவர்க்கு என்றும் சிவப்பேறு அணுகாதாம் என்றவாறு.

சிவனும் சீவனும் வேறு என எண்ணுவார்க்குச் சிவானு பவம் சித்தியாது என்பது கருத்து.

ஆற்றங்கரை என்றது வாழ்க்கையை; அதனை ஆற்றங்கரைக்கு ஒப்பிட்டது. ஆற்றுப் பெருக்கால் எக்கணமும் இடிபாடு எய்தும் அநித்தியம் உடைமையின்.

தன்னிலையன்னம் தனி என்றது என்றக்கால் – கல வாது தன்னிலையில் இருக்கும் சிவமாகிய அன்னம் தனித்த ஒரு பொருளாயுளது எனத் தன்னின் வேறாகக் கருதுங்கால் என்பதாம்.

பின்ன அன்னம் மட அன்னம் எனக் கூட்டுக. வேறு பாடு என்னும் அறியாமையையுடையது ஆன்மா. பின்னம் வேறுபட்ட தன்மை. பேறு – சிவமாந்தன்மைப் பெருவாழ்வு. (303)

## 28. புருடன்

கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் நுகருந் தன்மை எய்தியிருந்த ஆன்மா பிரகிருதிமாயைப் போகங்களை நுகர்வதற்கண் உன் முகமாய் அவிச்சை. அகங்காரம் அவா ஆசை கோபங்களாகிற பஞ்சக்கிலேசமாகிய பும்ஸ்த்வமலம் எய்திய நிலையில் புருடனென்படுவான். அந்நிலையில் கிலேசங்களை விட்டுச் சிவப்பேறு எய்தும் உபாயங்களை உபதேசிக்கும் அதிகாரம் ஆதலின் அப்பெயர் பெற்றது. அதிகார முறைமையும் இதனானே காண்க.

வைகரி யாதியு மாயா மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமும்
மெய்கரி ஞானங் கிரியா விசேடத்துச்
செய்கரி யீசன் அனாதியே செய்ததே. 2007

இம் – எனின், பும்ஸ்த்வம் போக்கிச் சிவஞானம் சேர்க்கும் சிவனுபகாரம் கூறுதல் நுதலிற்று.

இ–ள்: வைகரி முதலான நால்வகை வாக்குகளும் அசுத்தமாயை முதலான வித்தியாதத்துவங்கள் ஏழும், இவற்றிற்குப் பொய்ச் சாட்சியாக நின்று நுகருமாறு நுகரும். புருடதத்துவத்தை முதலாகக் கொண்டு தோன்றிய பஞ்சக்கிலேசங்களும் இவை, உண்மைச் சான்றாகிய சிவஞானம் பெறச் செய்யப் பெறும் தீட்சையாதி கிரியா விசேடத்தால் செய்யப்பட்ட கரிபோல்வதாம்; இவ்வருள் ஈசன் ஆன்மாக்களுய்யும் பொருட்டு அநாதியே செய்ததாம் என்றவாறு.

பும்ஸ்த்வமலமும் அதன் காரணங்களும் நீங்கி ஆன்மா சிவஞானம் பெறக் கிரியா விசேடங்களை ஈசன் அநாதியே செய்து உதவினார் என்பது கருத்து.

வைகரியாதி – வைகரி, பைசந்தி, மத்யமை, சூக்குமை என்ற நால்வகை வாக்குகள்.

மாயாமலாதி – மாயாமலத்தை ஆதியாகவுடைய சுத்தத் தத்துவங்களாகிய சிவம், சத்தி, சதாசிவம், மாகேசுரம், சுத்தவித்யை என்னும் ஐந்துமாம்.

புருடாதி – கலை, காலம், நியதி, வித்யை, அராகம், புருடன், மூலப்பிரகிருதி என்னும் ஏழுமாம். இவைகள் மாயே

யமாய் மெய்ஞானப்பேற்றிற்குத் தடையாயிருத்தலானும், போக்த்ருத்வத்தை உண்டு பண்ணி ஆன்மாவைத் தடுத்த லானும் அவற்றைப் போக்கச் சிவன் ஆசாரியனாக வந்து, உண்மைச் சாட்சியான சிவஞானத்தைக் கூட்டிச் சிவத்தையே நுகரச் செய்வதற்காக சமய விசேட நிர்வாணாதி தீட்சைகளாகிற கிரியா விசேடங்களைத் தானே சாட்சியாய் நின்று செய்வன். இது அவன் அநாதியே செய்த உபகாரம் என்பதாம்.

இங்ஙனமன்றி அதிகாரத் தலைப்போடியையபில்லாத வேறுரை கூறுவாரும் உளர். அதனையும் நோக்கிச் சிறந்தன கொள்க. (304)

**அணுவில் அணுவினை ஆதிப் பிரானை**
**அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்**
**டணுவில் அணுவை அணுகவல் லார்கட்**
**கணுவில் அணுவை அணுகலு மாமே. 2008**

இம் – எனில், ஆன்மாச் சிவத்தையணுகும் உபாயம் உபதேசித்தல் நுதலிற்று.

இ–ள்: பரமாணுவை ஆயிரம் பிளவு செய்து அவ்வா யிரத்துள் ஒன்றாகிய அணுவில் பரமாணுவாகக் கலந்துள்ள சிவஞானத்தைச் சேரவல்லவர்களுக்கே. அணுவினுள் அணு வாயும் முதற்பொருளாயும் உள்ள சிவபரம்பொருளை, அணுவில் அணுவாய் விளங்கும் பரசிவத்தை அணுகும் வன்மையுளதாம் என்றவாறு.

சிவன் அணுவிற்கணுவாய் விளங்குபவர். அந்த அணுவை ஆயிரம் கூறுசெய்து அதில் ஒன்றிலும் கலந்திருப் பவர்; அவரை நுணுகி ஆராய்ந்து தியானிக்கின் அடையலாம் என்பது கருத்து.

அணு –ஆன்மா. அதனை கூறிடலாவது அதைப் பந்தித்துள்ள மலமாயா கன்மங்களைப் பிரித்து, அவ்வணுவைப் பிளந்து, அதினுள்ளும் சிவத்துவ வியாப்தியை உணர்தல்.

(305)

**படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்**
**சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய**
**இடர்கொண்ட பாச இருளற வோட்டி**
**நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே.** 2009

இம் – எனின், புருஷனுக்கு பும்ஸ்த்துவம் நீங்கின் ஞானமா நடராஜப் பெருமான் காட்டும் நல்வழியை நாடலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: படர்ந்து வளர்தலைத் தன்னகத்தே அடக்கி நிற்கும் ஆலம்வித்துப்போல விளங்கும் ஆன்மாவை ஒளிப் பிழம்பாய் விளங்கும் சிவத்தின் திருவருள் கொண்டு அருள் நெறியிலே செலுத்த, என்றும் ஆன்மாவுக்குத் துன்பத்தையே விளைவிப்பவனாகிய ஆணவமலமாகிய இருளே அறவே ஓட்டிப் பரமானந்த தாண்டவம் புரியும் நடராசப் பெருமான் தம்மிடத்துக் கொண்டுள்ள நல்வழியாகிய சிவகதியை விரும்புதலும் ஆம் என்றவாறு.

ஆன்மாவைப் பசுபுண்ணியத்தின்வழிச் செலுத்த அது அறியாமையின் நீங்கி, நடராசப் பெருமான் திருவடியை நண்ணும் என்பது கருத்து.

ஆலம் விதையில் வேரும் விழுதும் கோடும் இலையும் அடங்கியிருப்பதுபோல அதனினும் சிறிய உயிரினுள்ளே நுகர் வினைக்கு ஏதுவாகிய வாய்ப்புக்களும், வருவினைக்கு

உரியனவும், வினைகளின் நீங்கித் திருவருளைச் சார்வதற்கு ஏற்ற உபாயங்களும் அடங்கி இருத்தலின் அணுவை ஆலம் வித்துக்கு உவமித்தார். அணு – ஆன்மா.

சுடர் – ஒளி; ஈண்டுத் திருவருள். தூ வழி – தூய்மை யான நெறி. அது சிவதன்மம் என்க.

இடர் – துன்பம். இடர்கொண்ட பாசம் – உயிர்கட்கு அறியாமையை மேலும் மேலும் விளைவித்து இன்னல்களை இடையறாதுண்டாக்கும் மலமும் மாயையும் கன்மங்களுமாம். இவை ஆன்மாக்களைப் பந்தித்துப் பரிபாகமுறுத்தலின் பாசம் எனப்பட்டது.

நடர் – கூத்தர்; என்றது ஞானக்கூத்தராகிய பரசி வத்தை. நடர்கொண்ட நல்வழி – சிவானந்தப் பேறாகிய சாயுச்சியம். (306)

**அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்**
**கணுவுற நின்ற கலப்ப துணரார்**
**இணையிலி யீச னவனெங்கு மாகித்**
**தணிவற நின்றான் சராசரந் தானே.** 2010

இம் – எனின், இறைவன் ஆன்மாவில் வியாபமாகவும் வியாப்பியமாகவும் இருக்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆன்மாவில் சிவமும், சிவத்தில் ஆன்மாவும் பிரிப்பின்றிக் கலந்திருப்பதை உணரார்; ஒப்பற்ற ஈசன் எங்கும் நிறைந்து இடையீடறச் செறிந்து இயங்குவன நிற்பாவன எவற் றினும் வியாபித்திருந்தான் என்றவாறு.

பரசிவம் உயிருக்குயிராயும், தன்னுள் அனைத்து உயிர்களை அடக்கியும் இருக்கும்; எங்கும் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கும் என்பது கருத்து.

அணுவுள் அவன் ஆதலாவது உயிருள் உயிராகிக் கலந்திருத்தல். அதாவது வியாப்பியமாக இருத்தல். அவனுள் அணு என்றது ஆன்மாக்களைத் தன்னகத்தடக்கித் தன் வியாப கத்துள் ஆன்மாக்கள் அடங்கியிருக்கச் செய்தல். இதனால் ஆன்மாவும் பரசிவமும் சமமாமோ எனின் ஆகாது; அணுவில் பரசிவம் அடங்கியிருக்கும்போது உயிர்கள் அனைத்திலும் ஒரு காலத்து வியாபித்துக் கலந்து விளங்கும் எல்லாமாந் தன்மையும், உயிர்கள் அவனிடத்து அடங்கியிருக்கும் போது உயிர்கட்கு ஏகதேச வியாபகம் பெறப்படுமேயன்றிச் சமமாகா மையும் உணர்க.

கணு – அளவு அல்லது வரையறை. இறைவனும் உயிரும் கலந்த கலப்பிற்கு அளவில்லையாதலின் 'கணுவற நின்ற கலப்பு' என்றார்.

தணிவற – இடையீடின்றி; செறிவறச் செறிந்து எனலுமாம். தணிவறச் சராசரந்தானே நின்றான் எனக் கூட்டுக.

இதனால் புருடன் ஆன நிலையில்ஆன்மா பும்ஸ்த்வ மலம் நீங்கப் பெறாமையின் இறைவன் கலப்புணராது என்பது அறிவிக்கப்பெற்றது. (307)

# 29. சீவன்

அஃதாவது புருடத்துவமலம் நீங்கிய உயிர் குரு உபதேசத்தால் சிவத்தைச் சார நின்றபோது சீவன் எனப் பேர் தாங்கித் துரியம்புகுந்து ஞான சொரூபியாய் இருத்தலை உணர்த்துவது.

அங்ஙனம் புருஷன் சீவனாங்கால் தன்னுருவைத் தான் உணர்வது இன்றியமையாததலின் முதலில் உயிரின் உருவை யும் அடுத்து இறைவன் பெருமையையும் சீவனாகிய தான் சிவனை அறிந்து உய்யும் முறைமையையும் நான்கு மந்திரங்க ளால் உணர்த்துகிறார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**மேவிய சீவன் வடிவது சொல்லிடில்**
**கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு**
**மேவிய கூறது ஆயிர மாயினால்**
**ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றே.** 2011

இம் – எனின், உயிரின் உருவம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உடற்கண் மேவிய சீவனது வடிவத்தை அளவிட்டுக் கூறத் தொடங்கின் பசுவின் மயிரொன்றை நூறாகப் பிளந்து அதில் ஒன்றை ஆயிரம் கூறாக்கினால் உயிரின் உருவம் பசுவின் மயிரில் இலக்ஷத்தில் ஒரு கூறாகும் என்றவாறு.

இங்ஙனம் அன்றி ஆயிரத்தில் ஒரு கூறு எடுத்து நூறாயிரம் கூறாக்கினால் அது சீவன் வடிவு என உரை கூறுவாரும் உளர். (308)

ஏனோர் பெருமைய னாயினும் எம்மிறை
ஊனே சிறுமையின் உட்கலந் தங்குளன்
வானோர் அறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவே. 2012

இம் – எனின், சிவன் பெருமையை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எம்மிறைவன் ஏனைய தேவர்களைவிடப் பெருமையையுடையவன். ஆயினும், தன் எளிவந்த கருணையால் உடம்பினுள் உயிராய்க் கலந்தும் விளங்குவன்; தேவர்களால் அறியப்படும் அளவினன் அல்லன்; தேவர்கள் அனைவர்க்கும் பெரிய தேவன்; ஆயினும் ஆன்மாக்கள் தாம் செய்யும் தவத்தின் அளவாகத் தாமே அறியும் என்றவாறு.

பரசிவம் எவராலும் அறியப்படாத பெருமையையுடையதாயினும் தவத்தினளவாக அறியலாம் என்பது கருத்து.

ஏனோர் பெருமையன் ஆயினும் என்பதற்கு ஏனோரைவிடப் பெருமையனாயினும் என்க. பெருமை உடையேம் என்பார் எல்லாரும் எல்லா உயிர்களினிடத்தும் உயிர்க்கு உயிராகக் கலந்து விளங்கும் பெற்றியரல்லர்; அதிகார மலத்தாற் கட்டுண்டு அகம் பிரமம் எனத் தருக்கித் திரிவர்; சிவமோ எளிவந்து கருணையால் எல்லா உயிரினும் கலந்துறைவன் என்பதாம். 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்றமையும் காண்க.

அளவு – பெருமையின் எல்லை. வானோர் எம்போல் மலமாயா கன்மங்களிற் கட்டுண்டு, பசுதர்ம மேலீட்டால் சுவர்க்காதி போகங்களை ஊழ்வழி நின்று அனுபவிக்கும்

பசுக்கள் ஆதலின் அவர்கள் அவன் பெருமையின் எல்லையை அளந்து கூறும் அறிவுடையர் அல்லர் என்றவாறாம்.

மாதேவன் – மகாதேவன், தான் – உயிர். தவத்தின் அளவே தானே அறியும் எனக் கூட்டுக.

இம்மந்திரம் ஈண்டியையபிலதென விலக்குவாரும் உளர். சீவன் தன்னுரு உணர்ந்த அளவினில்லாது சிவன் பெருமையையும் அவன் உயிருக்கு உயிராகக் கலந்திருக்கும் எளிமையையும் உணரின் அன்றிப் பிற்கூறும் உபாதி நீக்கமின் மையின் இம்மந்திரம் ஈண்டு இன்றியமையாதது என உணர்க.

(309)

**உண்டு தெளிவன் உரைக்க வியோகமே**
**கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்**
**பண்டு பயிலும் பயில்சீவ னார்பின்னைக்**
**கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே.2013**

இம் – எனின், சீவன் கருத்தில் சிவனுருக்கொள்ளு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவபெருமானை நுகருமாறு நுகர்ந்து, அவன் உணர்த்த உயிருக்கும் அவனுக்கும் என்றும் பிரிவால் வருந்தும் பண்பு இல்லையாயினும், முன்பே யோக நெறியில் பயிலுகின்ற ஆன்மா யோகப் பயிற்சி முதிர்வால் சிவபெருமானுடைய கருணையுருவைத்தம் கருத்துள் கண்டு கொள்ளும் என்றவாறு.

என்றும் பிரிப்பற்றதான சிவத்தை யோகநெறியிற் பயிலும் ஆன்மா அப்பயிற்சி முதிர்வால் அவனுருவைத் தம் மனத்தகத்துக்கண்டு மகிழும் என்பது கருத்து.

தெளிவன் – சிவன். உண்டு – நுகர்ந்து. உண்டு என்ற செய்தெனச்சத்தைச் செயவெனச் சமமாக்கி சிவத்தை நுகர, அவன் உள்ளிருந்து ஆன்மாவிற்கு உணர்த்த வியோகமில்லை என்க. வியோகம் – பிரிவு. உரைக்க – உணர்த்த.

வியோகம் இல்லை யென்னாது வியோகமே கொண்டு பயிலும் குணம் இல்லை எனக் குணத்தின்மேல் ஏற்றிக் கூறியது. பிரிவென்னும் பண்பாக உயிரைப் பற்றி நிற்கும் சுவடும் இல்லையாம் என்றுணர்த்த என்க.

பயிலும் என்பதற்கு இயைய யோகத்தை எனச் செயப் படுபொருள் வருவிக்க. பண்டுபயின்ற யோகத்தின் பயன் காரணரூபமாய் ஆன்மாவைச் சார்ந்திருக்குமாயினும் இப்போதும் பயிலுதல் இன்றியமையாதது என்பார் பண்டும் பயிலும் பயில் சீவனார் என்றார். ஒருமைக்கண் தான்கற்ற கல்வி எழுமைக்கும் ஏமாப்புடையதாயினும் எடுத்த பிறவிக டோறும் பயிலுதலாலன்றி அது வெளிப்படாதவாறு போல என்க.

சீவனார் கருத்துளே சிவனுருக் கண்டு கொள்வர் என இயைக்க. சீவனார் சிவனுருக் கொள்வர் கருத்துளே, எனக் கூட்டி, தியானப் பொருளாகச் சிவத்தைக் காண்பர் எனலுமாம்.

(310)

**மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்**
**தாய குருவரு ளாலே யதில்தூண்ட**
**ஓயும் உபாதியோ டொன்றினொன் றுதுயிர்**
**ஆய துரியம் புகுந்தறி வாகவே. 2014**

இம் – எனின், உயிர் அசத்தோடு கூடி அசத்தாயும், சத்தோடு கூடி சத்தாயும், ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயிர் மாயையின் காரியமாகிற துன்பங்களிற் றோய்ந்து தானும் அசத்தாகும்; ஞானமே வடிவாக விளங்கும் குருவின் அருளாலே, சேதனத்திற்றூண்ட, செயல் ஒடுங்கும் மாயா உபாதிகள் ஒன்றிலும் பொருந்தாமல், பயிற்சி வசத்தான் ஆகிய துரிய நிலையிற் புகுந்து ஞானமே வடிவாக விளங்கும் எ–று.

மாயாவுபாதிகளுடன் ஒன்றி அசத்தாகிய உயிர் குருவருளால் சித்தாகிய சிவத்தோடு ஒன்றித் சித்தாம் என்பது கருத்து.

மாயாஉபாதி – மாயாகாரியமான தனு கரண புவன போகங்களை நுகரும்போது விளையும் சிற்றின்பமும் பெருந் துன்பங்களும் ஆகிய உபாதிகள்.

அசத்தாகும்: அச்த்து நிலையற்றது; சடமானது; மாயா காரியங்கள் அனைத்துமே நிலையற்றதாய் அறிவற்றது ஆதலின் சித்தாகிய உயிர் அதனோடு கூடி அசத்தாயிற்று. அசத்தாகும் என்றதால் ஆசித்தாதல் பெறப்படும்.

சேதனத்தாயகுருவருள் – சிவோகம் பாவனை செய்து சிவமாம் பெரும்பேறு எய்திய ஞானாசாரியனுடைய திருவருளாலே என்க. அதில் நீ சேதனமாகியும் சிவத்திருவருள் தூண்டயாவையும் அறியும் சத்தாகியுமிருந்தும் ஐம்புல வேடரின் அயர்ந்தனை ஆதலால் சித்தினைச் சேர்ந்து சித்தாதலே உனக்குரியது எனத் திருவருளில் பிரேரேபிக்க என்பதாம்.

சிவஞானம் தலைப்பட்டவுடன் ஒளிபுக இருள் மாய்ந்தாற்போலவும், சூரியன் எழப் பனி அழிந்தாற் போலவும் மாயா உபாதிகள் ஓயும் ஆதலின் 'ஓயும் உபாதியோடு ஒன்றின் ஒன்றாது' என்றார்.

துரியம், நான்காவதாகிய நிலை. சித்தமும் தனது சக்தி மடங்கிச் செயலற்று ஒழியும் அவத்தையில் அகங்காரத்தான் இயக்கப்படும். பிராணவாயுவும் புருடனும் என்னும் இரண்டு கருவியும் கூடி, உடம்பிற்குக் காவலாய் அதனையே விடயிக்கும் அவத்தை. இதற்குத் தானம் உந்தி. இது சீவதுரியம்.

ஆயதுரியம், உயிருக்கு இயற்கையானது. அதனைப் பிரிக்கவே ஆக்கவினை கொடுத்து 'ஆயதுரியம்' என்றார். ஆய துரியம் – சிவதுரியம். சிவதுரியமாவது உடம்பை விஷயத்திலே ஒழித்து லாடத் தானத்தே நின்று சிவனை விடயித்தலாம். சிவனை விடயிக்கும் போதுதான் உயிர் அறிவுருவாகத் திகழும். (3.11)

# 30. பசு

அஃதாவது உயிர்களை நாற்கால் பசுவோடு உவமித்து மாயாகாரியம் ஒழிந்து உயிர்கள் ஞானப்பால் சுரத்தலை விளக்குவது. குருவினருளினாலே சிவத்தை சாரத் தகுதி பெற்ற சீவன் சிவஞானத்தில் என்றும் திளைத்திருக்க ஏற்ற பல உபாயங்களை உணர்த்துதலின் அதிகார இயைபு விளங்கும்.

**கற்ற பசுக்கள் கதறித் திரியினுங்**
**கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினு**
**முற்ற பசுக்கள் ஒருகுடம் பால்போது**
**மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே.** 2015

இம் – எனின், பாசஞானத்தால் பயனில்லை என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வேதவேதாந்தங்களை முழுதும் கற்ற உயிர்கள் பொருளனுபவம் இன்றிக் கத்திக்கொண்டு சுற்றினாலும், தம் நினைவு வன்மையால் பேச்சாற்றலால் பட்டி மண்டபங்களில் வெற்றி கண்ட பசுக்கள் தமக்குரிய விருதுகளைக் கட்டிக் கொண்டு மேய்ந்தாலும் சிவானுபவத்தில் முற்றிய பசுக்கள் கறக்கின்ற ஒரு குடம் பாலே உலகத்திற்கு அமையும்; ஏனைய பசுக்கள் வறட்டுப்பசுக்களாம் என்றவாறு.

ஞான அனுபவம் முதிர்ந்த ஆன்மாக்களே திருவருளாகிய பாலைச் சொரிந்து, உலகத்தைச் செழிக்கச் செய்வர்; ஏனையோர் எவ்வளவு படிந்திருந்தாலும் வறட்டுப் பசுக்களேயாவர் என்பது கருத்து.

கற்ற பசுக்கள் – வேதமொடு ஆகமம் மிருதி புராணங்கள் உலகியல் நூல்கள் அனைத்தையும் கற்றவர்கள்; பாச ஞானிகள் என்பது கருத்து. கதறித் திரிதலாவது தத்துவத்தைக் கண்டார்போல வாய்க்கு வந்தவாறு பிதற்றிச் சுற்றுதல். இதனால் அனுபவம் கலவாத உரை என்பது உணர்த்தப் பெற்றது.

கொற்ற பசுக்கள் – படித்த நூல்களில் சிற்சில கருத்துக்கள் தம் மனத்திற்பதிய, பட்டிமண்டபத்தில் ஏறி வாதிட்டு எதிரியை வென்று அதற்குரிய அடையாளங்களாகிய விருதுகளைப் பெற்றவர்கள். அப்படி விருது கட்டிக்கொண்டு மேய்ந்தாலும் அவை வறட்டுப் பசுக்களே என்றார்.

முற்ற பசுக்கள் – சிவானுபவம் முதிர்ந்த சீவர்கள். அவர்கள் உயிர்கள் அனைத்தையும் தம் உயிர்போல எண்ணி அவைகளும் நித்தியானந்தப் பெருவாழ்வு எய்தவேண்டும் என்ற திருவருட் சுரப்புடையவர்கள். அவர்கள் செய்கின்ற

அருளே போதும் என்பார். ''முற்ற பசுக்கள் ஒரு குடம் பால் போதும்' என்றார்.

மற்றைப் பசுக்கள் – குருவருளும் அனுபவ ஞானமும் இல்லாத பாசஞானிகள. வறள் பசு – என்றும் கறக்காத மலட்டுப் பசுக்கள். இத்துணை கற்றுவிட்டோம் என்ற இறு மாப்பும் பட்டிமண்டபம் கூட்டிப் பலரை வென்றோம் என்ற செருக்கும் உள்ளவரையில் அவர்கள் சிவானுபவ எல்லை யிலும் எட்டிப்பாராதவர் ஆதலின் 'வறள் பசுக்கள்' என்றார்.

ஆசிரியர் திருமூலதேவர் புகுந்ததேகத்திற்கு இயையப் பசு உவமையில் வைத்து உண்மை ஞானத்தை உணர்த்திய அருமை ஓர்க. (312)

**கொல்லையின் மேயும் பசுக்களைச்**
**செய்வதென்**
**எல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி**
**வல்லசெய் தாற்ற மதித்தபின் அல்லது**
**கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே. 2016**

இம் – எனின், சிவஞானத்தைச் சேர்ப்பிக்கும் உபா யத்தை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கொல்லையில் மேயும் பசுக்களை நாம் என்ன செய்வது; கொல்லையின் எல்லையில் அவைகளை ஓட்டிச் சிவபெருமான் திருவடியாகிற அகண்டப் பெருவழியில் சேர்த்துத் திருவருளைத் துய்க்கும் ஆற்றலை உண்டாக்கி, அவைக்ளைச் சிவஞானிகள் கூட்டத்தில் சேர்த்து மதித்தபின் அல்லது அப்பசுக்கள் கொல்லையில் வைத்த மனத்தை மாற்றமாட்டா என்றவாறு.

புவனங்களில் போகங்களைத் துய்க்கும் உயிர்களைச் சிவத்தோடு சேர்த்துச் சிவத்தை நுகரும் அறிவாற்றலை அளித் தாலல்லது உயிர்கள் உலகப்பற்றை விட்டு உய்யமாட்டா என்பது கருத்து.

கொல்லை – நாற்புறமும் வேலிக்கு உட்பட்டு, தனி ஒருவருக்குச் சொந்தமாய், அவரவர்கள் நுகர்ச்சிக்கு என்றே அமைக்கப்பட்ட சிறிய இடம். இதனால் குறிப்பித்தது வினைப் போகங்களைத் துய்ப்பதற்கென்றே அவ்வுயிர்களும் அளிக்கப் பட்ட தனு கரண புவனங்களை என்க. மேய்தல் – போகங்களை அனுபவித்தல். பசுக்கள் – மலத்தால் மறைப்புண்டு, வினைத் தாம்பில் கட்டுண்டு மாயேயங்களை உண்டு உவப்புறுகின்ற உயிர்கள்.

கருணையே வடிவான திருமூலர், ஆன்மாக்களை நோக்கி உரைக்கும் இரக்கச் சொல் 'செய்வது என்' என்பது. சொல்வழி நடவாதபிள்ளை துன்பப்படுவதை நோக்கிக் கனிவுள்ள தந்தை கூறுவது போன்றது இச்சொல்.

மாயாகாரியமாய்ச் சடமாய் உள்ள இப்பிரபஞ்சம் சுட்டுணர்வுக்கு உட்பட்டது ஆதலின் அதனைக் கடந்து அகண்டாகார அருள்வழியை அடைதலே ஆன்மாக்க ளெய்தும் இலக்ஷியம் என்பார் 'எல்லை கடப்பித்து இறைவனடி கூட்டி' என்றார்.

தன்னைச்சேர்ந்தவர்கள் தக்கபதவி வகிக்க வேண்டு மென்று, தக்க பதவியைத் தலையில் கட்டினாலும்அவர்கள் அதனைச் சுமக்கலாற்றாது வருந்துவது போலக் கொல்லையின் எல்லையிலே கட்டுண்டு கிடக்கும் ஆன்மாவை எல்லை கடப் பித்து அருள் வெளியிலே உலவ விட்டாலும் அருள் வெளியை

அனுபவிக்கும் ஆற்றலும் வேண்டும் என்பார் 'வல்ல செய்து' என்றார். வல்ல செய்தலாவது இவ்வான்மா சிவபோகத்தைத் துய்க்கும் சிவஞானி ஆகட்டும் என்று திருவுளம் கொள்ளுதல்.

ஆகவே ஆசாரியன் ஆன்மாக்களைக் கட்டறுத்து, சுட்டறுத்து, காட்டிக் கண்டாலல்லது அவை தாமாக மல கன்மங் களினின்று நீங்கா என்பது உணர்த்தப் பெற்றது. (313)

# 31. போதன்

அஃதாவது சுட்டறுத்து வீடு காட்டப்பட்ட பசு வீட்டின் பத்தை விரும்பும் ஞான சொரூபியாய் இருத்தலை உணர்த் துவது. அங்ஙனம் உயிர்கள் ஆவது ஞான சொரூபியாகிய சிவத்தின் சார்பினால்; ஆதலால் சீவனுக்கும் சிவனுக்கும் உள்ள அநாதி நித்திய சம்பந்தம் உணர்த்துதல் வாயிலாகச் சிவத்தின் இயல்புணர்த்துகிறது. போதன் – சிவன். அதிகார முறைமையும் இதனான் விளங்கும்.

**சீவ னெனச்சிவ னென்னவே றில்லை**
**சீவ னார்சிவ னாரை யறிகிலர்**
**சீவ னார்சிவ னாரை யறிந்தபின்**
**சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே.** 2017

இம் – எனின், சிவ் சீவ அபேத அறிவு பிறக்கும் அவதரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சீவனெனவும் சிவன் எனவும் வேறில்லை; சீவன் சிவனை அறியாது; அங்ஙனம் அறியுமாயின் சீவன் சிவனாம் என்றவாறு.

சீவன் சிவனை உணர்ந்து அனுபவிக்கச் சிவமாந் தன்மை எய்தும் என்பது கருத்து.

சீவனுக்குத் தற்போதம் உள்ளவரையில் சிவனை அறிய இயலாது; அதுகழியின் அறியும்; பின் சிவமாம் என்க.

சிவனும் சீவனும் ஒன்றென்று கூறியதன்று; ஒன்றை விட்டு ஒன்று அறியாமையின் கலந்து நின்று காண்பதன்றித் தனியே காணாது; காணுங்கண்ணாயினும் காட்டும் உள்ளம் இல்லையாயின் எதனையும் காணாதவாறு போல என்க. (314)

**குணவிளக் காகிய கூத்தப் பிரானும்**
**மணவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்**
**பணவிளக் காகிய பல்தலை நாகங்**
**கணவிளக் காகிய கண்காணி யாகுமே.** 2018

இம் – எனின், இறைவன் எல்லாவற்றையும் அறிபவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அறிவொளியாய் விளங்கும் ஞானமா நடராசப் பெருமானும் மனத்தை விளக்காகக் கொண்டு வாழ்கின்ற நிலை பேறுடைய உயிர்களுக்கெல்லாம், படங்களில் விளக்குப் போல ஒளிவிடும் மணிகளையுடைய ஐவாய நாகத்தை (ஆயும்) கூட்டமாகி ஆய்பவனாகிய கண்காணியாவான் என்றவாறு.

இறைவன் ஐவாய நாகமாகிற ஐம்பொறிகளின் சேட்டையை ஆயும் கண்காணி ஆவான் என்பதாம்.

குணவிளக்கு – சிவம். மனவிளக்கு –ஆன்மா. பணம்– படம். விளக்கு – விளக்குபவன். அஃதாவது ஆய்பவன். முத நிலைத் தொழிலாகுபெயராக விளக்குபவனை உணர்த்திற்று.

உருவற்ற ஞானத்திற்குப் போதமாவது குணம். அது ஆனந்தம்; குண விளக்கு – ஆனந்தமயமான ஞானக் கூத்தன். அவன் கூத்து காரணரூபமான பஞ்ச கிருத்தியங்களையும், ஆனந்தத்தையும் செய்யும் பஞ்ச கிருத்திய பரமானந்தத் தாண்டவமாதலின் 'குண விளக்காகிய கூத்தப் பிரானும்' என்றார். உம்: உயர்வு சிறப்பு.

உயிர்கட்கு மனம் கருவியாக நின்று பொருள்களை விளக்குதலின் மனவிளக்காகிய உயிர்கட்கு எனப்பட்டது. உயிருண்மையை மனம் துணைக்கொண்டே உணருவேம் ஆதலின் கூறப்பட்டது எனலுமாம்.

பண விளக்கு – படங்களிலுள்ள இரத்தினதீபம். ஐம் பொறிகளாகிய ஐந்தலைகளையுடைய பாம்பிற்கு விஷய ஞானமாகிற ஒளி உண்மையின் இங்ஙனம் கூறப்பட்டது.

கண்காணி ஒருவனே பொறிகள் சேட்டிக்கும் இடங் களிலெல்லாம் இருந்து விளக்குபவனாதலின் 'கணவிளக் காகிய கண்காணி' என்றார்.

இம்மந்திரம் கூடாவொழுக்கம் என்னும் அதிகாரத்தில் அமையவேண்டுவதாயினும் கண்காணி ஒருவன் உளன் என்று உணர்வதே போதன் இயல்பாதல் பற்றி ஈண்டுக் கூறப்பட்டது. (315)

அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழித்தெங்குந் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்றச் சீவனு மாமே. 2019

இம் – எனின், சிவன் சீவனைத் தானாக்கு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இயல்பாகவே ஞான சொரூபியாய், இயல் பாகவே பாசங்களின் நீங்கிய சிவபரம்பொருளே, பொறிகளை வாயிலாகக் கொண்டு உணரும் தன்மை நீங்கி இருந்தபடி எங்கும் எவற்றையும் கலந்து நின்று உணரும் போதனாவான். பாசங்களினீங்கி அறிவுருவான ஆன்மாக்களிடத்தில் கலந்து நின்று காட்டியும் காண்பன்; ஆன்மாக்கள்தோறும் நிறைந்து நின்று அச்சீவனும் ஆவன் என்றவாறு.

அறிவு இயல்பாகவே அறிவுவடிவாகத் திகழ்தலும் அறிவுறுத்த அறிவாய்த் திகழ்தலும் என இருவகை. அவற்றுள் இயல்பாக அறிவாய்த் திகழ்பவனே போதனாகிய பரசிவம் என்பார் 'அறிவாய் அறியாமை நீங்கியவனே' என்றார். அறியாமை நீங்கியவன் என்பது, இருந்து இல்லாமையன்று; என்றும் இல்லாமையை உணர்த்தியது.

உள்ளம் பொறிவழியாகச் சென்று விஷயங்களை உணரும். போதன் அனைத்திலும் அறிவாய்க் கலந்திருப்பதால் அனைத்தையும் ஒருசேர இருந்தாங்கு அறிவன் ஆதலின் 'பொறிவாய் ஒழிந்து தானான போதன்' என்றார். மாணிக்க வாசகப் பெருமானும் 'கேளாதே எல்லாம் கேட்டான்' என்றரு ளியது இக்கருத்தே பற்றி என்க. சொல்லாமற் சொல்லுதலும் இத்தகையதோர் அநுபவமே என்றார்.

அறிவாயவற்றினுள் – திருவருளால் சிவஞானம் பெற்ற ஆன்மாவினுள், அறிவாய என்பது அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினைப்பெயர். அறிவாய் அவற்றினுள் எனப் பிரிப்பாரும் உளர். இறைவன் அறிவேயாதல் இம்

மந்திரத்துள் முதற் பகுதிக்கண்ணேயே மொழியப்பட்டமையின் ஈண்டும் அஃது வேண்டுவதின்று. அன்றியும் ஒளி ஒளியினன்றி இருளிற்கலவாதது போல ஞானம், ஞானத்தினன்றி அறியாமையிற் கலவாது ஆதலின் ஞான சொரூபியான சிவம் ஞானமான ஆன்மாவில் கலந்தது என்றலே இயைபுடையதாதல் ஓர்க.

தான் ஆய் – தான் கலந்து நின்று, செறிவாகி நின்று – நீக்கமற நிறைந்து நின்று. ''செறிவொழியாது நின்ற சிவம்'' என்றதும் காண்க. போதன் சீவனும் ஆகும் என ஆதல் வினைக்குப் போதனே வினைமுதலாக உணர்த்தியது முத்தி நிலையிலும் ஆன்மா சுதந்தரமற்றவன் என்பதைத் தெரிவிக்க என்க. (316)

**ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்**
**காறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி**
**ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்**
**ஆறாறுக் கப்புற மாகி நின்றானே. 2020**

இம் – எனின், இறைவன் ஆன்மாக்களுக்கு அறிவிக்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: முப்பத்தாறு தத்தவங்களின் இயல்பை அறியாதிருந்த அடியேனுக்கு அவற்றினிலக்கணத்தை அறிவித்தான் எம் ஆசாரியன்; அடியேன் அவற்றை உணர்ந்த பின் அவன் முப்பத்தாறையும் கடந்து தத்துவாதீதப் பொருளாகக் காட்சி வழங்கினான் என்றவாறு.

அடியேனுக்குத் தத்துவதரிசன முதலியன உணர்த்தித் தான் தத்துவாதீதனாக விளங்கினான் பரசிவன் என்பது கருத்து.

ஆறாறு – ஆன்ம தத்துவம் இருபத்தைந்தும், வித்தியா தத்துவம் ஆறும், சிவதத்துவம் ஐந்தும் ஆகிய முப்பத்தாறு. அவற்றின் தன்மை ஆன்மாக்களை வினைப்போகத்திலழுந்தி அனுபவிக்கச் செய்வனவாய், மயக்குவனவாய், சககாரி மலமாய் நிற்கும் தன்மை.

பேர்நந்தி – பெரிய ஆசாரியன், சிவம் ஆசாரியனாக எழுந்தருளி உணர்த்தியது – தம் முதல் குருவுமாய்த் தவத் தினின் உணர்த்தவிட்டு, அந்நியமின்மையின் அரன்கழல் சென்றதை அறிவிப்பது இம்மந்திரம். (317)

**சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்**
**அவமா மலமைந்து மாவ தறியார்**
**தவமான செய்து தலைப்பறி கின்றார்**
**நவமான தத்தவ நடகி லாரே.** 2021

இம் – எனின், திருவட்டுணையில்லாமலும் மல இயல்புணராமலும் தவஞ்செய்வோரியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவத்தோடு வேறற்று விளங்கும் திருவருளை நிலைபெற்று அதில் உறைத்து நின்று அறிய மாட்டார்கள்; பயனின்றிக் கழிவதாகிய மலம் ஐந்தாலும் ஆம் தீமைகளை உணரார்; தவங்கள் பலவற்றையும் செய்து தலை பறிபோகின் றார்கள்; புதிய தத்துவங்களையும் ஆராயமாட்டார்கள்; இவர்கள் அறிவின்மை இருந்தவாறு என்னே என்றவாறு.

சிவம் அருள் என்னும் இரண்டும் குணகுணியாய் அபின்னமாதலின் சிவமாம் அருள் என்றார்; சிவத்தினின்று ஆகிய அருள் எனலுமாம்.

அருள் நின்று – அருள்வழியே நின்று; கருவி கரணங்கள்வழிச் செல்லாது அடங்கித் திருவருளிலே நின்று என்க. இதனையே சிவஞான சித்தியார் ''அந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே'' என்றும். தாயுமானசுவாமிகள் ''சிந்தையற நில்லென்று சும்மா இருத்தி'' என அனுபவம் கூறுவார்கள்.

மலம் ஐந்து – ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. இவை செய்யும் மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவும், துன்ப இன்பங்களும், தனு கரண புவன போகங்களும் ஆகிய காரியங்கள் அனைத்தும் பயனற்றுப் பிறவிக்கு ஏது ஆகலின் 'அவமாம் மலம் ஐந்தும்' என்றார். ஆவது – புனருற்பவத்திற்குக் காரணமாய்த் துன்ப விதையாதல்.

தவமான செய்து – போக நுகர்ச்சிக்கு ஏதுவாகிய காமிய யாகங்களையும், ஹடயோகங்களையும் செய்து என்க. பசுகன்மஞ்செய்து என்றபடி.

தலைப்பறிகின்றார் – பிரமன் தவஞ்செய்து அதிகார மலத்தால் தாக்குண்டு, ஆணவமுதிர்ச்சியால் தலை பறியுண்டதுபோல இவர்களும் தலைப்பறிபோகின்றார்கள் என்பதாம். தலைப்பறிகின்றார் – மீண்டும் பிறக்கின்றவர்கள் என்பாரும் உளர், இது நேரிய சொற்பொருள் ஆகாமை தெளிக.

தத்துவங்கள் என்று முள்ளனவாய்த் தொன்மையவாயினும் அவரவர் அநுபவத்திற்காங்கால் புதியன ஆதலின் 'நவமான தத்துவம்' என்றார். நாடுதல் – ஆராய்தல்: தத்துவ தரிசனம் செய்தலாம்.

இது போதனாகாதார் இயல்புணர்த்தியகால் எதிர் மறைமுகத்தான் போதனியல்புணர்த்தியவாறு. (318)

**நாடோறும் ஈசன் நடத்துந் தொழில்உன்னார்**
**நாடோறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்**
**நாடோறும் ஈசன்நல் லோர்க்கருள் நல்கலால்**
**நாடோறும் நாடார்கள் நாள்வினை யாளரே.**
2022

இம் – எனின், எல்லாம் சிவன்செயல் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆன்மாக்களாகிய நமக்காக நாடோறும் சிவபெருமான் செய்யும் அருட்டொழில்களை எண்ணார். நம் வினைகட்கு ஏற்ப இறைவன் விரும்பி நமக்கு இன்பத் துன்பங் களை நுகர்த்துதலையும் எண்ணார்; ஈசன் நல்லவர்களுக்கு நாடோறும் அருள் வழங்குதலால், நாடோறும் மிகும் தீவினை யாளர்கள் இறைவன் செய்யும் உபகாரத்தை எண்ணிப்பாரார் என்றவாறு.

இறைவன் நாடோறும் நல்லோர்க்கு அருள் வழங்குகின்றான்; ஏன் நாம் செய்யுந்தொழிலும், உண்பனவுங் கூட அவனுதவியனவே என்று எண்ணுதலே நம் கடமை என்பது கருத்து.

போதனான ஆன்மா எல்லாம் சிவன்செயல்: எல்லாம் சிவன் தந்த செல்வம் என்று எண்ணும் என்பது அறிவித்தவாறு. (319)

# 32. ஐந்திந்திரியம் அடக்கும் அருமை

அஃதாவது ஐந்திந்திரியங்களையும் அடக்கித் தன் வழிப்படுத்தும் செயலின் அருமை கூறுதல். ஐந்து இந்திரியங்களாவன மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன. இவை கருவிகளாய்ச் சடமாய் இயக்க இயங்குவனவாய் இருப்பது. அவை தாமாக இயங்கினன்றே அவற்றை அடக்கவேண்டிய இன்றியமையாமை உண்டாம் எனின், ஆன்மாவின் அறிவிச்சை வழிப்பட்ட மனம் செயற்பட, அதனை இந்திரியங்கள் வழிச் செல்லாது அடக்குதலே இந்திரியம் அடக்குதல் எனப்பட்டது. போதனான ஆன்மாவிற்கும் வாசனை கெடாமை யின் இந்திரியம் சேட்டிக்குமாதலின் அதனருமை கூறி அதன் இன்றியமையாமையை வற்புறுத்தியதால் அதிகார முறைமை இனிது விளங்கும்.

**ஆக மதத்தன ஐந்த களிறுள**
**ஆக மதத்தறி யோடணை கின்றில**
**பாகனு மெய்த்தவை தாமும் இளைத்தபின்**
**யோகு திருந்துதல் ஒன்றறி யோமே. 2023**

இம் – எனின், பொறிகளை அடக்கும் அருமையும் முறைமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மிக்கமதம் கொண்டனவாகிய யானைகள் ஐந்துள்ளன; அவை மேன்மேலும் பெருகுகின்ற அம்மதத்தால் கட்டுத்தறியோடு சென்றணைகின்றன இல்லை; அவற்றை யடக்கமுயலும் பாகனும் இளைத்து, களிறுகளும் இளைத்த

பின்பு யோகநெறியால் திருந்துதலன்றி வேறோருபாயம் இருப்பதாக அறிகின்றிலேம் எ – று.

பொறிகள் ஐந்தும் தாமாக இளைத்துப்போனால் அவைகளை யோகநெறியால் அடக்கித் திருத்தலாம் என்பது கருத்து.

ஆகத்துட்டன் என்பதுபோல ஆகமதத்தன என்பது மிக்க மதத்தன என்ற பொருளில் வந்தது. ஐந்து களிறு என்றது ஐம்பொறிகளை. பொறிகளைக் களிறு என்றல் 'தொண்ட ரஞ்சு களிறும் அடக்கி' என்னும் திருக்கேதாரத் தேவாரத்தானும் 'உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்' என்றதிருக் குறட் குறிப்பானும் அறியலாம்.

'ஆகு அம்மதத்தறியோடு அணைகின்றில' எனப் பிரிக்க, இயல்பாகவே மதங்கொண்ட களிறுகள் மேன்மேலும் பெருகுகின்ற அம்மதத்தால் தறியோடு அணைகின்றில என்க.

பாகன் என்றது ஆன்மாவை, ஆன்மா பொறிவழி யோடி இளைக்க, யானைகளும் புலன்களைத் தின்று இளைக்கப் பின்புதான் யோகநெறியான் பொறிகளை வெல்ல லாம் என்பதாம்;

யோகம் ஒன்றே பொறியடக்கும் உபாயம் என்று அறிவித்தவாறு. (320)

**கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்**
**திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா**
**எருத்துற வேறி யிருக்கலு மாங்கே**
**வருத்தினும் அம்மா வழிநட வாதே. 2024**

இம் – எனின், இந்திரிய யானையை நடத்துதற்கு அருமை அறிவித்தல் நுதலிற்று.

இ – ள்: பாகனாகிய ஆன்மா கருத்து ஊன்றி நல்ல நூல்களைக் கற்றுப் பிராணாயாமம் செய்து, திருத்துதலும் மதம் பாய்கின்ற யானையாகிற இந்திரியங்கள் திகைத்து நின்றல்லது ஏவியவுடன் பாய்ந்து செல்லமாட்டா; பிடரின்கண் நன்கு ஏறி யிருந்த, மிகத் தண்டித்தாலும் அவ்யானை வழியோடு நடவா என்றவாறு.

ஞான சாத்திரங்களைப் படித்து, விதிப்படி பிராணா யாமம் முதலிய யோகநெறியில் நின்று, பொறிகளை அடக்கினும் பொறிகள் முறைதவறிப் போமேயன்றி ஒழுங்கான வழியில் நடவா என்பது கருத்து.

பாகன் – ஆன்மா. ஈண்டுப் பொறிகளைக் களிறாக உருவகித்தமையின் பாகன் என்றது, ஆன்மாவையே உணர்த்தும் என்க.

நன்னூல் – ஆன்மபோதத்தைச் செப்பஞ்செய்து சிவபோதமாக்கும் ஞான நூல்கள். கருத்தின் கற்று – மனம் புறம் போகாது ஒருவழிப்படுத்திக் கற்று.

கால் – பிராணன். கால்கொத்தி. பிராணனை ரேசக பூரக கும்பகங்களால், வரையறுத்து. 'திருத்தலும்' என்பதால், நியமமான பிராணாயாமம் பொறிகளை வயப்படுத்தும் உபாயமாதல் உணர்த்தப்பெற்றது.

பாய்மா – மதம்பாயும் யானை– முதல் திருமந்திரத்து ஐந்து களிறுள என்றமைக்கு இயைய ஈண்டும் யானை எனக்கோடலே சிறப்பு. குதிரை என்பாரும் உளர்.

பாகன் ஏவியவுடன் பாய்ந்து சென்று பணிசெய்யாது திகைத்து நின்று பின்செல்லும் என்பார் 'திகைத்தன்றிப் பாயா' என்றார்.

எருத்து–பிடர். பிடரிருத்தலும் யானைக்கே உரிய தாதல் காண்க.

அம்மா – அந்த யானை, வழி நடவாது – நேரிய வழியில் நடவாது. நடவாது என்றது சாதியொருமை. அம்மா: வியப்புமாம். (321)

**புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயும்**
**நிலமைந்த நீரைந்து நீர்மையும் ஐந்து**
**குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்**
**உலமந்து போம்வழி யொன்பது தானே.** 2025

இம்–எனின், பஞ்சேந்திரியங்களான் வரும் கேடு உணர்த்துதல் நுதலிற்று.

இ – ள்: அறிதற்கு நிலைக்களனாகிய பொறிகளும் ஐந்த; அவற்றின் வழியாகச் சென்று பற்றும் பறவைகளாகிற மனமும் ஐந்து; அப்பறவைகள் சென்று நுகரும் விஷய சுகங்களும் ஐந்து; சுகங்களால் நுகரப்படும் பண்புகளும் ஐந்து; அப்பண்புகளின் இயல்புகளும் ஐந்து; இவை இங்ஙனம் அவ்வைந்தாக வேறுபடினும் குலம் ஒன்றே; கையிலே கோலை ஏந்தி அவற்றை மேய்ப்பானாகிய ஆன்மாவும் ஒருவனே; அவன் சுழன்று வருந்திப்போம் வழிகள் ஒன்பதாம் என்றவாறு.

பொறிகளும் புலன்களும் அவற்றின் தொழிலும் இயல்பும் ஐயைந்தாயினும் எல்லாம் ஒரு கூட்டமே; இவற்றை மேய்ப்பவன் ஆன்மா ஒருவனே: அவன் அலைந்து களைத்து ஒன்பது வழியாலும் வருந்துகிறான் என்பது கருத்து.

புலம் – இடம் நிலைக்களனாகிய பொறிகளையுணர்ந் திற்று. புலம் ஐந்தாவன மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும்.

புள் – பறவை. பல்லாற்றானும் ஓடிப் பறந்து சென்று இரையை நுகரும் பறவைபோல மனம் பஞ்சேந்திரியங்கள் வழியாகவும் சென்று பற்றுதலின் புள் என உருவகிக்கப்பட்டது. மனம் ஒன்றாயினும் தொழிற் பாட்டால் நான்காய் அந்தக் கரணம் ஆதல்போல, கண்வழியாகச் செல்லும் மனம் காணுதல் மட்டும் செய்யும் அதனால் அது ஒன்று; காது வாழியாகச் செல்லும் மனம் கேட்டல் மட்டும் செய்யும்; அதனால் அது ஒன்று. இங்ஙனம் மனம் ஐந்தாயிற்று.

புள் சென்று மேயும் நிலம் – பொறிவழிச் செல்லும் மனத்திற்கு நுகர்வாகும் மாதரும் அமுதும் பாலும் போலச் சுவைதரும் பொருளும் நிறமும் உருவுமான அழகுடைப் பொருளும்; பூ, மாலை, சந்தனம் போன்ற மணப்பொருளும், இசைதரும் பொருளுமாகிய ஐந்தும்: இவ்வைந்தும் ஒருங்கி யைந்த பொருள் மாதர். அவர்களே ஐந்து நிலமுமாகலாம்.

நீர் – இயல்பு. அதாவது பண்பு. அவை சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன, நீர்மை – அவைகளை மனம் பொறி வழிச் சென்று நுகரும்போது ஆன்மாவின்கண் விளைவதாகிய ஊறின்பம், அறுவகைச் சுவையின்பம், நேத்திரானந்தம், மூக்கின்பம், கேள்வியானந்தம் என்ற இன்பப் பண்புகள்.

இங்ஙனம் வேறுபடினும் அனைத்தும் ஒருகூட்டமே என்பார்'குலமொன்று' என்றார். பொறி புலன்களைக் கட்டி ஆள்பவன் ஆன்மாவாதலின் கோல் கொண்டு மேய்ப்பான் ஒருவன் என்றார். கோல் பாசஞானமும் பசுஞானமுமாகிய மேய்க்குங்கோல்.

உலமந்து – சுழன்று. 'உலமரல் அலமரல் ஆயிரண்டும் சுழற்றி' – யாதல் காண்க. வழி ஒன்பது – நவத்துவாரங்கள். 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்' என்ற அப்பர் திருவாக்கும் காண்க.

புலம் – பொறிகள். புள் – பொறிகளை இடமாகக் கொண்டு நுகரும் புலன்கொளி. நிலம் – சுவை முதலிய விஷயங்கள். நீர் – கேட்டலாதி தொழில்கள். நீர்மை – தொழில்களே நீர்மை என்பாரும் உளர். இவ்வுரையில் நீர் நீர்மை இரண்டற்கும் வேறுபாடு தோன்றாமை காண்க.

'புலம்ஐந் துளமைந்து' எனவும் பாடம் உண்டு. அப்பாடமும் புள் – மனம் என்பதையே உணர்த்துதல் காண்க.

(322)

**அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன**
**அஞ்சும்போய் மேய்ந்துதம் அஞ்சக மேபுகும்**
**அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்**
**எஞ்சா திறைவனை எய்தலு மாமே.** 2026

இம் – எனின், இறைவனை எய்துதற்கு இடையூறு ஆவன பொறிகளே என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: காட்டில் வாழ்வனவாகிய சிங்கங்கள் ஐந்துள என; அந்த அஞ்சு சிங்கங்களும் தம் விருப்பம் போலச் சென்று

மேய்ந்துவிட்டுத் தனித்தனியே அஞ்சு வீட்டில் அடங்குவ னவாம்; அச்சிங்கங்களின் பல்லையும் நகத்தையும் நீக்கி விட்டால், தவறாது இறைவனை எய்தலாம் என்றவாறு.

இறைவனை எய்திப் பேரின்பம் நுகர ஆன்மாக் களுக்கு இடையூறாக இருப்பன பொறிகளே. அவை சிங்கங் கள்போல மிகக் கொடியன. கட்டிலகப்படாதன. அவை கருவி களாகப் பயன்படுத்தும் நகங்களையும் பல்லையும் போக்கி னால் கொட்டமும் கொடுமையும் நீங்கி நம் விருப்பம்போல நாதனை நாடும் என அடக்கும் அருமை தோன்றக் கூறப் பட்டது. அடக்குதற்கு அருமை நோக்கி இந்திரியங்கள் சிங்கங் களாக உருவகிக்கப்பட்டன. (323)

**ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்**
**ஐவரு மைந்தரு மாளக் கருதுவர்**
**ஐவரு மைந்து சினத்தோடே நின்றிடில்**
**ஐவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே.** 2027

இம் – எனின், அரசாட்சி முறையில் வைத்து அடக்கும் அருமையறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: நமக்கு ஐந்து மந்திரிகள் உளர்; அவர்களுக்குள் அடங்கித் தொண்ணூற்றாறுபேர் உளர்; அவர்கள் அனைவரும் நம்மை ஆளக்கருதுவர்; அந்த ஐவரும் ஐவகையான கோபத் தோடு நிற்பார்களானால் நம்மால் கப்பங்கட்ட இயலாது என்றவாறு.

பஞ்சேந்திரியங்கள் நம்மை ஆள எண்ணுகின்றன; அவைகள் தத்தம் விருப்பப்படிப் புலன்களை நுகருமாயின் அவற்றிற்குப் புலன்களைத் தேடிக் கொடுத்து அவற்றின்

தேவைகளை நிறைவேற்றுதற்கு நம்மால் இயலாது என்பது கருத்து.

ஐவர் என்றது பஞ்சேந்திரியங்களை. தொண்ணூற்றுவர் என்றது தொண்ணூற்றாறு தத்துவங்களை. தொண்ணூற்றாறு தத்துவங்களும், இந்திரியங்களாகிய மந்திரிகளுக்கு அடங்கி அவற்றின் ஏவல்வழி நடப்பன ஆதலின் 'ஐவரமைச்சருள் தொண்ணூற்றறுவர்கள்' என்றார்.

இவர்கள் அனைவர்களும் நமக்குக் கருவிகளாக அமைந்தவர்கள். அவர்களே நம்மை ஆளக்கருதுவர் என்றது இந்திரியவசமாக இயங்கித் தத்துவங்கள் அனைத்தும் சடம். மாயேயங்கள், நாம் மலநீக்கம் பெற்று உய்ய ஆண்டவனால் கூட்டப்பட்ட ஆகந்துக மலங்கள், அப்படியிருந்தும் நம் அறிவை மயக்கிப் போகத்தழுத்துதலின் கூறப்பட்டதாம்.

ஐந்துசினம் – காண்டலும் கேட்டலும் உண்டலும் உயிர்த்தலும் உற்றறிதலுமாய முயற்சிகளில் முனைந்து நிற்கும் தன்மை.

இறை – கப்பம். அவ்வவ்விந்திரியங்கட்கு வேண்டிய மாலை மாதர் முதலான விஷயங்கள். (324)

**சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ்**
**சொல்லகில் லேன்திரு மங்கையும் அங்குள**
**வெல்லகில் லேன்புலன் ஐந்துடன் தன்னையுங்**
**கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே.**

2028

இம் – எனின், பொறிகள் கொல்ல ஓடும் குதிரையை ஒத்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒளிவிடுகின்ற சுயஞ்சோதியாகிய சிவத்தைச் தோத்தரிக்கும் வன்மையுடையேன் அல்லேன். திருவருளன்னையும் அச்சோதியிற் கலந்து காணப்படுகிறாள்; இந்திரியங்களையும், அதன் வயப்பட்டு அலையும் என்னையும் வெல்லும் ஆற்றலுடையேன் அல்லேன்; கொல்லக் கொண்டு ஓடும் குதிரைமேல் ஏறியவனை ஒத்தேன் என்றவாறு.

சிவத்தைப் புகழ்ந்து திருவருளைப் பெறத்தக்க நான் இந்திரிய வயமாயினேன்; என்னையும் வெல்ல இயலவில்லை; இந்திரியங்களையும் வெல்ல இயலவில்லை; இந்திரியங்கள் கொல்லக் கொண்டோடும் குதிரையை ஒத்தன; அதில் ஏறியிருப்பவனை ஒத்தேன் நான் என்பது கருத்து.

கில் என்பன ஆற்றல் பொருளைத் தரும் இடைச் சொற்கள், இறைவனைச் சுடர்ச்சோதியாகக் கூறியதால், இந்திரிய வயமான ஆன்மா இருள்மயமாய் மயங்கி நிற்பதை அறிவித்தவாறு.

திருமங்கை – ஞானமே வடிவான திருவருள். திருவருள், பால் திணைப்பாகுபாடு கடந்ததாகலின் உளன் என்னாது உள என அஃறிணையாக முடித்தார்; ஆரிடம் பற்றி, 'அவளும் தானும் உடனே காண்க' என்ற மணிவாசகமும் திருவருள் சிவத்தோடு அபின்னமாய் விளங்குதலை உணர்த்துவது.

ஐந்துடன் தன்னையும் – ஐந்துடன் கூடிய ஆன்மாவையும் என்க. முன்னரும் 'பொய்யரைத் துள்ளி விழுத்திடுந்தானே' என்றமை காண்க. (325)

**எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை**
**எண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரும்**
**எண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமேல்**
**எண்ணிலி யில்லதோர் இன்பம தாமே. 2029**

இம் – எனின், மனம் பொறிவழி புகாமற் காப்பதன் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இருட்டறை போன்றது இவ்வுடல். கணக்கற்ற தொளைகளையுடையது; மனம் கணக்கற்ற தொளைகளை உடைய உடலின் வழியே ஊறின்பம் தேடி ஓடுமானால் குற்றம் விளையும்; உயிர் அங்ஙனம் உடல்வழி மனம் போகாமற் காக்குமாயின் அளவிடப்படாத பரசிவம் எங்கும் இல்லாத தோர் இன்பம் நம்பாலதாக்கும் என்றவாறு.

பல்லாயிரம் தொளைகளையுடைய உடல்வழி மனம் ஓடாமல் அகமுகமாகப் பரசிவத்தினிடம் செலுத்தின் அளவில்லாத அருளாற்றலையுடைய பரசிவம் பேரின்பத்தை விளைவிக்கும் என்பது கருத்து.

இல்லி – தொளை, இல்லிக்குடம் என்பது போல். தொளை என்றது உரோமத் தொளைகளை. உடலில் எத்தனை தொளையிருப்பினும் உள் இருண்டிருத்தலின் இருட்டறை எனப்பட்டது. அறியாமைக்கு இடமாதலின் உயிர் இருட்டறை என்பாரும் உளர். அது இல்லியுடைத்தன்றாகலின் இயை பின்மை அறிக.

ஏகில் என்பதற்கு இயைய மனம் என எழுவாய் வருவித்துரைக்க. நான்காமடிக்கண் உள்ள எண் இலி என்பது சிவத்தை உணர்த்தும். எண் – எண்ணம்; அளவுமாம்; ஆகவே மனத்தின் செயலாகிய எண்ணத்தைக் கடந்தவன், எல்லை யில்லாதவன் எனப் பொருள்படும் என்க. எண்ணிலியாகிய பெருமானிடத்து மனம் இடையறாது ஒன்றுமாயின் இன்பமாம் என்க.

இல்லதோர் இன்பம் – கருவி கரணங்களாற் காணப் படாத இன்பம். இதனை மாணிக்கவாசக சுவாமிகள் ''எங்கும் இல்லாததோர் இன்பம் நம்பாலதா'' எனல் காண்க. (326)

**விதியின் பெருவலி வேலைசூழ் வையந்**
**துதியின் பெருவலி தொல்வான் உலகம்**
**மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை**
**நிதியின் பெருவலி நீர்வலி தானே.** 2030

இம் – எனின், விதி நிதி முதலியவற்றின் வலிமையால் இவ்வுலகவாழ்வு அமைவதுபோல, இறைவன் புகழைப் பாடுதலால் அமைவது வீடெனல் நுதலிற்று.

இ–ள்: மக்கட்கு வாழ்க்கையமைவது அவரவர் மதியின் வலிமையாலாம்; பண்பு அமைவது பணத்தாலாம். அதுபோலப் பண்புக்கு அடிப்படையான விதியின் வலியால் அமைவது கடல்சூழ்ந்த உலகம்; இறைவனை என்றும் எக்கணமும் இடைவிடாது துதிப்பதன் வலிமையால் அமைவது மிகப் பழமையான பெரிய வீட்டுலகம் என்றவாறு.

வீடு, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுதல் ஒன்றானே அமைவதாம்; ஆதலால், இந்திரியங்களை அடக்குதல் அருமையாயினும் அத்னை இறைவன்பால் ஒருமுகப் படுத்துக என வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

'கேடு வரும் பின்னே மதி கெட்டு வருமுன்னே' 'மதியால் சதி' என்ற பழமொழிகள் மனிதனுடைய அறிவுக்கும் அவனுடைய நல்வாழ்வு தீயவாழ்வுகளுக்கும் உள்ள இயைபை விளக்குவன. ஆதலால் மனிதனுக்கு வாழ்வு அமைவது

விதியாலாயினும் அதனை வலிதாக – மெலிதாகப் பயனு றுத்திக் கொள்ளும் ஆற்றல் மதியால் ஆம் என்பதாம். விதி யையும் மதியால் வெல்லலாம் என்பதும் இக்கருத்துப் பற்றிய தாதல் காண்க. அதனாலேயே 'மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை' எனப்பட்டது.

நிதி – செல்வம். செல்வத்தினளவாகச் சிந்தையின் நிறைவாகிய பண்புகள் அமையும். செல்வனுங்கூடப் பணமின் மையான் குணங்கெட்டுத் தீயன புரிய காண்கின்றோம். ஆதலால் நிதியின் வலிமையை நீர்மை எனப்பட்டது. நீர் – நீர்மை; அதாவது பண்பு. நிதியென்பதை ஜலநிதி என்ற சொல்லின் ஏகதேசமாகக் கொண்டு கடல் எனப் பொருள் செய்து கடலின் வலிமை பல்வகை நீரான் அமையும் என இயைபில்லுரை கூறுவாரும் உளர்.

விதி – விதிக்கப்பட்டது. இறைவனால் அவரவர் கன்மங்களுள் இப்பிறவிக்கு இவையாம் எனப் பரிபாகமுற்ற வைகளில் பகுத்து விதிக்கப்பட்ட பிராரத்த கன்மங்கள். தமிழ் விதிப்படிச் செயப்படு பொருண்மை உணர்த்தும் இகர விகுதி புணர்ந்து கெட்டது. வடமொழி விதிப்படி அத்தர்ப் பாவிதணி ஆம். உலகமும் அதனை இடமாகக் கொண்டு துய்க்கப்பெறும் புவன போகங்களும் விதிவலியாலே ஆகும். 'ருணானுபந்த ரூபேண பசு பத்னி சுத ஆலயா;' என்பது வடமொழிப் பழ மொழி.

தொல் வான் உலகம் – என்றும் அழியாத நித்திய ஆனந்த பூமியாகிய வீட்டுலகம். துதி – இறைவனது பொருள் சேர்ந்த புகழ். மனங்கசிந்து இறைவனைப் போற்றுகின்ற ஒன்றன் வலிமையாலேயே வீட்டுலகம் சித்திக்கும் என்பதாம்.

இந்திரிய பலத்தை வைத்துக் கொண்டு எல்லாவற் றையும் துய்க்கலாம் என்று எண்ணுகின்ற உயிர்க்கு அவை

அமைவன விதி மதி நிதி இவற்றால். ஆகவே பொறிகளின் வழியடிமையாதலை விடுத்து, சிவத்தோத்திரம் செய்து சிவனுக்கு அடிமையாகுங்கள்; நிலைத்த இன்பம் கிடைக்கும் எனப் பொறிகளை அடக்குவதின் அவசியத்தை வற்புறுத்திய வாறாம். (327)

# 33. ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை

அஃதாவது இந்திரியங்களை அறியாமை நிறைந் துள்ள உயிர்வழிப்பட்ட உளத்தின்வழிச் செல்லாது மடக்கி, அறிவுருவான சிவனிடத்துச் சென்று ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள ஒருவழிப்பட்டு நிரதிசயானந்தத்தை நுகரச் செய்யும் முறைமைகளை உணர்த்துவது. முன்னதிகாரத்து அடக்கும் அருமை கூறிய ஆசிரியர் இவ்வதிகாரத்து அடக்குமுறைமை அறிவித்தலால் அதிகார இயைபு உணர்க.

**குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்**
**வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன**
**பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்**
**திட்டனன் யாமினி யேதமி லோமே. 2031**

இம் – எனின், உடம்பிலுறையும் இந்திரியங்களை அகமுகமாகத் திருப்பி ஆண்டவன்பால் செலுத்தின் துன்ப மில்லையாம் எனல் நுதலிற்று.

இ–ள்: ஒருமுழ ஆழமும் அரைமுழ அகலமும் அவற்றின் மேல் வட்டவடிவான வாவியும் அமைந்த உடம் பில், அவ்வாவியுள் ஐந்து மீன்கள் வாழ்கின்றன. அம்மீன்க

ளைப் பிடிக்க வலைஞன் வலையைக் கொணர்ந்திட்டனன்; அதனால் மீன்கள் இறந்தன; யாம் துன்பம் நீங்கினோம் என்ற வாறு.

இந்திரியங்களையடக்கச் சிவன் திருவருள் வலையை விரித்தான்; மீன்கள் தம் சேட்டையடங்கிச் செத்தன; எமக்கு இந்திரியங்களான் வரும் ஏதங்கள் ஒன்றும் இல்லையாம் என்பது கருத்து.

குட்டம் – ஆழம். ஒருமுழம் – இரண்டுசாண். கழுத்தி லிருந்து மூலம்வரை உடல் ஒருமுழ ஆழம். அதனால் குட்டம் ஒருமுழம் உள்ளது என்றார். உடம்பின் குறுக்களவு அரைமுழம் உள்ளது என்றார்.

வட்டம் அமைந்ததோர் வாவி – வட்டவடிவமான முகம். முகத்தை வாவியாக உருவகித்தது. கண்களாகிய மீன்கள் கிடந்தமைத்தலானும், நுதலாகிய ஓடம் இருத்த லானும், வாயாகிய ஆழ்கிணறுண்மையானும், பற்களாகிய முத் துக்கள் கிடத்தலானும் என்க. பின்வரும் 'பட்டன மீன்பல' என் பதும் இவ்விளக்கத்தை வலியுறுத்தல் காண்க, வாவி – குளம்.

மீன்படுதல் – மீன்கள் அகப்படுதல். இஞ்ஞான்றும் சுறா பட்டது. கெண்டை பட்டது, என்பது வலைஞர் வழக்கு. மீன்கள் என்றது கண், காது, மூக்கு, நாக்கு, உடல் ஆகிய ஐம்பொறிகளை. ஐம்பொறிகளும் ஒருங்கு கூடிய உறுப்பு முகமாதலால் 'வாவியுள் பட்டன மீன் பல' என்றதாம். மெய் ஊறுணர்ச்சி ஒன்றேயுடையது. முகம் அங்கமாய் உடலுமாமா தலால் அதன் கண்ணும் ஊறுண்மை தெளிவு.

பரவன் – செம்படவனாகிய சிவன். வலை வீசிய திருவிளையாடற்கதையை உட்கொண்டு கூறியதன்று. மீன்கள்

பட்டன என்றமைக்கு ஏற்ப, பரவன் வலை வீசினான் என்பதே அமையும். அவ்வரலாறு திருமூலர் காலத்துக்குப் பிந்திய நிகழ்ச்சியாதல் தெளிவு.

மீன்கள் சேட்டையடங்கிப் பட்டமையான் துன்பம் இலோம் என்றார் என்க. ஏதம் – துன்பம். (328)

**கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்**
**அடக்க லுறுமவன் தானே யமரன்**
**விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை**
**நடக்கின் நடக்கும் நடக்கு மளவே.** 2032

இம் – எனின், இந்திரியச் சேட்டையால் பிராணன் வீணாக அழியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவருளைப் பெறுதற்குச் சாதனமாகக் கிடக்கும் உடலில், கிளர்ந்து எழுகிற இந்திரியங்களை அடக்க வல்லவனே அமரன்; ஊனுடம்பு, அருந்தலும் பொருந்தலு மாகிய இரண்டு இன்பங்களையடைய மனம் நாடின் மூச்சு இயங்குமளவே உடல் இருக்கும் எ–று.

பொறியடக்கமின்றிப் புணர்ச்சியும் பொசிப்பும் செய்யின் பிராணவாயு நட்டமுறுதலால் உடல் விரைவில் அழியும் என்பது கருத்து.

கிடக்கும் உடல் – என்றதன் குறிப்பு, சடமாதலை உணர்த்திற்று.

அமரன் – மரணம் இல்லாதவன். இதன்னைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டு 'அமர் விருப்பாகும்' ஆதலால், விரும்பப்படு மவன் என்பாரும் உளர்.

இரண்டு இன்பு – உணவும் இணைவிழைச்சுமாகிய இன்பங்கள். இன்பு விடக்கு உற என்க. விடக்கு – உடல்; கருவி யாகுபெயர். மேவுறு சிந்தை இரண்டு இன்பு விடக்குற உற நடக்கின் நடக்கும் அளவே நடக்கும் எனக் கூட்டிப் பொருள் கொள்க. நடக்கும் அளவு என்றதற்கியையப் பிராணன் என்ற எழுவாய் வருவித்துரைக்க. நடக்கும்அளவு – பிராரத்த நுகர்ச்சிக்காகப் பிராணன் இயங்குகின்ற அளவு என்க. (329)

**அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்**
**அஞ்சு மடக்கும் அமரரும் அங்கிலை**
**அஞ்சு மடக்கில் அசேதன மாமென்றிட்**
**டஞ்சு மடக்கா அறிவறிந் தேனே.** 2033

இம் – எனின், பொறியடக்கம் என்பதென்ன என்று ணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இந்திரியங்கள் ஐந்தையும் அடக்கு அடக்கு என்பார்கள் அறிவற்றவர்கள்; அஞ்சையும் அடக்கிய தேவர் கள் யாருமில்லை; அஞ்சையும் அடக்கினால் அறிவற்ற சடப் பொருளாம் என்று அஞ்சையும் அடக்காது இயங்கச் செய்கிற உபாயத்தை உணர்ந்து கொண்டேன் என்றவாறு.

அஞ்சையும் அடக்கு என்பவர்கள் மதியற்றவர்; அஞ்சையும் அடக்கினால் ஆன்மா சடமாம்; ஆதலால் அஞ்சையும் அடக்காது ஞானசொரூபமாக்கும் முறைமையை உணர்ந்தேன் என்பது கருத்து.

அஞ்சும் அடக்கா அறிவாவது, இந்திரியங்களையும் அவற்றைக் கொண்டு இயங்கும் மனத்தையும் இறையனுப வத்தில் ஆக்கிவிடுதல். ஊனறுக்கும் கத்தியை உடல் கழலை

யறுக்கப் பயன்படுத்துவது போலப் போக நுகர்ச்சிக்கண் புறம்பு ஓடும் இந்திரியங்களை மடக்கி மனத்துள் மன்னிய மன்னாக விளங்கும் சிவபெருமானையறிய அனுபவிக்கத் தகுதிய தாக்குதல். (330)

**முழக்கி எழுவன மும்மத வேழம்**
**அடக்க அறிவென்னுந் தோட்டியை வைத்தேன்**
**பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக்**
**கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே.2034**

இம் – எனின், இந்திரியங்கள் அறிவின் எல்லை தாண்டி அவதியுறுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வீறிட்டுப் பிளிறிக் கிளம்புவனவாகிய மும் மதங்களும் ஒருசேரப் பொருந்திய யானைகளை அடக்க அறிவாகிற தோட்டியை வைத்தேன்; அந்த யானைகளே தப்பியோடிப் பெருங்கேடுகளை நிறையச் செய்து கொழுத்தன வாய்க் கரும்பை அழிக்கின்றன என்றவாறு.

பொறிகளை அறிவால் அடக்கிவைத்து, அவை தப்பிச் சென்று உடலைக் கொடுக்கின்றன என்பது கருத்து.

யானைகளில் மூன்று மதமும் ஒருசேரப் பொழிவன இல்லை. பொறிகளாகிற யானைகளோ மூன்று மதத்தையும் பொழிவன; மிகத் தீமையைப் புரிவன என்பதற்குக் கொடுக்கப் பெற்ற உருவகம் இது.

அறிவு – நன்மை தீமைகளைப் பகுத்து நல்லனவே நாடவேண்டும் எனப் பரிபாகம் உற்ற ஞானம். கண் காது முதலியன எப்பக்கம் திரும்பினும் ஆங்காங்கு நல்வழிப்

படுத்தற்கு அறிவை வைத்தேன் என்பார் அறிவைத் தோட்டி யாகக் கூறினார். 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்' என்ற குறளும் காண்க.

யானை ஓடாதவண்ணம் தோட்டியைக் காலில் சார்த்தி வைப்பது பாகர் வழக்கம். கோட்டைக்குள் அடைபட்ட உயிர் கோட்டையைத் தாண்டிச்செல்ல இயலாததுபோலப் பொறி களும் அறிவைத் தாண்டி எதனையும் நுகராது என்னும் எதிர் நோக்கால் வைத்தேன் என்ற கருத்தை உட்கொண்டு 'கோட் டையை வைத்தேன்' எனப் பாடங்கொள்வாரும் உளர்.

ஓடிப்பிழைத்தன என மாறுக. பெருங்கேடு மண்டின என்ற பாடங்கொள்ளின் விருப்பின் ஓடிப் பெரிய துன்பத்தில் அகப்பட்டுக் கொண்டன எனப் பொருள் கொள்க.

வேழம் – கரும்பு – வேழம் குலைக்கின்றவாறு. கருப் பங்காட்டை யழிக்கின்றனவே. கரும்பு என்பது உடலை; இறைவனை எனலுமாம். அப்பொருளில் இறைவனை அனுபவிக்க இயலாதவாறு உயிரைக் கெடுக்கின்றன எனப் பொருள் கொள்க. (331)

**ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது**
**ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே.** **2035**

இம் – எனின், பொறிகளை புறம்போகாதடக்கித் திருவைந்தெழுத்தையே எண்ணுக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவைந்தெழுத்தில் பொறிகள் அடங்கின் உலகம் அனைத்தும் தம்வசமாம்; அருந்தவமாம்; பெரிய பெருமானுடைய திருவடிப் பேறும் திருவருட் பேறுமாம் என்றவாறு.

பொறிகளின் வழி மனம் போகாது நிறுத்தத் திருவைந்தெழுத்தை எண்ணின் பொறிகள் அடங்கும். அதனால் இம்மையில் உலக வசியமும் மறுமைக்கு வேண்டிய தவமும் திருவடிப்பேறும் திருவருட்பேறும் உண்டாம் என்பது கருத்து.

ஐந்து – சீபஞ்சாக்கரம். சீபஞ்சாக்கரத்தால் பொறிகள் ஒடுங்குமாறு; சத்தம் ஆகாயத்தின் குணம். அது பராகாய ஞானாகாய வடிவான சிகாரத்தால் ஒடுங்கும்; எனவே காது சிவ ஒலியைச் சூக்குமமாக உணர்ந்து சிவஞானத்தில் திளைக்கும் என்பதாம்.

ஸ்பரிசம் வாயுவின் குணம். வாயு ஆகாயம்போல அருவாய், ஆகாயத்தைவிட்டுப் பிரியாததாய் ஆன்மாக்க ளுக்குத் தாரகமாய் இருப்பது. ஆகாயமும் வாயுவும் தம்முள் என்றும் பிரிப்பற்றன சிவமும் சத்தியும் போல; ஆதலின் ஸ்பரிச குணமுடைய உடலிந்திரியம் திருவருட் சத்தியாகிற வகாரத் தால் ஒடுங்கும். எல்லாம் அம்மையப்பராகிய சிகார வகாரங் களாகக் காணும் ஆற்றலை அளிக்கும்.

உருவம் தேயுவின் குணம். தேயு ஒளியாய்ப் பொருளை உணர்த்தியும், பொருளை உணர்ந்தும் விளங் குவது. அது கண்ணிந்திரியம் காரியம் உருவம். அப்பொறி காண்பதும் காட்டுவதுமாய செயல்புரியும். உயிர் எழுத்தாகிய

29 யகாரத்தால் அடங்கும்.

இரதம் நீரின் குணம். சுவை பொருளைப் பற்றி நிற்கும் பண்பு. அது பற்றி நிற்கும் பொருளைக் கொண்டலல்லது அதனை அறியமுடியாது. அதுபோல ஆணவமலம் அது பற்றி நிற்கும் ஆன்மாவின் செயலாலன்றிஅதன் உண்மை அறியப்படாது. ஆதலால் இரதத்தை உணரும் பொறியாகிய நா மல எழுத் தாகிய நகாரத்தாலொடுங்கும்.

கந்தம் – மணம். அது பூமியின் குணம். பிருதிவி மாயா காரியம். அது 'ம' என்னும் எழுத்தால் ஒடுங்கும். ஆகவே நுண்பொறிகள் ஐந்தும் திருவைந்தெழுத்தால் புறம் போய் மலகன்மங்களிற் சிக்கி மடியாதவண்ணம் ஒடுங்கச் செய்வன ஐந்தெழுத்துக்களே என இந்திரியம் அடக்கும் முறைமை உணர்த்தியவாறு.

இம்மந்திரத்திற்கு இவ்வாறன்றி இல் ஐந்து ஒடுங்கில். பொறிகள் உடம்பினுள் அடங்கில் என உரைப்பாரும் உளர். இப்பொறிகள் அறிகருவிகளாதலின் அறிவாகிய உயிருளன்றிச் சடமாகிய உடலில் ஒடுங்காமை அறிக.

பொறிகள் ஒடுங்கினால் எனவும் உரைப்பர் சிலர். அது பயன் கூறியதாமேயன்றி உபாயம் உரைத்ததாகாமையின் அதிகார இயைபிலதாய் முடியும். நோக்கிச் சிறந்தன கொள்க.
(332)

**பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர்**
**நினைந்தென்**
**விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்**
**பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கும்**
**அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே.**
2036

இம் – எனின், உள்ளம் ஒடுங்கப் பொறிகள் அடங்கும் என்று உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மிகுதியாகப் பிதற்றி என்ன பயன்? கானல் நீர் போலும் உலகை நினைந்து என்ன பயன்? பரக்க விரிந்துள்ள பொருள்கட்கெல்லாம் வித்தாவது உள்ளம்; அவ்வுள்ளம் பெருக்க உலகம் பெருக்கும்; உள்ளம் சுருங்க உலகம் சுருங்கும்; இதனை ஆராய்ந்து கொள்ளவல்ல பேர்க்கு இவ்வளவுதான் உண்மைப் பொருளாம் என்றவாறு.

பல பல பேசியும், இவ்வுலகம் கானல்நீர் என்று கருதியும் பயனில்லை. பிரபஞ்சவித்து உள்ளம். அது சுருங்க உலகம் சுருங்கிவிடும், விரியப் பிரபஞ்சம் விரியும். இவ்வளவுதான் உண்மை என்பது கருத்து.

பெருக்கப் பிதற்றுதல் – உலகத்திலும் போகத்திலும் ஈடுபட்டுப் பலவாறு உலகைப்புகழும் பெத்த நிலை. பேய்த்தேர் நினைத்தல் – உலகமும் போகமும் கானல் நீர் போலத் தோன்றிமறைவது. காட்சிக்கன்றி நுகர்ச்சிக்கு நீடித்திராதது என்று கருதும் முமுசுவின் நிலை. இவ்விரண்டு நிலையும் வெறும் பேச்சிலும் எண்ணத்திலு மட்டும் இருக்குமானால் பயனில்லை என்றவாறாம்.

விரித்த பொருள்: பிரபஞ்சம் என்பதன் தமிழாக்கம். மனமே அவ்வப் பொருள்களைச் சென்று பற்றி அவ்வப் பொருளாய் அவ்வப் பொருளின் இன்றியமையாமையை எண்ணி எண்ணிப் பற்றுள்ளத்தை மிகுவித்து மேல் வினைக்கு வித்தாய் விளைவிப்பதாகலின் 'விரிந்த பொருட்கெல்லாம் வித்தாவது உள்ளம்' என்றார்.

அவ்வுள்ளம் சென்று சென்று பற்றி விரியுமானால் பிரபஞ்சமும் விரியும்; சுருங்குமானால் உள்ளமும் சுருங்கி ஒன்றைப்பற்றியே உயரும்; அவ்வொன்று இறைவன் திருவருள். இவ்வுண்மை தத்துவசோதனை பண்ணுபவர்க்கே விளையும் என்பதாம். (333)

**இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த**
**கிளைக்கொன்று மீசனைக் கேடில் புகழோன்**
**தளைக்கொன்ற் நாகமஞ் சாடல் ஒடுக்கத்**
**துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே.**
2037

இம் – எனின், பொறிகளை அகமுகமாக்கின் ஐந்து மடங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கேடில்லாத புகழை உடையவனாகிய உயிர். இங்ஙனம் பொறிவயப்பட்டுத் தாம் வருந்துமாற்றை உணர்ந்து, இனிய உயிராய் வாழுமாறு வைத்த அடியார்களாகிய சுற்றத்திற்குப் பொருந்திய ஈசன்பால் பாசங்களினின்றும் விடுபட்ட பொறிகள் ஐந்தையும் பிரியாதே ஒடுங்கச் செய்ய, நாடிகளாகிய துளைவழியே பற்றியனவாய், அவ்வழியே சென்று சுழுமுனையில் இன்பத்தைப் படைத்து ஓய்ந்திருக்கும் என்றவாறு.

ஐம்பொறிகளாகிய நாகத்தை ஈசன்பால் ஒடுக்க அவை புற்றிலடைந்த பாம்புபோலச் சுழுமுனைக்கண் உறங்கிக் கிடக்கும் என்பது கருத்து.

கேடில் புகழோன் இன்னுயிர் இளைக்கின்றவாறு அறிந்து கிளைக்கு ஒன்றும் (வண்ணம்) வைத்த ஈசனை

தளைக்கொன்ற நாகம் அஞ்சு ஆடல் ஒடுக்க துளைக்கொண்ட (தாய்) அவ்வழி தூங்கும் என இயைத்துப் பொருள் காண்க.

கேடில் புகழோன் – நித்தியனாகிய ஆன்மா. அவன் பாசவயப்பட்டு அழியும் தன்னை இறைவழிப்படுத்தி உய்தலாகிய பெரும்புகழ் தேடிக்கொண்டான் ஆதலின் 'கேடில் புகழோன்' எனப்பட்டான். கேடில் என்ற அடைமொழி புகழுக்கு இயையாமல் புகழோனுக்கு அடையாயிற்று என்க. கேடில் புகழ் – மெய்ம்மைசேர் புகழ் எனக் கொண்டு கேடில் புகழோன் – இறைவன் எனப் பொருள் கொள்வாருமுளர். அங்ஙனம் கொள்ளின் வினைமுதல் இல்லாமை உணர்க.

இன்னுயிர் – பேரின்பத்தையே நுகர்தற்குரியதாகிய உயிர். சிவத்தைச் சார்ந்து சிவபோகத்தை நுகர்ந்து ஆனந்த வடிவாகத் திகழவேண்டிய உயிர் என்றதாம்.

இளைக்கின்றவாறு அறிந்து – பொறிகளின் வயப் பட்டுப் புலன்களைத் தேடி அலைந்து வருந்துமாற்றை உணர்ந்து என்பதாம். வைத்த என்ற பெயரெச்சத்திற்கு ஏற்ப இன்பநிலையமான திருவடிக்கண் வைத்த எனச் சிலசொல் வருவிக்க.

கிளை – சுற்றம்; ஈண்டுத் திருவடிப் பேற்றினை விரும்பும் உயிர்கட்கு உற்ற சுற்றம் அடியார்களாகிய சிவாநு பவச் சீமான்கள் ஆதலின் அவர்களை என்க. இறைவன் அவர்கள் பால் என்றும் உறைவானாதலின் 'கிளைக்கு ஒன்றும் ஈசன்' என்றார்.

ஈசனை ஈசன்பால் என இடவேற்றுமையாகக் கொள்க. ஈசன்பால் ஒடுக்க என்க. இன்னுயிர் இளைக்கின்றவாறு

அறிந்து கிளைக்கொன்றும் ஈசனை வைத்த கேடில் புகழோன் என இயைந்தும் இப்பொருள் கொள்ளலாம்.

தளை – பாசம். தலைக்கொன்ற நாகம் – பாசக்கட்டினின்றும் விடுபட்ட பொறிகள் போகத்தை விரும்பிப் புலன்களைப் பற்றாத பொறிகள் என்பதாம். ஆடல் – அவற்றின் சேட்டை.

படமெடுத்து ஆடுதலைப் பாம்பாட்டி ஒடுக்க அப்பாம்பு பெட்டியுள் அடங்கிக் கிடப்பதுபோலப் பொறிகளும் அவ்வத்துளை வழி ஒடுங்கி மனமும் சுழுமுனையுள் ஒடுங்கி அலைவின்றி அடங்கும் என்றவாறு. (334)

**பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி**
**சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு**
**வாய்ந்துகொள் ஆனந்த மென்னும்**
**அருள்செய்யில்**
**வேய்ந்துகொள் மேலை விதியது தானே.**
2038

இம் – எனின், பொறிகளையடக்கித் திருவருளிற் றோய்தலே விதி என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மனம் ஐம்பூத காரியமான உலகமும் போகமும் ஆகப் பரவி விரிந்தன; அங்ஙனம் விரியாதவாறு ஒருகாலைக்கொருகால் மிக்குப்படரும் ஒளியைச் சாரும் சிவஞானமாகிய கட்டுத்தறியில் சிவானந்த வடிவாகிய திருவருளின்பால் தோயச் செய்யின் அதனை ஆய்ந்து இதுவே உறுதி எனக் கொள்வாயாக; இதுவே மிகப் பழைமையான முறை என்றும் சிரமேற் சூடிக் கொள்வாயாக என்றவாறு.

உலக இன்பத்துச் செல்லும் பொறிகளை ஞானத் தறியிற்கட்டித் திருவருளிற்றோயச் செய்வதே உறுதியென ஆய்க; இதுவே வேதவிதியெனச் சூடுக என்பது கருத்து.

பூதங்கள் ஐந்து என்றது ஆகுபெயராகப் பூதகாரியங் களான புவனபோகங்களை உணர்த்தின. ஆகவே பிரபஞ்சத் திலும் போகத்தும் பரவின என்பதாம். பாய்ந்தன என்பதற் கியைய மனம் என எழுவாய் வருவித்து முடிக்க. பூதங்கள் ஐந்திலும் பாய்ந்தனவாகிய மனம் எனப் பொருள் கொள்க.

படர் ஒளி – அறிதோறும் அறியாமை கண்டாங்கு. கண்டனவெல்லாம் அறியாமையாக – மேலும் மேலும் காண்பனயாவும் அறிவாகக் காட்டும் மிக்க அறிவு.

ஞானத்தறி – சிவஞானமாகிய கட்டுத்தறி. சிவ ஞானத்தைச் சேர்ந்தார் வேறொன்றையும் சேரார் ஆதலின் அது ஒடுங்கிக் கட்டுண்டு நிற்கும் தறியாயிற்று.

ஆனந்தம் என்னும் அருள் – என்றும் மூவாதே இளையாதே ஒருபடித்தாய் நிற்பதாகிய சிவானந்தம் என்னும் திருவருள். அருள்செய்யின் – திருவருட்கண் நிலைத்திருக்கச் செய்யின் என்க.

ஆய்ந்துகொள் – அதனை நழுவவிடாது நிலைத்து நின்று பழகுக என்பதாம்.

மேலைவிதி – தொன்மையான வேத ஒழுங்கு. ஆசாரியன் ஆணையைச் சிரமேற் சூடினேன் என்பது போல இதுவே மேலைவிதியாம், வேய்ந்துகொள் என்றதாகக் கொள்க. வேய்தல் – சூடுதல். (335)

நடக்கின்ற நந்தியை நாடொறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. 2039

இம் – எனின், மனம் ஒடுங்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எல்லாவுயிர்களிடத்தும் இயங்கி இயங்குகின்ற பரசிவத்தை இடைவிடாது நாடோறும் தியானிப்பதனாலும், எல்லாப் பொருளினிடத்து சென்று படரும் மனத்தைச் சிறிதாக ஒடுக்கி ஒரேயிலக்கைப் பற்றிய சிந்தையால் ஆசாரியன் காட்டிய குறிப்பின் வழியே நோக்குவதாலும் வடக்கும் தெற்கும் எங்கும் மனம் கோயிலாகும் என்றவாறு.

மனம் பொறிவழிச் செல்லாது அடக்கி, மனத்தை ஒரு வழிப்படுத்தி இறையருளையே எண்ணச் செய்யின் எங்கும் என்றும் மனமே கோயிலாக மகேசன் மன்னுவன் என்பது கருத்து.

நந்தி – சிவபெருமான். எல்லாவுயிர்கட்கும் உயிர்ப் பாய் உடனொன்றி அவைகளை யியக்கித் தானும் இயங்கு வதால் நடக்கின்ற நந்தியை என நிகழ்காலத்தாற் கூறிய அருமை, இறைவனுடைய அநாதி நித்தியத் தன்மையை அறிவிப்பது.

நாடொறும் என்பது மூச்சை இழுக்கும் போதும் விடும்போதும் எப்போதும் என்ற பொருளில் வந்தது. முன்னில் – எண்ணில். எனவே எண்ணுவதனாலும் நோக்குவ தனாலும் மனக்கோயிலில் இறைவன் ஆம் எனக் கூட்டுக.

படர்கின்ற சிந்தை – போகப் பொருள்களனைத்தினும் சென்று பற்றி அவற்றின் வடிவாய் உழலுகின்ற மனம். பைய ஒடுக்கி எனவே மனம் ஒடுக்குதற்கு அருமை தோன்ற நின்றது. 'மிடக்கொடு கட்டின் கீழே விழுத்திடும்' என முன்னரும் அறிவித்தார் ஆதலின் இங்ஙனம் கூறினார்.

குறிக்கொண்ட சிந்தை – இலட்சியத்தை நோக்கி எதிர் செல்கின்ற மனம். இது புறத்தே செல்லாது அகமுகமாகி ஆண்டவன் திருவடி நோக்கிச் செல்கின்ற அநுபவ முதிர்ந்த மனத்தைக் குறித்தவாறாம்.

குறி – ஆசாரியன் உபதேசித்த மந்திர பாவனையால் இங்ஙனம் இரு என்று காட்டிய அடையாளம் அல்லது இலக்கு. குறி – திருமேனியுமாம்.

வடக்கொடு தெற்கு என்றது உலகில் நீண்ட எல்லை. அவற்றை உணர்த்தலே கிழக்கும் மேற்கும் ஆகிய அகலமும் அனைத்தும் என்பது உணரப்படும்.

மனக்கோயில் ஆம்; நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன் சிவமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. மனக் கோயிலில் சிவம் ஆம் என்க.

பொறிவழிச் செல்லும் மனம் அடக்க முடியாதது என்றும், அதனை ஆசாரியனுபதேசித்த மந்திர தியானத்தால் அடக்கலாம் என்றும் அங்ஙனம் அடக்கின் இறைவன் மனக்கோயிலில் என்றும், எழுந்தருளி விளங்குவன் என்றும் உணர்த்தப் பெற்றமையின் அதிகார இயைபு காண்க. (336)

சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதில் தாங்கலு மாமே. 2040

இம் – எனின், நிலையாமையை உணர்ந்து பொறிய டக்கிச் சிவத்தியானம் செய்க என வற்புறுத்தல் நுதலிற்று.

இ–ள்: சிலவும் பலவுமாகிய நாள்களும் நாழிகை களும் கழிந்தன. நீளும் பொருளாகிய உடலும் உலகமும் நீர்மேல் எழுதிய எழுத்தை ஒத்து உடனழிவனவாக நின்றன; ஆதலால் விரைந்து புலன்களை வென்று அவற்றின்பத்தை விடுங்கள்; மலை வீழுமானால் அதனைத் தடுக்க இயலுமா? சிந்தியுங்கள் என்றவாறு.

மலையுருண்டால் தடுக்க இயலுமா! நிலையற்ற உடல ழிவதற்கு முன்பு புலன்களை வென்று அடக்குங்கள் என்பது கருத்து.

நீர்மேல் எழுத்து உடன் அழிவது. அதுபோல நின்றது நீள்பொருள் என்பது, நீள்பொருள்: முக்கால வினைத்தொகை. வளரும் பொருளாகிய உடல் நிலையாத உடலை வளரும் பொருளென எண்ணும் அறியாமைக்கு இரங்கிக் கூறியது. இகழ்ச்சிக் குறிப்பு.

வெல்லுங்க என்னாது வென்றுவிடுமின்கள் என்றது பொறிகள் மீண்டும் வாசனையாகவேனும் வந்து பற்றும்; அங்ஙனமும் பற்றவிடாது ஒதுக்குங்கள்; அதற்குரிய உபாயம் சிவத்தியானம் ஒன்றே என்பது உணர்த்தியவாறு.

உடலழிதல் மலையுருதலைப் போன்றது; அதனைத் தடுக்க இயலாதென்பார் 'குன்றுவிழ அதில் தாங்கலும் ஆமே' என்றார். அதில்: வேற்றுமைமயக்கம். (337)

**போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்**
**போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியால்**
**நாற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை**
**ஊற்றுகை யுள்ளத் தொருங்கலு மாமே. 2041**

இம் – எனின், வாசனா மலம் தாக்காத வண்ணம் காக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருவடிப் புகழ்களைச் சொல்லிப் போற்றி இயல்பிலே தூயோனாகிய சிவபெருமான் திருமேனியை மீளவும் போற்றிசெய்; அங்ஙனம் செய்யின், ஐந்து புலன்களையும் புத்தியாலும் நாற்றிசைக்கும் உட்பட்ட ஞாலங்கட்கும், காலத்தாற் பின்னைக்கும் நாதனாகிய சிவனை ஞானானந்த அமுதஞ் சுரக்கும் உள்ளத்தாலும் ஒருப்படுதலும் ஆம் என்றவாறு.

இறைவன் புகழைக் கூறின், புலன்கள் சிவஞானத்தின் வழி நிற்க மனம் சிவத்தோடு ஒன்றுபடுதலாகிய சிவானுப வத்தில் திளைக்கலாம் என்பது கருத்து.

புனிதன் – தூயவன். இறைவன் இயல்பாகவே பாசங் களில் நீங்கியவன் ஆதலின் புனிதன் என்பது காரண இடு குறியாய் அடைமொழியின்றிச் சிவத்தையே உணர்த்தும் என்க.

போற்றி இசைத்தல் – போற்றிசைத்தல்; அடியேனைக் காத்தருள்க என வேண்டிக்கோடல். போற்று இசைத்தல் எனப்

பிரித்துப் போற்றுதலைக் கூறுதல் என முதனிலைத் தொழிற் பெயராகக் கொள்ளினுமாம். புனிதன் திருமேனி மந்திரவடிவ மாதலை.

''சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றிய வாத லானும்
சத்திதான் பிரேரித் துப்பின் தானதிட் டித்துக்கொண்டே
யத்தினாற் புத்தி முத்தி யளித்தலால் அரனுக் கென்றே
வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைக ளெங்கும்

மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேள் நீ
முந்திய தோற்றத் தாலும் மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகும் அன்றே''

எனவரும் சிவஞானசித்திச் செய்யுள்களானும் அறிக.

ஆகவே இறைவனுக்குப் பஞ்சமந்திரங்களே சிறப்புரு எனல் அறியப்பெறும். அவற்றுள்ளும் திருவைந்தெழுத்தே இறைவனது உண்மையுரு. அதனை இடைவிடாது கணிக்கின் வாசனாமலமும் தாக்காமையின் உள்ளம் சிவத்தோடு என்றும் சார்ந்து சிவபோகத்திலழுந்தி நிற்கும் என்க. இதனையே 'மீட்டே போற்றி செய் புலனைந்தும் புத்தியால் உள்ளத்து நாதனை ஒருங்கலுமாமே' என்ற பகுதி விளக்குகின்றது. ''பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி; விதி எண்ணும் அஞ்செ ழுத்தே'' என்னும் சிவஞான போதச் சூத்திரத்தானும்,

''அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டானை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் – அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்
அண்டனாம் சேடனாம் அங்கு''

என்னும் மேற்கோள் வெண்பாவானும் தெளிக.

நாற்றிசைக்கும் நாதன் என்பது அனைத்தண்டங்களிலு முள்ள அனைத்துலகுக்கும் நாதனென இடச்சேடமின்மையும், 'பின்னை நாதன்' என்பது இறப்பும் நிகழ்வுமாகிய காலங்கட்கு நாதனாக விளங்கியதைக் காட்சிப் பிரமாணத்தானும் ஆகமப் பிரமாணத்தானும் அறிந்தோம். ஆதலின் பின்புள்ள எதிர் காலத்திற்கும் இவனே நாதன் எனக் காலச்சேடமின்மையும், யார்க்கும் நாதன் என்பது மால் பிரமன் இந்திரன் வானவர் தொழ நின்ற பெருமான் எனச் சித்தாகிய ஆன்மச் சேடமின் மையும் உணர நின்றன.

ஊறுகை என்பது, எதுகை நோக்கி ஊற்றுகை எனவா யிற்று. ஊற்றுகை – ஊறுதலையுடையது. தொழிலாகு பெயராச் சிவானந்தத்தை உணர்தியது. சிவானந்தத்தில் திளைத்துச் சிவத்தோடு ஒன்றி விளங்கும் என்பது கருத்து. (338)

**தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே**
**அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்**
**சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்**
**வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே.**
**2042**

இம் – எனின், உடலுள் உள்ளத்தைப் பதித்தலால் ஆணவம் மிகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உடலினுள் தரிக்கின்ற நெஞ்சத்தால் உடலுள் அரித்துத் தின்னுகின்ற ஐம்புலன்களாகிய கள்வரை யாரும் உணரமாட்டாதார்ஆவர்; நகைக்குமளவில் சிலபலவற்றைப் பேசினால் உறுதிகொண்ட ஆணவமலம் சூழ்ந்த மலை ஆம் உயிரொடு கூடிய உடல் என்றவாறு.

உடற்கண் பற்றுக் கொள்ளின் புலன்களரிக்கும்; இதனை யாரும் உணரார்; புலன்களுக்கு அடிமைப்பட்டு நகைக்கின் ஆணவமலம் மிகும்; ஆதலால் புலன்களை ஒடுக்கு என்பது கருத்து.

இது புலன்களை ஒடுக்காமையான் வரும் தீங்கு உணர்த்தி, அதனால் புலன்களை ஒடுக்குக என வலியுறுத்துதல் நுதலிற்று.

தரிக்கின்ற நெஞ்சம் – உடலால் தாங்கப்படுகின்ற உள்ளம். சகளம் – உடல். நெஞ்சம் உடலைக் கடந்து உணர் வைப் பொருந்தின் இந்திரியச் சேட்டைக்குத் தப்பிப் பிழைக் கும், அங்ஙனமன்றி உடலுட்கிடப்பின் இந்திரியங்களால் அரிப் புண்டு சாம். இவ்வுண்மையை உலகவரிற் பெரும்பாலோர் உணரார் என்பதாம்.

காமுகர் வேழம்பர் விடர் மாதர் கூட்டத்திலிருந்து பயனின்றிப் பல பேசிச் சிரித்து விளையாடுதலைச் 'சிரிக்கின் றவாறு சிலபல பேசில் என்றது.

வரி – உறுதி, – மை – கருமை; ஆணவமலம். மைசூழ் வரை – ஆணவம் மிகுந்த மலைபோன்ற உயிர்கொள் உடல்.

புலன்களை விட்டுச் சிவத்தைச் சார்ந்த உயிர் கொள் உடல், ஒளிசூழ் மேருவரை; அங்ஙனம் செய்யாத உயிர் கொள் உடல், மைசூழ் உருவரை என்க. (339)

**கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்**
**எய்தி யவனை யிசையினால் ஏத்துமின்**
**ஐவ ருடைய அவாவினில் தோன்றிய**
**பொய்வ ருடைய புலன்களும் ஐந்தே. 2043**

இம் - எனின், புலனொடுக்கத்திற்கு இறைவனை எண்ணுதலே உறுதியானதும் இறுதியானதும் ஆய உபாயம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் புலன்களை யடக்க விட்டொழியத்தக்கன ஒன்றும் இல்லையாம்; அப்பரம் பொருளாகிய சிவத்தை மனத் தாலும் வாக்காலும் ஏத்துமின்; பொறிகளின் விருப்பத்தால் விளைந்த பொய்யை வருடுகின்ற நுண்ணிய புலன்களும் ஐந்தாம் என்றவாறு.

பொய்யையே வருடும் புலன்கள் ஐந்தாம்; ஆதலால் கைவிடத்தக்கன ஒன்றும் இல்லை; பொறிகளை அடக்கச் சிவனைச் சிந்தையால் தியானிங்கள் என்பது கருத்து.

முன் 2033 ஆம் திருமந்திரத்து ''அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு அஞ்சும் அடக்கா அறிவறிந்தேனே'' என்ற ஆசிரியர் இம்மந்திரத்து அவ்வறிவாவது ''கைவிட லாவது ஒன்றில்லை கருத்தினுள், எய்தியவனை இசையினால் ஏத்துமின்'' என்று உபதேசிக்கின்றார்.

எய்தியவன்: வினையாலணையும் பெயராய் ஞான மொன்றானே உணரப்படுபவனாகிய நாதனை உணர்த்திற்று. ஐவர் - பஞ்சேந்திரியங்களாகிய பகைவர்கள். புலன்கள் பொறிகளின் அவாவால் விளைவனவே என்றவாறு.

பொய் வருடு ஐய புலன்கள் - பொய்மையையே பொருந்திய நுண்ணிய புலன்கள். பொய்வருடைய புலன்கள் எனக் கொண்டு பொய்யான ஆடுகளை ஒத்த புலன்கள் என்பாரும் உளர். புலன் அறிவாகிய பண்பாதலின் அவற்றை வருடையாகிற பொருளுக்கு உவமித்தல் வழுவாதலானும்

அதனாற்போந்த பயனின்மையானும் அவ்வுரை சிறப்பில தென்க. (340)

# 34. அசற்குருநெறி

அஃதாவது குருவாக விளங்குதற்குரிய பண்பு சிறிதும் இல்லாது, குரு என்ற பதவியிலிருப்பவருடைய முறைமைகளை உணர்த்தும் பகுதி. பொறியடக்கம் கூறியபின், அதனுடைய இன்றியமையாமையை உணர்ந்த மாணாக்கன் ஆசாரியனைத் தேட முற்படுவன். அப்போது பொறியடக்கமில்லாதான் ஆசாரியனாக நேரின் அதனால் விளையும் தீமைகள் பலவாம். ஆதலால் இந்திரியம் அடக்கு முறைமையை அடுத்து, அடக்காத அசற்குருவின் நெறி அமைக்கப் பெற்றது.

**உணர்வொன் றிலாமூடன் உண்மையோ**
**ராதோன்**
**கணுவின்றி வேதா கமநெறி காணான்**
**பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்**
**அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே.** 2044

இம் – எனின், அசற்குருவின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒருதுறையிலும் அறிவில்லாத மூடன். உண்மைப் பொருளை ஆராயாதவன். உபதேச மரபும், வேதாகமநெறிகளை உணர்தலும் இல்லாதவன், அடக்கமில்லாதோன், பிறரை நிந்திப்போன், ஆன்ம போதமே மிக்கவன்; இவர்கள் அசற்குருவாவார் என்றவாறு.

இவ்வியல்புடையார் அசற்குரு ஆவார் என்பது கருத்து. உண்மை – உண்மைஞானமாகிற பரஞானம். ஏனைய வெளி. (341)

மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்
டந்தக ராவோர் அசற்குரு வாமே. 2045

இம் – எனின், மரபுவழியில் வாராதார் அசற்குரு ஆவார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மந்திரம், தந்திரம், பெரியயோகம், ஞானம், கட்டு, வீடு இவைகளைக் கண்டு இவைகளின் பயனை நுகர்ப வர்களை மனத்தாலும் சிந்திக்காமலும், தெளிவு பெறாமலும் வயிற்றுச் சோற்றுக்காகக் குருடராய்த் திரியும் குருக்கள் அசற் குருவாவர் என்றவாறு.

மந்திரம் முதலாகக் கூறப்பட்ட யாவும், சோபானக் கிரமமாய், பரிபாக நிலைக்கும் முத்திக்கும் ஏதுவாவன. ஆதலால் அவற்றினின்று தெளிந்தோரைத் தெளிந்து, பயிற் சியின் முதிர்ச்சியினால் பிறரையும் தெளிவிக்கும் அருளாற்றல் இல்லாதார்அசற்குரு ஆவார் என்பது கருத்து.

மந்திரம் – மனம் ஒருவழிப்பட்டு அருளில் நிலைப்ப தற்குரிய உபாயமாகிய இறைவனது ஞானமேனி. அதில் சித்தி பெற்றோர் அருளிக் கூறினும் வெகுளிக் கூறினும் அவ்வப் பயனை அவ்வப்போதே பயக்கும் ஆற்றல் உடையவராவர். அது உயிர்களைப் பரிபாக முறுத்தும் கருவியாம் ஆதலின் முதற்கண் அதில் நின்று சித்தி பெற்றோரே சற்குரு ஆவர்; பெறாதோர் அசற்குரு ஆவர் என்க.

தந்திரம் – ஆகமம். அது மந்திரங்களைப் பயன்படுத்து கின்ற விதிமுறைகளாகிய தீட்சை முறைகளைத் தெரிவிப்பது.

மாயோகம் – சிவயோகம். ஹடம் – யோகம். மா யோகம் – சிவயோகம் என்க.

யோகம் சித்தித்தவழி விளைவது ஞானம். அது பாச ஞானம், பசுஞானம், பதிஞானம் என மூவகைப்படும். மாஞானமாவது பதிஞானம் என்க.

பந்தம் – மலமாயை கன்மங்களோடு கூடிய பெத்த நிலை. வீடு – அவற்றின் நீங்கிய இன்ப நிலை.

இவற்றைத் தரிசித்துப் பார்ப்பவர் – இவைகளைச் சிந்தித்து அனுபவஞானம் பெற்ற சிவானுபவச் செல்வர்கள் இவர்களே மந்திர முதலியவற்றைப் பிறர்க்கு உபதேசிக்கும் உரிமையுடையார் இவர்கள் வாயிலாக உபதேசம் பெறாதார் குருவாகார் என்பார் 'பார்ப்பவர் சிந்தனை செய்யாத் தெளிவி யாது ஊண்பொருட்டு அந்தக்ராவோர்' என்றார்.

முன் 1680–ம் திருமந்திரத்துக் ''குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக் குருடும் குருடும் குழிவிழுமாறே'' என்றா ராகலின் ஈண்டு 'அந்தகராவோர்' என்றது அசற்குருவாய குருடர்களையேயாம் என்க. அந்தகர் என்றது உண்மை ஞானத்தை உணரும் அகக்கண் அற்றோரை. (342)

**ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்**
**காமாதி நீங்காக் கலதி கலதிகட்**
**காமா றசத்தறி விப்போன் அறிவிலோன்**
**கோமா னலனசத் தாகுங் குரவனே.** 2046

இம் – எனின், அசற்குருவியல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பேரின்ப நெறிக்கு ஆம் முறைமைகளை உணராதான் மூடன்; காமம் முதலிய ஆறுபகைகளிலிருந்து நீங்கப்பெறாத பாவி அதிமூடனாவான்; பாவிகட்கு ஆக்கம் விளையும் வண்ணம் நிலையற்ற பொய்ப் பொருளை மெய் யென்று உணர்த்துவோன் சிவஞானம் கைவரப் பெறாதவன்; அவன் சிறந்த குரவர் தலைவன் ஆகான்; அவனே அசற்குரு வாவான் என்றவாறு.

மூடனும் அதிமூடனும் கலதியும் அறிவற்றோனும், அசத்தைச் சத்து என உபதேசிப்போனும் அசற்குரு ஆவர் என்பது கருத்து.

''என்னே நான் ஆமாறே'' (திருவாசகம் 17) என் புழிப்போல். ஆமாறு – பேரின்பத்தை யடையும் உபாயத்தை உணர்த்திற்று. நல்லது கெட்டது அறியாமையின் ஆமாறறியா தானை மூடன் என்றார்.

காமாதி – காமம் குரோதம் லோபம் மோகம் மகம் மாற்சரியம் என்ற பகைகள் ஆறு. இவைகளால் விளைவன தீமையென்றறிந்தும் அவற்றை நீக்காமையின் 'அதிமூடன்' என்றார்.

கலதி – பாவி; கீழ்மகன் எனினுமாம். 'கள்வன் கடியன் கலதியிவன் என்னாதே' என்புழியும் இப்பொருளதாதல் காண்க.

அசத்து – பொய், மெய்ப்புகழும் நித்தியத்துவமும் இல்லாத கடவுளரை மெய்ப்பொருளென்றுணர்த்தும் அவன் அசற்குரு என்பதாம்.

கோமான் – தலைவன். ஈண்டுக் குருக்கள் தலைவனை உணர்த்திற்று. அசத்தாகும் குரவன் – அசற்குரு. (343)

**கற்பாய கற்பங்கள் நீக்காமற் கற்பித்தால்**
**தற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகும்**
**நற்பால் அரசுக்கு நாட்டுக்கும் கேடென்றே**
**முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே.**
2047

இம் – எனின், கற்பனையின் வழிச்செல்லும் கருத்துடையோன் சற்குரு ஆகான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கற்பனைகளாகத் தோன்றுகின்ற எண்ணங்களைத் தோன்றும்போதே துடைக்காமல் மேன்மேலும் கற்பனை செய்துகொண்டே போனால் சிவபாவனை குறையும்; அதனால் தனக்கே பகையாக முடியும்; நல்ல பகுதிப்பாற்பட்ட அரசுக்கும் நாட்டுக்கும் துன்பம் விளையும் என்று முன்னமே சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார் என்றவாறு.

வீணான கற்பனைகளிலே கருத்தைச் செலுத்தினால் சிவோகம்பாவனை குறையும்; சிவோகம்பாவனை குறைந்தவன் அசற்குரு; அதனால் அரசும் நாடும் அழியும்; இது சிவனாணை என்பது கருத்து.

கற்பு ஆய கற்பங்கள் – கற்பனையாகத் தோன்றுகின்ற எண்ணங்கள். அவை இந்திரியவயம் மயங்கி எழும் சிற்றின்பம் பற்றிய சிந்தனைகள்.

கற்பித்தால் – அவற்றையே பிறர்க்குங் கற்பித்தால்; பொய்ச்சமய நெறிகளைப் புகட்டினால் எனலுமாம்.

நம்பால் அரசு – செங்கோல் முறை நடத்தும் அரசு. முற்பாலே – முன்பே. நந்தி – சிவம். (344)

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்
குருடனும் வீழ்வர்கள் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. 2048

இம் – எனின், அசற்குருவின் உபதேசம் கேட்போர் அழிவும் அவரழிவும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் வெளிப்படை.

குருடர் – கண்ணறிவில்லாதார், ஈண்டு மெய்ஞ் ஞானமில்லாத குருவை உணர்த்தி நின்றது. முரணும் பழங்குழி – மாறுபட்ட பழங்குழி, என்றது பிறவியை. பழங்குழி என்றார் பலகாற்பழகியும் தெரியாது மீளவும் அதன்கண் வீழ்தலின்.

விமுங்காலும் முன்பின்னதாயினும், விரைவுபற்றி உடனிகழ்ந்ததாகத் தோன்றலின் 'முன்பின் அறவே வீழ்வார்' என்றார். 'காணாதார்க் காட்டுவான் தான் காணான்'' ''காணா தான் காட்டலுறின் காண்பதென் கண்டானும் காணானே யாவனெனக் காண்'' என்ற அமுதமொழியும் இணைத்து எண்ணுக. இக்கருத்து

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே

என முன்னரும் வந்தவாறு காண்க. (345)

# 35. சற்குருநெறி

முன்னர் குரு ஆகாதார் இத்தன்மையர் என எதிர்மறை முகத்தான் உணர்த்திய ஆசிரியர், இவ்வதிகாரத்தான் நல்ல குரு ஆவார் யார் என அவரியல்புகளை உடன்பாட்டு முகத்தான் உணர்த்திய எடுத்துக் கொண்டார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
தாடந்து தத்துவா தீதத்துச் சார்சீவன்
தாடந்து பாசத் தணிக்குமவன் சத்தே. 2049

இம் – எனின், திருவடியைச் சூட்டி ஆட்கொள்பவனே சற்குரு எனல் நுதலிற்று.

இ–ள்: பரிபாகமுற்ற உயிர்கட்குத் திருவடியிணையை உதவித் திருவருள்புரியும் சிவமுதலே சற்குரு ஆவார். அத் தகைய சற்குருவே திருவடி தீக்கை செய்து சிவமாகிய தன்னை யுணர்த்தும் தரம்மிக்கவர்; தன்தாளைத் தந்து சீவனைத் தத்து வங்கடந்த நிலையை உணரச் செய்து மலமாயா கன்மங்களா கிய தளைகளை நீக்குவன்; அவனே சற்குருவாம் என்றவாறு.

சிவனே சற்குரு; சற்குருவே தன்னை உணர்த்தித் தலைவனையும் உணர்த்துபவன்; சீவனைத் தத்துவாதீதத்துச் சாரச் செய்வோன்; கட்டவிழ்ப்பவன் என்பது கருத்து.

திருவடி திருவருளாதலின் அதன் பரிசம் ஏற்பட்ட காலத்து ஆன்மாவின் களிம்பாகிய அறியாமை நீங்கும்.

அப்போது ஆன்மா தன்முனைப்பற்றுச் சிவனே குருவெனத் தெளியும். அவ்வுறுதி நிலைத்தவுடன், ஆன்மாவாகிய தன்னையும், உடையானாகிய சிவத்தையும், இதுவரையிருந்த தடையையும் உணர்ந்திடும். உணர்ந்தவுடன் தத்துவங்களாகிய சடமல்லன் யான் சிவனைச் சேரும் சித்தென உணரும். அதனாற்கட்டறும். இங்ஙனம் பாசக்ஷயம் செய்விப்பவனே சற்குரு ஆவான் என்பதாம்.

திருவடி சூட்டுதலாவது 'நனைந்தனைய திருவடி என்றலைமேல் வைத்தார்'' என்றாங்கு ஆணவமலத்தை நீக்குதற்காகத் திருவடியைத் திருமுடிக்கண் சூட்டுதல். இது ஞானதீக்கை. திருவடியே திருவருளாதலைக் ''கால் அந்தச் சத்தி அருள் என்பர்' என்பதனாலும் உணர்க.

தாடந்து பாசம் தணிப்பிற்குத் தானே என்பது ஞானாவரண விளக்கத்தில் காணும் பாடம். (346)

**தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோள்**
**தவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்**
**தவிரவைத் தான்நமன் தூதுவர் கூட்டந்**
**தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. 2050**

இம் – எனின், சற்குரு செய்யும் நன்மைகளைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தன்பால் உபதேசங்கேட்டுத் தன்னாணை வழி நிற்கும் அடியார்களின் வினைகள் நீங்கத் திருவருளை வைத்தான்; வினைகளைத் தாரகமாகக் கொண்டு வினைப் போகங்களை உயிர்கட்கு ஊட்டும் நவகிரகங்களின் தீமைகள் நீங்க என் தலையுடன் தன் பாதம் பிறியாதே சூட்டினான்;

எமனும் அவன் தூதர்களும் என்பால் வாராமே தவிரத் தாளைச் சூட்டினான்; இடையறாது வரும் பிறவித் துன்பம் நீங்கச் செய்தான் என்றவாறு.

அடியாரின் வினைகளும், கோள்களும், மரணமும் தவிரப் பாதம் சூட்டினான் என்பது கருத்து.

வினை தவிரவைத்தல் – வினைகளை அறவே நீக்குதல் அன்று; வினைகளில் ஆகாமிய சஞ்சிதங்கள் பரிபாகப்பட்டு மேலைப்பிறவிக்கு வித்தாய்வருதல் பிராரத்தத்தை நுகர்வுழி முனைத்துநின்று நுகர்வதாலேயே ஆதலின் பிராரத்த நுகர்வுழியே முற்செய்த தவத்தால் நல்வினை தீவினைகளில் உவர்ப்பு உவப்பு இன்றி ஒருபடித்தாய் நுகரச்செய்தல். இது சிவஞானத்தெளிவான் விளைவது என்க.

கோள் – வினைப்பயனை ஊட்டும் நவ கோள்கள். அவை சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்பன. அவை தவிரவைத்தல்– கன்மங்களை நுகரும் பொறிகள் தானல்ல என்ற மெய்யுணர்வு உபதேசத்தான் உற்ற அளவானே கன்ம பலன்களை ஊட்டும் கோள்கள் செயலற்றுப்போதல். இத்தன்மை திருவடி சூட்டு தலால் உண்டாம் என்பது.

வினைப்போக இறுதியில் காலதத்துவத்தைப் பற்றி நின்று ஊனுயிர் வேறு செய்பவன் நமன். அதற்கு உடனாய் அவன் ஏவல்வழி நிற்போர் தூதர்கள். வினைகளை உவர்ப்பு உவப்பின்றித் துய்க்கவே அவர்களும் காலதத்து வத்தைப் பின்பற்றி இவர்களை அணுகமாட்டாமையின் அவர்களைத் தவிரவைத்த பேருபகாரம் ஆசாரியனுடைய தாயிற்று என்க.

எப்போது மரணமிலாப் பெருவாழ்வு சித்தித்ததோ அன்றே பிறப்பில்லை. ஆதலால் 'பிறவித்துயர் தவிர வைத்தான்' என்றார். ஆகவே பிறவியைக் கெடுத்தலாகிய பெரும் பயன் குருசெய்த பேருதவியால் தெரிவிக்கப்பட்டது. (347)

**கறுத்த இரும்பே கனகம தானான்**
**மறித்திரும் பாகா வகையது போலக்**
**குறித்தஅப் போதே குருவருள் பெற்றான்**
**மறித்துப் பிறவியில் வந்தணு கானே. 2051**

இம் – எனில், பிறவி கெடுதலை உவமை வாயிலாக விளக்குதல் நுதலிற்று.

இ–ள்: கருமையான இரும்பு இரதகுளிகையின் சார்பால் பொன்னானால், மீளவும் அப்பொன் இரும்பு ஆகாததுபோலப் பண்டை நற்றவத்தால் பரமனைப்பத்தி பண்ணும் அக்கணமே குருவின் திருவருளைப் பெற்றவன் மீளவும் பிறவிக்கடலை அணுகவும் மாட்டான் என்றவாறு.

பொன்னான இரும்பு மீட்டும் இரும்பாகாதவாறு போல, குருவருள் பெற்ற உயிர் மீண்டும் பிறவாது என்பது கருத்து.

இரும்பினிடத்து கருமையும் துருப்பிடித்துத் தேயுந் தன்மையும் பரிசவேதி என்னும் குளிகைபட்டவுடன் அகன்று, ஒளியும் கனமும் துருப்பிடித்துத் தேயாமையும் பொருந்திய பொன் ஆம்; அங்ஙனமாய பொன் மீளவும் இரும்பு ஆகா; அதுபோல என உவமையை விரித்து இயைக்க.

குறித்த அப்போதே – முற்றவத்தால் நம் கருமை அகல வேண்டும் என உயிர் எண்ணிய அக்கணமே, இவ்வுயிர்

பரிபாகமுறுதற்குரியது எனக் குருநாதன் திருவருள் இவ்வுயிரை இலக்காகக் குறித்த அக்கணமே என இருவகையானும் கொள்க.

குருவருள் பெற்ற ஞான்றே பிறவிக் கேதுவாகிய மலகன்மங்கள் கெடுதலின் இங்ஙனம் கூறினார். (348)

**பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்**
**நேசத்து நாடி மலமற நீக்குவோர்**
**ஆசற்ற சற்குரு வாவோர் அறிவற்றுப்**
**பூசற் கிரங்குவோர் போதக் குருவன்றே. 2052**

இம் – எனின், சிவானுபவமுடையோரே சற்குரு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பாசத்தினின்று நீங்கி, பரசிவத்தோடு தன்னையும் அன்பினால் ஆராய்ந்து, ஆணவ மலத்தை வலிகுன்றச் செய்து அகற்றும் அருளநுபவம் உடையோரே குற்றமற்ற குருநாதன் ஆவார்; சிவஞானம் கைவரப்பெறாமல் வாய்ச் சண்டையாகிய வாதத்திற்கு மனமிரங்குவோர் சிவானுபவம் உடைய குரு ஆகார் என்றவாறு.

தாமும் பாசத்தினீங்கித் தன்னையும் தலைவனையும் உணருமாறு உபதேசித்து மலவலிகுன்றச் செய்பவரே குருவாவர் என்பது கருத்து.

பாசத்தை நீக்குதலாவது கருணையின் சூரியன் எழ எழ நயனக் காரிருள் நீங்குதல்போலத் திருவருட் பொலிவு விளங்க விளங்க ஆன்மாவிற்குள்ள கட்டுகள் அறப்பெறுதலாம்.

பரசிவத்தோடு தன்னையும் ஆராய்தலாவது சிவதரிசனமும் ஆன்ம தரிசனமும் உடனே தத்துவ தரிசனாதிகளும் நிகழ மெய்ஞ்ஞானம் மேவரப்பெறுதலாம்.

ஆணவம் அநாதிநித்தமாயினும் முத்தரிடத்தும் அறவே நீங்குமன்றி வலிகுன்றியிராது ஆதலின் 'மலம் அற நீக்குவோர்' என்றார்.

பூசல் – வாதப் பிரதிவாதச் சண்டை, அது ஆணவத்தின் காரியமாகிய அறியாமையானும், மதத்தானும் விளைவது. ஆதலால், 'அறிவற்றுப் பூசற்கிரங்குவோர்' என்றருளப் பெற்றது.

போதக்குரு – சிவஞான அநுபவம் கைகவரப் பெற்ற சற்குரு அநுபவம் மிக ஆழ்கடலைப்போல அலைவற்று மலைவற்று அடங்குவர் ஆதலால் 'போதக்குரு அன்றே' என்றார். அல்லர் எனற்பாலது அன்றேஎன அஃறிணை முடிபேற்றது 'அறிவற்றது' என்றமையாலாம் என்க, அறிவே உயிரை உயர்திணையாக்குவது. அஃதற அது அஃறிணையாம் எனச் செறல் பற்றித் திணை இழித்துக் கூறியவாறு.

இங்ஙனமன்றி மலம் அற நீக்குவோர் ஆசற்ற சற்குரு; பூசற்கு இரங்குவோர் போதக்குரு எனக் கொண்டு அன்று ஏ இரண்டனையும் அசையாக்குதலும் ஒன்று. (349)

**நேயத்தே நிற்கும் நிமலன் மலமற்ற**
**நேயத்தே நல்கவல் லோனித்தன் சுத்தனே**
**ஆயத்த வர்தத் துவமுணந் தாங்கற்ற**
**நேயர்க் களிப்பவன் நீடுங் குரவனே.** 2053

இம் – எனின், சிவனுக்கும் குருவுக்கும் உள்ள இயல்புகளை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அறியப்படும் பொருளாய் அன்பரறிவினிடம் விளங்கிநிற்கும் மலரகிதனாகிய பரசிவம், மலம் முற்றும் நீங்கப்பெற்ற பதியன்பை உயிர்கட்கு உதவ வல்லவனாய் நித்தனாய்ச் சுத்தனாய் விளங்குவன்; அடியார் கூட்டத்துள் ஒருவராய்ப் பாசக்கூட்டங்களாகிய தத்துவங்களை உணர்ந்து அவை தானல்ல எனக் கழித்துச் சிவத்தைச் சாரவிரும்பும் மெய்யன்பர்க்குச் சிவானுபவத்தை அளிப்பவனே உயர்ந்த குருவாவான் என்றவாறு.

பரசிவம் இய்ல்பாகவே பாசங்களினீங்கிய நித்திய சுத்தன், குரு அவனே தானாய் அடியார்களின் பாசமகற்றிச் சிவப்பேறு அளிப்பவன் என்பது கருத்து. சற்குரு அவனே தானாய் அளிப்பவன் என்று கூறுவார் அவனியல்பும் உடன் கூறினார். அவன் – சிவன். அற்ற நேயர் – பாசநீக்கம் பெற்ற மெய்யன்பர். (350)

**பரிசன வேதி பரிசித்த தெல்லாம்**
**வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்**
**குருபரி சித்த குவலயம் எல்லாந்**
**திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே.** 2054

இம் – எனின், குரு ஸ்பரிச தீட்சையால் மலமகற்றுமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பரிசனவேதியான குளிகை தொட்ட பொருளனைத்தும் மேன்மை பொருந்திய பொன்னின் வகையாதல் போல, குரு தொட்ட உலகமனைத்தும் மும்மலங்களும் அகன்று சிவகதிசேரும் என்றவாறு.

குரு தொட்ட சித்துப் பொருளனைத்தும் சிவமாம் என்பது கருத்து.

பரிசனவேதி – உலோகங்களைப் பொன்னாக்கும் ஒருவகை மருந்து. அது பட்டவுடன் இரும்பு முதலான கீழ் உலோகங்களும் தம் கறை அகன்று செம்பொன் ஆகும் என்பதாம்.

குரு சிவோகம்பாவனையிலிருந்து தம் கையைச் சிவ அஸ்தமாகப் பாவித்து, சீடன் சிரத்தைத் தொட, சீடன் மல மாயை கன்மங்களிலிருந்து நீங்கிச் சுத்த ஆன்மா ஆவன் என்பதாம்.

குவலயம் – பூமியாகிய பிரபஞ்சம். எல்லாம் என்றதனால் தனு கரண புவன போகங்கள் அனைத்தையும் கொள்க. திரிமலம் – மும்மலம். குவலயமெல்லாம் சிவ கதிக்கண் ஆம் என விரிக்க. (351)

**தானே யெனநின்ற சற்குரு சந்நிதி**
**தானே யெனநின்ற தன்மை வெளிப்படில்**
**தானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற**
**ஊனே யெனநினைந் தோர்ந்துகொள்**
**உன்னிலே. 2055**

இம் – எனின், தன்னைச் சிவமாக உணரும் சற்குரு வின்வழி நிற்குமுறை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவமே தாமாக எழுந்தருளியுள்ள சற்குருவின் சந்நிதியில் சிவனருளாகவே தன்னையுணருந் தன்மை முற்பட்டுத் தோன்றுமாயின், பரிபாகமுற்ற ஆன்மாவாகிய

தானே சிவமாக உணரும் தன்மை பெருமைப்பட அறியப் பெறும்; ஆதலின் இவ்வுலகத்தே உன்னுள் உடையானை ஆய்ந்து தெளிவாயாக என்றவாறு.

குருவே சிவமாதலின் அவன் திருமுன்பு சிவனருளால் தன்னையுணரும் தலைஞானம் கைவரப் பெறின் தன்னுள் தலைவனைத் தரிசித்துத் தலைவனுடன் என்றும் ஒன்றிய இன்ப வுணர்வு உண்டாம் என்பது கருத்து.

தானே என நின்ற சற்குரு – சிவமே தானாக எழுந்தருளிய சற்குரு. கை கால் முதலிய அங்கங்களோடு கூடியிருப்பினும் சிவமே தான் என எம்மனோரால் அறிந்து தெளியப்பெறும் சற்குருநாதன் என்க.

சந்நிதி – திருமுன்பு. சிவசந்நிதியில் நிற்பதை விடச் சிறந்தது சற்குரு சந்நிதியில் நிற்பது என்க.

தானே என நின்ற தன்மை – சிவமாகிய தானேயாக நின்ற அநுபவம் மிக்க ஆன்மா என்க. வெளிப்படில் என்ற செயின் என் அச்சம் அத்தன்மை உணரப்படுதற்கு அரிது என்பது விளக்கிநின்றது.

காட்டுவான் குரு, காண்பான் தானாதலின் ஆன்மா வாகிய தானே தற்பதவாச்சியமான சிவத்தைச் சதுர்படப் பெறவேண்டும் என்பார் 'தானே தனைச் சதுர்பெறப் பெற வேண்டும்' என்றார். சதுர் – பெருமை; சாமர்த்தியமுமாம்.

காணப்பெறும் உடலை ஊனாக எண்ணி ஊனுள் விளங்கும் உன்னில் குருவை உணர்க என்றது, ஊனுளே உயிர்ப்பாய் நிற்கும்இறைவனைத் தெளிக என்றவாறு. (352)

வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணா வழியைப்
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. 2056

இம் – எனின், குருவின்வழி நிற்பின் முத்தியிற் கூடலாம் எனல் நுதலிற்று.

இ–ள்: பிராரத்த நுகர்ச்சிக்காக இனி வரும் வழியாகிய பிறப்பும் போகம் நுகர்ந்து கழித்தவழீ போம் வழியாகிய இறப்பும் ஆகிய இரண்டாலும் கெடாத வழியும், ஓயாமல் பிறவியில் கிடந்து உழல்வார் அறியாத வழியும், சிவபெருமான் மிகப்பெரிய வழியாக வேதசிவாகமங்களில் பேசும் வழியும், ஆகிய மோட்ச நெறியைக் குருவின் உபதேசவழியாகச் செல்லின் அடையலாம் என்றவாறு.

அழிவில்லாததும், எளிதில் யாரானும் அறியமுடியாததும், வேதசிவாகமங்களிற் கூறப்பட்டதும் ஆகிய முத்தி நெறியைக் குருவழி நிற்பின் கூடலாம் என்பது கருத்து.

வரும் வழி – பிறப்பு. ஆகாமிய வினை முதிர்ந்து பிராரத்தமாய் நுகரவரும் பிறவி ஆதலின் அதனை 'வரும் வழி' என்றார்.

போம்வழி – இறப்பு. வினைநுகர்ந்து கழிந்தவழி இறந்து படுதலின் அதனைப் 'போம்வழி' என்றார்.

இவ்விருவழிகளிலும் பற்றப்படாததும் அழிவின்றி நித்தியமானதும் முத்திநெறி ஆதலின் 'வரும்வழி போம்வழி இரண்டானும் மாயாவழி' எனப்பட்டது.

கருவழி கண்டவர் – மீண்டும் பிறந்தவர். போக இச்சை மீதூரப் பெற்று, கருவழியாகிய உபத்தத்தையே நோக்குவோர். அவர்கள் அறியாத பெருவழி முத்தி என்றவாறு.

நந்தி – சிவபெருமான், பெருவழியாப் பேசும் வழி – இறைவன் நூல்களாகிய வேதசிவாகமங்களில் மிகப்பெரிய நெறியாகப் பேசப்பெறும் நெறி முத்தியாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

குருவழி – குரு கூறிய உபதேச வழி, முத்தியைக் குருவின் உபதேசத்தால் அன்றி அடைய ஒண்ணாது என்பதாம்.
(353)

**குரு வென் பவனே வேதாக மங்கூறும்**
**பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்**
**தொரு சிந்தை யின்றி உயர்பாச நீக்கி**
**வருநல் குரவன்பால் வைக்கலு மாமே.** 2057

இம் – எனின், சற்குருவின் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: குரு என்பவன் வேதாகமங்களிற் கூறப்பட்ட மேலான நித்திய முத்த சுகத்தையுடையவனாகிச் சிவயோகத் தெழுந்தருளியிருந்து வேறொரு சிந்தனையும் இன்றித் தன்னைச் சார்ந்த சீடன் உயர்ந்தகதியடையப் பாசங்களை நீக்கி, வரும் நற்குரவனாவான்; அவன்பால் நம் ஆன்மாவை அடைக்கலம் ஆக்கலேதகும் எ–று.

குரு பேரின்பத்தை உடையவனாகிச் சிவயோகத்தி லெழுந்தருளியிருந்து சிவசிந்தனையன்றி வேறொன்றும்

இன்றிச் சீடன் உயர, அவனுடைய பாசகன்மங்களை நீக்கி யருள்பவன்; அவன்பால் நம் சிந்தை வைத்தல் தக்கது என்பது கருத்து.

வேதாகமம் கூறும் பர இன்பம்; பர இன்பம் – மோட்சம். அதனைப் பெற்றவர் மீண்டிலராதலின் அவ்வின் பத்தை ஆகமப் பிரமாணத்தானன்றி ஏனைய அளவைகளான் அறியலாகாமையின் வேதாகமம் கூறும் பர இன்பம் எனப் பட்டது. அதனை உடையவன் பர இன்பன். எனவே சிற் றின்பம் வெஃகித் தீயசெய்வார் சற்குரு ஆகார் என்பதை வலியுறுத்தப் பெற்றது.

சிவயோகம் பாவித்தலாவது எப்போதும் நாயகன் சேவடி தைவரு சிந்தையனாக விளங்குதல். இங்ஙனம் சதா சிவ்சிந்தனையிலிருப்பார்க்கு வேற்றெண்ணங்கள் ஒன்றும் நிகழா ஆகலின் 'ஒருசிந்தை இன்றி' எனப்பட்டது. சிந்தையும் என்றிருக்க வேண்டிய முற்றும்மை தொக்கது.

உயர் பாசம் நீக்கி – உயரப்பாசத்தை நீக்கி என்க. சீடன் பாசங்களின் நீங்கி உயரச்செய்து என்பதாம். குரு என்பவன் நல்ல குரவன்; அவன்பால் வைக்கலும் ஆமே என முடிக்க. வைக்கலுமாமே என்பதற்கியையத் தம் உயிரை அடைக் கலமாக எனச் சில சொற்கள் வருவித்து முடிக்க. (354)

**சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்**
**சித்தும் அசித்துஞ் சிவபரத் தேசேர்த்துச்**
**சுத்த மசுத்த மறச்சுக மானசொல்**
**அத்தன் அருட்குரு வாமவன் கூறிலே. 2058**

இம் – எனின், தத்துவஞானம் தந்து, சிவகதி சேர்ப்ப வனே குரு எண்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: என்றும் உள்பொருளாகிய சிவமும் அழி பொருளாகிய மாயை முதலாம் பாசமும், சத்தொடு சார்ந்து சத்தாயும் அசத்தொடு சார்ந்து அசத்தாயும் இருதிறன்படும் ஆன்மாவாவுமாகிய முப்பொருளினியல்புகளைத் தெரிவித்து, அறிவுடைப் பொருளாகிய உயிரும் அறிவில் பொருளாகிய மாயா காரியமான உலகு முதலியனவும் சிவமாகிய பரம்பொரு ளிடத்தே சாரும் வண்ணம் செய்து, சுத்தமும் அசுத்தமும் ஆகிய இருவகை நிலைகளும் நீங்க இன்ப வடிவான சொல்லைச் சொல்லும் சுத்தனே அருட்குரு ஆவான்; அவன் பங்கிலேயே பரிபாகமுற்ற ஆன்மா ஆம் என்றவாறு.

உண்மை யுணர்த்தித் திருமந்திரோபதேசம் செய்து பேரின்பத் தழுத்துபவனே நற்குரு; அவன் கூற்றிலே நிற்றலே ஆன்மாக்கள் கடமையாம் என்பது கருத்து.

சத்து – என்றும் உள் பொருளாய், ஒரு தன்மையாய், சத் சித் ஆனந்த வடிவாய் விளங்குவது. அது சிவபரம்பொருள்.

அசத்து – அதற்கு மாறாயது. அதாவது தோற்ற ஒடுக் கங்கள் உடையதாய், நித்தியமாய், ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை மறைக்கும் ஆற்றலுடையதாய், அறிவிலதாய் இருப்பது. அது மலம்.

சதசத்து – இருதன்மையும் உடையது. நித்தியமான அறிவாய் அழியாததாய் விளங்குந் தன்மை தனக்கு இயற்கை யாயினும், சத்தாகிய சிவத்தைச் சார்ந்தபோது சிவமாயும், அசத்தாய பாசத்தைச் சார்ந்தபோது அதன் மயமாயும் இருக்கும் ஆன்மா.

இவற்றைக் காட்டுதலாவது தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம் இவைகளை எய்து வித்துச் சிவத்தொடு சேர்த்துச் சிவபோகத் தழுத்தும் உபகாரம் புரிதல்.

சித்து – அறிவுடையது. அசித்து – அறிவில்லாதது. சித்தாகிய உயிரை அசித்தாகிய உடல் உலகங்களிற் சார்ந்து மீண்டும் மீண்டும் பிறவியுறாது சிவமாகிய பரம்பொரு ளிடத்துக் கூட்டி என்க.

சுத்தம் – சுத்தமாயை. அசுத்தம் – அசுத்தமாயை, இரண்டும் அறுதலாவது மாயை நீங்கப் பெறுதல். சுகமான சொல் அத்தன் – இன்பத்தையே பயப்பதாய உபதேச மொழிகளைச் சொல்லும் தலைவன். அவன் கூறில் ஆன்மா ஆம் என முடிக்க. (355)

**உற்றிடும் ஐம்மலம் பாச வுணர்வினாற்**
**பற்றது நாதன் அடியிற் பணிதலாற்**
**சுற்றிய பேதந் துரியமூன் றால்வாட்டித்**
**தற்பர மேவுவோர் சாதக ராமே. 2059**

இம் – எனின், சாதகாசாரியனது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயிர்கட்குத் தொன்று தொட்டே பற்றிய பாச ஞானத்தால் ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்ற ஐம்மலங்களும் வந்து பொருந்தும்; சிவபெருமானுடைய திருவடிகளைத் தாரகமாகப் பற்றி வணங்குதலால் ஐம்மலங் களுக்கும் அடிநிலையாகிய பாசநீக்கம் உண்டாம்; பற்றை ஆதாரமாகக் கொண்டு ஆன்மாவைச் சுற்றியுள்ள பேத

ஞானத்தைச் சீவதுரியம் , சிவதுரியம், பரதுரியம் என்ற மூன்றாலும் கெடுத்து, பரமாகிய சிவத்தைச் சாரமுயல்பவரே சாதகாசிரியர் ஆவார் என்றவாறு.

பாசஞானத்தாற் பற்றுவன ஐம்மலங்களாதலின் அவற்றைப் போக்க மலங்களுக்கு ஆதாரமான பற்றைக் கெடுத்து, திருவடியையே பற்றிப் பணிந்து நின்று, பேத ஞானத்தைச் சிவானுபவத்தால் தொலைத்துச் சிவத்தையேசார முயல்வோர் சாதகராவார் என்பது கருத்து.

மலம் அநாதியாயினும் பாசத்தால் உற்றிடும் என்று ஆகந்துகம்போலக் கூறியது மணிகட்கு ஒளியியற்கை ஆயினும் ஆதவன் கிரணங்களால் வெளிப்பட்டது என்றது போல அநாதியான மலம் பாசச் சேர்க்கையால் வெளிப்பட்டுக் காரியப்படுதல். அன்றி, மலம் என்ற பொதுமையாற் கூறிய துமாம்.

மாயாமலம் ஆகந்துகமாய் ஆணவ நீக்கத்திற்காகவே இறைவனால் புணர்க்கப்பட்டது. துணைக்கு வந்தவன் வழிப்பறி செய்ததுபோல, மலத்தை நீக்கப் புணர்க்கப்பட்ட அது, அதற்குத் துணையாய் மயக்கவும் செய்தலின் அதனையும் நீக்கவேண்டியது ஆசாரியன் அருட்செயலில் ஒன்றாயிற்று.

சுற்றியபேதம் – அநுபவநிலையில் நான் இவளாம் பகுதிப் பொற்பு ஆரறிவார் என அபேதமாயிருத்தலன்றி நுகர் வானும் நுகர்பொருளுமாக நிற்றலாகிய வேறுபாட்டுணர்ச்சி.

துரியமூன்று – சீவதுரியம், சிவதுரியம், பரதுரியம். துரியம் – சித்தமும் தனது சத்தி மடங்கிச் செயலற்று ஒழியும் அவத்தை; சீவதுரியம், ஆங்காரத்தானியக்கப்படும் பிராண

வாயுவும் புருடனும் என்னும் இரண்டுங் கூடி உடம்பிற்குக் காவலாயிருக்கும். அதனையே விடயிக்கும் அவதரம். இதற்குத் தானம் உந்தி. இங்ஙனம் நின்று சிவத்தை விடயிக்குநிலை சிவதுரியம் அதுவும் அடங்கியநிலை பரதுரியம் என்க.

மேவுவோர் என்றதற்கு விரும்புவோர் எனப் பொருள் கொள்க. அடைந்தார் எனின் அது சாதகரியல்பாகாது முத்தரியல்பாம் ஆதலின். (356)

**எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்**
**வல்லார் புலனும் வருங்கால் உயிர்தோன்றிச்**
**சொல்லா மலமைந் தடங்கியிட் டோங்கியே**
**சொல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே.**
2060

இம் – எனின், தோற்றுவித்துக் காத்து அருளல் இறைவனுக்கு விளையாட்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயிர்கள் அனைத்தும் இன்பம் நுகர்தற்கு வல்ல நிறைந்த உணர்வோடு கூடிய புலன்களோடு பொருந்த வருங் காலத்தில் ஆன்மாவினிடமாக இறைவன் இறைவியோடு உள்ளத்துள் வெளிப்பட்டு அருள, சொல்லாமலே மலங்கள் ஐந்தும் தம்சேட்டையடங்க உயிர் சிறந்து ஓங்கிச் செல்லுதலும் மீள வருதலும் இல்லாத சிவகதியை அடைதல் இறைவர்க்குத் திருவிளையாட்டாம் என்றவாறு.

உயிர்கள் புலனுகர்ச்சியாகிய இன்பம் பொருந்த வருங் காலத்து இறைவன் தன் திருவருளாகிய சத்தியோடு எழுந்தருளி உயிரினிடமாக விளங்கி அதனால் மலம்கெட உயிர் சுத்தான்மாவாகிச் சென்றடையாத் திருவாகிய சிவகதி சேர்தல் அவருக்கு ஒரு விளையாட்டாம் என்பது கருத்து.

உயிர் எல்லாம் இன்பம் வல் ஆர் புலனும் வருங்கால், இறைவன் இறைவியுடன் உயிர்(க்கண்) தோன்றி சொல்லா மலம் ஐந்தும் அடங்கியிட, ஓங்கிச் செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டு என அன்வயஞ்செய்து பொருள் கொள்க.

எல்லாம் என்பது பன்மைப் படர்க்கைப் பொதுப் பெயராதலின் அதனோடியைய உயிர் எல்லாம் என்பதைக் கூட்டி எழுவாய் கொள்க.

இன்பம் வல் ஆர் புலனும் வருங்கால் – போகங்களைத் துய்க்கவல்ல நிறைந்த புலன்களோடு பொருந்துங்கால் என்க. எடுத்த பிறவிக்கியைய வினைகளுக்கீடான போகங்களைத் துய்க்க முற்பட்ட காலத்து, போக நுகர்ச்சிக்கு உரிய புலன்கள் பதிகரணங்களாக, இறைவன், திருவருளோடு ஆன்மாவினிடமாக விளங்கித் தோன்றுவன் என்பார் 'இறைவன் இறைவியுடன் உயிர்(க்கண்) தோன்றி' என்றார்.

சொல்லா மலம் ஐந்தும் – தாம் உயிருடன் ஒன்றியமையும் அதன் அறிவை மறைப்பதையும் காட்டாத மலம் ஐந்தும் என்க. மலம் ஐந்து முன்னரே கூறப்பட்டது.

பசுகரணங்களாய் வினைப்போக நுகர இருந்தவை பதிகரணங்களாய்ச் சிவச்சார்பு பெற்றவுடன் ஒளி தோன்ற மாயும் வல்லிருள்போல் மலங்கள் அடங்குமாதலின் 'மலம் ஐந்தும் அடங்கியிட்டு' என்றார். அடங்கியிட்டு என்னும் செய்தெனெச்சத்தை அடங்கியிட எனச் செயவெனெச்சமாக்குக.

ஓங்கி – ஆன்மா தூய்மையால் சிறந்து; பதியின் குணமே மேவி என்றுமாம். செல்லாச் சிவகதி எனவே வாராக் கதி என்பதும் அடங்கிற்று. சிவகதி, சென்று சேர்தலும் மீள

வருதலும் இன்றி எங்கும் நிறைந்த குணமாக விளங்குத லாதலின் இங்ஙனம் கூறினார்.

இங்ஙனம் உயிர்களின் மலத்தை வாட்டி இன்பம் அருளுதல் இறைவனுக்கு ஒரு வினையன்று; விளையாட்டு என எளிமை உணர்த்தியவாறு. (357)

**ஈனப் பிறவியில் இட்டது மீட்டூட்டித்**
**தானத்து ளிட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்**
**ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று**
**மோனத்துள் வைத்தலும் முத்தன்றன்**
**செய்கையே. 2061**

இம் – எனின், முத்தனாகிய சற்குரு செய்யுமுபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இழிந்த பிறவிகளில் பிறக்கப் பண்ணி, பின்பு அதினின்றும் மீட்டு, வினைப் போகங்களை யருத்தி பத முத்திகளை அடையப்பண்ணி, பதவிகளின் போகங்களை யருத்தி, உயிர்களை ஓயாது பிறவிக்கடலில் தாழச் செய்தலும், பின்பு சிவஞானத்தில் மீளச் செய்தலும், சிவஞானச் செய்தி யிலேயே நிலைபெறச் செய்தலும் வீட்டினைப் பொருந்திப் பேசாப் பெருவாழ்வு அளித்தலும் ஆகிய இவையனைத்தும் முத்தான்மாவாகிய சற்குரு உயிர்கட்குச் செய்யும் உபகாரமாம் என்றவாறு.

உயிர்கட்குப் பிறவியைத் தந்து வினைகளையும் மலத் தையும் போக்கிச் சிவஞானம் பெறச் செய்து. அதனை என்றும் நிலைபெறச் செய்து வீட்டினை உதவி இன்ப மோனத்துளிருத் துதல் முத்தன் உபகாரமாம் என்பது கருத்து.

பிறவி வினைக்கீடாகச் சகடக்கால் போல மேலுங் கீழுமாக மாறி மாறி வருதலானும், வினைகழிய உதவிய பிறவி வினைக்கு ஏதுவாதலானும் அஃது ஈனப்பிறவி எனப் பட்டது. நாய் முதலிய இழிபிறவி எனப் பொருள் காண்பாரும் உளர். மக்கட் பிறவியேயாயினும் எடுத்த பிறவியின் நோக்கம் நிறைவெய்தப் பயன்படாதாயின் அதுவே அதற்கு ஈனமா தலின் பிறவி அனைத்துமே ஈனப்பிறவி எனப்பட்டது.

இட்டு: முத்திறப்பட்ட வினைகளையும் கழிக்கவேண்டி இறைவன் பரமகருணையால் நாம் துய்ப்பதற்காகப் பரிபாக முற்றிருக்கும் பிராரத்த கன்மத்திற்கு ஏற்றப் பிறவியில் செலுத்தி என்க.

அது மீட்டு – அப்பிறவியினின்றும் மீட்டு. மீட்டு என்ற செய்தெனெச்சத்தைக் காரணப் பொருளில் வந்த செயவெனெச் சமாக்கி, மீட்க எனப் பொருள் கொள்க. ஊட்டி – போகங்களை நுகருமாறு செய்து.

தானம் – பதவிகள். அவை அரி பிரமன் இந்திரனாதி பதவிகள். இப்பதவிகளின் நிற்பார்க்கு அதிகாரமலமும் உளதாதலின் அதனையும் நீக்க பசுபுண்ணிய விசேடத்தால் எய்தப்பெறும் பதவிகளைத் தந்து அம்மலத்தையும் நீக்கி என்பார் 'ஊட்டி' என்றார். தனை – அதிகாரமலமின்மையால் விளையும் வினைப்போகத்தை என்க.

தாழ்த்தலும் – பிறவிக்கண் அழுத்துதலும், தாழ்ந்த உயிர்களை உயர்த்த ஞானம் ஒன்றே சாதனமாதலின் 'ஞானத்தின் மீட்டலும்' என்றார்.

நாட்டலும் – நிலைபெறுத்துதலும், ஞானம் பெற்ற உயிர் மீளவும் வாசனாமலம் தாக்கத் தாழ்ச்சியுறும் ஆதலின் அந்த ஞானத்தில் நிலைநிறுத்தலை அடுத்துக் கூறினார்.

வீடு – பாசமற்றபின் விளையும் இன்ப நுகர்வு. வீடு பெற்றுப் பேரின்பமுற்றார் அவ்வின்பம் இத்திறத்தது என்று சொல்லமாட்டாமையானும். சொல்லும் கருவி கரணங்களைப் பெற்று வேறாக நிற்கமாட்டாமையானும் அவ்வின்பத்துள் ஆழ்ந்து அசைவற்று இருக்கும் நிலையை 'மோனம்' என்றார்.

முத்தன் – பாசங்களினின்று விடுபட்டவனாகிய சற்குரு என்க. (358)

**அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்**
**சித்தொ டசித்தறத் தெளிவித்துச் சீவனைச்**
**சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்**
**சத்துட னைங்கரு மத்திடுந் தன்மையே. 2062**

இம் – எனின், இறைவன் உயிர்களை ஐந்தொழிலில் அகப்படுத்தற்காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவபெருமான் கருணையால் நிகழ்த்தும் விளையாட்டாக உயிர்களைப் பஞ்சகிருத்தியத்துட்படுத்தும் தன்மை, உலகு உடல் சித்தும் அசித்துமாகிய உயிர் தத்து வங்கள் ஆகிய இவற்றை அறிவித்துத் தெளிவுறுத்தி மலத்தைப் போக்கிச் சுத்தான்மாவாக்கிச் சத்தாகிய சிவத்தோடு கூட்டும் அருள் தன்மையேயாம் என்றவாறு.

சிவபெருமான் உயிர்களுக்குப் பிறத்தலாதி ஐந் தொழிலை அருளி உண்மை ஞானத்தை உணர்த்திப் பரிபாகம் உறுத்துதல் சத்தாகிய சிவத்தைச் சார்ந்து பேரின்பம் ஊட்டு தற்கேயாம் என்பது கருத்து.

அத்தன் அருளின் விளையாட்டால் சீவனை ஐங்கரு மத்து இடும் தன்மை இடம் சடம் சித்தொடு அசித்து அறத் தெளிவித்துச் சுத்தமாக்கி மலத்தினைத் துடைத்து சத்துடன் இடும் தன்மை ஆம் எனக் கூட்டுக.

பரமனுக்குப் பஞ்சகிருத்தியம் செய்தல் மிக எளிமை யான செயல் என்பார் 'விளையாட்டு' என்றும், அவன் அங்ஙனம் செய்தல் ஆன்மாக்களெல்லாம் கடைத்தேற வேண்டும் என்னும் கருணை என்பார் 'அருளின்' என்றும், சீவர்களனைவர்க்கும் தந்தையாய்க் குற்றம் கடிந்து குணம் பெருக்கிக் கோதரட்டுவன் என்பார் 'அத்தன்' என்றும் கூறினார்.

இடம் – ஆன்மாக்கள் வினைப் போகத்தைத் துய்த்தற்கு இடமாகிய புவனம். சடம் – வினைப் போகங் களைத் துய்த்தற்குச் சாதனமாகிய உடல், சித்து – உணர்த்த உணரும் அறிவுருவாய ஆன்மா. அசித்து – மண்முதல் குடிலை ஈறான அறிவற்ற மாயேயமாகிற தத்துவங்கள். அறத் தெளி வித்து – நன்றாகத் தெளிவித்து. அதாவது புவன போகங்களும் தத்துவ தாத்துவிகங்களும் காரியமாதற்றன்மையால் அசத்து என்றும் சடம் என்றும் அறிவித்து, சித்தாகிய உயிர் சத்சித்தாகிய சிவத்தோடு கலந்து சித்தாகவே விளங்கு தற்கு உரியது என்றும் உயிர்கள் உணர்ந்து ஊன்றுமாறு செய்தலாம்.

மலத்தோடு கூடி அசத்தான சீவனை மலத்தினைத் துடைத்துச் சுத்தனாக்குதல் நித்த சுத்தனாகிய சிவத்தோடு சேர்த்தற்கேயாம். இடுந்தன்மை என்பதை ஐங்கருமத்து இடுந்தன்மை என்றும், சத்துடன் இடுந்தன்மை என்றும் இரண்டிடத்தும் கூட்டுக.

ஐங்கருமத்திடும் தன்மை, சீவனைத் தெளிவித்துத் துடைத்து ஆக்கிச் சத்துடன் இடுந்தன்மையாம் என முடிக்க. இங்ஙனம் இயைத்துத் தொடர்புறுத்திப் பொருள் கொள்ள இயலாது எச்சங்களை முற்றாக்கித் தோன்றியவாறே பொருள் உரைத்து இடர்ப்படுவர் சிலர். அவ்வுரை நோக்கித் தெளிக.

தெளிவித்த சீவனை எனப் பாடம் கொள்வாரும் உளர். செய்தெனெச்சங்களோடு அடுக்கி வருவதற்கு இயைபின் மையின் தெளிவித்து என்ற பாடமே சிறந்ததாதல் தெளிக.

தெளிவித்தச் சீவனை எனவும் பாடம் உண்டு. இதில் ஓசைநயம் இன்மை உணர்க. (359)

**ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்**
**பாசத்து ளேயென்றும் பாவியும் அண்ணலை**
**நேசத்து ளேநின்ற நின்மலன் எம்மிறை**
**தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே.**

**2063**

இம் – எனின், சற்குரு உயிரைத் தெளிவித்த முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பத்திவழியிற் படுவோனாகிய நின்மல சொரூப மாகிய பரசிவம் என்றும் பாசத்துள் அழுந்தி பாசத்தையே எண்ணும் உயிரை இறைமையைக் கடந்து அப்புறம் ஒன்று மில்லை என்று உலகம் முழுவதையும் தெளியவைத்தான் என்றவாறு.

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாகிய இறைவன், பாசத்துள் நின்று பாசத்தையே எண்ணும் உயிர்

களைப் பாசத்தை நீக்கி, இறைமையைக் கடந்து ஒன்றுமில்லை என்று உணர்த்தி, இவ்வுண்மையை உலகமெல்லாம் தெளிய வைத்தான் என்பது கருத்து.

நேசம் – தயிலதாரை போல்வதாகிய இடையீடில்லாத அன்பு. இறைவன் அன்பு ஒன்றற்கே ஆட்படுவன் என்பதை 'நேசத்துளே நின்ற நின்மலன்' என்ற பகுதி விளக்கும்.

எம் இறை அண்ணலை ஈசத்துவம் கடந்து அப்புறம் இல்லை என்று தேசத்தை எல்லாம் தெளியவைத்தான் எனக்கூட்டிப் பொருள் காண்க.

அண்ணல் – பெருமையிற் சிறந்தோன். தீயனொடு பட்டுத் தீயனாய்த் திரிகின்றவனை அண்ணல் என்றாற் போலப் பாசத்துட்பட்டு மயங்கி நிற்கும் ஆன்மாவை 'அண்ணல்' என்றதும் குறிப்பு மொழி.

பாவியும் அண்ணல் – பாவனை முற்றி நிற்கும் உயிர்; பாவிக்கும் அண்ணல் எனலுமாம். சிவத்தொடு சேர்ந்து பேரின்பம் துய்க்கவேண்டிய உயிர் பாசத்தொடு பொருந்திச் சிற்றின்பம் துய்த்து அதனையே பாவிக்கும் இழிதகைமை நோக்கி இங்ஙனம் கூறினார்.

ஈசத்துவம் – இறைமை. இறைவனுக்கு உரிய தன் வயத்தனாதல் முதலிய எண்குணங்களும் உடைமையே ஈசத்துவம். அதனைக் கடந்து என்றது அதனின் மேம்பட்டு என்னும் பொருளது.

சிவன் ஒருவனே முதல்வன்; அவனே தியானிக்கத் தக்கவன்; பாசங்களல்ல என்னும் உண்மையை உலகமெலாம் தெளிந்து தெளியவைத்தவாறாம். (360)

மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்
ஆணிப்பொன் னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்
ஊனுக் கிருந்தார் உணராத மாக்களே. 2064

இம் – எனின், சிவானுபவம் உடையோர் செய்தி உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: சிவந்த மாணிக்கமாலையைப் போல ஒளி விட்டு எழுகின்ற புருவநடுவாகிய மண்டலத்தில் ஆணிப் பொன்போல் ஒளிவிடுகின்ற பரசிவம் வெளிப்பட்டு நின்று, பேரின்பமாகிய அமுதம் விளையச் செய்தது; இதனைத் தெரிந்து பாதுகாத்து மீண்டவர்களே பிறப்பற்றார்கள்; இதனை உணராத விலங்கு போல்வாராகிய மக்கள் சோற்றுக்குக் கேடாய் வாழ்பவராவர் என்றவாறு.

புருவ நடுவில் செவ்வொளிப் பிழம்பாய்த் திகழும் சிவம் விளங்க அமுதம் விளைந்தது; அதனைப் பிறப்பு அற்ற பெரியோர்கள் உண்டு களித்தனர்; ஏனையோர் சோற்றுக்குக் கேடாக வாழ்ந்தனர் என்பது கருத்து.

மாணிக்கமாலை – செம்மணிக்கோவை. அதுபோல ஒளிவிடுகின்ற புருவநடு, மாணிக்கமாலை மலர்ந்தெழு மண்டலம் என்க.

ஆணிப்பொன் – உரையாணியாக எடுத்து வைத்துக்கொள்ளும் உயர்ந்த பொன்; அது புருவ நடுவில் நிற்கும் இரண்யபீஜனும் இரண்மயனுமாகிய சிவத்தை உணர்த்திற்று.

புருவ நடுவில் வைத்துத் தியானிக்கும்போது ஒரு வகை இன்ப உணர்வு உச்சிமுதல் உள்ளங்கால்வரை ஊடுருவிப் பாயும்; அதுவே அமுதம் விளைந்தது என்ற பகுதியால் அறிவிக்கப்பட்டது.

திரண்ட வெண்ணெயைக் கண்ணும் கருத்துமாக இருந்து பாதுகாப்பார்போலச் சிவானந்த அமுதத்தைப் பேணி உண்டு பிறப்பற்றபேர்கள் பிழைத்தவர்கள்; அங்ஙனம் பேணும் உணர்ச்சியில்லாதார் உணவு கேட்டக்காக உலகத்தில் இருந்தவர்கள்; இப்பகுதி ''சோற்றுக்குக் கேடு பூமிக்குப் பாரம்'' என்னும் பழமொழியை நினைவூட்டுவது. (361)

**அசத்தொடு சத்தும் அசத்சத்து நீங்க**
**இசைத்திடு பாசப்பற் றீங்கறு மாறே**
**அசைத்திரு மாயை அணுத்தானு மாங்கே**
**இசைத்தானு மொன்றறி விப்போன் இறையே.**
2065

இம் – எனின், மாயையைப் புணர்த்திப் பாசங்களை அறுத்தவனும், தன்னொடு சேர்த்தித் தானாகச் செய்பவனும் இறையே என்பதை உணர்த்துபவன் சற்குரு என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: அசத்தாகிய மாயேயங்களோடு கூடிய சத்தாகிய உயிர் அசத்தைவிட்டுச் சத்து நீங்குதற்காகவும் அதற்கு ஆதாரமாகவுள்ள பாசப்பற்றறுமாறும் இரண்டுவகை மாயைகளையும் உயிரொடு சேர்த்து உபதேசிப்பவனும் பாசம் அறுத்த பின் உயிரொடுதான் பொருந்தி விளங்குபவனும், பாசம் மீட்டும் தாக்காத வண்ணம் ஒன்றாகிய திருவைந்தெழுத்தை உணர்த்தி நிற்கும் வழியில் நிலைபெறச் செய்பவனும் இறைவனே என்றவாறு.

உயிர் அசத்தொடு சாராதவண்ணம் பாசம் அறுப்ப வனும், பாசமற்றபின் உயிரொடு தான் உற்று விளங்குபவனும், ஒரு சொல் உபதேசிப்பவனும் இறைவனாகிற சற்குருவே என்பது கருத்து.

உலகில் பிறக்கும் ஞான்றே சத்தாகிய உயிர். அசத் தாகிய உடல், உலகு, வினை, மலம் இவற்றொடு பிறந்து தன் தன்மைகெட்டு அசத்தாக விளங்கிற்று. இறைவன் உயிர்கள் மீது வைத்த கைம்மாறில்லாக் கருணையால் சத்து அசத்தினை விட்டு நீங்குதல் வேண்டும் எனத் திருவுள்ளங்கொண்டு அவ்வுயிர்கள் அங்ஙனம் அசத்தொடு சார்தற்குக் காரணமான பாசங்களை அறுத்தார், பாசமாகிய அழுக்கு நீங்க இரு மாயை களாகிற அழுக்குகளை, வண்ணான் ஆடையின் அழுக்கைப் போக்கச் சாணியும் உவர் மண்ணுமாகிய இருவகை அழுக்கு களைப் புணர்க்குமாறு போலப் புணர்த்தார். ஆடை தன்னழுக் கும் சார்பழுக்கும் நீங்கி வெண்மையானாற் போல உயிர் பாசத் தினின்று நீங்கத் தூய்மையாகவே அதனிடம் தான் விளங்கித் தோன்றினார். அவ்விளக்கம் என்றும் உயிரினிடமாக நிலைக் கவும் பாசம் மீளவும் வந்து வாசனையாகவேனும் பற்றாத வாறும் ஒன்றை உபதேசித்தார். இத்தனை உபகாரமும் முறையே செய்து ஆட்கொண்டார் இறைவனாகிய சற்குருவே என்பது உணர்த்தப் பெற்றது.

அசத்தொடு சத்து, சத்து அசத் நீங்க, இசைத்திடு பாசப் பற்று ஈங்கு அறுமாறே இருமாயை அசைத்து அணு தானும் ஆங்கே இசைத்தானும், ஒன்றறிவிப்போனும் இறையே என முடிக்க.

அசத் – தனு கரண புவன போகங்களாகிய மாயே யங்கள். சத் – நிலையான உயிர். இசைத்திடு பாசப்பற்று –

அநாதியே கூட்டப்பெற்ற பாசங்களும் அவற்றான் விளைந்த மோகமாகிய பற்றுக்களும். அசைத்து – கூட்டி. இருமாயை – சுத்தமாயை, அசத்தமாயை. அணு – ஆன்மா. தான் – சிவம். இசைத்தானும் – கூட்டியவனும். ஒன்று – சீபஞ்சாக்கரம்.

(362)

**ஏறு நெறியே மலத்தை எரித்தலால்**
**ஈறில் உரையால் இருளை யறுத்தலான்**
**மாறில் பசுபாசம் வாட்டலால் வீடுக**
**கூறு பரனே குருவாம் இயம்பிலே.** 2066

இம் – எனின், முத்தியின்பம் பெறக் கூறுபவனே சற்குரு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உயர்ந்து ஓங்கும் முறைமையில் மலமாகிய மாயா கன்மங்களைச் சுட்டெரித்தலானும், முடிவற்ற அருளுப தேசங்களால் ஆணவ இருளை அறுத்து அகற்றுதலானும், ஒப்பில்லாத பசு பாசம் இவற்றைத் தன்மை கெட வாட்டு தலானும் சொல்லுமிடத்து வீட்டுலகத்தின் கண்ணே பரிபாக முற்ற உயிர் போய்விழ உபதேசிக்கும் பரசிவமே குருவாம் என்றவாறு.

மலத்தை எரித்து – இருளையறுத்து, பசுத்துவத்தையும் பாசத்தையும் வாட்டி வீடுபுக உபதேசிப்பவனே பரமகுருவாம் என்பது கருத்து.

ஏறு நெறி – சோபானக் கிரமம். சரியை கிரியை யோகம் ஞானம் என ஒன்றினொன்று மேலாய் ஒன்றற்கு ஒன்று ஆதாரமாய் விளங்கும் படிமுறை. இவற்றின் நிற்க, சிறிது சிறிதாகக் கன்மமலமும் மாயா மலமும் சாம்பராம். இதனை

விளக்குவது 'ஏறு நெறியே மலத்தை எரித்தலால்' என்பது. 'வல்வினையைச்சுட்டு' என்ற மரபும் காண்க.

ஈறில் உரை – முடிவு அற்ற உபதேசம்.

பசு பாசம் வாட்டலால் – பாசத்தொடு கூடிப் பாசத்தாற் செழித்தது போலக் காணப்பெறும் பசுவை, பாசத்தைப் பிரித்து வாட்டலால் என்க. பசுவையும் பாசத்தையும் வாட்டலால் எனப் பொருள் கொள்ளின், பசு என்றும் இறைவனால் தளிர்க் கச் செய்யும் கருணைக்குரியதேயன்றி வாட்டும் மறத்திற்குரிய தன்று. ஆதலால் பசுவினின்று பிரியப் பாசத்தை வாட்டலால் என வேற்றுமை விரித்துப் பொருள் காண்க.

வீடு உக – வீட்டுலகிற் சிந்த. உகுதல் – சிந்துதல். ஆன்மா என்றும் சுதந்திர ஈனன் ஆதலின் பாசநீக்கம் பெறினும் தானே வீடுபுகும் தன்மையதன்று ஆதலின் வீட்டுலகில் போய் உகும்படி உபதேசிப்பவன் குரு என்றார். (363)

# 36. கூடாவொழுக்கம்

அஃதாவது தாம் மேற்கொண்ட நிலைக்குப் பொருந் தாத ஒழுக்கம். சற்குரு ஆவான் பொறி அடக்கமும் சிவத் தியானமும் மேற்கொண்டு உலகவர்க்குக் கருணையே வழங்கும் தன்மையனாதல்வேண்டும் என்பதனை வகுத்த ஆசிரியர், இவ்வதிகாரத்தான் பொருந்தாத ஒழுக்கத்தை வகுத் துரைத்தல் வாயிலாக அசற்குரு நெறியை மேலும் வற்புறுத்தத் தொடங்கினார். இதனால்அதிகார முறைமையும் இனிதே விளங்கும்.

**கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்**
**கண்காணி யில்லா விடமில்லை காணுங்கால்**
**கண்காணி யாகக் கலத்தெங்கு நின்றானைக்**
**கண்காணி கண்டார் களவொழிந் தாரே. 2067**

இம் – எனின், எங்கும் நிறைந்த பொருள்தானே சிவம் ஆதலின் காண்பாரில்லை என்று ஒழுக்கக்கேடு ஆற்றுதல் கூடாது என்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: நம்மைக் கண்காணிக்கின்றவர் இல்லை என்று கள்ளத்தனமான காரியங்கள் பலவற்றையும் செய்வார்கள். கண்காணி இல்லாத இடமே இல்லை; எப்பொருளும் இயற்றுங் காரியங்களைக் கண்காணித்து எங்கும் கலந்து விளங்குகின்ற இறைவனை அறிவால் கண்காணித்துக் கண்டவர்கள் தாம் களவாகத் தீயன செய்தலினின்று நீங்குவர் என்றவாறு.

எங்கும் உளன் இறைவன்; ஆதலால் தீயன செய்த லாகாது என்பது கருத்து.

'எங்கும் உளனிறைவன் என்றுள்ளங் கொண்டு மிக. அங்கங் குலைவதறிவு' என்ற பின்னூற் கருத்தும் உன்னுக. ஏனைய வெளி.

கண்காணி கண்டார் என்பதற்குக் கண்ணையே இடமாகக் கொண்டு கண்டவர்; நேரறிவு பெற்றவர் எனினுமாம். **(364)**

**செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்**
**பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்**
**மெய்தான் உரைக்கில்விண் ணோர்தொழச் செய்வன்**
**மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. 2068**

இம் – எனின், மெய்யுரைக்கின் விண்ணோர் தொழ வைப்பன் எனல் நுதலிற்று.

இ–ள்: கருமைநிறம் தாழ்ந்து செம்மைநிறம் மிக்கு விளங்கும் தாழ்ந்த சடையையுடைய இறைவன் செழுமையான கடல் சூழ்ந்த இவ்வுலகத்துள் பொய் பலவற்றையே புலம்பித் திரியும் மக்கள், மெய்யுரைப்பார்களாயின் தேவரும் தொழும் தகுதி வழங்குவன். இவ்வுலகத்தைப் படைத்த அவன் எல்லாம் அறிவன் என்றவாறு.

உலகம் இறைவன் படைப்பு; இவ்வுலகத்து எங்கு யார் எதைச் செய்யினும் அவற்குத் தெரியும் ஆகையால் பொய் பேசிப் புலம்பற்க; மெய் உரைத்தால் தேவர் தொழுந்தகுதி வழங்குவன் என்பது கருத்து.

செய்தான் அறியும் – உலகத்தையும் உயிர்களின் உடம்பையும் படைத்த இறைவனுக்கு எங்கு என்ன நடக்கிறது என்பது தெரியும்.

வட்டம் – குவலயம். பொய்யுரைப்போர் உண்மை உரைக்கின் இறைவன் அவர்களை விண்ணோர் தொழ வைப்பன் என்றது பதவியுலயர்த்துவன் என்றவாறாம். மை – கருமைநிறமான விடம். மிடறு – கழுத்து. (365)

**பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு**
**மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது**
**வித்துக்குற் றுண்டு விளைபுலம்**
**பாழ்செய்யும்**
**பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே.**
**2069**

இம் – எனின், போலிக்குரவர்க்கு மறுபிறப்புண்மையும், உண்மைக்குரவற்கு அஃதின்மையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பத்தியை விலைபேசி விற்றுண்டு பகற்பொழுதைக் கழிக்கின்ற மதம் பிடித்தவர்களுக்கு மறுபிறப்பு உள்ளதன்றோ! விதையைக் குற்றியுண்டு, விளைபுலத்தைப் பாழான தரிசாக்கும் இறைப்பித்து உடையார்கட்கு என்றுமே பிறப்பில்லையாம் எ–று.

வினையாகிற விதையை அழித்து, உள்ளவினையை நுகர்ந்து கழிக்கும் உண்மை ஞானியர்க்கு மறுபிறப்பு இல்லை; பத்தியை விற்கும் போலிகளுக்குப் பிறவியுண்டாம் என்பது கருத்து.

இறைவனிடம் என்றும் நீங்காத அன்புடையார் போலப் பிறர் நம்பும்படி நடந்து அன்பை விலைக்கு விற்று வயிறுவளர்க்குமவர்கள் என்பார்'பந்தி விற்று ... ... மத்தகர்' என்றார். மத்தகர் – மத்தர்; என்பது 'க' விரித்தல் பெற்றது. பாலன் – பாலகன் என்பது போல. வடமொழியிலக்கணம்.

வித்து – வினை. குற்று உண்ணல் – வருபிறவிக்கு வழியாகாது கெடுத்தல். விளைபுலம் – உடல். பாழ்செய்தல் – தரிசுபோடுதல். பித்தர் – அரனிடத்து முறுகிய அன்புடையார். (366)

**வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை**
**நடக்க வுறுவரே ஞானமி லாதார்**
**வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்**
**அகத்தில் அடங்கும் அறிவுடை யோர்க்கே.2070**

இம் – எனின், கயிலை கருத்திலுள தெனல் நுதலிற்று.

இ–ள்: வடக்கு என்று எதற்குமே வடக்கை நோக்கிப் பிதற்றுவர்; வடக்கே வைத்தது ஒன்றும் இல்லையாம்; அறிவில்லாதவர்களே வடக்கு நோக்கிப் பயணம் செல்வர்; வடக்கில் அடங்கிய உலகமனைத்தும் சிவஞானியர் சிந்தையில் அடங்கும் என்றவாறு.

வடக்கேயுள்ள கயிலை, மேரு, கங்கை, யமுனை அனைத்தும் நம் அகத்துள் விளங்குவனவே; இஃதறியாதார் பயணம் சென்று பாழாவர் என்பது கருத்து.

மேரு – உடல். கயிலை – புருவநடு. கங்கை – இடகலை. யமுனை – பிங்கலை. இங்ஙனம் நமக்குள்ளே மனத்தகத்துப் பார்க்க அறியாதார் யாத்திரை சென்று பாழ்படுவர் என யாத்திரை செய்தலும் சிவஞானியர்க்குக் கூடாவொழுக்கம் என்பது வற்புறுத்தியவாறு. (367)

**காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்**
**காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்**
**தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்**
**காயத்துள் நின்ற கருத்தறி யாரே.** 2071

இம் – எனின், இறைவனைத் தேயத்துள் தேடலால் பயனில்லை எனல் நுதலிற்று.

இ–ள்: உயிரை உடலொடு சேர்த்து வைப்பவனும், உடலையே தாம் வாழும் நாடாகக் கொண்டவனும், உடலுக்குள் மணம் வீசி எழுந்தருளியிருக்கின்ற குருநாதனும் ஆகிய சிவபெருமானைத் தேசம் எங்கும்தேடி அலைவார்கள்; அவன்

இவ்வுடலில் நின்ற திருவுளக் குறிப்பை அறியாத மக்கள் என்றவாறு.

இறைவன் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டிருப்பதை அறியாத மக்கள் இறைவனைத் தேடி, காசி இராமேசுரம் என அலைகின்றார்களே என்ன பயன் என்பது கருத்து.

காயக் குழப்பன் மாயையைக் குழப்பிக் காயத்தைப் படைத்து உயிருக்கு உதவுபவன். ஆகவே காயமே அவன் படைப்பான கோயில் என்பதாம். காயமே அவன் நாடு. காயமே அவனுறையும் கோயில்; அங்ஙனமிருந்தும் அவனை அங்கே கண்டு மகிழாமல் புறத்தே தேடி அலைகின்ற அறிவின்மைக்கு வருந்தியவாறாம்.

அங்ஙனம் புறத்தே அலைதல் உண்மைஞானம் உடையார்க்குக் கூடாவொழுக்கமுமாம் என்று தெளிவித்தவாறும் ஆம். (368)

**கண்காணி யாகவே கையகத் தேயெழுங்**
**கண்காணி யாகக் கருத்து ளிருந்திடுங்**
**கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்**
**கண்காணி யாகிய காதலன் தானே.** 2072

இம் – எனின், இறைவன் காணப்படு பொருளாய் உதவுதலை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கண்ணால் காணப்பெறும் பொருளாக இறைவன் நம் கையகத்தே தோன்றுவன்; நம்மைக் கண்காணிப்பவனாக நம் மனத்துள் எழுந்தருள்வன்; கண்ணுட் கருமணியாகக் கலந்து நின்று காட்டும் உபகாரத்தைச் செய்வன் என்றவாறு.

இறைவன் கண்காணிப்பவனாகவும், கண்ணால் காணப்படும் பொருளாகவும் இருந்து உதவுவன்; அவனைப் புறத்தே தேடிப் பயன் என் என்பது கருத்து.

கண் காணி – கண்ணால் காணப்படுவது; இகரம் செயப்படுபொருள் விகுதி. கண்காணிப்பவன்; இகரம் வினைமுதற் பொருளில் வந்த விகுதி.

மூன்றாம் அடியிலுள்ள, கண்காணி – கண்ணுள் இருந்து காணும் கருமணியாயிருந்து என்க. 'கண்ணே கண்ணுட் கருமணியே மணியாடு பாவாய் காவாய்' என்ற திருமுறைவாக்கும் சிந்திக்க. (369)

**கன்னி யொருசிறை கற்றோர் ஒருசிறை**
**மன்னிய மாதவஞ் செய்வோர் ஒருசிறை**
**தன்னியல் புன்னி யுணர்ந்தோர் ஒருசிறை**
**என்னிது ஈசன் இயல்பறி யாரே.** 2073

இம் – எனின், இறைவனியல்பு ஒருவராலும் அறிய வொண்ணாததாயுளது என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கன்னியாகிய திருவருட்சத்தியின் பதிவு பெற்றோர் ஒரு பக்கம்; வேத வேதாங்கங்களை ஐயந்திரிபு அறக் கற்றோர் ஒருபக்கம்; நிலைபேறுடைய பெரிய தவத்தைச் செய்வோர் ஒருபக்கம்; சிவத்தினியல்பையும், ஆன்மாவாகிய தன்னியல்பையும் ஆராய்ந்து தெளிந்த சிவஞானியர் ஒருபக்கம்; இது என்ன? ஒருவரும் ஈசன் இயல்பு அறியாராயினர் என்றவாறு.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு பக்கம் தேடுகின்றனர்; இறைவன் நம் அகத்துளன் என்பதை அறியகிலாரே என்பது கருத்து.

கன்னி – திருவருட்சத்தி. 'பான்மொழிக் கன்னியாகும்' ஆதலால் கன்னி எனப்பட்டார். (370)

காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாத வர்கட்குங் காணாத வவ்வொளி
காணாத வர்கட்குங் கண்ணும்
பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. 2074

இம் – எனின், கூடாவொழுக்கம் புரியாது தப்பினார் யாரென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒன்றையும் காணமாட்டாத படலம் மூடிய கண்ணில் உள்ள அப்படலமே அதற்கு ஒளியாம்; அதுபோல இறைவன் இயல்பை உள்ளவாறு உணர்ந்து காணமாட்டாதவர் கட்குக் காணமுடியாத அவ்வொளிப்பிழம்பு ஆவன்; ஆகை யால் காணாதவர்கட்குக் கண்ணாயிருந்து காட்டும் பெரிய கண்ணொளியாம் கடவுளைக் காணாது எஞ்ஞான்றும் காண் பவர் தாம் புரியும் களவொழுக்கினின்றும் தப்பி உய்ந்தார் ஆவர் என்றவாறு.

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போலக் காணக் கண்ணினைக் கண்டு காட்டும் இறைவனைக் கண்டவரே கூடா வொழுக்கம் புரியாது உய்ந்தவர் என்பது கருத்து.

ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சருக்கரையா னாற்போல, காணாத கண்ணுக்குக் கண்ணை மறைத்திருக்கும் படலமே ஒளியாம் என்றது, கண் படலத்தை அன்றி அறியாமை யால் அதுவே ஒளி எனப்பட்டது. அதுபோல இறைவனி யல்பை உள்ளவாறுணரும் சிவஞானம் கைவரப் பெறாதவர்

களுக்கு அறிய இயலாத கண்ணொளியாயிருந்து காட்டுபவன் இறைவன்; அதாவது அவர்களால் அறியப்படாதவனாக விளங்குவன் என்பதாம்.

அங்ஙனம் காணாதவர்க்குக் கண்ணாயிருந்தும் அறிவாகிய அகமுகப்பார்வைக்குரிய ஞானமாக இருந்தும் உபகரிப்பவன் சிவனென்பது 'காணாதவர்கட்கும் கண்ணாம் பெருங்கண்' என்பதால் உணர்த்தப்பெற்றது. கண்: உருவகம்.

காணாது காணல் – எஞ்ஞான்றும் காணுதல். 'கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே' என்றாற் போலன்றி என்றும் காணுதல். இது 'சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்து' என்றாற் போல்வதோர் வழக்கு.

களவு – மறைவில் நிகழ்த்தப்பெறும் காம்மாதி குற்றங்கள். (371)

**பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி**
**உய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி**
**அத்தன்மை யாதல்போல் அந்தி அருள்தரச்**
**சித்தம் தெளிந்தேன் செயலொழிந் தேனே. 2075**

இம் – எனின், சிவனருளால் சித்தம் தெளிந்தமை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: பித்தேறியவன் மருத்துவன் கொடுத்த மருந்தால் பித்தம் தெளிந்து தன்னியல்பான குணத்தோடு பொருந்தியதைப் போலவும், படலம் மறைத்த விழியும் படலம் நீங்கிக் கண்ணொளி பெற்றுக் காணுந் தன்மை பெறுதல் போலவும், சிவகுருநாதனாகிய சிவம் திருவருள் நோக்கம் புரியச் சித்தம் தெளிந்தேன்; சீவச் செயல் கெட்டேன் என்றவாறு.

சிவபெருமான் குருநாதனாக வந்து அருணோக்கம் புரியச் சித்தம் தெளிந்தேன்; பசுகன்மம் தொலையப் பெற்றேன்; சிவதன்மம் செய்து சிவாநுபவம் பெறுகிறேன் என்பது கருத்து.

பிரகிருதி – இயல்பான குணம். பித்தசுபாவம் என் பாரும் உளர். அச்சொற்கு அப்பொருளில்லாமையும் இருக்குமேனும் ஈண்டு இயைபின்மையும் ஓர்க. சிவஞான சுவாமிகளும் பிரகிருதி – தன்னியல்பினிற்பது; இது பகுதி என வழங்கும் எனக் குறிப்பிடுதல் காண்க.

செயலொழிதல் – செயலே அற்று உபலம் போலச் செயலின்றிக் கிடத்தல் அன்று; சீவச் செயலற்றுச் சிவச் செயலாதல், ஆகவே சீவச் செயலொழிந்து எனப் பொருள் கொள்க. (372)

**பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்**
**பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்**
**சுராமய முன்னிய சூழ்வினை யாளர்**
**நிராமய மாக நினைப்பொழிந் தாரே.** 2076

இம் – எனின், எல்லாம் சிவமயம் என்று எண்ணாது கவலையற்றிருப்போர் நிலைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: சிவமயமாகச் சிவத்தினிடத்திலிருந்து பெயர்ந் தனவாகிய அட்டமூர்த்திகளையும் சிவசத்தியின் மயம் என்று எண்ணிப் படுக்கையைவிட்டு எழாதவராய், கள்மயமா தலையே விரும்பும் வினைசூழ்ந்த மக்கள் துன்பற்றவராய் இறைவன் ஒருவன் உண்டு என்ற நினைப்பையே ஒழிந்தார்கள் என்றவாறு.

எல்லாம் சிவமயம் என்றெண்ணாது கள்மயமாதலை விரும்பித் துன்பத்தை மறந்து சிவத்தியானமாகிற நினைப் பையும் மறந்தனர்; என்னே அறியாமை எனக் கூடாவொழுக் கிற்கு இரங்கியது.

எட்டு – பூதங்கள் ஐந்தும் சூரியன் சந்திரன் எஜமானன் என்ற மூன்றும் ஆக எட்டும் இறைவன்தன் திருமேனி ஆதலின் 'பிரான்மயமாகப் பெயர்ந்தன எட்டும்' என்றார். இவ்வெட்டும் இறைவனிடமிருந்து பிரிந்த எட்டுருக்கள். அவை அங்ஙனம் பெயர்தற்குக் காரணம் திருவருட் சத்தி என்பார் 'பராமயம் என்று எண்ணி' என்றார்.

பள்ளியுணர்தல் – துயிலெழுதல்; இது ஒரு சொல். 'தெய்வம் தொழா அள் கொழுநற் றொழுது எழுவாள்' என்றாற்போல என்னும் எண்ணத்தைப் பிரியாத ஒன்று எழும்புகிறபோதும் எண்ணப்படும் ஆதலின், அட்ட மூர்த்தி களும் இறைவன் திருமேனி, அவனிடமிருந்து அருட்சத்தியால் பிரிந்தன, எல்லாம் திருவருள் மயம் என்று எண்ணிக் கொண்டே துயிலெழுந்தால் செய்வன யாவும் சிவகன்மமாம். அங்ஙன மின்றி எழின் பசு கன்மமும் பாச கன்மமுமாய்த் தீவினையாம் ஆதலால் இங்ஙனம் கூறினார்.

சுராமயம் – கள்மயம், களிப்பு. கள்மயமான களிப் பொன்றையே கருதிய வினைகளால் சூழப்பட்டவர்கள் என்க.

எல்லாம் திருவருள் மயம் என்று எண்ணி எழாதவர் களாகிய வினையினால் சூழப்பட்டவர்கள் எனக் கூட்டுக.

நிராமயம் – துன்பமே இல்லாத நிலை. தம்மைச் சூழப் பல்லாயிரம் துன்பங்கள் இருந்தும் துன்பமே இல்லாத

வர்களைப் போல, துன்பந்துடைத்து இன்பு அருளுவோனாகிய இறைவன் ஒருவன் உளன் என்ற நினைப்பையும் இழந்தார்கள் என இரங்கியவாறு.

எல்லாம் திருவருள் மயம் என்று எண்ணாமையும், கள்ளுண்டு களித்துத் துன்பம் மறக்க எண்ணுதலும், சிவத் தியானத்தை மறத்தலும் ஆகிய செயல்கள் கூடாவொழுக்கங் களாம் என விளக்கியவாறு.

இம்மந்திரத்திற்கு இவ்வானன்றி வேறு பொருள் கூறு வாரும் உளர். அவ்வுரை இவ்வதிகாரத்திற்கு இயைபின்மை காண்க. (373)

**ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன்**
**றாயினோர்க்**
**கொன்றும் இரண்டும் ஒருகாலுங் கூடிடா**
**ஒன்றிரண் டென்றே யுரைதரு வோர்க்கெலாம்**
**ஒன்றிரண் டாய்நிற்கும் ஒன்றோடொன் றானதே.**
2077

இம்– எனின், அத்துவிதக் கலப்பின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கலப்பால் ஒன்றாயும், பொருட்டன்மையினால் சீவனும் சிவனும் என இரண்டாயும் நின்று சீவபோதங் கெட்டுச் சிவத்தைச் சார்ந்து திருவருளால் ஒன்றாயினார்க்கு அவ் வநுபவ நிலையில் சிவன் என்றும் சீவன் என்றும் வேறாகவே யிருந்தால் அவ்விரண்டும் ஒருகாலும் கூடி ஒன்றாகா; ஒன்றான சிவத்தோடு ஒன்றான ஆன்மா கலந்து விளங்குந்தன்மை ஆவியும் சிவனும் என வேறுணர்வோர் எல்லாருக்கும் ஒன்று

என்றும் இரண்டு என்றும் வேறு பிரித்து எண்ணும் நிலையில் வேறாகவே நிற்கும் என்றவாறு.

கலப்பால் ஒன்றாயும் பொருட்டன்மையால் வேறாயும் நின்ற ஆவியும் அரனும் ஆவி தன் தன்மை கெடச் சிவத்தோடு ஒன்றாம். வேறு என்று உணர்வார்க்கும் எப்போதும் ஒன்றாத லில்லை. வேறுவேறே ஆம். சீவனெனச் சிவனெனத் தன்மை யால் இரண்டாயினும் மலமழியச் சீவன் சிவத்தோடு ஒன்றிய போது ஒன்றாகும். இது சிவநெறி. வேறே எனலும், சீவனென சிவனென வேறில்லை. கடகாயமும் பூதாகாயமும் போல எனக் கொண்டு, கடம் உடைந்தால் கடாகாயம் பூதாகாயத்தில் கலத்தல் போலச் சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றாம் எனலும், என்றும் இரண்டு இரண்டே நுகர்வானும் நுகர் பொருளுமாக இருக்கும் எனலும் ஆகிய இவை யாவும் கூடாவொழுக்கமாம் என்பது கருத்து.

ஒன்று – உயிர் சிவத்தைச் சார்ந்து பொருள் ஒன்றே எனக் கலந்து நிற்றல். இரண்டு – சிற்றறிவும் சிறு தொழிலும் கட்டும் உடைமையால் பசு என்றும், முற்றறிவும் நிறைவும் இயல்பாகவே பாசமின்மையும் உடைமையால் பதி என்றும் பொருட்டன்மையால் இரண்டாக நிற்றல். உயிர் கட்டற்றுச் சிவத்தைச் சார்ந்தபோது ஒன்றாம். அந்நிலையில் ஒன்று இரண்டு என்ற பேதஞானம் ஒருகாலும் வாராது என்பது முன் இரண்டடிகளின் கருத்து.

ஒன்றோடு ஒன்றானது – கலப்பு நிலையில் ஒன்றோடு ஒன்று கலந்திருப்பது. அது சீவ சிவக் கலப்பு. நுகர்வானும் நுகர் பொருளுமாகக் கலந்தகலப்பு. வேறு என்பார்க்கு வேறாகவே நிற்கும் என்பதாம். இக்கலப்பின் இயல் முழுதையும் மாபாடி யத்து அத்துவித இலக்கணம் உணர்த்தும் பகுதியினும்,

சிவஞான போதத்து 'ஏகனாகி' என்பதன் உரையிலும் காணலாம். (374)

**உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்**
**அயரறி வில்லையா லாருடல் வீழும்**
**உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்**
**பயிருங் கிடந்துள்ளப் பாங்கறி யாரே. 2078**

இம் – எனின், உயிரும் உடலும் ஒன்றி வாழும் வாழ்வு திருவருட் பாங்கால் எனல் நுதலிற்று.

இ–ள்: மூச்சு நின்றால் உணர்ச்சி எங்கு இருக்கும்? அயர்ந்து அறிவில்லாமையால் ஊறு உணர்ச்சி நிறைந்த உடல் அஃது அகன்று கீழே விழும்; ஆகவே உயிரும் உடலும் ஒன்று கூடி வாழும் வாழ்வு கிடந்த சிவனுடைய திருவுள்ளப் பாங்கினை அறியார் உலகவர் என்றவாறு.

உயிர் நின்றார் உணர்வு எங்கே? உடல் கீழே விழ வேண்டியதுதானே! உடலும் உயிரும் ஒன்றுபட்டது திருவருளால்; இதனை உலகவர் அறியார். உண்மையறிந்து உய்யாத இதுவும் ஓர் கூடாவொழுக்கமன்றோ என்பது கருத்து.

உயிர் – உயிர்ப்பாகிய மூச்சுக்காற்றால் தன் உண்மை அறியப்படுவதாய் உணர்வாக உடல் முழுதும் வியாபித்து நிற்பது. உயிர்ப்பின் ஓட்டம் நின்றால் உணர்வு எங்கே இருக்கும். உயிரையும் உடலையும் கூட்டித் தத்தம் கால எல்லைவரை வாழ வைப்பவன் இறைவன். இவ்வுண்மையைப் பலர் அறியார் என்பதாம்.

பயிர் – வழக்கம். கிடந்த உள்ளம் எனப் பெயரெச்சத்து அகரம் தொக்கதாகக் கொள்க. (375)

**உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்**
**உயிரை யறியில் உணர்வறி வாகும்**
**உயிரன் றுடலை விழுங்கு முணர்வை**
**அயரும் பெரும்பொரு ளாங்கறி யாரே. 2079**

இம் – எனின், உணர்வினுக்குணர்வாய் மறைந்திருக்கும் பொருளை உணர்தலே ஒழுக்கமாம் எனல் நுதலிற்று.

இ–ள்: உயிருக்கு வேறாக உணர்வு என்ற ஒன்று உடல் முழுதும் வியாபித்திருக்கும்; உயிரை யறியில் உணர்வு அறியப் பெறும்; உடல் முழுதையும் வியாபித்திருப்பது உயிர் அன்று, உணர்வு; அதனில் மறைந்திருக்கும் பெரும்பொருள் ஒன்றுண்டு; அதனை எவரும் அறியார் என்றவாறு.

உயிர் உடல் முழுதும் பரவியுள்ளது என்பர்; அஃதுண்மையன்று; உணர்வே பரவியது; அதனுள்ளும் மறைந்திருக்கும் பரம்பொருளை அறிந்தவரே ஒழுக்கமுடையார் என்பது கருத்து.

உயிர் – உயிர்ப்பு வடிவாய் இயங்குவது. அது உடல் முழுதும் பரவியில்லை. உணர்வு சாங்கம் அனைத்தினும் பரவியுள்ளது. ஆனால் உயிருக்கும் உணர்வுக்கும் ஒற்றுமை மிக உண்டு. உயிரையறியின் உணர்வை அறியலாம். அவ்வுணர்வையும் இயக்கி அதனுள்ளே மறைந்த பிரமத்தை அறிவதே ஒழுக்கம் என்பதாம். பெரும்பொருள் – பிரமம்; சிவம். (376)

உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்
நிலவாணி ஐந்தினுள் நேருற நிற்குஞ்
சிலவாணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே.
2080

இம் – எனின், தன்னை அறியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உலகம் நிலைபெறுதற்கு ஏதுவாகிய அச்சாணி ஒளிபொருந்திய சோதி வடிவாய பரசிவம்; அவன் உத்தம மான திருவுளப்பாங்கு உடையவனாய் உயர்ந்த மனத்துள் உறைவன்; நிலமுதலான ஐம்பூதங்களின் தன்மையாய் அவற் றுள்ளும் கலந்து காணப்படுவன்; அத்தகைய சிவ என்னும் சொற்பொருளாகிய தேவதேவனைத் தலையாய மந்திரமாக இடைவிடாது எண்ணுவது தன்னை அறிவதாம் என்றவாறு.

சீபஞ்சாக்கரத்தைச் செபிப்பதே உயிர் தன்னை அறிவதாம் என்பது கருத்து.

சுத்தம் அசுத்தம் பிரகிருதி ஆகிய மாயைகளின் காரியமான எல்லா அண்டங்களிலும் உள்ள எல்லா உலகங் களுக்கும் ஆணியாய் அவற்றை நிலைபெறுத்துபவன் ஒளி மயமான திருமேனியையுடைய சிவபரம்பொருள் என்பார் ‘உலகு ஆணி ஒண்சுடர்’ என்றார்.

உத்தம சித்தன் – கருணையே வழியும் திருவுள்ளம் உடையான்; உயர்ந்த மனத்தை இடமாகக் கொண்டவன் எனலுமாம்.

நிலவாணி – நிலமுதல் ஆகாயமீறான ஐம்பூதங்கள். வாணி – வாக்கு; அது ஆகாயத்தின் தன்மாத்திரை. ஆதலால் அதன் பெயரால் ஆகாயத்தைக் குறித்தவாறு. நேருற நிற்றலாவது நுண்பூதமாயும் தன்மாத்திரையாயும் கலந்து அவைகளை நிலைபெறுத்தல்.

சிலவாணியாகிய தேவர்பிரான் 'சிவ' என்னும் சொல்லைத் தனக்கேயுடைய தேவதேவன், சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான் என்றபடி.

விசுவநாதப்பிள்ளை பதிப்பில் இப்பாடமே காணப்படுகின்றது. சிலவாணி எனப் பாடம் கொள்வாரும் உளர். சிவ்வாணி என்பது இடையின எதுகையதாய் இலக்கணமாதலை ஓர்க. சிலவாணி என்பதற்கு அவர்கள் வெளிப்பட்டு வாழ்பவன் என்றும், கலந்து நிற்பவன் என்றும் பொருள் காண்பர். இச்சொற்கு இப்பொருள் உளதேல் காண்க.

தலைவாணி – சிறந்தசொல். தலையாகிய துரிய நிலையில் பொருந்தும் எனலுமாம். திருவைந்தெழுத்தைத் தியானிக்கின் தம்மை உணர்ந்து, தம்மையுடையானை உணர்ந்து, தடையையும் உணரச் செய்யும் ஆதலின் 'தலைவாணி செய்து தன்னை அறிவதே' என்றார்.

இங்ஙனம் திருவைந்தெழுத்தை ஓதுதலும் தேவர் பிரானைத் தியானித்தலுமே, தன்னை அறிவதாகிய நல்லொழுக்கமாம்; ஏனைய கூடாவொழுக்கமாமென உய்த்துணர வைத்தவாறு. (377)

தானந்த மாமென நின்ற தனிச்சுடர்
ஊனந்த மாயுல காய்நின்ற வொண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே. 2081

இம் – எனின், சிற்றின்பத்தில் நீங்கிப் பேரின்பத்தைப் பெற முயலுதலே ஒழுக்கமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: உலகத்து இயங்குவன நிற்பன எல்லாவற் றிற்கும் லயத்தானமாய் நின்ற ஒப்பற்ற சுயம்சோதியும் உடல் உலகு எல்லாமாய் நின்ற ஒளிபொருந்திய சுடரும் ஆகிய தலைவனது எல்லையில்லாத பெருங்கருணையால் விளையும் திருவருட்பேறு உனக்கு உண்டாம்; தேனும் அதன் முடிவும்போலத் தித்திப்பதாய், பின்னர்ப் புளிப்பதாய சிற்றின் பத்தை நீ விடுவாயாக என்றவாறு.

இறைவனருளால் திருவருள் சித்திக்கும்; பேரின்ப முண்டாம்; ஆதலால் சிற்றின்பத்தை ஒழி எனக் கூடாவொழுக் கத்தை விலக்கியவாறு.

மகாசங்காரகாலத்து உலகம் அனைத்தும் தத்தம் காரணத்துள் ஒடுங்க, காரணம் சிவசத்தியில் ஒடுங்க, சிவசத்தி சிவத்துள் ஒடுங்க, சிவம் ஒப்பில் சுடராய் ஒருதனியே நிற்கு மாதலின் 'தான் அந்தமாமென நின்ற தனிச்சுடர்' என்றார்.

ஊன்: கருவியாகு பெயராய் அதன் காரியமாகிய உடலை உணர்த்திற்று. உடலும் உலகும் கூறவே, போகங்களும் உடன் கொள்ளப்படும். எல்லாமாய் நின்ற ஒளிப்பொருள் சிவம் என்பதாம்.

தேனும் அந்தமுமாய் என உம்மைத்தொகையாகக் கொள்க. தேன் இனிப்பும் அதன் அந்தம் புளிப்பும் ஆதல் போலச் சிற்றின்பம் முதற்கண் உவப்பும், பின் உவர்ப்பும் ஆம் ஆதலின் தேனையும் அந்தத்தையும் சிற்றின்பத்திற்கு உவமித்தார். அதனை நீ ஒழிவாயாக என்பதாம்.

கோன் – முழுமுதற் றலைவனாகிய சிவம். சிவத்தி னுடைய குணங்கள் எல்லையற்றன ஆதலின், 'அந்தமில்லாக் குணம்' எனப்பெற்றது. அனந்தகல்யாண குணம் என்பதும் இதுவே.

சிவகுணத்தால் விளையும் அருள், பேரின்பத்திற்கு வாயிலாதலின் அதனைக் கூறி, நீ சிற்றின்பத்தை ஒழி; பேரின்பத்தைப் பெறு என்று அறிவித்தவாறு. (378)

**உன்முத லாகிய வூனுயிர் உண்டெனுங்**
**கன்முத லீசன் கருத்தறி வாரில்லை**
**நன்முத லேறிய நாம மறநின்றால்**
**தன்முத லாகிய தத்துவ மாமே. 2082**

இம் – எனின், பதியுண்மையும் ஆணவமல நீங்கி அடங்குதலே நல்லொழுக்கமாம் என உணர்த்துதல்நுதலிற்று.

இ–ள்: உயிர் ஊனினாகிய உடலொடு கூடியபோது உன்னுதல் முதலிய செயல்கள் உண்டாயின என்னும் கயிலாய வாசியான இறைவன் திருவுள்ளக்குறிப்பை அறிவாரில்லை யாம்; நல்ல முதற்பொருளாகிய சிவம் விளங்கித் தோன்ற நான் நீ என்ற பெயருங்கெட, இறைவனோடு ஒன்றி நின்றால் தன் முதலாகிய உண்மைப் பொருள் வெளிப்பட்டருளும் என்ற வாறு.

நானென்னும் நாமமும் ரூபமும் அறத் தியானிக்கின் சிவம் விளங்கும்; இவ்வுயிர் உடலொடு கூடியதும் பின் நினைத்தலாதி செயல்களைப் புரிவதும் ஈசன் செயலால் என்னும் ஈசன் கருத்தை அறிவர் இல்லை; என்னே அறிவீனம் என்பது கருத்து.

ஊன் உயிர் முதலாகிய உண்டென்னும் ஈசன் கருத்து எனக்கூட்டுக. உடலொடு கூடிய உயிர் நிலைத்தலாதி தொழில் களைப் பெற்றது ஈசன் கருத்தாலன்றி வேறொன்றா லன்று. அவன் நினைவுமா நினைத்தாலன்றி உயிர்கள் நினையா; 'அறிவிக்கவன்றி அறியாவுளங்கள்' என்பன இணைத்து எண்ணுதற்குரியன.

கல் முதல் – மலைகட்கெல்லாம் முதலாகிய கயிலை.

நல் முதல் – நல்ல முதல்வனாகிய சிவம். ஏறிய – மிக்குத் தோன்ற. செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சம். சிவம் மிக்குத் தோன்ற நான் என்னும் பெயரும் கெட அதாவது முனைப்பறத் தாடலைபோல அடங்கிக் கிடந்தால் என்க. தன் முதலாகிய தத்துவம் – தனக்கு முதல்வனாகிய மெய்ப் பொருள் ஆம் என்க.

நன்முதல் ஏறிய நாமற நின்றால் எனவும் பாடம். நாம் – அகங்காரம். நாம மறநின்றால் என்ற பாடத்தில் சிறிது ஓசை நீளுகிறது. ஆதலின் 'நாம் அற' என்ற பாடமே கொள்ளத் தக்கதாகலாம். இப்பகுதிக்கு, பிறப்பீனும் வித்தாகிய காமம் முதலிய மூன்றும் கெட நின்றால் என உரைப்பாரும் உளர். 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின், நாமங் கெடக் கெடும் நோய்' என்னும் குறள் இத்தகைய எண்ணத்தை அவர்கட்கு விளைத்ததுபோலும். சிறந்தன கொள்க. (379)

இந்தியம் அந்தக் கரண மிவையுயிர்
வந்தன சூக்க வுடலன்று மானன்று
தந்திடும் மவ்வியத்தத் தால்தற் புருடனு
முந்துள மன்னுமா றாறு முடிவிலே. 2083

இம் – எனின், ஆன்ம இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இந்திரியங்களும் உயிர் அன்று; அந்தக் கரணங்களும் உயிரன்று; இவைகளைப் பொருந்திய சூக்கும தேகமும் உயிரன்று; பெருமான் உதவிய அவ்வியத்தமாகிய மாயை தந்த புருடனுக்கும் முன்பு முப்பத்தாறு தத்துவங்களின் முடிவில் ஆன்மா பொருந்தும் என்றவாறு.

இந்திரியம் அந்தக்கரணம், சூக்குமதேகம் முதலியன உயிரன்று; மகத்தத்துவம் பெற்ற மாயை உதவிய புருடதத்துவத்திற்கு முன்பு தத்துவங்கள் முப்பத்தாறுக்கு முடிவில் ஆன்மா விளங்கும் என்பதாம்.

இந்திரியம் – சூக்குமமான ஞானேந்திரியங்கள். அவை, மெய், வாய், கண், மூக்குச், செவிகளாய், ஊனாதி சுவைகளை உணர்தற்குக் கருவியாய் அமைந்தவை. அவைகளே ஆன்மா என்பார் இந்திரியான்மவாதிகள். அவர்கள் கூறுவது:– ஐம்பொறிகள் ஐம்புலன்களையறிதலின் அதுவே ஆன்மா என்பது. எனது கண், எனதுசெவி எனக் கூறுதலால் செவி கண் முதலான இந்திரியங்களைக் காட்டிலும் ஆன்மா வேறு என்பது பெறப்படுமாயினும், இந்திரியங்களில் ஒன்றறிவதை ஒன்றறியமாட்டாமையானும் ஐம்பயனையும் உணர்வதொன்று இவ்வைந்தின் வேறாதல் பெறப்படுதலானும் பொறிகள் ஆன்மா அன்று என்று துணியப்படும் என்பார். 'இந்திரியம் உயிர் அன்று' என்றார்.

அந்தக்கரணம் – பொறிகளை இயக்குவனவாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் உட்கருவிகள். பொறிகள் புறக்கருவிகளால் வேறொன்றான் இயக்கப்படுவன அன்றித் தாமே இயங்கிக் காண்பன அல்ல; கேட்பன அல்ல; மோப்பன அல்ல; உண்பன அல்ல; உறுவன அல்ல; ஆதலின் அவற்றைக் கருவியாகக் கொண்டு உணர்வன அந்தக் கரணங்கள், அவையே ஆன்மா என்பவர்கள் அந்தக்கரணான்மவாதிகள். அந்தக்கரணங்கள் அரசர்க்கு அமைந்த அமைச்சர்களைப் போல உறுதுணையாவனவன்றித் தாமே செயற்பட்டு உணர்வன அல்ல; உணர்ச்சிப் பயனை உறுவன அல்ல; ஆன்மா சகசமலத்தோடு கூடினமையால் இவற்றைத் துணையாகக் கொண்டு உணர்கின்ற அவ்வளவே. ஆதலால் அந்தக்கரணங்கள் ஆன்மா ஆகா என்பார் 'அந்தக் கரணம் உயிரன்று' என்றார்.

சூக்க உடல் – நுண்ணுடல். இது சத்த பரிச ரூப ரச கந்தங்களாகிய பஞ்சதன்மாத்திரைகளானும், மனம் சித்தம் அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்கள் மூன்றானும் ஆயது. இவை புறத்து விளங்காதாயினும்அகத்து நின்று இந்திரியங்களைப் புறத்தே செலுத்தி அறியும் ஆயினும், சொப்பனத்துக் கண்டனவற்றை நனவின் கண் கனவு கண்டாம்; கனவு காண்கின்றிலம் என்று நிற்பதொன்று இதின் வேறாக நிற்றலானும், கனவிற் கண்டவற்றை அப்படியே உணராமல் நனவில் மாறி உணர்தலானும் கனவிலறியும் சூக்குமதேகம் ஆன்மா ஆகாதென்பார் 'சூக்க உடல் உயிர் அன்று' என்றார்.

சூக்க உடலை 'உயிர் வந்தன சூக்க உடல்' என விசேடித்தார். பொறிகள் செயற்படாது உறங்குகின்ற காலத்து உயிர்ப்பாகிய பிராணன் இயங்குதலால் அதுவே ஆன்மா என்பாரையும் மறுத்தற்கு என்க.

மான் – மகத்துக்கெல்லாம் மகத்தாயுள்ள சிவம். அவ்வியத்தம் – மாயை. இத்தகைத்து என்று அறியப்படாத மாயை. சகசமலமாகிய ஆணவவலியை ஒடுக்க, இறைவனால் புணர்க்கப்பெறுவது ஆதலின் 'மானது தந்திடும் அவ்வியத் தத்தால்' எனப்பட்டது.

புருடன் – ஆன்மா. மலமாயைகளோடு கூடி, கன்ம பலனைப் புசிக்கும் கருத்தாவாக விளங்கும் பொழுது ஆன்மா புருடன் எனப்படுவன். ஆதலால் கன்மங்களை நுகர்தற் குரியவனாக ஆதற்கு முந்திய அவதரத்திலும் கன்ம நுகர்ச்சிக் கண் முப்பத்தாறு தத்துவங்களோடுங் கூடிச் செயற்படும் போதும் உண்டென்று உணரப்படுவது ஆன்மா என்பார் 'புருடனும் முந்து ஆறாறு முடிவிலே உளம் மன்னும்' என்றார். உளம் – ஆன்மா.

அகவே இந்திரியம் அந்தக்கரணம் சூக்கும தேகம் உயிர்ப்பு இவை ஆன்மா அன்று, இறைவன் பரிபாகமுறுத்துதற் பொருட்டு உதவிய அவ்வியத்தமாகிய மாயாமலத்தால் புருடன் என்ற பெயரையடைவதாய் கன்ம நுகர்ச்சிக்கண் முப்பத்தாறு தத்துவங்களுடன் கூடி வினைப்போகங்களை நுகர்வது ஆன்மா என்பது உணர்த்தப்பெற்றது.

இங்ஙனம் ஆன்ம இலக்கணத்தை உள்ளவாறு உணர்தல் ஒழுக்கம்; திரிய உணர்தல் கூடா ஒழுக்கம் என உய்த்துணரவைத்தவாறு.

இம்மந்திரத்தைப் பிராணவாயு ஆன்மா அன்று என மறுத்தற்கு மேற்கோளாகக் காட்டி 'எனப் பிராணவாயு நீக்கமும் வந்தவாறு காண்க' என்னும் ஞானாவரண விளக்கம்,

''அன்னதெனுந் தூலவுடற் சட்ட மல்லை
யவையன்றிச் செவிமெய்கண் வாய்மூக்கு மல்லை
உன்னதென உரைத்தலினால் நீதானல்லை
யறுமவைஞா னேந்திரிய மென்றோத லாலே
மன்னியவாக் கொடுபதங்கை பாயு பத்தம்
வருகன்மேந் திரியமவை மதிநீ யல்லை
அன்னியமாஞ் சத்தாதி வசனாதி யையைந்
தவையல்லை ஞானகன்மேந் தியவிடய
மெனலால்''

ஐயமுறு மனமல்லை யையந் தீர
வறிதருபுந் தியுமல்லை அகந்தை யல்லை
மெய்யொன்று சிந்தனையாஞ் சித்த மல்லை
மிகுகுணதத் தவமல்லை விட்டவெல்லாம்
வினவிற்

பொய்யின்ன லிலாநனவாம் புகலுங் காலம்
புகுநியதி கலைவித்தை யராகமொடு புருடன்
எய்துமிவை விடக்கனவாஞ் சுத்தவித்தை யோடு
மீசர்சதா சிவம்விந்து வோடு நாதம்''

''இன்னவைவிட் டிடநனவிற் சுழுத்தி யாகு
மிங்ஙனந்தான் காணவரு மவ்வியத்த மாயைத்
துன்னிருளா யருவாகி யுருவ மாகிச்
சொல்லவரு தனுகரண புவன போகம்
அன்னவையா மகிலமுந்தான் படைத்த ளித்திட்
டழித்துமறை யாவருளு மவர்வெவ்வே றாகப்
பன்னும்யோனிகளுருவா யைந்து கருமந்தான்
பண்ணவிகாரம் விகாரமாம் வகைந டத்தும்''

என்ற நிராமயதேவர் வாக்கு நன்கு விளக்கும். (380)

# 37. கேடுகண்டு இரங்கல்

மக்கள் பிறவி எடுத்ததன் பயனை மறந்து, பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே என்றார்போலப் பயனின்றிக் காலம் கழித்தலோடன்றி வினைப்பொதியையும் தேடிக் கொள்ளும் கேட்டினைக் கண்டு மனம் இரங்கிக் கூறியது. இரங்கல் வாயிலாக அவர்களுக்கு உய்யுநெறி உணர்த்திய வாறு. கேடு – உண்மை உணராத அறியாமை. அதனைக் கண்டு இரங்குதலால் அதிகார இயைபு அறிக.

**வித்துப் பொதிவார் விதைவிட்டு நாற்றுவார்**
**அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்**
**உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்**
**முற்றொளி தீமுன் னீநின்ற வாறே. 2084**

இம் – எனின், வினைப்பயன் ஒன்றுமறியாமல் வாழு மக்களின் நிலைக்கு இரங்கிக் கூறுதல் நுதலிற்று.

இ–ள்: ஒவ்வொரு கணமும் தம் வாழ்நாள் கழிவதை அறியாதபாவிகள், மேலாண்டு விதைப்பதற்காக விதை எடுத்துக் கோட்டை கட்டி வைப்பார்கள்; விதையை நாற்றங் காலில் விட்டு நாறானதும் பிடுங்கி நாற்றை நடுவார்கள்; தமக்கு வந்துற்ற வினைகளான் வருந்துன்பங்கள் ஒன்றையும் உணரார்; இவர்கள் நிலை முதிர்ந்த தீயின் முன் ஈ நின்ற தன்மையை ஒக்கும் என்றவாறு.

பரிபாகமுற்றுப் பிராரத்தமாக வந்த வினைப்பயனை நுகர்பவர்கள் எரியும் தீயின் முன் ஈ அகப்பட்டதைப் போல்வர் என்பது கருத்து.

'நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும் வாள் அஃது உணர்வார்ப் பெறின்' ஆதலின் தமக்கென்று வரையறுக்கப் பட்ட வாழ்நாள் கணம் கணமாக விநாடி விநாடியாகக் கழிதலை அறியவேமாட்டார்கள். இரக்க மிகுதியார் அவர்களைப்'பாவி' என்றார்.

வித்துப் பொதிவார் என்றது சஞ்சித கன்மங்களைக் குவித்தலால்; விதைவிட்டு நாற்றுவார் என்றது ஆகாமிய வினைகளைப் பரிபாகமுறுத்தி மேல்வினைக்கு வகை செய்த லான் என்க.

வினைத்துயர் – முன்செய் வினைகளால் இப்பிறவியி லடையும் இன்பத் துன்பங்களாகிய பயன்கள் ஒன்றும் எனவே அவ்வினைகட்குக் காரணம் ஒன்றையும் என்க.

முற்றொளி தீ – முதிர்ந்த ஒளியையுடைய தீ; என்றது, கனிந்து கொழுந்துவிட்டெரியும் நெருப்பு. தீயின் முன் ஈ நின்றவாறு – தீமுன் ஈப்போலப் பொசுங்கிச் சாவர் என்று இரங்கியவாறு.

தீயின் முளிகின்றவாறே என்பது பாடமாயின் உலர்ந்து உயிரிழக்கிறது போல என்று கொள்க. முனிகின்றவாறே என்பது பாடமாயின் தீயினால் கோபிக்கப்படுவதுபோல எனச் செயப்பாட்டு வினையாக்குக. இப்பாடம் அத்துணைச் சிறப்பி னதன்று. (381)

**போது சடக்கெனப் போகின் றதுகண்டும்**
**வாதுசெய் தென்னோ மனிதர் பெறுவது**
**நீதியு ளேநின்று நின்மலன் தாள்பணிந்**
**தாதியை அன்பில் அறியகில் லார்களே.** 2085

இம் – எனின், பிறந்ததன் பயன் சிவபெருமானை அன்புடன் பணிதலாக, அது செய்யாது ஆன்மாக்கள் அழிவதற்கு இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: பொழுது சடக்கெனப் போவதைக் கண்டும் மக்கள் வாய்வேதாந்தமாக வாதுசெய்து பெறும் பயன் யாது? நீதியாக ஒழுகி, நின்மலராகிய சிவபெருமான் திருவடியைப் பணிந்து, அனைத்திற்கும் முதலாகிய அவர் திருவடி நீங்காத அன்பால் அறியும் ஆற்றல் இல்லாதவர்களாக இருக்கின்றார்களே எ–று.

எடுத்த பிறவிக்குரிய காலமோ சடக்கென்று கழிகிறது. வெறும் வாது பேசிப் பயனென்ன? ஒழுக்கத்துடன் இறைவன் திருவடியைப் பத்தியுடன் பணிந்து முத்தி எய்தாதிருக்கின்றார்களே என்பது கருத்து.

சடக்கென என்பது விரைவுக் குறிப்பிடைச் சொல்லடியாகப் பிறந்த செயவென் எச்சம். வாது செய்து என்பது பயனின்றி வாய்ச்சண்டை செய்து என்பதாம். நீதி – நல்லொழுக்க முறைமை. (382)

**கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி**
**உடம்பினை யோம்பி உயிராத் திரிவார்**
**தடங்கொண்ட சாரல் தழல்முரு டேறி**
**இடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே.2086**

இம் – எனின், புலன்களை அருத்தி புலாலுடம்பைப் போற்றுதலாற் பயனின்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கடன் வாங்கியேனும் நெல்லைக் குத்தி, கீழ் மக்களாகிய பொறிகளுக்கு அருத்தி, உடம்பை வளர்த்து,

அவ்வுடம்பே உயிரென எண்ணித் திரிவார்கள்; இடமகன்ற மலைச்சாரலிலே முறுகி வளர்கின்ற தீப்பற்றி அதனையே இடமாகக் கொண்டு இவ்வுடலார் கிடக்கின்றவாற்றை அறியார் என்றவாறு.

இவர்கள் வளர்க்கும் உடல் இடுகாட்டிலே எரியிடமாகக் கிடந்தழியப்போவதை உணரார் என்பது கருத்து.

பொறிகளைக் கையர் என்றார், வஞ்சகமும் கீழ்மையும் உடைமையான். தம் பொறிகளுக்கு வேண்டிய புலன்விருந்தை நிறைவிக்க முடியாமையான் கடன் பெற்றாவது பக்குவப் படுத்தி அவற்றிற்கு அருத்துகின்றார்களே என்றும், உடம்பையே வளர்த்துத் தேகமே ஆன்மா எனத் திரிகின்றார்களே என்றும், அவ்வுடல் சுட்டெரித்துத் தொலையப்போவதை அறியகில்லாரே என்றும் இரங்கியவாறு. (383)

**விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து**
**புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன**
**பரந்தன்னை யோராப் பழிமொழி யாளர்**
**உரந்தன்மை யாக வொருங்கிநின் றார்களே.**
**2087**

இம் – எனின், சிவகுருநாதன் திருவருளுபதேச வழி நில்லாது ஆன்ம போதத்தால் அழிவார் நிலைக்கு இரங்கியவாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: திருக்கயிலாய மலையிலே உலகத்தைக் காக்கும் கல்லாலநிழலில் எழுந்தருளி, புண்ணியனாகிய சிவபெருமான் அன்று சனகாதியர் நால்வர்க்கு விரைந்து சொன்ன பரபோகத்தை உதவும் உபதேச மொழிகளை உணராத

பழிமொழிகளைப் பேசும் மக்கள் தம் ஆன்ம போதமே தமது இயல்பாகக் கொண்டு ஒருப்பட்டு நின்றனரே என்றவாறு.

சிவனருள் கொண்டு செம்மை நெறியைப் பற்றாது ஆன்ம போத வழிநின்று அழிகின்றனரே என்று இரங்கியவாறு.

அன்று – சிவபெருமான் தென்முகக் கடவுளாய் யோகிருந்த அன்று. நால்வர்க்கு – சனகர், சனாதனர், சனந்தனர், சனற்குமாரர் என்ற நால்வர்க்கு. மெய்ப்பதி – என்றும் அழியாத இன்பமயமான திருக்கயிலையாகிற இடம். புரந்த – உலகினைப் பாதுகாத்த அல்லது உயிர்களனைத்தையும் பாதுகாத்த எனலுமாம்.

புண்ணியன் – புண்ணியமே வடிவான பரசிவம். பரம்– மேலான உபதேச மொழி. அது இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிய நிலை.

ஓரா – கேட்டுத் தெளிந்து ஒன்றித்து நில்லாத. உரம் – அறிவு; அது சீவபோதம். ஒருங்கி நின்றார்களே – சீவ போதத்தில் ஒன்றிச் சிறுதொழிலும் அதனால் விளையும் சிற்றின்பப்பயனும் உடையராயினரே என இரங்கியவாறு. **(384)**

**நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்**
**என்றுமெம் மீசன் அடியவர்க் கேநல்கும்**
**அன்றி யுலக மதுவிது தேவென்று**
**குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. 2088**

இம் – எனின், ஈசன் செய்யும் உபகாரமும் அஃது அறியாது ஆன்மாக்களடையும் கேடும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எம்மை உடைமையாக உடைய முதல்வன் நிலை பெற்ற புகழையும், நிறைந்த தவத்தால் விளையும் பேரின்பத்தையும் என்றும் தம் அடியவர்கட்கே வழங்குவன்; அஃதறிந்து வைத்தும், உலகவர்களாகிய பாசண்டிகள் முதற் கடவுள் அது இது என்று பேசி ஞானம் குறைவதால்அவர்களும் குறைப்பட்டனர்; இஃதென்னே அறியாமை என்றவாறு.

முதல்வனை அறிந்து அன்புசெய்து உய்யமாட்டாது அது தெய்வம் இது தெய்வம் என்று உண்மை உணராது அழியும் ஆன்மாக்களுக்கு இரங்கியவாறு.

மெய்யடியார்களுக்கே என்றும் அழியாத மெய்ப் புகழும் பேரின்ப சித்தியும் விளையும் என்பார் 'நின்ற புகழும் நிறைதவத்து உண்மையும் என்றும் எம் ஈசன்அடியவர்க்கே நல்கும்' என்றார்.

இவர்தேவர் அவர் தேவர் என இரண்டாட்டி உண்மை யுணராது என்பார் 'உலகம் அது இது தே என்று' என்றார்.

குன்றுகையால் – உண்மை ஞானத்தை உணராது ஆன்ம இயல்பு அழிகையால் என்க. (385)

**இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்**
**தின்பத்து ளேநினைக் கின்ற திதுமறந்**
**துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்று**
**துன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே.**
**2089**

இ–ள் – எனின், இன்பத்தில் வாழவேண்டிய மக்கள் துன்பத்தில் வாழ்வதற்கு இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: இன்பத்திலே பிறந்து வளர்ந்து, அதனை நினைப்பது மறந்து, துன்பத்திற்பட்டு, சோறு என்றும் கூறை என்றும் துன்பத்துள்ளே சிக்கித் துயர்ப்படுகின்றார்களே; இஃதென்ன அறியாமை என்றவாறு.

இன்பமயமாய் இருக்கவேண்டிய மக்கள் துன்பத்துட் பட்டுத் துயருறுகின்றனரே என இரங்கியவாறு.

இன்பத்துளே பிறந்து ஆன்மா ஆணவச் சேற்றுட்பட்டு அறியாமை வயப்பட்டு அவதியுறுதலை அகன்று உய்வதற்காக இறைவன் புரியும் அருணோக்கமாகிய இன்பத்திலே பிறந்து, தாயும் தந்தையரும் பெறும் சிற்றின்பத்திலே பிறந்து எனலுமாம் பிறந்து – உடலோடு கூடி.

பசுகரணத்தையெல்லாம் பதிகரணமாக்கித் தாம் நுகரும் வினைப்போகத்தைப் பதிகன்மத்தால் விளையும் சிவபோகமாக்கி வளர்தலை 'இன்பத்துளே வளர்ந்து' என்றார்.

இன்பத்துளே நினைக்கின்றது இது – பேரின்பமாகிய சிவபோகத்திலே அழுந்தி அது அதுவாதல் நிலை. துன்பம் – பொறிகளால் புலன்களை நுகரும் துன்பம். கூறை – ஆடை, தூங்குகின்றார் – செயலற்று மயங்கிக் கிடக்கின்றனர். (386)

**பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்**
**பெறுதற் கரிய பிரானடி பேணார்**
**பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்**
**பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. 2090**

இம் – எனின், அரிய மானிடப் பிறவியைப் பெற்றும் அதன்பயன் எய்தாமைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ—ள்: எவ்வகையினும் பெறுதற்கரிய பிறவியை இறையருளால் பெற்றிருந்தும், உண்மையன்பானன்றி உபாயங்களான் பெறமுடியாத சிவபெருமான் திருவடியைப் பேணாதவர்களாயினரே! பெறுதற்கரிய விலங்கினங்களை ஒத்த மக்கள் பெறுதற்கரிய சிவ புண்ணியப் பேற்றினை இழந்தார்களே என்றவாறு.

பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் பெறுதற்கரிய பேரின்பத்தைப் பெறாது அழிந்தனரே என இரங்கியவாறு. ஏனைய வெளி. (387)

**ஆர்வ மனமும் அளவில் இளமையும்**
**ஈரமும் நல்லவென் றின்புறு காலத்துத்**
**தீர வருவதோர் காமத் தொழில்நின்று**
**மாதவன் இன்ப மறந்தெழிந் தார்களே. 2091**

இம் – எனின், சிற்றின்பம் வெஃகிப் பேரின்பம் இழந்தமைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ—ள்: மேன்மேலும் ஆர்வத்தைப் பெருக்கும் மனமும், எல்லையிலாத இளமைப் பருவமும், அன்பும் நல்லன என்று இன்புறுங்காலத்தே இவையனைத்தும் அழியுமாறு தோன்றுகின்ற காமத் தொழிலாகிய மாதர் புணர்ச்சிக்கண் நின்று பெருந்தவ வடிவராகிய பரசிவத்தால் தமக்கு விளையும் இன்பத்தை மனத்தாலும் மறந்து நீங்கினரே! என்றவாறு.

காமத்தை விரும்பிப் பேரின்பத்தை மறந்தனரே என இரங்கியவாறு.

ஆர்வம் – கணத்திற்குக் கணம் பெருகும் பற்று. வேனிற்கண் வழிநடந்தான் ஒருவன், நீர் பெற்றுழி அதனை

மேலும் குடிக்கவேண்டும் என்று எண்ணுவது போன்றதோர் காதன்மிகுதி.

ஆர்வமனம் இளமையின் சேட்டை என்பார் அடுத்து இளமையைக் கூறினார். அளவில் இளமை உபசாரம்.

ஈரம் – அன்பு. பிறவுயிர்கள் மாட்டு எழுங்கருணை யுமாம். இங்ஙனம் நல்லன எண்ணி, நல்லன செய்யும் இளமைப் பருவத்து என்க.

தீரவருவது – இவையனைத்தும் அழியவருவது என வருவித்து முடிக்க. காமத்தொழில் – மாதர் புணர்ச்சி, அதில் மிகுதியாக ஈடுபட்டார் விந்தழிதலால் உடல்சோர்வர். உடல் சோர மன எழுச்சி குன்றும்; ஆதலின் 'ஆர்வ மனம் தீர வருவ தோர் காமத்தொழில்' என்றும், அவர்கள் இளமையிலேயே கோல் ஊன்றிக் குனிந்து நடக்கும் முதுமையை எய்துதலின் 'இளமைதீர வரும்காமம்' என்றும், மாதர்மேல் மனம் போக்கி னார்க்குச் செற்றமும் தீராப் பகையும் குடி கொள்ளுதலாற் 'ஈரம் தீர வருவது ஓர் காமம்' என்றும் கூறினார்.

மாதவன் – பெருந்தவமுடையோன். பரசிவமன்றிப் பெருந்தவமுடையார் பிறதேவரின்மையின் இங்ஙனம் கூறினார். மற்றையோர் இலக்குமிகாந்தன் ஆகலாமே அன்றித் தவமுடையராக இயலாது என்க. மாதவன் இன்பம் – சிவபோகம். (388)

**இப்பரி சேயிள ஞாயிறு போலுரு**
**அப்பரி சங்கியின் உள்ளுறை யம்மானை**
34 **இப்பரி சேகம லத்துறை யீசனை**
**மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே.** 2092

இம் – எனின், இறைவன் இயல்பை உள்ளவாறு உணராதிருந்தமைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: இவ்வண்ணம் உதிக்கும் செஞ்சுடர் போலும் உருவையுடையவனும், அவ்வண்ணம் தீயினுள்ளே எழுந் தருளும் தலைவனும், இவ்வண்ணம் இதயகமலத்தெழுந் தருளியிருக்கும் இறைவனும் ஆகிய ஈசனை உண்மைத் தன்மையுடன் இதுவரை விசாரியாது இருந்தோமே! என்னே நம் அறிவீனம் என்றவாறு.

இளஞாயிறுபோல் கட்புலனாயும், யோககுண்டலி னியாய் எனக்குள் உணரப்படும் பொருளாயும், இதயகமலத் துறையும் பரம்பொருளாயும் இருக்கும் சிவத்தை ஆராயாது இருந்தது என்னே என இரங்கியவாறு.

கட்புலனாதலின் இளஞாயிற்றினுருவை எண்ணும் அண்மைச் சுட்டோடு புணர்த்து 'இப்பரிசே' என்றும், யோகம் புரிவார்க்கன்றி ஏனையோருக்குப் புலப்படாவாறு அங்கியுள் ஒளியாக உள்ளுறைதல்சேய்மைக் கண்ணது ஆகலின் சேய் மைச் சுட்டொடு புணர்த்து 'அப்பரிசே' என்றும், இதயக் கமலத் தில் உறைவது மிக அண்மையதாதலின் அண்மைச் சுட்டொடு புணர்த்து 'இப்பரிசே' என்றும் கூறிய அநுபவநயம் உணர்க.

மெய்ப்பரிசு – இறைவனுடைய சொரூபமும் தடத்தமு மாகிய இயல்புகள். வினவுதல் – கேட்டு ஆராய்ந்து தெளிதல். (389)

**கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு**
**நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்**
**பாடகில் லாரவன் செய்த பரிசறிந்**
**தாடவல் லாரவர் பேறெது வாமே. 2093**

இம் – எனின், உபதேசவழி நின்று உயரமாட்டாதார் நிலைக்கு இரங்குதல் நுதலிற்று.

இ–ள்: சிவம், குருநாதனாக எழுந்தருளிவந்து இங்ஙனமிரு என்று காட்டிய அடையாளத்திலிருந்து அவனை அடைய மாட்டார்; குருநாதன் எங்கே! அவன் காட்டிய சிவம் எங்கே எங்கே! என்று தாயைப் பிரிந்த கன்றுபோலத் தேட மாட்டாராய், நயமாக வீண்வார்த்தைகளைப் பேசித் திரிவார்கள்; இறைவன் நமக்குச் செய்த பேருபகாரங்களை உணர்ந்து அவன் புகழை அமைத்துப் பாடமாட்டார்கள்; வீணாகக் களியாட்டம் ஆடவல்லவர்களாகிய இவர்கள் எய்தும் பேறு எதுவாம்? என்றவாறு.

உள்ளவாறு அவனை உணர்ந்து அவன் புகழைப் பாடி உய்யமாட்டாத மக்கள் வீண் களியாட்டம் போல ஆடி அடையும் கதி என்ன? ஒன்றுமில்லை என்பது கருத்து.

'குருவைத்தபடி யிருக்கமாட்டாத மாந்தர்க்குச் சித்த சலனமாந்தினம்' ஆதலின் 'குருவைத்த குறி கண்டு கூட கில்லார்' என இரங்குகின்றார்.

நயம் – சொல்லின்பம். பொருளின்பம் கண்டு புத்தி தெளியவேண்டிய இவர்கள் புறவழகாகிய சொல்லின்பம் கண்டு வீணாகின்றனர் என்பார் 'நயம்பேசித் திரிவர்கள்' என்றார்.

அவன் செய்த பரிசு – பார்த்தும், தீண்டியும், சொல்லியும் பாசக்ஷயம் பண்ணிச் சுத்தமாக்கிய பேருபகாரம். ஆடவல்லார் – வீணாட்டம் ஆடவல்லவர். (390)

நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரானென்று நாதனை நாடொறுந்
துஞ்சு மளவுந் தொழுமின் தொழாவிடில்
அஞ்சற்று விட்டதோர் ஆனையு மாமே. 2094

இம் – எனின், நாதனை இறக்குமளவும் நாடோறும் தொழுக என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மனத்தில் நிறைந்து விளங்கும் பெரிய ஒளிப் பிழம்பான நம் செம் பொருளாகிய சிவன் என்று நம் நாதனை நாடோறும் இறக்கும் அளவும் துதிக்க;

அங்ஙனம் தொழாவிடில் நம்முடைய ஐந்து இந்திரியங்களும் கட்டு அறுபட்ட யானைபோல் ஆம் எ–று.

நம் மனத்துள் நிறைந்து விளங்கும் ஒளிப்பிழம்பான சிவபெருமானை உடலைவிட்டு உயிர் பிரியுமளவும் நாடோறும் தொழுக; அங்ஙனம் தொழாவிடில் நம் ஐந்து இந்திரியங்களும் கட்டற்ற யானையைப் போல, கண்டபடித் திரியும் என்பது கருத்து.

பரிபாகமுற்ற ஆன்மாக்களின் மனத்தில் மணியின் கண் ஒளிபோல எங்குமாயும், பரிபாகமில்லாத மக்களின் மனத்தில் பாலிற்படு நெய்போல எங்குமாயும் இறைவன் நிற்றலை 'நெஞ்சு நிறைந்து அங்கு இருந்த நெடுஞ்சுடர்' என்றதால் குறிப்பித்தார்.

செம்பிரான் – 'செம்மையே யாய சிவபதம்' என்றாற் போலச் செம்மையே அளிக்கும் பிரான். துஞ்சுகமளவும் – இறக்குமளவும்; என்பது எண்ணுதலாகிய தொழில் உயிர் உடலொடு கூடியிருக்குங் காலத்து மட்டும் என்க.

அஞ்சு – ஐந்தாகிய இந்திரியங்கள், அற்றுவிட்டதோர் ஆனை – கட்டு அறுபட்ட களிறு. இறைவனைத் தொழுவாருடைய இந்திரியங்கள் மனம்போன வழியெல்லாம் போகாது கட்டுண்டு நிற்கும்; தொழாதார் உள்ளம் கண்காணியாகிய கடவுள் இல்லையென்று கருதுதலால் கட்டறுந்து கண்டபடி திரியும் களிறு போல்வதாம் என்பதாம்.

இஃது அறியாதார் அஞ்சுற்றுவிட்டதோர் யானை எனப் பாடங்கொண்டு, ஐந்து புலன்களும் நம்மைப் பொருந்தி அதனால் ஆட்டுண்டு பாகனில்லாத யானை போல வருந்துவோம் என்றுரைப்பர். (391)

**மிருக மனிதர் மிக்கோர் பறவை**
**ஒருவர்செய் தன்புவைத் துன்னாத தில்லை**
**பருகுவ ரோடுவர் பார்ப்பயன் கொள்வர்**
**திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே.** 2095

இம் – எனின், இறைவனை அன்பு செய்யாத உயிர் இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: யானை முதலிய விலங்குகள், மக்கள், மக்களின் மிக்கோராகிய தேவர்கள், நாரை, வண்டு முதலிய பறவைகள், ஒப்பற்ற பரம்பொருளினிடம் அன்பினைச் செலுத்தி அதனால் தம் பணிகளைச் செய்து இறைவனை எண்ணாத பொருள்களே இல்லையாம்; ஞானத்தோடு பொருந்திப் பெரிய தவத்தைச் செய்து சிவஞானம் பெற்ற செல்வர்கள், சிவபெருமானை எண்ணுதல் மட்டிலமையாது பருகுவர்; ஓடுவர்; பூமியிற் பிறந்ததனாலாய பயனைப் பெறுவர் என்றவாறு.

விலங்கினங்களும் பறவைகளும் மக்களும் தேவரும் ஆகிய உயிரினங்களுள் அன்பு செய்யாத உயிர்கள் அவனியில் இல்லையாம்; பரிபாகமுற்ற சிவஞானிகள் அன்பின் முதிர்ச் சியால் பருகுவர், ஓடுவர், சென்று மீள்வர், எவற்றாலும் இன்பந் துய்ப்பர் என்பது கருத்து.

இறைவன் பாலும் தேனும் தெள்ளமுதும் தீஞ்சுவைத் தண்ணீரும் போல்பவனாதலின் அவனை இருகையாலும் அள்ளிப் பருகுவர் என்றார்.

கண்ணப்பர் வரலாற்றில் 'ஓடுவர் சென்று மீள்வர் வங் கினைப் பற்றி நிற்கும் வல்லுடும்பென்ன' என வருதல் காண்க. (392)

**நீதியி லோர்பெற்ற பொன்போல்**
**இறைவனைச்**
**சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை**
**ஆதி பயனென் றமரர் பிரானென்று**
**நாதியே வைத்தது நாடுகின் றேனே.** 2096

இம் – எனின், மதியிலான் பெற்ற மாண்பொருள் போல இறைவனை அறியாதார் உலகிற்பலர்; அடியேன் அவனுடைய உண்மை உணர்ந்து உய்ந்தேன் எனல் நுதலிற்று.

இ–ள்: நேர்மையில்லாதவர் பெற்ற செல்வம் போலச் சிவஞானப்பேறு இல்லாதார் இறைவனைப் பெற்றும் அவனைத் தொடாந்துபற்றிப் பயன்கொள்ளாராயினர்; அடியேன் அவனை எம் ஆதி என்றும், எம் அறிவால் பெறுகின்ற பயன் என்றும், தேவதேவன் என்றும் அநாதிகாலம் தொடங்கியே மனத்துள் மன்ன வைத்து அவனையே விரும்புகின்றேன் என்றவாறு.

இறைவனைப் பெற்றும் நேர்மையில்லாதார் பெற்ற பொருள்போலப் பயன் காணாது ஒழிகின்றார் பலர்; யான் அநாதிகாலம் தொடங்கி அவனுடைய உண்மையியல்பு உணர்ந்து பேரின்பம் பெறுகிறேன் என்பது கருத்து.

நீதியிலோர் – மனமொழி மெய்களை நல்லொழுக்க நெறியில் நிறுத்தி வாழவேண்டும் என்ற நல்லுணர்வு இல்லா தார், அவர்கள் பெற்ற செல்வம் வம்புக்காம், பேய்க்காம்; பரத்தைக்காம்; ஆதலின் அதனை இறைவனை அடைந்தும் உண்மை ஞானத்தால் உணரமுடியாதவர்க்கு உவமித்தார்.

திருவருளால் சிவஞானம் கைவரப்பெற்ற யான் இறைவனுடைய முழுமுதற்றன்மையையும் இறைமைத் தன்மையையும் அவனால் ஆன்மாக்கள் எய்தும் இணையிலாப் பேரின்பத்தையும் கண்டு இடைவிடாமல் எண்ணி அழியாக் காதல் அடைகிறேன் என்பதாம். (393)

**இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு**
**பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை யோரார்**
**வருந்தேன் நுகராது வாய்புகு தேனை**
**அருந்தேனை யாரும் அறியகி லாரே.** 2097

இம் – எனின், வண்டுபோல்வதோர் வாழ்வினை விழைவதை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மிகுந்த தேனோடு கூடிய பூவின்கண் இருந்து வண்டு இன்புற மிக்க தேனைச் சேர்க்கும் அத்தன்மையை மக்களுணரார்; மேலும் மேலும் பெருகிவரும் தேனும், நாம் நுகராமலே நம் வாயில் வலியவந்து சொட்டும் தேனும், யாராலும் பெறுதற்கரிய தேனும் போல்பவராகிய இறைவனை ஒருவரும் உணரமாட்டார்கள் என்றவாறு.

வண்டுகள் கூடத்தேன் எடுத்துச் சேர்த்து வைத்து இன்புறக் கண்டும், வலியவந்து வாய்புகும் தேனாகிய இறைவனை யாரும் அறியமாட்டார்களே என்று இரங்கி உரைத்தவாறு.

நுகராது வாய்புகு தேன் – நாம் உட்கொள்ளாமல் தானே வலியவந்து வாயில் விழுகின்ற தேன்; என்றது முயற்சியின்றிக் கிடைத்தது என்ற எளிமையும் மலரில் தானே ஊறுதல் போல மனத்தாமரையில் சிவத்தேன் தானாகவே ஊறிற்று என்ற இயற்கையும் வெளிப்பட நின்றமை காண்க.

அரும்தேன் என்றது மலரும் கனிகளும் முதலிய பூதகாரியப் பொருள்களிலிருந்து தோன்றாமல் ஞானமாகிய அருவியிலிருந்து தோன்றிய அருமைபற்றி என்க. (394)

**கருத்தறி யாது கழிந்தன காலம்**
**அருத்தியுள் ளான்அம ராபதி நாதன்**
**ஒருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம்**
**வருத்திநில் லாது வழுக்குகின் றாரே.** 2098

இம் – எனின், இறைவனை அறிந்து உய்ய அன்பு ஒன்றே போதும் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இத்தனை காலமும் இறைவனை அறியும் கருத்தறியாமல் கழிந்தன; விண்ணவர் தலைவன் அன்பினுள் அமர்ந்திருக்கின்றான்; உலகத்திலுள்ள உயிர்கள் அத்தனைக்கும் உயிர்க்கு உயிராய் உள்ளவன் அவன் ஒருவனே; அங்ஙனம் அவன் எங்குமாயிருந்தும் அவனை வருவித்துக் கொள்ள இயலாது தவறிப் போகின்றார்கள் என்றவாறு.

அன்பு ஒன்றனுள் இறைவன் எழுந்தருளியிருக்கவும் அவனை வெளிப்படுமாறு செய்து பயன்படுத்திக் கொள்ளாது காலத்தைப் பாழாக்கியமைக்கு இரங்கிக் கூறியது.

அருத்தி –அன்பு. ஒருத்தன் உள்ளான் என்பது 'ஒருவனே தேவனும்' என்ற இதோபதேசப் பகுதியை எண்ணச் செய்தது. வருத்துதலாவது – வரச்செய்தல்.

வருத்தி நில்லாது – எழுந்தருளிவரச் செய்யாமல். நோன்புகளால் வருந்தல் இல்லாது என்றுரைப்பாரும் உளர்.

(395)

**குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்**
**விதித்தன நாட்களும் வீழ்ந்து கழிந்த**
**விதிர்த்திருந் தென்செய்தீ ராறுதி ராகிற்**
**கொதிக்கின்ற கூழில் துடுப்பிட லாமே. 2099**

இம் – எனின், நடுங்குவதால் பயனில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஒவ்வொருவருடைய வாழ்நாளிலும் குதித்து ஓடிப்போகின்ற கூற்றுவனுக்குச் சார்பாக வரையறுக்கப்பட்ட வாழ்நாட்களும் பயனில்லாமல் கழிந்தன; ஆரவாரத்தோடு நீர் நடுங்கியிருந்து என்ன பயன் கண்டீர்; ஆறுதலை அடைய விரும்புவீராயின் கொதிக்கின்ற கூழ்போல நும் வாழ்விலே சிவபத்தியாகிய துடுப்பினை இடுதல் பொருந்துவதாம் எ–று.

காலனுக்குச் சார்பாகக் காலங்கள் கழிகின்றன; நடுங்கி இருந்து நாம் காணும் பயன் என்ன; ஆறுதல் அடைய வேண்டு மாயின் கொதிக்கும் கூழிலே அகப்பையிடுதலே பொருத்த மானது என்பது கருத்து.

கூற்றம் – அவரவர் வாழ்நாள் முடிவின்கண் உடலை யும் உயிரையும் கூறுபடுத்தும் தெய்வம், உடையவனுக்குத்

தெரியாமல் வீட்டுள்ளே குதித்து உள்ளதைக் கவர்ந்து செல்லும் கள்வன் போல ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் அவர் அறியாதே வந்து புகுந்து அவர் அறியாதே உயிரைப்பிரித்துச் செல்லுதலின் குதித்தோடிப் போகின்ற கூற்றம் எனப்பட்டது. 'கூற்றம் குதித்தலும் கைகூடும்' என்ற திருக்குறளோடு ஒப்புக் கண்டு அதற்காக இடர்ப்பட்டு இதற்குப் பொருந்தாதவுரை புகல்வாரும் உளர்.

கூற்றத்திற்கு நாள் சார்வாயிருந்து கழிதலாவது, மார்க் கண்டர்போலச் சிவப்பணி செய்து சிவலோகம் சாரமாட்டாமல் காலதூதர் கவரக் காலம் பயனின்றிக் கழிதல். வீழ்ந்து என்ற குறிப்பு ஈண்டுப் பயனின்மை உணர்த்திற்று.

மிகவும் நடுங்கிக் கொதிக்கின்ற கூழில் கைவிடப் பயந்த ஒருவன் குடிக்க இயலாது தவிப்பது போலக் காலத்தே வீணே கழித்துப் பயனிழத்தல் ஆகாது என்பார் இவ்வமை கூறினார். கொதிக்கும் கூழைப் போன்றது வினைக்கலத்தில் துயர் வெப்பால் கொதிக்கின்ற நம் வாழ்வு. அது நற்பயனை அளிக்க வேண்டுமானால் கூழைத் துடுப்பிட்டுக் கிளறி ஆற வைப்பது போலச் சிவநேசமாகிற துடுப்பையிட்டு ஆற வைத்துக் காலத்தில் அருந்திக் களிப்பெய்தவேண்டும் என்பது உணர்த்தப்பெற்றவாறு. (396)

**கரையரு காறாக் கழனி விளைந்த**
**திரையரு காமுன்னம் சேர்ந்தின்பம் எய்தும்**
**வரையரு கூறிய மாதவ நோக்கின்**
**நரையுரு வாச்செல்லு நாளில வாமே. 2100**

இம் – எனின், நரையும் திரையும் வருமுன் தவஞ் செய்து இன்புறுக எனல் நுதலிற்று.

இ–ள்: ஆற்றினது கரையோரமாகிய வயல் விளைந்தது; அதில் திரை வந்து அருகிக் கரைப்பதன் முன்பு திருவடியைச்சேர்ந்து இன்பம் எய்துங்கள்; மலையருகில் ஊறிய பெரிய தவத்தை ஆராயின் நரை வடிவாக நீவிர் செல்லும் நாட்கள் இல்லையாம் எ–று.

நற்றவம் செய்யின் நரையில்லை; திரைவருதற்கு முன் இன்பத்தை எய்துங்கள் என்பது கருத்து.

ஆறு கரையருகு ஆக்கழனி விளைந்த – ஆற்றங்கரையோரமாக உள்ள வயல் விளைந்தது; என்றது வினை வெள்ளம் பெருகுகின்ற வாழ்வாகிற ஆற்றினது காலம் நியதி என்ற இரண்டு கரைகளின் பக்கத்திலும் ஆகியுள்ள உடலாகிற வயலில் வினைப் போகங்களாகிற விளைச்சல் விளைந்தது. அங்ஙனம் ஓயாது வினைவெள்ளம் பெருகுவதால் அவ்வெள்ளத்தின்அலை போல்வதாகிய திரை கரையைக் கரைப்பதன் முன் தக்க பாதுகாப்பிடமாகிய திருவடி சார்ந்து இன்பம் எய்துங்கள் என்பதாம். வரை – மலை. ஊறிய – மிக்க. மலைச்சாரலில் பெரிய தவத்தை நீவிர் நோக்குவீராயின்; அதாவது மலைச்சாரலில் இருந்து பெரிய தவத்தைச் செய்யின் என்பதாம்.

நரையுருவாச்செலும் நாள் – நரையே வடிவாக மூப்பெய்தி நடக்கும் நாட்கள்.

உடல் வினைப்போகத்தால் பழுத்துத் திரை காண்பதற்கு முன் திருவடியைச் சார்ந்து இன்பம் எய்துங்கள்; மலைச்சாரலிற் சென்று தவஞ்செய்யின் உங்கட்கு நரையில்லை என்பதாம். (397)

**வரவறி வானை மயங்கிருண் ஞாலத்**
**திரவறி வானை யெழுஞ்சுடர்ச் சோதியை**
**அரவறி வார்முன் னொருதெய்வ மென்று**
**விரவறி யாமலே மேல்வைத்த வாறே.** 2101

இம் – எனின், அரனை முதலென்று அறியாமல் ஆகாமிய வினையை விளைவித்துக் கொண்டமைக்கு இரங்கிக் கூறல் நுதலிற்று.

இ–ள்: உயிர்களனைத்தும் உடலொடு கூடித் தோன்றும் ஆதிசிருட்டியை அறிபவனும், இருளொடு கலந்த இவ்வுலகத்து அந்தமாகிய மகாசங்காரகாலத்து இரவினை அறிபவனும், புனருற்பவ காலத்து மீளவும் உலகம் உண்டாக எழும் சுடரொடு கூடிய சோதியும் ஆகிய அரவினால் அறியப் பெற்ற சிவனை முழுமுதற்கடவுளென்று கலந்துநிற்க அறியாமல் வருவினையை விளைவித்துக் கொண்டவாறு என்னே அறியாமை எ–று.

சிவத்தை முழுமுதற் கடவுளென உணராது ஆகாமியத்தைத் தேடிக்கொண்ட அறியாமை என்னே என்று இரங்கியவாறு.

வரவு – தோற்றம்; 'போக்கும் வரவும் புணர்ப்பும்' என்புழிப்போல. வரவுஅறிவான் – எல்லா உயிர்களும் உடலோடு கூடும் முதற்படைப்பைச் செய்பவனாகி; ஆதி சிருட்டிக்கும் தொன்மையனாய் என்றவாறு. இதனால் முழுமுதற்றன்மைக்குரிய தொன்மை அதாவது அநாதி நித்தியத்துவம் அறிவிக்கப்பெற்றது.

இரவு – ஒடுக்க காலமாகிய இரவு. இருள் (மயங்கு) ஞாலத்து இரவு – எல்லா அண்டங்களிலும் உள்ள எல்லா உலகமும் அழிந்துபடுகின்ற சர்வ சங்கார காலமாகிய இராக் காலம். அதனை அறிபவன் – எல்லாம் தத்தம் காரணத் தொடுங்க, காரணங்கள் தம்மிடம் ஒடுங்கப் பின்புள்ளவற்றிற் கெல்லாம் பின்னாக இருப்பவன் என்பதாம்.

புனருற்பவகாலத்து மீட்டும் படைக்க முதற்கண், எழும் ஒளிசெய் சோதியை என்பார் 'எழும் சுடர்ச் சோதியை' என்றார்.

அரவு அறிவார் – அணிகளாகக் கரத்தும் சிரத்தும் தோளிலும் தாளிலும் நிலவுகிற பாம்புகளால் அறியப் பெற்றவர் எனலுமாம். அல்லது பதஞ்சலி போன்ற பாம்பால் அறியப் பெற்றவர் எனலுமாம்.

முன்னொரு தெய்வம் என்று – முதன்மையாக எண்ணப்படுகின்ற ஒப்பற்ற கடவுள் என்று என்க.

விரவு அறியாமலே – கலத்தலை அறியாமல், மேல் வைத்தவாறு – மேல்வரு வினைகளை ஈட்டிவைத்தவாறு; என்னே என ஒருசொல் வருவித்து முடிக்க. (398)

# 38. இதோபதேசம்

அஃதாவது உயிருக்கு உறுதி பயக்கும் நன்மொழி களைக் கூறுதல். ஆன்மாக்கள் பிறந்ததன் பயனை யுணராது கேடுறுதல் கண்டு இரங்கிய சிவகுருநாதன் உய்வார் உய்க என அவர்கள் கடைத்தேறும் வண்ணம் நன்மை பயக்கும் நல்லுரை களைக் கூறுதலாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

**மறந்தொழி மண்மிசை மன்னாப் பிறவி**
**இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்**
**பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்**
**சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே.** 2102

இம் – எனின், சிவநெறி சிந்தைசெய்தலின் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இப்பூவுலகில் நிலைபேறில்லாத பிறப்பை மறந்தொழியுங்கள்; உயிர் பிரிகின்ற அக்கணத்தும் சிவனை எண்ணுங்கள்; பரபந்து சுழன்று அடைகிற துன்பங்களனைத் தையும் தீர்ப்பதற்காகச் சிறந்த சிவநெறியை இடைவிடாது எண்ணுங்கள் என்றவாறு.

பிறவியை மறக்க மரண காலத்தும் அரனை எண்ணுக; துன்பம் நீங்கச் சிவநெறியைச் சிந்திக்க என்று உபதேசித் தவாறு.

சகடக்கால் போல வினைக்கீடாக மாறி மாறி வருதலின் 'மன்னாப் பிறவி' என்றார். ஒழி என்று மட்டும் உரையாது 'மறந்து ஒழி' என்றது நினைப்பும் பிறவிக்கு வித்தாகலான் என்க.

அறிவு அழிந்திட்டு ஐமேலுந்தி அலமந்தபோது அரனை நினைக்கும் வன்மை பல்லாண்டுக்காலம் பழகினா லல்லது தானாகா வாராமையின் 'இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்' என அருமைதோன்ற உயர்வு சிறப்பு உம்மை கொடுத்து ஓதினார்.

பரந்து என்பது எதுகை நோக்கிப் பறந்து என வல்லினம் பெற்றது. பரபரத்து என்ற இரட்டைக் கிளவி பரந்து எனத் தனியாய் வந்தது. இது அருவழக்கு.

படுதுயர் – நாம் படுகின்ற துன்பங்கள். மிக்க துயர் எனலுமாம். தீர்ப்பான் – பானீற்று வினை எச்சம். சிறந்த சிவ நெறி – ஒப்பற்றுயர்ந்த சிவநெறி. சரியையாதி நான்கு நெறிகள். (399)

செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீரே. 2103

இம் – எனின், இதுவுமது.

இ–ள்: முடிந்தவரை சிந்தையால் தியானியுங்கள்; முடிந்ததன்மையால் உண்மையே பேசுங்கள்; இல்லை என்பாருளராயினும் எம் இறைவன் என்றும் உளன்; ஆதலால் நல்ல சிவநெறியையே தேடிப் பெறுங்கள் என்றவாறு.

முடிந்தவரை தியானிக்க; வாய்மையே பேசுக; இறைவனை எண்ணுக; இறைநெறியே பேணுக என உபதேசித்தவாறு.

'செல்லும் வாயெல்லாம் செயல்' என்புழிப் போலச் சிந்தையைச் செல்லுமளவும் செலுத்துமின் என்றது, சிந்தை இறைமைக் குணங்களை முற்றும் சிந்தியாது ஆதலின் இங்ஙனம் கூறினார்.

வாய்மை – உண்மை; 'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும், தீமையிலாத சொலல்' ஆகையால் 'வல்லபரிசால் உரைமின்' என்றார்.

இல்லையெனினும் என்பது உலகாயதர் பௌத்தர் முதலானோர் கூற்று. பெரிதுளன் – மிகுதியும் உளன். அரனெறி – சிவதன்மம். நாடுமின் – விரும்புங்கள். (400)

## 512

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே.
2104

இம் – எனின், நல்லன எண்ணுக என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: குலம் ஒன்றே; தெய்வம் ஒன்றே; ஆதலால் நல்லனவே எண்ணுக; நமக்கு நமன் இல்லையாம்; நாம் வெட்கப்படாமல் சென்றணுகும் கதியும் வேறில்லையாம்; ஆதலால் நும் மனத்து இறை எண்ணம் நின்று நிலவ நீர் நினைந்து உய்யுங்கள் என்றவாறு.

பல எண்ணிப் பாழ்படவேண்டாம்; ஒன்றே குலம் ஒருவனே தெய்வம்; நல்லன சிந்தித்தால் நமக்கு அழிவில்லை; அரனாமமே என்றும் எங்கும் சூழ்க என்பது கருத்து.

இறைவன் வகுத்த அறிவினாலாய பாகுபாட்டால் உயிர்கள் ஓரறிவுயிர் முதலாக ஆறறிவுயிர் ஈறாக ஆறு வகைப் படும். அவற்றுள் மக்கள் ஒருகுலம். பிறப்பானாய பாகுபாட் டினால் உயிர்கள் ஏழு வகைப்படும். மக்கள் ஆறாமவராவர். அதனானும் ஓர் குலம். ஆனால் இடம் குணம் தொழில் வேறு பாட்டால் பலவகையாகப் பிரிந்தனர். ஆயினும் அனைவரும் ஓரினமே ஆவர். இங்ஙனம் இதோபதேசம் செய்யத் திருவுளங் கொண்டது மக்கள் சாதி சமய வேறுபாட்டான் தம்முட் கலாம் விளைத்து உயர்வு தாழ்வு கருதி வாதிட்டு வீணே அழிதலான் என்க.

அங்ஙனமே 'ஒருவனே தேவனும்' என்றதால் முழு முதற் கடவுளாவான் ஒருவனே என உண்மை உணர்த்தியதோடு, 'இவர் தேவர், அவர் தேவர்' என அலையாது உறுதி கொள்ள உபதேசித்ததாம் என்க.

தமக்கு நன்றையே விரும்புபவன் அது காரணமாகப் பிறர்க்குத் தீமை விளைய எண்ணுதல் கூடாது; அங்ஙனம் எண்ணுதலால் பகையும் போரும் மூண்டு பாவ ஏதுவாகும் என்பார் 'நன்றே நினைமின்' என்றார்.

பகை முதலிய கேடில்லையாகவே உயிரைப் பிரிக்கும் காலனும் அணுகான்; என்றும் இன்பம் பெருக இருக்கலாம் என்பது 'நமனில்லை' என்பதால் உணர்த்தப் பெறுகின்றது.

தீயன செய்து தீய இடம் புகுவார் தாம் நாணற்கு உரியவர்; நல்லன எண்ணி நல்லன புரிவார் நாணுதற்கு ஏதுவின்மையின் 'நாணாமே சென்று புகும் கதிவேறு இல்லை' என்றார்.

நின்றே நிலைபெற – முன் புறப்பட்டுப் போகான் புரிசடையோனே' என்றாற்போல்ச் சிவம் பிறியாதே நிலைபெற என்பதாம். (401)

**போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை**
**நாற்றிசைக் குந்நடு வாய்நின்ற நம்பனைக்**
**காற்றிசைக் குங்கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு**
**கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் றுய்மினே.**
2150

இம் – எனில், முன்மந்திரத்து நினைத்து உய்மின் என உபதேசித்த ஆசிரியர் இதில் கூறி நின்றுய்மினே என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: எல்லாத் தேவர்களும் போற்றி செய்யும் அழகிய தண்ணிய கயிலைமலையையுடைய இறைவனை, நாற்பெருந்திசைகளுக்கும் நடுநாயகமாய் அவைகளை நிலை பெறச் செய்யும் சிவனை, பிராணவாயு ஒலியுடன் இயங்கும் புலால் மணம் கமழும் உடலைப் பற்றி அவ்வுடலைத் தாங்கிய கூற்றுவனை உதைத்தவனைத் தோத்தரித்து நின்று உய்தி பெறுங்கள் என்றவாறு.

கயிலைநாதனும், திசைகட்கு நடுவானவனும், யமன் உடலைப் பிடித்துக் கொண்டு அவனை உதைத்து வீழ்த்தியவனும் ஆன சிவபெருமானைப் புகழ்ந்து போற்றி உய்க என்பது கருத்து.

கூற்றுதைத்த செய்தியை நினைவூட்டியது காலாதீதப் பழம்பொருளைத் தொழுது நீவிரும் காலங்கடந்து நித்தியானந்தப் பெரும்பேறு எய்துக என உபதேசித்தவாறாம்.

கால் திசைக்கும் கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு எனப் பிரித்துக் காலனும் மயங்கும் திருமேனிமேல் வீசிய பாசக் கயிற்றை ஏற்று எனவும், பிராணவாயுவை அடக்கியாண்ட தெய்வமணங்கமழும் மார்க்கண்டேயர் உடலைத் தம் திருமேனியில் ஏற்று எனவும் பொருள் கொள்க. (402)

**இக்காய நீக்கி யினியொரு காயத்திற்**
**புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்**
**எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்**
**றக்கால முன்ன அருள்பெற லாமே. 2106**

இம் – எனின், வரும் பிறவியை வாராமைத் தடுத்தற்குரிய உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இவ்வுடலை நீக்கி இனி ஒருடலிலே போய்ப் பிறவாதவண்ணம் உய்ந்துபோகும் வழியை விரும்புங்கள்; எமக்கு எந்தக் காலத்திலே இவ்வுடல் வந்தது என்று அக் காலத்தை எண்ணி ஆராயச் சிவத்திருவருள் சித்திக்கும் என்றவாறு.

இறந்து மற்றோருடலை எடுக்காமலிருக்கும் வழியை நாடுங்கள்; இவ்வுடல் எமக்குக் கிடைத்தது எப்போது எதற்காக என்று உன்னச் சிவத்திருவருள் பெறலாம் என்பது கருத்து.

இக்காயம் – வினை நுகர்ச்சிக்காகக் கிடைத்த இவ்வுடல். இனியொரு காயம் – வினைப்போகம் முடிந்து இறந்து இனி எடுக்கப்போகும் வேறோருடல் அதாவது இறந்து மறு பிறவியை எடுக்காத முத்திநெறி.

காலத்தை எண்ணக் காரணமும் கர்த்தாவும் அறியப் படுதலின் உடலை உதவிய தலைவன்வழி நின்று அவன் பணிசெய்து அவனருளைப் பெறலாம் என்பது உபதேசிக்கப் பெற்றது. (403)

**போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்**
**ஆகின்ற போது மரனறி வானுளன்**
**சாகின்ற போதுந் தலைவனை நாடுமின்**
**ஆகின்ற அப்பொருள் அக்கரை யாகுமே.2107**

இம் – எனின், இறைவனை எண்ணுதற்குரிய காலமும், அவன் விரைந்தருளும் பண்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஆன்மாக்கள் செல்கின்ற போக்கிலேயே அவர் கள் பரிபாகத்தை அறிந்து காக்க உடனாகின்ற பொருளாகிய

பரசிவம், ஆன்மாக்கள் செவ்விபெற்ற போதும் அறிந்து உபகரிப்பான்; ஆதலால் சாகின்ற போதும் தலைவனை நினையுங்கள்; அப்போதும் உங்களுடன் ஆகின்ற அப்பொருள் வீட்டுலகமாகிய அக்கரையில் இன்பந்தரும் பொருளாகும் என்றவாறு.

ஆன்மாக்களின் போக்கிலே விட்டு உடனின்று ஆட்கொள்ளும் பரசிவம். இறக்கின்றபோது நினைத்தால்கூடக் காலங்கழிந்தது எனக் கருதாது உடனாகி அக்கரையாகிய இன்பக் கரையில் சேர்க்கும் என்பது கருத்து.

அடம்பிடிக்கும் குழந்தையை நல்வழிப்படுத்தக் கருதிய தந்தை அது போகின்றபோக்கிலே விட்டுத் திருப்புவது போல ஆன்மாக்கள் செல்லும் புன்னெறியிலே, அவற்றுடன் தாமும் உடனிருந்து, அல்லற்பட்டு அது உவர்ப்புக்கண்டு திரும்பி நன்னெறி நாடும்போது புன்னெறிதனை விலக்கி உடனாயும் விளங்கும் என்பார் 'போகின்ற ஆறே புகுகின்ற அப்பொருள் அரன் ஆகின்றபோதும் அறிவான் உளன்' என்றார்.

சாகின்றபோதும் என்பது ஆகின்றபோது இவன் நினையாமல் கழிந்தானே என்று எண்ணாது சாகின்ற போதாவது எண்ணினானே! அதுபோதும் என்று பரிபாக முற்றதாக எண்ணி அருள் செய்வன் என்பது உணர்த்தியவாறு.
அக்கரை – திருவடி நெடுங்கரையாகிய வீடு. (404)

**பறக்கின்ற வொன்று பயனுற வேண்டின்**
**இறக்கின்ற காலத்தும் ஈசனை யுள்குஞ்**
**சிறப்பொடு சேரும் சிவகதி பின்னைப்**
**பிறப்பொன் றிலாமையும் பேருல காமே.**

2108

இம் – எனின், உயிர் இன்பமுறவேண்டின் எப்போதும் ஈசனையே எண்ணுக என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: கூட்டை விட்டுப் பறந்து போகின்ற இவ்வுயிர் தாம் இக்கூட்டுள் வாழ்ந்ததன் பயனை எய்த வேண்டின், இறக்கின்ற காலத்தாவது ஈசனை எண்ணுங்கள்; அதனால் சிறப்பொடு சிவகதியும் தாமே வந்தடையும்; பின்னைப் பிறப்பில்லாப் பேருலகமும் கூடலாம் என்றவாறு.

இறக்கும் போதாவது ஈசனை எண்ணின் வீடு சித்திக்கும் என்பது கருத்து.

பறக்கின்ற என்னை வினைக்குறிப்பால் உயிர் பறவை என்பதும், உடல் கூடு என்பதும், உயிர்ப்பறவை உடற் கூட்டுள் வாழ்ந்தது பிறவிப்பயனை நுகர்ந்து கழிக்க என்பதும் முறைமை பெறப்படும். ''குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே, உடம்போடு டுயிரிடை நட்பு'' என்றதும் இதனொடு இணைதல் காண்க.

சிறப்பு – சிவஞானம்; உயிர் சிவஞானம் பெற்றுச் சிவகதி சேரும் என்பதாம். பிறப்பொன்றிலாமை மட்டுமன்று, பேருலகும் ஆம் எனச் சிலசொல் வருவித்து நயம் ஓர்க. **(405)**

**கூடியும் நின்றுந் தொழுதெம் மிறைவனைப்**
**பாடியு ளேநின்று பாதம் பணிமின்கள்**
**ஆடியு ளேநின் றறிவுசெய் வார்கட்கு**
**நீடிய வீற்றுப் பசுவது வாமே. 2109**

இம் – எனின், இறைவனை ஏத்தும் உபாயமும், அவன் உதவும் பரிசும் உபதேசித்தல் நுதலிற்று.

இ—ள்: அடியார் கூட்டத்துள் கூடி நின்றும், தனித்து நின்றும், அவன் புகழைப் பாடியும் இறைவன் திருவடியைத் தொழுங்கள்; ஆனந்தக் கூத்தாடி அகங்குழைந்து நின்று தியானிப்பவர்க்கு இறைவன் நீண்ட காலம் விட்டுப் பிரிந்த ஈன்றணிமையுடைய பசுப்போல விரைந்து வந்தருள்வன் என்றவாறு.

இளங்கன்றையுடைய பசுப்போல இறைவன் அகங் குழைத்து ஆடியும் பாடியும் பணிவார்க்கு வெளிப்பட்ட ருள்வன் என்பது கருத்து. (406)

**விடுகின்ற சீவனார் மேலெழும் போது**
**நடுநின்று நாடுமின் நாதன்தன் பாதங்**
**கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன்**
**இடுகின்றான் உம்மை இமயவ ரோடே. 2110**

இம் – எனின், இறக்கும்போது இறைவனை எண்ணுக எனல் நுதலிற்று.

இ—ள்: உடலைவிட்டுப் பிரிகின்ற உயிர் உடலை விட்டு மேலெழும்பும்போது, சுழுமுனையாகிய நடுவீட்டில் சிறிது நேரம் நின்று இறைவன் திருவடியை எண்ணுங்கள்; உங்களுடைய வலிய வினைகள் கெடும்; அழியாப்புகழை உடைவனாகிய இறைவன் உங்களைத் தேவர்களோடு கூட்டி இறவாப்பெரு நிலையை எய்துவிப்பன் என்றவாறு.

இறக்கும்போது இறைவனை எண்ணின் இமையவர் வாழ்வு உண்டாம் என்பது கருத்து.

நடுநின்று – உடல் உயிர் போகம் என ஒருபாற் கோடாது பற்றற்று நின்று எனலுமாம்.

காலத்தானும் கருத்து மாறுபாட்டானும் அழியாத மெய்ப்புகழாதலின் இறைவன் புகழ் 'கேடில் புகழ்' எனப் பட்டது.

ஔவையாரைத் திருக்கயிலையில் விட்ட விநாயகப் பெருமான் போல உம்மைச் சிவபெருமான் தேவரோடு கூட்டுவிப்பன் என்பதாம். (407)

**ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று**
**நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்**
**ஆறணி செஞ்சடை யண்ணல் திருவடி**
**வேறணி வார்க்கு வினையில்லை தானே.**
**2111**

இம் – எனின், 'சிவா' என்று திருநீறணிவார்க்குவினை யின்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இடபவாகனத்தை யுடையவனே! இறைவனே! எந்தலைவா! என்று சொல்லி நெற்றியில் திருநீறு பூசும் அடியார்கள் இவ்வுலகிலேயே நிகழும் தேவர்கள் ஆவர்; கங்கையை அணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் திருவடியை வேறாக இருந்து இடைவிடாது தியானிப்பவர் களுக்கு வருவினையும் இருப்பு வினையும் இல்லையாம் என்றவாறு.

திருநீறிடத் தேவருமாவர்; திருவடி எண்ண வினை கெடும் என்பது கருத்து.

தம்மை எண்ணுவார் வினைவளம் நீறெழ விரைந்து வந்து அருள் செய்ய வாகனனமாக விடையையுடையவன் என்பார் 'ஏறுடையாய்' என்றார்.

சிவனில்லாத சீவனில்லை; எல்லாச் சீவனிடத்தும் ஒப்ப உறைபவன் சிவன் என்பது தோன்ற 'இறைவா' என்றும், பொதுவாக எல்லாவுயிர்களிடத்தும் விளங்கினும் எமக்குத் தலைவனாய் இன்பநெறி உதவுபவன் என்பார் 'எம்பிரான்' என்றும் கூறினார்.

நிகழ் தேவர்கள் – நிகழ்காலத்திலேயே தேவர்கள் ஆவர். இங்ஙனம், இறைவன் திருநாமத்தைச் சொல்லி திருநீறிடுவார்க்குப் பிறவியான் வருந்துன்பமும் மரணமும் இன்மையின் நிகழ்கின்ற இப்போதே தேவராவர் என்பது வற்புறுத்தப்பட்டது.

திருவடி வேறணிவார்க்கு – நீறணிவார் தேவராக, நீறும் அணிந்து தனித்திருந்து மனத்தில் திருவடியையும் அணிவார்க்கு என விரித்துப் பொருள் காண்க.

வினையில்லை எனவே எழும் பிறப்பில்லை; வீடு ஆம் என்பதாம். (408)

**இன்புறு வீர்அறிந் தேஎம் இறைவனை**
**அன்புறு வீர்தவஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப்**
**பண்புறு வீர்பிற வித்தொழி லேநின்று**
**துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே.** 2112

இம் – எனின், பாசத்தளையறுக்கப் பாதம் பற்றுத லொன்றே உபாயமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: ஓயாமற்பிறக்கும் தொழிலிலேயே நின்று ஆன்ம வியாகத்தை மறைத்துத் துன்புறத்தும் பாசத்தால் வருந்தி ஒழிந்தவர்களே! எம் இறைவனை அறிந்து அன்பு செய்யுங்கள்;

அதனால் என்றும் இன்பம் பெறுவீர்! தவம் செய்யுங்கள்; உண்மை ஞானம் பெற்றுப் பண்பையடைவீர்கள் என்றவாறு.

ஓயாமல் பிறந்திழந்து உழலும் மக்களே! இறைவனிடம் அன்பு செய்யுங்கள் இன்படையலாம்; தவஞ் செய்யுங்கள் சிவஞானம் பெறலாம் என்பது கருத்து.

மெய்ஞ்ஞானத்துப் பண்பு – சிவஞானச் செய்தியுடையோர் இயல்பு. (409)

**மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின்**
**றோர்க்கே. 2113**

இம் – எனின், உயர வேண்டுவார்க்கு உபாயம் உண்டெனல் நுதலிற்று.

இ–ள்: மேலான சிவகதியைச் சேரலாம் என்று எண்ணுவார்க்கு மேற்கொள்ளத்தக்க உண்மையான தவமும் அதனால் எய்தும் திருவடிப்பேறும் சிவஞான மார்க்கமும் உண்டு என்றவாறு.

பிறவித் துயரைவிட்டு உயர எண்ணுவோர்க்குத் தவமும் ஞானமும் திருவருளும் உண்டாம் என்பது கருத்து. (410)

சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடுந்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடுஞ்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. 2114

இம் – எனின், இறைவன் தன்னை அடைந்தார்க்கு இன்பங்கள் தருவான் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: தன்னைச் சரணெனச் சார்ந்து பிரியாதிருப் போர்க்கு இன்பத்தையருளும் செந்தழல் போலும் நிற முடைய பெருமான், பிரிந்தவர்க்குத் துன்பம் தருவதாய பிற வியைக் கொடுக்கும். அன்புகூர்ந்த மெய்யடியார்களுக்கு அங் கேயே ஒலிக்கின்ற சிலம்பு அணிந்த திருவடியைக் காட்டி உய்யக் கொள்ளும் ஆதலால் அவரை இடைவிடாது தியானிப் பவர்கள் தேவ தேவராகிய இறைவனைச் சென்றடைவார்கள் என்றவாறு.

சார்ந்தார்க்கு முத்தியின்பத்தையும், பிரிந்தவர்க்கு பிறவித் துன்பத்தையும் அருளுவன் இறைவன்; ஆதலால் அவனை இடைவிடாது தியானிப்பவர் அவனைச் சாரலாம் என்பது கருத்து.

தழல் அணுகின் சுடும்; பிரியில் தண்ணென்னும் குளிரும். தழல்வண்ணன் சாரச்சார இன்பம் தரும்; தீரத்தீரத் தீர்பொல்லாதாம் என்ற நயம் உணர்க.

கூர்ந்தவர் – மிக்கவர். அன்பு மிக்கவர் என ஒரு சொல் வருவிக்க. அங்கே – அன்பு செய்யும் அவ்விடத்தேயே என்க. குரை கழல் – ஒலிக்கும் வீரக்கழல்; அது தானியாகு பெயராகத் திருவடியை உணர்த்திற்று.

சேர்ந்தவர் – இடைவிடாது தியானிப்பவர். இறைவனடி, சேராதார்' என்புழிச் சேர்தல் இடைவிடாது நினைத்தல் என்ற பரிமேலுழகர் உரைக் குறிப்பையும் உன்னுக. தேவர் – சிவபரம்பொருள் உணர்வார். உணர்ந்து அநுபவிப்பவராவர் என்பதாம். (411)

**முத்தியை ஞானத்து முத்தமிழ் ஓசையை**
**எத்தனை காலமும் ஏத்துவர் ஈசனை**
**நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்**
**அத்தகு சோதி யதுவிரும் பீரே.** 2115

இம் – எனின், பாலிற்படு நெய்போலப் பரமன் உறைகின்றான்; அவனை விரும்புக எனல் நுதலிற்று.

இ–ள்: முத்தியாகிய பேரின்ப வடிவாக விளங்குகின்றவரும், அதற்கு ஏதுவாகிய ஞான சொரூபியும் சிவ ஞானத்தை அன்பு நெறியால் ஆன்மாக்களுக்குப் புணர்க்கும் இயலிசை நாடகமான மூவகைத் தமிழிசையாக விளங்குபவரும் ஆன ஈசனை எத்துணைக் காலமும் பணிவர்; மலரகிதனான சிவன் நெய்யைக் கலந்துள்ள பால்போல அங்கு எங்குமாய் விளங்குவன்; அத்தகைய ஒளிப்பிழம்பான இறைவனை அன்பு செய்யுங்கள் எ–று.

இறைவன், பாலில் நெய் எங்குமாயிருத்தல் போல ஆன்மாக்களிடம் எங்குமாய் விளங்குவன்; அவனை அன்பு செய்க என உபதேசித்தவாறு.

இறைவனை ஏத்துதற்குக் காலவரையறை இல்லை என்பார் 'எத்தனை காலமும் ஏத்துவர் ஈசனை' என்றார். அது விரும்பாரே எனவும் பாடம். (412)

நியமத்த னாகிய நின்மலன் வைத்த
உகமெத் தனையென் றொருவருந் தேறார்
பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற்
சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே.
2116

இம் – எனின், இறைவன் நமக்காகப் படைத்த கால எல்லையை உணராதவராய் மக்கள் பிறவித் துயர்க்கண் படுகின்றனரே என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: இஃது இங்ஙனம் ஆகுக என்றும் நியமமுடைய நின்மலன் உயிர்களாகிய நமக்கு வைத்த யுகங்கள் எத்தனை என்று ஒருவரும் உணரார்; பிறப்பாகிய மத்திலே அகப்பட்டுக் கடைபடுதலல்லாது சிவமாகிய மத்தைத் தெளியும் ஆற்றல் அற்றவர்களாகின்றார்களே என்றவாறு.

நம்வினைகளை உண்டு கழிக்க இறைவன் எவ்வளவு காலம் தந்திருக்கின்றான் என்பதை உணராது பிறவியிற்பட்டு உழல்கின்றார்களே என்பது கருத்து.

பவ மத்து – பிறவியாகிய மத்து; சிவமத்து – சிவ மாகிற மத்து. பவமத்தைச் சார்ந்தால் கலக்கமும், சிவமத்தைச் சார்ந்தால் தெளிவுமுண்டாம் என்றது. (413)

**இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்**
**துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை**
**விஞ்சத் துறையும் விகிர்தா எனநின்னை**
**நஞ்சற் றவர்க்கன்றி நாடவொண் ணாதே.**
2117

இம் – எனின், உலகவாழ்வு எத்துணைப் பெரிதாயினும் இறைவனை நெஞ்சகம் நைஞ்சு நாடோறும் நினைத்தார்க்கன்றி வீடெய்தலாகாது எனல் நுதலிற்று.

இ–ள்: இங்குள்ள வாழ்வும், எவ்வளவு துன்பங்களும் உடையராயினும் மரணம் வந்த காலத்துத் தூய செம்மணி போலும் நிறமுடைய சிவபெருமானை, ஆன்ம போதத்தை விஞ்சிய சிவபோதத்தில் உறையும் விகிர்தனே! என்று உன்னை நினைந்து நைந்து, சீவபோத மற்றவர்க்கன்றி ஏனையோரால் நின்னை விரும்பவும் முடியாது என்றவாறு.

எத்துணைத் துன்பமும் வாழ்வும் உடையவராயினும் இறுதிக் காலத்திலாவது இறைவனை நைந்து போற்றாதார்க்கு, அவனை அடைய இயலாது என்பது கருத்து.

இங்கித்தை என்பதில் ஐ – சாரியை. இங்குள்ளது என்பது பொருள். இஞ்ஞான்று 'இங்குற்றை' என மடங்களில் வழங்குவது.

எனைத்தோரகிதம் – ஓர்; அசை. துஞ்சு – இறத்தல்; முதல் நிலைத் தொழிற்பெயர். துஞ்சொத்த காலமாவது மரணம் வந்த காலம்.

விஞ்சத்து உறையும் – சீவபோதத்தைச் சிவபோதம் விஞ்சிய காலத்து வெளிப்படும். நஞ்சு – நைந்து; போலி. அற்றவர்க்கு – வினையற்றவர்க்கு. (414)

**பஞ்சமு மாம்புவி சற்குரு பால்முன்னி**
**வஞ்சக ரானவர் வைகில் அவர்தம்மை**
**அஞ்சுவன் நாதன் அருநர கத்திடுஞ்**
**செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே.**

**2118**

இம் – எனின், சற்குருவை நாடும் சற்சீடனெய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: வஞ்சகராயினார் சற்குருபால் எண்ணி அடைவாராயின் பூமியிற் பஞ்சமுண்டாம்; அவர்களைக் கண்டு இறைவனே அஞ்சுவன்; தாங்கற்கரிய கொடிய நரகத்திலே அவர்களை வைப்பன்; வஞ்சகம் இன்றிச் செம்மையாகத் தவ ஒழுக்கத்து நிற்போரைக் காணவே முத்தியாம் என்றவாறு.

வஞ்சகரை வாட்டுவன் இறைவன்; நல்லோரைக் காணவே முத்தியாம் என்பது கருத்து.

செஞ்ச நிற்போர் – செவ்வையில் நிற்போர். (415)

**சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்**
**அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை**
**அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்**
**குருவை வழிபடிற் கூடலு மாமே.** 2119

இம் – எனின், சிவனை வழிபட்டுப் பயனில்லை; சிவகுருவை வழிபடுக எனல் நுதலிற்று.

இ–ள்: பல தேவர்கள் சிவபெருமானையே நேரே வழிபட்டனர்; அவனை வழிபட்டு ஆம் பயன் ஒன்றுமில்லையாம்; அவனை வழிபட்டுய்யும் நெறிகளை உபதேசிக்கும் குருவை வழிபட்டால் சிவனைப் பெறலாம் என்றவாறு.

அரனை வழிபட்டால் ஆவதொன்றும் இல்லை; குருவை வழிபட்டால் முத்தி கூடும் என்பது கருத்து.

தேவர்கள் தம் குறைகளை முடித்து இன்பந்துய்க்க நெடுங்காலம் அமுதுண்டு அமரருலகில் வாழக் கயிலை சென்று நேரே கண்ணுதற் பெருமானைக் கை தொழுதனர். அவர்கள் அடைந்தபேறு நிலையான இன்பன்று. குருவை வழிபட்ட மணிவாசகர் போன்றோர் எய்திய பேறு நித்தியானந்த பெரு வாழ்வு ஆதலால் குருவை வழிபட்டுச் சிவனை வழிபடும் நெறியை உணர்ந்துய்க என உபதேசித்தவாறு. (416)

**நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்**
**கருமங்க ளாலே கழிதலிற் கண்டு**
**குருவென் பவன்ஞானி கோதில னானாற்**
**பரமென்றல் அன்றிப் பகர்வொன்று**
**மின்றே. 2120**

இம் – எனின், சிவஞானியே சிவகுருநாதன் என உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: மக்களும் தேவரும் ஆகிய பசுக்கள் பாசத்தை யடைந்து வினைகளால் அழிதலைக் கண்டு மனமிரங்கிக் குரு என்பவன், 'அன்புடைச் சீட! நீ சிவஞானியாய் மலமாயை களாகிற குற்றங்களினீங்கியவனானால் பரத்தோடு ஒன்றிப் பரம் ஆவாய்' என்று உபதேசிப்பதன்றிப் பகரக்கூடியது வேறொன்றும் இல்லை எ–று.

குரு சீடனை நோக்கிப் பாசமகன்று, பரத்தோடு ஒன்றிப் பரமாகுக என உபதேசிப்பன்; இது ஒன்றே அவன் உபதேசம் என்பது கருத்து.

நரர் – மக்கள். சுரர் – தேவர். இருவகையாரும் பாசத்தி னாலே கட்டுண்டிருத்தலின் பசு எனப்படுவர்; ஆதலால் நரரும் சுரரும் ஆகிய பசு என்றார்.

பசுக்கள் பாசத்தாலும் கன்மத்தாலும் அழிதலான் என்க.

ஞானி கோதிலன் ஆனால் (நீ) பரம் என்றல் அன்றிப் பகர்வு ஒன்றுமின்று எனச் சீடனை நோக்கிக் குரு கூறிய உபதேசத்தைத் திருமூலர் கொண்டு கூறியதாகக் கொள்க. (417)

**ஆட்கொண் டவர்தனி நாயகன் அன்புற**
**மேற்கொண் டவர்வினை போயற நாடொறும்**
**நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின்**
**மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. 2121**

இம் – எனின், சிவகுரு செய்யும் உபகாரத்தால் பிறவியகலும் என்பதுஅறிவித்தல் நுதலிற்று.

இ–ள்: நம்மை ஆட்கொண்ட குருநாதனே ஒப்பற்ற சிவம்; அவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட சீடர்கள் அவன்பால் அன்புசெய்ய, அவர்கள் வினைச்சேடங்கள் நாடோறும் தேய, நீரையுடைய நீண்ட செஞ்சடையையுடைய இறைவன் உருவங் கொண்டு எழுந்தருளிவந்து ஆட்கொண்ட முறைப்படி, பிறவியாகிற துன்பத்தைக் கெடுத்தான் என்றவாறு.

சிவமே குரு; ஆன்மாக்களின் வினையகல சிவனே உருமேனி தாங்கி எழுந்தருளி ஆன்மாக்களை ஏற்றுக் கொண்ட முறைப்படித் துன்பந்துடைத்து ஆண்டான் என்பது கருத்து.

ஆட்கொண்டவர் –தாட்டாமரை காட்டி ஆன்மாக் களை ஆட்கொண்ட குருநாதர். தனிநாயகன் – ஒப்பற்ற சிவம். ‘குருவே சிவமெனக் கூறினன்’ எனல் காண்க.

மேற்கொண்டு அவர் அன்புற (அவர்) வினை நாடொறும் போயற நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின் மேற்கொண்டவாறு அதுவாம் ; அலை வீவித்து உளன் என முடிக்க.

குருவாக வந்து உயிர்களைச் சீடராகப் பரிபாகத்திற்குத் தக மேற்கொண்டு, அவர்கள் அன்புசெய்ய அவர்கள் வினை நாடோறும் தேயச் சிவனே திருவுருக்கொண்டு எழுந்தருளியவாறு அது ஆம். அங்ஙனம் வந்து துன்பங்களை ஒழிப்பித்தான் என்க.

இங்ஙனம் கூட்டிப் பொருளுணரார் சுட்டியுணரப்படும் உருவத்தின் மேற்கொண்ட மன அலைச்சலை அகற்றி அருள்பவன் சிவன் என உரைப்பர். அது ஆட்கொண்டவர் தனிநாயகன் என்று நுதலிப் புகுதற்கு இயையாத பொருளாயிருத்தல் காண்க. துன்பந் துடைத்துப் பேரின்பத்தைத் தரும் குருவே சிவம் என்பதாம். (418)

**ஏழாந்தந்திரம் முற்றிற்று.**

**சிவம்**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

*(எண் – பக்க எண்)*

உ

*சிவமயம்*

*திருச் சிற்றம்பலம்*

*சிவநேயச் செல்வரீர்!*

திருக் கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் அருள்திரு நமசிவாய மூர்த்திகளின் பேரருள் வழியில் இருபத்து மூன்றாவது குரு மகாசன்னிதானம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்களின்** திருவுளப்பாங்கின் வண்ணம் நிகழும் திருவள்ளுவர் ஆண்டு 2036, மெய்கண்டார் ஆண்டு 782, தாரண ஆண்டு மார்கழித் திங்கள் 24ஆம் நாள் (8.1.2005) சனிக்கிழமை முதல் தைத்திங்கள் 4ஆம் நாள் (17.1.2005) திங்கள் கிழமை வரை

**ஆதீனம் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள்**

**மகரத் தலைநாள் (தை–அசுவதி) குருபூசை விழா**

வழிபாடுகள் சிறப்பாக நடைபெறும். விழா நாள்களில் சிவநெறிச் சிந்தனை விரிவுரைகள் திருமடாலயத்து வேணுவனலிங்க விலாசத்திலும், கலை நிகழ்ச்சிகள் அம்பலவாணர் கலையரங்கிலும் நிகழ்வுறும். 17.1.2005 திங்கள் கிழமை அருள்திரு நமசிவாய மூர்த்திகளுக்குச் சிறப்பு நீராட்டு, வழிபாடுகள் நிகழ்வுறும். அன்பர்கள் அனைவரும் நிகழ்வுகளில் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்று நீடு நல்வாழ்வில் இன்புற்றுத் திளைக்கத் தெரிவிக்கலானோம்.

இங்ஙனம்,

**காறுபாறு – வைத்தியநாதத் தம்பிரான்,**

*திருவாவடுதுறை ஆதீனம்.*

திருவாவடுதுறை.

01.01.2005

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

## இவ்வாண்டின் குருபூசை விழாவில் சீர்–வளர்–சீர் குரு மகா சன்னிதானம் அவர்கள் பாராட்டிச் சிறப்பிக்கும் அறிஞர் பெருமக்கள்.

| திருநாள் | | அறிஞர் | சிறப்பு (ஆதீனம் வழங்கியருளும் விருது/பாராட்டு |
|---|---|---|---|
| 08.1.2005 | சனி | சிவஸ்ரீ.ஏ.சுந்தரேசச் சிவாச்சாரியார் , திருவையாறு | சிவாகமச் செல்வர் |
| 09.1.2005 | ஞாயிறு | சிவஸ்ரீ.வை.விசுவநாதச் சிவாச்சாரியார். அல்லூர். | சிவாகமச் செல்வர் |
| 10.1.2005 | திங்கள் | சிவஸ்ரீ.என்.இராமநாதசிவாச்சாரியார்,திருக்கோலக்கா. | சிவாகமச் செல்வர் |
| 11.1.2005 | செவ்வாய் | சிவஸ்ரீ.கே. பிச்சைக் குருக்கள்,பிள்ளையார்பட்டி | சிவாகமத் திருத்தொண்டர் |
| | | திரு.ஏ.கெச்.சீதாராம பாகவதர், திருப்பெருந்துறை. | சல்லரிஇன்னிசை நன்மணி |
| 12.1.2005 | புதன் | திரு.தி.வே.கோபாலையர்,புதுவை. | மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் நினைவுப்பரிசில்(பொற்கிழி, மோதிரம்,பாராட்டிதழ்) |

| | | | |
|---|---|---|---|
| 12.1.2005 | புதன் | சிவத்திரு.ப.இராமச்சந்திரன், நெய்வேலி. | திருமுறை இசை அறிஞர் (பொற்கிழி, பாராட்டிதழ்) |
| 13.1.2005 | வியாழன் | திருமிகு.வி.பிரசன்னா சிவதாசன் | ஆதீன நாகசுவரக் கலைஞர் |
| | | குழுவினர் ஓச்சரா(கேரளா) | |
| 14.1.2005 | வெள்ளி | திரு.டி.எஸ்.முருகன்,குழுவினர், கும்பகோணம் | கைப்பாவைக் கலைமணி |
| 15.1.2005 | சனி | திரு.வி.கே.எஸ்.சிவம்,கும்பகோணம் | சுதைச்சிற்பக் கலைமணி |
| | | திரு.என்.கந்தசாமி,திருவாலங்காடு | சுதைச்சிற்பக் கலைமணி. |
| | | திரு.எம்.தியாகராஜன், சிதம்பரம் | சுதைச்சிற்பக் கலைமணி. |
| | | திரு.ம.உத்திராபதி,திருக்கடவூர். | சுதைச்சிற்பக் கலைமணி. |
| 16.1.2005 | ஞாயிறு | திரு.வி.மீனாட்சிசுந்தரம், சென்னை. | குருசேவா ரத்தினம், |
| 17.1.2005 | திங்கள் | சைவப்பிரகாச சபை, திருவனந்தபுரம். | சித்தாந்தச் சுடர்நிலையம், |
| | | சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை. | சித்தாந்தச் சுடர்நிலையம் |
| | | திரு.கு.சுந்தரமூர்த்தி, தருமபுரம், | சித்தாந்தச் சைவச் செம்மணி. |

| | | | |
|---|---|---|---|
| 17.1.2005 | திங்கள் | திரு.ந.இரா.சென்னியப்பன்,கோவை. | சிவத்தமிழ்ச் செல்வர், |
| | | திரு.தி.சு.கோவிந்தசுவாமி,மதுரை. | சிவத் தொண்டர், |
| | | திரு.ந.ரா.ஆடலரசு,சென்னை. | சிவத் தொண்டர், |
| | | திருமதி.ச.குழந்தையம்மாள், சூத்துக்குடி. | சிவத் தொண்டர், |
| | | சிவத்திரு.தங்கம்மாஅப்பாக்குட்டி, இலங்கை. | சிவத் தொண்டர், |
| | | கே.சங்கரன்,<br>ஜி.அபிநயா,<br>ஆதீன மேனிலைப்பள்ளி,<br>திருவிடைமருதூர். | மோதிரம் வழங்கியருளுதல்<br>பள்ளி முதலிடம் –<br>மேனிலை இறுதிவகுபபு –<br>பத்தாம் வகுபபு. |
| | | அருள்திரு நமசிவாய மூர்த்திகள்<br>திருநெறிய தமிழ் மன்றம்,<br>திருவிடைமருதூர்.<br>ஆன்மீகப் பேச்சுப் போட்டி. | மாணவர்களுக்கு பரிசில்<br>சான்றிதழ்.– முதல் மூன்று<br>இடங்கள். |

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர்

**அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள்**

*மகரத்தலைநாள் குருபூசை நிகழ்வுகள்.*

| திருநாள் | | விரிவுரையாளர்கள் | சிவநெறிச் சிந்தனை விரிவுரை |
|---|---|---|---|
| 08.1.2005 | சனி | சிவஸ்ரீ.ஏ.சுந்தரேசச் சிவாச்சாரியார், திருவையாறு. | காமிக ஆகமம். |
| | | சிவத்திரு.கு.சுந்தரமூர்த்தி,M.A., Ph.D., தருமபுரம், மயிலாடுதுறை. | தொல்காப்பியத்தில் சிவநெறிச் சிந்தனை. |
| 09.1.2005 | ஞாயிறு | சிவஸ்ரீ.வை.விஸ்வநாதச்சிவாச்சாரியார், | காரண ஆகமம். |
| | | திரு. முருக.இராமலிங்கம்,M.A., M.Phil., சென்னை. | திருக்குறளில் சிவநெறிச் சிந்தனை. |
| 10.1.2005 | திங்கள் | சிவஸ்ரீ.என்.இராமநாத சிவாச்சாரியார், திருக்கோலக்கா. | கிரண ஆகமம் |

| | | | |
|---|---|---|---|
| 10.1.2005 | திங்கள் | சிவத்திரு.சு.குஞ்சிதபாதம்,M.Sc.,B.Ed., திருவாவடுதுறை. | பத்துப்பாட்டில் சிவநெறிச் சிந்தனை |
| 11.1.2005 | செவ்வாய் | திரு. இ.சங்கரன், திருநெல்வேலி. | தமிழும் சைவமும். |
| | | முனைவர்.திரு.த.அகரமுதல்வன்,M.A., Ph.D., பூம்புகார். | பரிபாடலில் சிவநெறிச் சிந்தனை |
| 12.1.2005 | புதன் | முனைவர்.திரு.சு.இராஜேஸ்வரன், பொறையாறு. | சம்பந்தப் பெருமானின் திருப்பாசுரம். |
| | | திரு.தி.வே.கோபாலையர், M.A., புதுச்சேரி. | தேவாரத் தமிழுணர்வு. |
| 13.1.2005 | வியாழன் | புலவர்.திரு.வி.தமிழ்ச்சேரனார்,M.A., தஞ்சாவூர். | அப்பர் பெருமானின் மறுமாற்றத் திருத்தாண்டகம். |
| | | முனைவர் திரு.வ.குருநாதன்,M.O.L.,B.Ed.,Ph.D., தஞ்சாவூர். | புறநானூறு,பதிற்றுப்பத்து, நூல்களில் சிவநெறிச் சிந்தனை. |
| 14.1.2005 | வெள்ளி | திரு.மு.சுவாமிநாதன்,M.A., M.Phil., M.Ed., திருப்பனந்தாள். | சுந்தரர் பெருமானின் நம்பி என்ற திருப்பதிகம். |

| | | | |
|---|---|---|---|
| 14.1.2005 | வெள்ளி | திரு.செ.வைத்தியலிங்கன்,,**M.A., M.Lit.**, சிதம்பரம். | அகப்பொரள் ந:ல்களில் சிவநெறிச்சிந்தனை. |
| 15.1.2005 | சனி | சிவத்திரு.தா.ம.வெள்ளைவாரணம், பொறையாறு. | மணிவாசகரின் நீத்தல் விண்ணப்பம். |
| | | முனைவர்.திரு.மு.அருணகிரி.**M.A., Ph.D.**, மதுரை. | இரட்டைக் காப்பியத்தில் சிவநெறிச் சிந்தனை. |
| 16.1.2005 | ஞாயிறு | சிவத்திரு.தி.சு.கோவிந்தசுவாமி, மதுரை. | நமச்சிவாய மாலை. |
| | | முனைவர்.திரு.ந.இரா.சென்னியப்பன், **M.A., Ph.D.**, கோவை. | கச்சியப்பர் நூல்களில் சிவநெறிச் சிந்தனை. |
| 17.1.2005 | திங்கள் | முற்பகல் மணி 12.05 –க்கு ஆதீனம் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் குருபூசைச் சிறப்பு நீராட்டு வழிபாடுகள். | |
| | | இரவு மணி 8.00 – அருள்திரு நமசிவாயமூர்த்திகள் பூசை. | |
| | | இரவு மணி 9.30 – ஞானக்கொலுக்காட்சி. | |

# விற்பனையில் உள்ள ஆதீன வெளியீடுகள்

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் தேவாரம் (முதல் திருமுறை - உரையுடன்) | 60.00 |
| திருவாசகம் | 25.00 |
| திருமந்திரம் பாயிரம் முதல் மூன்று தந்திரங்கள் | 175.00 |
| திருமந்திரம் 5,6 தந்திரங்கள் (உரையுடன்) | 75.00 |
| திருமந்திரம் 7-ஆம் தந்திரம் (உரையுடன்) | 100.00 |
| திருமந்திரம் 8-ஆம் தந்திரம் (உரையுடன்) | 150.00 |
| திருமந்திரம் 9-ஆம் தந்திரம் (உரையுடன்) | 75.00 |
| திருமந்திரம் - வைத்தியப்பகுதி | 20.00 |
| சித்தாந்தப் பிரகாசிகை | 10.00 |
| அஷ்டப்பிரகரணம் (5,6) | 15.00 |
| அஷ்டப்பிரகரணம் (7) | 15.00 |
| அஷ்டப்பிரகரணம் (8) | 15.00 |
| மகா கால சம்ஹாரர் | 275.00 |
| விதியை வெல்வது எப்படி? | 15.00 |
| நடராசப் பெருமான் | 125.00 |
| திருவள்ளுவர் சித்தாந்த சைவர் | 10.00 |
| திருவாவடுதுறை ஆதீன வடமொழி ஓலைச் சுவடிகள் | 100.00 |
| திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் | 20.00 |
| தெய்வத் திருமேனிகளின் தியானம் - ரூபம் - யந்திரம் - மந்திரம் | 200.00 |
| ஆகம நெறியில் அனந்தேசுவரர் | 50.00 |
| துறைசை ஆதீன ஞானப் பண்ணையில் ஓர் மெய்ஞ்ஞான சிந்தாமணி | 15.00 |
| திருவிசைப்பா, திருப்பல்லாண்டு (தமிழ் - ஆங்கிலம்) | 15.00 |
| திருவாவடுதுறை ஆதீன வரலாற்றுச் சுருக்கம் | 15.00 |
| கணபதி | 150.00 |
| ஆதிசைவர் பெருமையும், பிரதிஷ்டா மூர்த்திகளின் காயத்ரி மந்திரங்களும் | 25.00 |
| திருப்பெருந்துறை - கலைக்கோயில் | 10.00 |
| மகா சிவசக்தி | 350.00 |
| சித்தாந்த படவிளக்கம் | 50.00 |
| திருந்துதேவன்குடித் தலவரலாறு | 5.00 |
| முருகன் | 200.00 |
| திருமாந்துறைத் தலவரலாறு | 10.00 |
| பண்டார சாத்திரம் (சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு) | 20.00 |
| பண்டார சாத்திரம் (சித்தாந்த சிகாமணி) | 15.00 |
| சைவ அநுட்டான விதி | 7.00 |
| பார்த்திப பூசா விதி | 10.00 |
| மகா பைரவர் | 275.00 |
| கஞைசப் பதிற்றுப்பத்தந்தாதி | 15.00 |
| ஆடல்வல்லான் | 350.00 |
| சைவ கால விவேகம் | 50.00 |
| திருமந்திரம் முன்னுரை | 25.00 |
| திருவெம்பாவை திருப்பள்ளயெழுச்சி உரையுடன் | 5.00 |
| பண்டாரசாத்திரம்(உபாநிட்டை வெண்பா நிட்டை விளக்கம், உபதேச வெண்பா) | 20.00 |

N681

